ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு

உ

கணபதி துணை

பவணந்திமுனிவர் இயற்றிய

# நன்னூல் மூலமும் சங்கரநமச்சிவாயருரையும்

இவை

மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி

டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள்

பரிசோதித்து நூதனமாக எழுதிய பலவகைக்குறிப்புக்களுடன்

சென்னை, கபீர் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றன

நான்காம் பதிப்பு

நந்தன ௵ தை மீ



1953

# இப்புத்தகத்தில் அடங்கியவை



# நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி

அகநா - அகநானூறு
அரிச்சந்திர - அரிச்சந்திர புராணம்
அவை - அவையடக்கம்
ஆசாரக் - ஆசாரக்கோவை
இ. கொ - இலக்கணக் கொத்து
இரகுநாத ஒருதுறைக் - இரகுநாத சேதுபதி ஒருதுறைக் கோவை
இ. வி - இலக்கண விளக்கம்
இ - ள் - இதன் பொருள்
இளம் - இளம்பூரணம்
இறை - இறையனார் அகப்பொருள்
உ - ம் - உதாரணம்
எ - ம் - எனவும்
எ - று - என்றவாறு
எ - ன் - என்பது சூத்திரம் என்னுதலிற்றோவெனின்
ஐங்., ஐங்குறு - ஐங்குறுநூறு
ஐந். ஐம் - ஐந்திணை ஐம்பது
கந்த - கந்தபுராணம்
கம்ப - கம்பராமாயணம்
கலி - கலித்தொகை
குறிஞ்சிப் - குறிஞ்சிப்பாட்டு
குறுந் - குறுந்தொகை
கோடீச் - கோடீச்சுரக்கோவை
சங் - சங்கரநமச்சிவாயர்
சிலப் - சிலப்பதிகாரம்
சிவ. சித், சிவஞான. சித் - சிவஞான சித்தியார்
சிவஞான - சிவஞான முனிவர்
சிற் - திருச்சிற்றம்பலக்கோவையார்
சிறப்பு, சிறப்புப் - சிறப்புப்பாயிரம்
சிறுபாண் - சிறுபாணாற்றுப்படை
சீவக - சீவகசிந்தாமணி
சூ - சூத்திரம்
சூளா - சூளாமணி
சே - சேனாவரையம், சேனாவரையர்
தக்க - தக்கயாகப் பரணி
தண்டி - தண்டியலங்காரம்
திணைமா. நூற், திணைமாலை - திணைமாலை நூற்றைம்பது
திரி - திரிகடுகம்
திருஞா - திருஞான சம்பந்தர்
திருநா - திருநாவுக்கரசர்
திருவரங்கத் - திருவரங்கத்தந்தாதி
திருவா - திருவாசகம்
திருவாய் - திருவாய்மொழி
திருவால - திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்
திருவிடை. மும்மணி - திருவிடைமருதூர் மும்மணிக்கோவை
திருவிளை - திருவிளையாடற்புராணம்
திருவேங்கடத் - திருவேங்கடத் தந்தாதி
திவ் - திவ்யப்பிரபந்தம்
தே - தேவாரம்
தொல் - தொல்காப்பியம்
ந - நச்சினார்க்கினியர், நச்சினார்க்கினியருரை
நம்பி - நம்பியகப்பொருள்
நள - நளவெண்பா
நற் - நற்றிணை
நன் - நன்னூல்
நாச்சியார் - நாச்சியார் திருமொழி
நாலடி - நாலடியார்
நான்மணி - நான்மணிக்கடிகை
நீதிநெறி - நீதிநெறி விளக்கம்
நேமி - நேமிநாதம்
நைடத - நைடதம்
ப - பக்கம்
பட்டினப் - பட்டினப்பாலை
பதிற் - பதிற்றுப்பத்து
பரிமேல் - பரிமேலழகர், பரிமேலழகருரை
பன்னிரு - பன்னிருபாட்டியல்
பி - ம் - பிரதிபேதம்
பிரபு - பிரபுலிங்கலீலை
பிரயோக - பிரயோகவிவேகம்
புறநா - புறநானூறு
பு. வெ - புறப்பொருள் வெண்பாமாலை
பெரிய - பெரியபுராணம்
பெரியதிரு - பெரிய திருமொழி
பெரியாழ்வார் - பெரியாழ்வார் திருமொழி
பெருங் - பெருங்கதை
பெரும்பாண் - பெரும்பாணாற்றுப்படை
பேர் - பேராசிரியர், பேராசிரியருரை
பொருந - பொருநராற்றுப்படை
மணி - மணிமேகலை
மதுரைக் - மதுரைக் காஞ்சி
மயிலை - மயிலைநாதர், மயிலைநாதருரை
மலைபடு - மலைபடுகடாம்
முருகு - திருமுருகாற்றுப்படை
மேற் - மேற்கோள்
யா. கா - யாப்பருங்கலக் காரிகை
யா. வி - யாப்பருங்கல விருத்தி
வச்சணந்தி - வச்சணந்திமாலை
வ - று - வரலாறு
வி. பா - வில்லிபுத்தூராழ்வார் பாரதம்

# குறிப்பு

என் தந்தையாராகிய மகாமகோபாத்தியாய டாக்டர் ஐய ரவர்கள் ஆராய்ந்து பலவகைக் குறிப்புக்களுடன் பதிப்பித்து வெளியிட்டுள்ள இலக்கண நூல்கள் புறப்பொருள் வெண்பா மாலை, நன்னூல் மயிலைநாதருரை, நன்னூல் சங்கர நமச்சி வாயருரை, தமிழ்நெறி விளக்கம் என்னும் நான்காகும். அவற்றுள் நன்னூல் சங்கர நமச்சிவாயருரையின் மூன்றும் பதிப்பாகும் இது. இந்நூலைப் பற்றிய விரிவான செய்திகளை இதனை அடுத்துள்ள அவர்களுடைய முகவுரையிற் காணலாம்.

அவர்கள் தெரிவித்துள்ளபடி இதன் முதற் பதிப்பு வெளி யாகும்போதும் இரண்டாம் பதிப்பு நிறைவேறும் போதும் திருவருட் செயலால் எதிர்பாராத பல நன்மைகள் அவர் களுக்குக் கிடைத்தமையால் இந்நூலின்கண் அவர்களுக்கு மிக்க ஈடுபாடுண்டு.

அன்றி, என் தந்தையாரவர்கள் தமது வாழ்க்கையில், "இன்று செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால், என்ன பயத்ததோ சால்பு" என்னும் அருமைத் திருக்குறளின் கருத் தைத் தம் முக்கியமான கொள்கையாக வைத்துக் கொண்ட வர்கள். இதற்குக் காரணம் ஸ்ரீ மேலகரம் சுப்பிரமணிய தேசிக ரவர்கள் ஒரு சந்தர்ப்பத்தில் இந்நூலின் 360-ஆம் சூத்திர வுரையில் சங்கரநமச்சிவாயர், "இணரெரி... நன்று" என்னும் குறளுக்கு அருமையாக எழுதியுள்ள பகுதியைச் சுட்டிக் காட்டி விளக்கியதேயாகுமென்று அவர்கள் என்னிடம் அடிக் கடி சொல்லியதுண்டு. இதனாலும் நன்னூலின் சங்கரநமச்சி வாயருரையில் அவர்களுக்கிருந்த தனியன்பு தெரியவரும்.

அரும்பத முதலியவற்றின் அகராதியிலும் விளங்கா மேற்கோளகராதியிலும் காணப்படும் எண்கள் குறிப்பிட்ட சூத்திரங்களையேனும் அவற்றின் உரைகளையேனும் தெரி விக்கும். விளங்காமேற்கோள்களில் ஒரு சில இப்போது விளங்கின.

இதற்கு முந்திய பதிப்பில் அடிக்குறிப்பாக இருந்த ஆகரங்களிற் பெரும்பாலன இதில் அங்கங்கே உரிய இடங் களிற் சேர்க்கப் பெற்றுள்ளன.

இப்பதிப்பு அச்சாகி வருகையில் ஒப்புநோக்குதல் முதலிய உதவிகள் புரிந்த அன்பர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவிக்கின்றேன்.

திருவேட்டீசுவரன் பேட்டை
24—12—42

இங்ஙனம்
S. கலியாணசுந்தர ஐயர்.

உ

கணபதி துணை

# முகவுரை



திருச்சிற்றம்பலம்

## தேவாரம்

நீதி யைநிறை வைமறை நான்குடன்
ஓதி யையொரு வர்க்கு மறிவொணுச்
சோதி யைச்சுடர்ச் செம்பொனி னம்பலத்
தாதி யையடி யேன்மறந் துய்வனே.

திருச்சிற்றம்பலம்

## கட்டுரை

அறமுத ஞன்கின் றிறவகை விளக்கி
இமிழ்திரை யுதித்த வமிழ்தினு மினிதாம்
தமிழெனு மளப்பருஞ் சலதிசேர் மணிகளாப்
பெரியவர் புகன்ற வரியன வாய
புலக்கணக் கருவியா மிலக்கண நூல்களுட்
கவிநயந் தெரிக்கு மவிநய நூலினும்
ஒல்காப் பெருமைத் தொல்காப் பியத்திலும்
பரந்துள வாகி நிரந்த விதிகளுட்
பழையன கழியப் புதியவாய்ப் புகுந்த
நிதிகளை நிகர்க்கும் விதிகளைப் புலவர்
மிகையெனு வண்ணந் தொகைவகை விரியிற்
சின்னுட் பல்பிணிச் சிற்றறி வினர்தாம்
வருத்த மின்றித் திருத்தமுற் றுணர்ந்தே
பாக்கிய மென்ன வாக்கிய நலத்ததும்
திடமொழி வில்லா வடமொழி விதிகளுள்
இன்றி யமையா நன்றியல் விதிசில
வாய்ந்தது மழகெலா மேய்ந்தது மிஃதெனப்
பன்னூற் புலவர் பழிச்சுந் திறத்ததாம்
**நன்னூற்** பெருமையை நவில்வார் யாரே ?

**நன்னூலுக்குப்** பலவுரைகள் உண்டென்று தக்கோர்கள் சொல்வர். அவற்றுள் இப்போது தெரிந்தவை வருமாறு :—

1. **மயிலைநாதருரை :** இது 1918-ம் வருஷத்தில் என்னால் அச்சிடப்பெற்றுள்ளது. இதன் முகவுரையால் இவ்வுரையின் இயல்பும் மயிலைநாதரின் ஆற்றலும் தெரியவரும்.

2. **சங்கரநமச்சிவாயருரை :** இது தனியே முதன் முறையாக என்னால் 1925-ம் வருஷம் அச்சிடப்பெற்றது. இது **புத்துரை** யெனவும் வழங்கும்.

3. **விருத்தியுரை :** இது **சங்கரநமச்சிவாயருரையைப்** பெரும்பாலும் தழுவிச் சிலசில பகுதிகளை மாற்றி அரிய வடமொழி தென்மொழிவிதிகளை உரிய இடங்களிற் சேர்த்துத் திருவாவடுதுறை யாதீனத்து ஸ்ரீ **சிவஞானயோகிகளால்** விரிவாக இயற்றப் பெற்றது. இவ்வுரையைப் **புத்தம்புத்துரை**யெனவும் வழங்குவர். இஃது அச்சிடப்பட்டுள்ளது.

4. ஊற்றங்கால் **ஆண்டிப்புலவரென்பவரால்** இயற்றப்பட்ட ஒருரை யுண்டென்று அவரியற்றிய **ஆசிரிய நிகண்டின் பாயிரத்** தால் தெரியவருகிறது. அது கிடைக்கவில்லை.

5. **கூழங்கைத் தம்பிரானுரை**யென ஒருரை உண்டென்று கேள்வி. அதுவும் கிடைக்கவில்லை.

6. **இராமானுச கவிராயருரை :** இது சிவஞானமுனிவருடைய மாணாக்கருள் ஒருவராகிய இராமநாதபுரம் சோமசுந்தரம் பிள்ளை யென்பவரிடம் பாடங்கேட்ட இராமநாதபுரம் **இராமானுச கவிராயரென்பவரால்** மேற்கூறிய விருத்தியுரையைத் தழுவி விளக்கமாக இயற்றப்பெற்றது ; 1845-ஆம் ஆண்டில் அவராலேயே அச்சிடப்பெற்று வழங்குகின்றது.

7. திருத்தணிகை **விசாகப்பெருமாளையர்** முதலிய பலரால் அப்பொழுதப்பொழுது காலத்திற்கேற்ப ஆக்கப்பட்ட **காண்டிகை உரைகள்** பல இக்காலத்து வழங்குகின்றன.

மேற்கூறிய உரைகளுள், **சங்கரநமச்சிவாயருரை** தனியே எனக்குக் கிடைத்ததும் பிறவும் வருமாறு :

திருவாவடுதுறை யாதீனத்து மகா வித்துவானும் என்னுடைய ஆசிரியருமாகிய திரிசிரபுரம் ஸ்ரீ **மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்** பூதவுடலை நீத்தபின்பு அவர்களுடைய மாணாக்கர்கள் ஷை ஆதீனத்து 16-ஆம் பட்டத்து ஞானாசிரியராக விளங்கிய ஸ்ரீ **சுப்பிரமணிய தேசிகரவர்கள்பால்** தத்தம் தகுதிக்கேற்ப நூல்களைப் பாடங்கேட்டு வருவாராயினர். அவர்களுள் மேலகரம் ஸ்ரீ **சண்பகக் குற்றாலக் கவிராயரவர்களும்** யானும் நன்னூல் விருத்தியுரையைப் படிக்க விரும்பிய பொழுது ஷை **தேசிகரவர்கள்,** "விருத்தியுரை முதலிற் **சங்கரநமச்சிவாயரால்** இயற்றப்

பட்டிருந்தது; அப்பாற் சிவஞானபோதப்பேருரை (திராவிட மகாபாஷ்யம்) முதலியவற்றில் தம்மால் அமைக்கப் பெற் றுள்ள அரிய வடமொழி தென்மொழிப் பிரயோகங்களை எளிதிற் பிற்காலத்தவர்க்குப் புலப்படுத்த நினைந்து இலக்கணக்கொத்து, தொல்காப்பியச் சூத்திரவிருத்தி, இலக்கணவிளக்கச்சூறாவளி யென்னும் நூல்களிலும் பிறவற்றிலுமுள்ள முக்கியமான சிலவற்றை உரிய இடங்களிற் கூட்டியும் குறைத்தும் மாற்றியும் ஸ்ரீ சிவஞான யோகிகளால் இவ்வுரை செப்பம்செய்யப்பெற்று விருத்தியுரை யென வழங்கலாயிற்று; இங்ஙனம் ஒருரைக்குப்பின் கூட்டியும் குறைத்தும் பிற்காலத்தார் விளக்கி எழுதியுள்ள உரைகளை வட மொழியிற் பரக்கக் காணலாம். இலக்கணக்கொத்து முதலிய மூன்றையும் முறையே படித்தபின்பு பாடங் கேட்டால்தான் விருத்தி யுரை நன்கு புலப்படும். இங்கே இவ்வுரையைப் பாடங் கேட்கும் முறை இதுவே" என்று அறிவுறுத்தி ஏட்டுப்பிரதி யொன்றை வருவித்து, "இது சங்கரநமச்சிவாயருரைமட்டுமுள்ள புத்தகம்; இதனையும் வைத்துக்கொண்டு ஒப்புநோக்கி விருத்தியுரை அச்சுப் புத்தகத்தில் இன்ன இன்ன பகுதிகள் சிவஞானயோகிகள் சேர்த்தவையென்று புலப்படும்படி அடையாளஞ்செய்து படியுங் கள்" என்று சொல்லி அப்புத்தகத்தை அளித்தார்கள். பாடங் கேட்டு வருகையில், நாங்கள் அவ்வண்ணமே ஒப்புநோக்கி வந்து, சிவஞானயோகிகள் சேர்த்தவற்றின்முன் 'சி' என்ற அடை யாளத்தையும், ஏனைய இடங்களில் 'ச' என்ற அடையாளத்தையும் விருத்தியுரையில் அங்கங்கே செய்தோம்.

பாடஞ்சொல்லுகையில் அவர்கள் சங்கரநமச்சிவாயருடைய உரைநயங்களையும் சிவஞானயோகிகள் அங்கங்கே சேர்த்திருக் கும் பகுதிகளின் இன்றியமையாமையையும் அப்போதப்போது எங்களுக்குமட்டுமேயன்றி அங்கே வரும் வடமொழி தென்மொழிப் பண்டிதர்களுக்கும் எடுத்துக்கூறி விளங்கச்செய்து இன்புறுத்து வார்கள்.

[1] ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் இயற்றிய திருவிடை மருதூருலாவைப் பற்றிப் பொறாமையால் பலவகையான புரளிகளை அங்கங்கேயுண்டாக்கி அவர்களுக்கும் அவர்களுடைய மாணாக்கர் கள் முதலியவர்களுக்கும் மிகுந்த மனவருத்தத்தை உண்டுபண்ணி அதனாற் பலராலும் அவமதிப்பையடைந்த இருவர் எப்படியாவது தம் குறைவைத் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்றெண்ணி அதற்கு

1. ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம், இரண்டாம் பாகம் பார்க்க.

உபாயம் பிள்ளையவர்களுடைய அன்பைப் பெறுவதுதானென்றும் அதனைப் பெறுதற்கு உபாயம் பாடங்கேட்பதாக அவர்களிடம் செல்வதுதானென்றும் தம்முள் நிச்சயித்துக்கொண்டனர். பிறகு ஒருநாட் காலையிற் கையுறையேந்தி அவர்கள் மிகுந்தவணக்கத் தோடு வர, சாந்தசிரோமணியாகிய பிள்ளையவர்கள் வந்தவர் களுடைய இயல்பை நன்றாக அறிந்திருந்தும் சிறிதும் வருத்தத் தைப் புலப்படுத்தாமல் அங்கீகரித்து மற்ற மாணாக்கர்களோடு சேர்த்து அவர்களுக்குப் பாடஞ் சொல்லி வந்தார்கள். அவ்விரு வரும் செய்துள்ள தீங்குகளை யெல்லாம் அப்போது நினைந்து மனம்பொறாதவர்களாகிய மாணவர்களிற் சிலர் இடையிடையே வலிந்து கேள்விகளைக்கேட்டு அவ்விருவரையும் விழிக்கச்செய்து அடிக்கடி வருத்துவாராயினர். பிள்ளையவர்கள் என்ன சொல்லி யும் அவர்கள் கேட்கவில்லை. அதனைக் கவனித்த பிள்ளையவர்கள் ஒரு நாள் திடீரென்று தனியே சுப்பிரமணியதேசிகரவர்களிடம் சென்று அதனை விண்ணப்பம் செய்தார்கள். உடனே தேசிகரவர் கள் பழைய மாணாக்கர்களை மட்டும் அழைப்பித்து நன்றாக விசாரித் துப் பலநியாயங்களை எடுத்து மொழிந்ததன்றி, "ஒருவன் தனக் குப் பரம விரோதியாக இருந்தாலும் தன்பால் வருவானாயின் அவனை ஏற்றுக்கொண்டு முன்னையிலும் நன்கு மதித்துப்பாராட்ட வேண்டு மென்பது பெரியோருடைய கொள்கை ; இதனை அறியாமல் நீங்கள் வழுவியொழுகுவீர்களாயின் உங்களை மட்டுமன்றி உங்கள் ஆசிரியரையும் உலகம் அவமதிக்கும். 'இணரெரி தோய்வன்ன வின்னா செயினும், புணரின் வெகுளாமை நன்று' என்னும் திருக் குறளை அறியீர்களோ? அதற்குச் சங்கரநமச்சிவாயரெழுதிய அருமையான உரையை நோக்குங்கள்" என்று கூறி விருத்தி யுரையில் அந்தப் பகுதி (சூ. 360, உரை)யை வாசிக்கச்செய்து இடையிடையே வேண்டியவற்றையுஞ் சொல்லி விளங்கச் செய்தார் கள். மாணாக்கர்கள் அவர்களுடைய முகமதியினின்றும் தோன்றிய வசனாமுதத்தை அருந்தி மிகுந்த சாந்தமுற்றுச் சென்று அவ்விருவ ரோடும் நட்புற்று மனங்கலந்து ஒழுகுவாராயினர். இதனைப் பார்த் துக் கொண்டேயிருந்த பிள்ளையவர்கள் ஸ்ரீ சுப்பிரமணியதேசிக ரவர்களுக்கிருந்த ஒப்புயர்வற்ற கல்விப்பெருமை முதலியவற்றை யெண்ணி வியந்து மகிழ்ந்து மனமுருகினார்கள்.

அச்சிடப்பெற்று வழங்கும் நன்னூல் விருத்தியுரையில் இன்ன இன்ன பகுதி இன்னார் இன்னார் இயற்றியதென்று விளங்கா மையாலும் ஒருவரியற்றியவை மற்றொருவரால் இயற்றப்பட்டன வாகத் தடுமாறுதல்களை அடையவும் கூடுமாதலாலும் முதலாவ

தாகிய சங்கரநமச்சிவாயருரை தனியே பதிப்பிக்கப்படுமாயின் அவருடைய ஆற்றல் தனியே நன்கு விளங்குமென்று அக்காலத்தில் சுப்பிரமணியதேசிகரவர்கள் சொன்னதுண்டு. அதனால் இவ் வுரையைத் தனியே பதிப்பிக்கத் துணிந்தேன். இந்நூற்பதிப்புக்கு மேற்கூறிய ஏட்டுப் பிரதியும் பின்பு கிடைத்தசுவடிகளும் திருநெல் வேலி ஹிந்து காலேஜில் தமிழ்ப் பண்டிதராக இருந்து காலஞ் சென்ற ஸ்ரீ சுவர்ணம் பிள்ளையவர்களாற் கிடைத்த ஆழ்வார் திருநகரி அரங்கநாதகவிராயருடைய ஏட்டுப்பிரதியும் உதவியாக இருந்தன. மற்றப்பிரதிகளில் முதல் ஏடு இல்லை; ஆழ்வார் திரு நகரிப் பிரதியில் மட்டும் இருந்தது. இதைப்பற்றிய மற்றச்செய்தி கள் முதற்பதிப்பின் முகவுரையால் விளங்கும்.

விளங்கா மேற்கோளகராதி, அரும்பத முதலியவற்றின் அகராதி யென்பவை இப்புத்தகத்தின் இறுதியில் முறையே சேர்க் கப்பட்டிருக்கின்றன. முதற்பதிப்பிற் காட்டப்பட்ட விளங்கா மேற்கோள்களிற் சில பின்பு நாளடைவில் விளங்கின. இப்பதிப் பிலும் அப்பால் விளங்கிய சிலவற்றிற்கு இடமும் வேறு சிலவற் றிற்குப் பிற உரையாசிரியர்களால் எடுத்தாளப்பட்ட இடமும் ஷெ அகராதியிற் காட்டப்பட்டுள்ளன. அரும்பத முதலியவற்றின் அகராதியில் மூலத்திலும் உரையிலும் காணப்படும் அரும்பதங் களும் அருந்தொடர்மொழிகளும் அரியவிஷயங்களும் பிறவும் தொகுக்கப்பெற்றுள்ளன; விரிவஞ்சி எல்லாச் சொற்களுக்கும் அதிற் பொருள் எழுதவில்லை. இந்தப் புத்தகத்தைக்கொண்டு வேறு நூல்களையும் அவற்றைக்கொண்டு இதனையும் ஆராய்ந்து உண்மை காணுவதற்கு இவ்வகராதி கருவியாக இருக்குமென்பது என் கருத்து. உரையிலும் மேற்கோள்களிலும் சில பகுதிகள் திருத்தப்படவேண்டிய நிலைமையிலிருந்தும் உரையாசிரியர் காலத்து வழங்கியவண்ணம் புலப்படவேண்டுமென்பதற்காகவே அவை திருத்தப்படவில்லை. சில மேற்கோள்களை வசனமென்றாவது செய்யுளென்றாவது நிச்சயிக்கக்கூடவில்லை; அவை நாளடைவில் விளங்கலாமென்றெண்ணுகிறேன்.

முதற்பதிப்பைக்காட்டிலும் இப்பதிப்பில் அமைத்த திருத்தங் களும் சேர்த்த விஷயங்களும் பல. பிரதிபேதங்களும் உரையி லுள்ள மேற்கோள்களுள் இடம் விளங்கியவையும் முதற்பதிப்பில் தனியே பதிப்பிக்கப்பெற்ற குறிப்புரைகளும் இப்பதிப்பில் அவ்வப் பக்கங்களில் உரிய இடங்களில் அடிக்குறிப்புக்களாகவே சேர்க்கப் பட்டுள்ளன. அக்குறிப்புக்களில் இவ்வுரையாசிரியரால் மறுக்கப் பட்டுள்ள பகுதிகள் இன்ன இன்ன ஆசிரியர்களுடைய கொள்கைக

ளென்பதை அறிவித்தும் உதாரணமாகக் காட்டப்பட்டவற்றுள் மேற்கூறிய அகராதியிற் பொருளெழுதப்படாத கடினமான சொற்களுக்குப் பொருளெழுதியும் அரியவற்றிற்குப் பிரயோகங் காட்டியும் உள்ளேன். படிப்பவர்களுடைய அனுகூலத்தை எண்ணி இப் பதிப்பில் மூலமும் உரையும் பெரிய எழுத்திற் பதிப்பிக்கப்பெற்றன.

இந்நூலின் முதற்பதிப்பு நிறைவேறுதற்கு முன்பு மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் ஆதரவில் பல அன்பர்கள் ஒரு மகாஸபை கூட்டி எனக்கு ஒருகிழி அளித்ததும், இப்பதிப்பு வெளியாவதற்கு முன்பு தமிழ் வழங்கும் பல இடங்களிலும் சென்னையிலும் உள்ள அன்பர்கள் எனது எண்பதாம் பிராய நிறைவைக் கருதிப் பல வகையிற் பாராட்டி நிதியளித்ததும் சங்கரநமச்சிவாயரின் பெருமையையும் தமிழ்த்தாயின் திருவருளையும் எனக்கு நினைப்பூட்டி மகிழ்வுறச் செய்து ஊக்கத்தை யளிக்கின்றன.

வழக்கம்போலவே இப்பதிப்பிற்கும் உடனிருந்து ஆராய்தல் முதலிய உதவிகள் புரிந்த மெய்யன்பர்களுக்கெல்லாம் என்மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றேன்.

என்னுடைய தளர்ச்சிமுதலிய காரணங்களால் இப்பதிப்பில் தவறுகள் நேர்ந்திருத்தல் கூடும்; அவற்றைப் பொறுத்துக்கொள்ளும்படி அறிஞர்களை வேண்டுகிறேன்.

'தியாகராஜ விலாசம்'
திருவேட்டீசுவரன் பேட்டை
4—4—35

இங்ஙனம்,
வே. சாமிநாதையர்.

---

## பவணந்திமுனிவர் வரலாறு

இந்நூலாசிரியராகிய பவணந்திமுனிவர், "முன்னோ ரொழியப் பின்னோர் பலரினுள், நன்னூ லார்தமக் கெந்நூலாரும், இணையோ வென்னுந் துணிவே மன்னுக" (இ. கொ. சூ. 8, உரை) எனவும், "பல்கலைக் குருசில் பவணந்தி யென்னும் புலவர் பெருமான்" (நன். சூ. 137, சங். உரை) எனவும் பாராட்டப் பெற்றவர்.

இவர் சைனமதத்தினர்; இந்நூலிலுள்ள கடவுள் வணக்கங்களிரண்டும் (சூ. 56, 258), [1]மொழிக்கு முதற்காரணம் அணுத்திரளென்ற கோட்பாடும், உயிர்களை [2]ஓரறிவுயிர் முதல் ஐயறிவுயிர்

1. நன். சூ. 58, 74; "ஆற்றலுடையுயிர்" (நன். சூ. 73, மயிலை.) என்னும் அவிநயச் சூத்திரமும் இதனை வலியுறுத்துகின்றது.

2. நன். சூ. 445-9; "ஒன்றி ரண்டொரு மூன்றுநா லைந்தாய், நின்ற

இறுதியாக அமைத்திருக்கும் முறையும், பவணந்தி யென்னும் பெயரும் இதனைப் புலப்படுத்தும்; **பிரயோகவிவேகவுரையில்,** "செயப்படு பொருளை ஆக்கல் அழித்தல் அடைதல் முதலாகச் **சினேந்திரன்** மதம்பற்றி **நன்னூலார்** பலவாகக் கூறுவர்," "**நன்னூலார் வாமனன் சினேந்திரன்** செய்த சத்தநூல் பற்றிக் கூறுவர்" (**கலித்துறை,** 12, 49) என்று வந்துள்ள வாக்கியங்களும் இங்கே கருதற்பாலன.

இவர் துறவறத்தினர்; "பவணந்தி யென்னு நாமத் திருந்தவத் தோனே" (நூற்சிறப்புப்பாயிரம்; 21-2) என்பதும் பவணந்தி முனிவரென இவர் வழங்கப்படுதலும் இதனைப் புலப்படுத்துகின் றன; சைனருள் துறவிகள் நந்தியென்று வழங்கப்படுதலை அச்ச ணந்தி, வச்சணந்தியென்னும் பெயர்வழக்குக்களாலும், "கனக நந்தியும் புட்பநந்தியும் பவணநந்தியுங் குமணமா, சுனக நந்தியுந் திவண நந்தியும்" என்னும் தேவாரத்தாலும் அறியலாகும்.

திருவல்லத்திற்கு வடக்கேயுள்ள வள்ளிமலையின் குகையொன் றில் அமைந்திருக்கும் பழைய சைனபிம்பங்களுள் ஒன்றன் கீழே வரையப்பெற்றுள்ள சாஸனத்திற்கண்ட பவணந்தி பட்டாரரென்ப வர் இந்நூலாசிரியராக இருத்தல் கூடுமென்று சிலர் கருது கின்றனர்; சில காரணங்களால் இஃது அங்கீகரிக்கத் தக்கதா யினும் அந்தச்சாஸனத்தின் காலம் விளங்காமையால் இதனை உறுதியாக எண்ணக்கூடவில்லை. மேற்படி சாஸனம் வருமாறு:—

"**ஸ்வஸ்திஶ்ரீ பாணராயர் குருகளப்ப பவணந்திபட்டாரர் சிஷ்யரப்ப தேவஸேன பட்டாரர் பிரதிமா**" (*Epigraphia Indica, Vol. IV, Page*, 142.)

இவருடைய ஆசிரியர் சனகை யென்னும் ஊரிலிருந்த சன்மதி முனிவரென்பார்; இதனை, "பொன்மதிற் சனகைச் சன்மதி முனி யருள், பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி" (சிறப்புப்பாயிரம், 20-21) என்பதனாலும்,

"தன்னூர் சனகையிற் சன்மதி மாமுனி தந்தமைந்தன்
நன்னூ லுரைத்த பவணந்தி மாமுனி நற்பதியும்
சின்னூ லுரைத்த குணவீர பண்டிதன் சேர்பதியும்
மன்னூ புரத்திரு வன்னமின் னேதொண்டை மண்டலமே"

என்னும் தொண்டைமண்டலசதகச் செய்யுளாலும் அறிக.

---

வைம்பொறி நெறியின் வாழுயிர், ஒன்று நீர்மர நிலநெருப் புக்காற், றென்றிக் காயமைந் தெய்தி வாழுமே," "நந்து சிப்பிசங் காதி நாவன, குந்தெ றும்புகோ பாதி மூன்றன, அந்து தும்பிவண் டாதி நாலவைந், திந்தியம்பசு நரகர் தேநரர்" (மேருமந்தர புராணம், வச்சிராயுதனுத்தரம். 10, 11.)

மாணுக்கரை ஞானபுத்திரரென்றும் ஆசிரியரை ஞானபிதா வென்றும் வழங்குதல் மரபு. சைனர்களால் தெரியவருகின்ற கன்னபரம்பரைச் செய்தியும் இதுவே. இங்கே கூறிய **சனகை** யென்பது முற்காலத்திற் **சனநாதபுர**மென்று வழங்கி வந்ததாக **மயிலைநாதருரையால்** தெரிகின்றது; இதைப்பற்றி விசாரித்த பொழுது சனநாதபுரமென்னும் பெயரையுடைய ஊர்கள் தென்னுட்டில் நான்கிற்குக் குறையாமல் உள்ளனவென்று திருவனந்தபுர ஸமஸ்தானத்துச் சிலாசாஸன பரிசோதனைத் தலைவராக இருந்த **ஸ்ரீ. து. அ. கோபிநாத ராவ்,** எம். ஏ. அவர்கள் அன்புடன் தெரிவித்தார்கள்.

இந்நூலாசிரியருடைய ஊரும் மேற்கூறிய சனகையென்றே மேலே காட்டிய **தொண்டைமண்டலசதகச்** செய்யுளைக் கொண்டு சிலர் நிச்சயிக்கின்றனர். தொண்டை நாட்டிற் [1]சனகாபுரமென்று இக்காலத்து வழங்கப்படுகின்ற ஊர் இச்சனகையாக இருக்கலா மென்பது சிலருடைய கொள்கை. இந்நூலைச் செய்வித்த சீய **கங்கன் மனைவியாகிய அரியபிள்ளை** யென்பவள் திருவல்லத்தில் திருவல்லமுடைய நாயனுருக்கும் அம்பிகைக்கும் சந்தி விளக்கு ஒவ்வொன்று வைத்ததைத் தெரிவிக்கும் [2]சாஸனமும் திருவேகம்ப முடையார்க்கு அவன் திருநுந்தாவிளக்கு வைத்ததைத் தெரிவிக்கும் காஞ்சீபுரத்துச் சாஸனமும் இதற்கு அனுகூலமாக இருக்கின்றன.

கொங்கு மண்டலத்திலுள்ள இருபத்துநான்கு நாடுகளுள் ஒன்ருகிய [3]**குறும்புநாட்டில்,** இக்காலத்திற் [4]**சீனுபுரம்** என்று வழங்கப்படுவதும் முதல் தீர்த்தங்கரராகிய ஆதிநாதருடைய கோயில் உள்ளதுமான **சனகாபுரம்** இந்நூலாசிரியருடைய ஊரென்று பின்னுள்ள செய்யுளைக்கொண்டு நிச்சயிப்பாருமுளர் :—

(கொங்குமண்டல சதகம்)

" கங்கக் குருசி லுவக்கநன் னூலைக் கனிந்துபுகல்
துங்கப் புலமைப் பவணந்தி மாமுனி தோன்றிவளர்

1. இவ்வூர் வேலூர் ஜில்லா, அரக்கோணந்தாலூகாவில், சோழசிங்க புரம் (Sholinghur) போஸ்டைச்சார்ந்த ஓர் ஊராக இருக்கவேண்டு மென்று தெரிகின்றது.

2. "ஸ்வஸ்திஸ்ரீ குலோத்துங்கசோழ தேவர்க்கு யாண்டு முப்பத்து நாலாவது அமராபரணசீயகங்கனம்பிராட்டியான அரியபிள்ளை திருவல்ல முடைய நாயனுர்க்கு வைத்த சந்திவிளக்கு ஒன்றும் நாச்சியார்க்கு வைத்த சந்திவிளக்கு ஒன்றும் இவ்விளக்கு இரண்டுக்கும்........" (South Indian Inscriptions, Vol. III, Part, I, Pages 122-23.)

3. " கொங்கிற் குறும்பிற் குரக்குத் தளியாய் " (தே. ஊர்த்தொகை.)

4. இவ்வூர் ஈரோடு தாலூகாவிலுள்ளது.

கொங்கிற் குறும்பு தனிலாதி நாத குருவிளங்கும்
மங்குற் பொழிற்சன காபுர முங்கொங்கு மண்டலமே.''

இவ்வூர், சீயகங்கனுடைய கங்க நாட்டிற்கு அயலதும் அவ ளுட்சிக்கு உட்பட்டிருந்ததுமான கொங்குநாட்டில் இருத்தலாலும் சினலயத்தைப் பெற்றிருத்தலாலும் இஃது இவருடைய ஊராக இருக்கலாமென்பது சிலர் கொள்கை.

[1]சனநாதபுரமென்பது மைஸூர் ஜில்லா, திருமுக்கூடல் நரஸி புரம் தாலூகாவைச்சேர்ந்த கிராமமென்றும் அது கங்க நாட்டிற் காவிரியின் வடகரைக்கண்ணுள்ளதென்றும், அவ்வூர்க்கு மா விலங்கையென்பது மற்றொரு பெயரென்றும் தெரிய வருகின்றது ; இதனைச் செந்தமிழ், 5-ஆம் தொகுதி, 300-ஆம் பக்கம் முதலிய வற்றில் மேற்கூறிய ஸ்ரீ. து. அ. கோபிநாதராவ் அவர்கள் எழு திய ஒரு குறிப்பினால் அறியலாகும். இதனால், பவணந்தியும் அவர் ஆசிரியரும் இருந்த இடம் கங்கநாடென்று தெரிகிறது.

அமராபரணனென்ற சிறப்புப்பெயர் வாய்ந்த சீயகங்கனென் னும் அரசன் தமிழிலக்கியங்களின் ஆராய்ச்சிக்கு இன்றியமை யாததும், பரந்து கிடப்பதுமான தொல்காப்பியத்தைக் கற்று விதி விலக்குக்களை அறிந்துகொள்வது சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறி வினராகிய மனிதர்க்கு அரிதென்பதை யறிந்து அந்நூலிற் கூறப் படும் எழுத்து முதலிய ஐந்திலக்கணங்களையும் யாவரும் வருத்த மின்றி அறிந்து கொள்ளும்படி ஒவ்வொரு பகுதியையும் சுருக்கித் தொகைவகை விரியால் விளக்கி ஓர் இலக்கண நூலைச் செய்தருளு மாறு வேண்டிக் கொண்டமையாலும், இயல்பாகவேயுள்ள இரக்க மிகுதியாலும் இவர் இந்நூலை இயற்றி வெளிப்படுத்தினர்; '' அரும் பொரு ளைந்தையும்..............வகுத்தனன் '' (சிறப்புப்பாயிரம், 10-19) என்பதனாலும்,

'' சொல்காப் பியத்தின் குணதோடந் தேர்ந்து சொலுவதற்குத்
தொல்காப் பியங்கற்க நீண்ட ததனைச் சுருக்கியிசை
ஒல்காப் பெரும்பவ ணந்தியென் றோதி யுபகரித்த
வல்கா வலன்சீய கங்கனுந் தான்கொங்கு மண்டலமே ''

என்னும் கொங்குமண்டலசதகச் செய்யுளாலும் இது விளங்கும்.

'' முன்னோர் நூலின் வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்'' (சிறப்புப்பாயிரம், 18-9) என்பதனால், இவர் தொல்காப்பியத்தில் மட்டுமன்றி அக்காலத்து வழங்கிய அகத்திய சூத்திரங்களிலும்

1. சனகை யென்பதற்குச் சனநாதபுரமென்றே மயிலைநாதர் பொரு ளெழுதியிருத்தலால், இதுதான் சனகையென்று கொள்வது நேர்.

**அவிநயம்** முதலிய இலக்கண நூல்களிலும் **சைனேந்திரம்** முதலிய வடமொழி வியாகரணங்களிலும் இருவகை வழக்குக்களிலும் முன்பு வழங்கிப் பின்பு வீழ்ந்தொழிந்தவற்றை நீக்கி வழங்குவனவற்றைத் தழுவி மரபுவழுவின்றி இந்நூலேயியற்றினரென்று வெளியாகின்றது.

அகத்தியசூத்திரங்களைப் பின்பற்றினமை இந்நூலிலுள்ள 131, 259, 260, 273, 291, 295, 300, 323, 327, 333, 340, 342, 355, 378, 382, 395-ஆம் சூத்திரவுரைகளாலும், தொல்காப்பியத்தைப் பின்பற்றினமை தானெடுத்துமொழிதலாக இவர் எடுத்துக் கொண்ட "குறியதன் முன்னர்" (90) என்பது முதலிய ஏழு சூத்திரங்களாலும், 106, 131, 320, 358, 372, 378, 389, 449-ஆம் சூத்திரவுரைகளாலும், பிற அமைதிகளாலும், அவிநயத்தைப் பின்பற்றினமை 60, 74, 102, 125, 128, 131, 150, 264, 320, 360, 370-ஆம் சூத்திரவுரைகளாலும், அகத்தியத்தையும் அவிநயத்தையும் பின்பற்றினமை **நுண்பொருண்மாலை**யுடையார் 571-ஆம் திருக்குறட் குறிப்பில், [1]"பரிபாட்டினுள், நிவந்தோங்குயர் கொடிக்கும் இவ்வாறுரைத்தாராதலால், 'ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழாஅ' என்னுஞ் சூத்திரம் நன்னூலில் வருதலால், அகத்தியமாதல் அவிநயமாதலாக வேண்டுமென்க" என்று எழுதியிருத்தலாலும் [2]ஆல், ஆன் என்பவற்றையும் மூன்றனுருபாகக் கூறியிருத்தலாலும் விளங்கும்.

திருவாரூரிற் றிருக்கூட்டத்திற் றமிழ்க்கிலக்காகிய **வைத்தியநாதநாவலர்** தாம் இயற்றிய **இலக்கண விளக்கத்தில்** இந்நூலிலிருந்து ஏறக்குறைய 250-சூத்திரங்களை யெடுத்து அமைத்திருத்தலே உற்றுநோக்கும்பொழுது, பழைய நூல்களிலிருந்து பொருள்களைத் தொகுத்தல் முதலியவற்றிலும் சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச் செவ்வனடியிற் செறித்தினிது விளக்கித் திட்பநுட்பம் பொருந்தச் சூத்திரஞ் செய்தலிலும் இவர் வல்லுநரென்பது புலப்படும்.

கி. பி. 1178 முதல் 1216-ஆம் வருடம் வரையில் அரசுபுரிந்த **மூன்றுங்குலோத்துங்கசோழன்** காலத்தவனை மேற்கூறிய

1. **செந்தமிழ், 7-ஆம் தொகுதி, பக்கம், 526.**

2. **நன். சூ. 296, மயிலை.** பார்க்க; ஆல்; ஆன் என்பன அகத்தியத்திலன்றி அவிநயத்திலும் மூன்றும்வேற்றுமையுருபுகளாகக் கூறப்பெற்றுள்ளன; "ஆலு மானு மூன்ற னுருபே என்றார் **அவிநயனார்**" என்பது **வீரசோழியம்,** வேற்றுமைப்படலம், 6-ஆம் கலித்துறை உரையிலுள்ள மேற்கோள்.

சீயகங்கன் காலத்தில் இருந்தவராகத் தெரிதலால், இவருடைய காலமும் அதுவேயெனக் கொள்ளவேண்டும்; "பிங்கல முதலா, நல்லோருரிச்சொலி னயந்தனர் கொளலே" (460) என்பது இந்நூற் சூத்திரமாதலால், பிங்கல நூலாசிரியர்காலத்திற்கு இவர் காலம் பிற்பட்டதென்று தெரிகின்றது; 'பைங்கண், பைந்தார், காரா, சேதா என்றாற்போலும் பண்புத்தொகையாகிய சொற்களைப் பசுமை, கருமை, செம்மை யெனப் பண்புப் பெயராக நிறுத்தி, ஈற்றுயிர் மெய்யும் ஈற்றயலுயிருங்கெட்டு வருமொழிக்கேற்ப ஒற்றுத் திரிந்தும் திரியாதும் ஆதிநின்ற அகரம் ஐகாரமாயும் திரிந்தனவென்றும், ஈற்றுயிர்மெய்யும் ஈற்றயலுயிருங் கெட்டு ஆதி நீண்டதென்றும், ஈற்றுயிர்மெய்யும் இடையிலொற்றுங் கெட்டு ஆதிநீண்டதென்றும், பின்னுள்ளோர் சந்திமுடிக்கின்றது பொருந்தாது' (தொல். எச்ச. சூ. 3, ந. உரை) என்னும் பகுதியை "ஈறு போதல்" (136) என்னும் சூத்திரத்தின் மறுப்பாகக் கொள்ளின், நச்சினார்க்கினியர் காலத்திற்கு இந்நூலாசிரியர்காலம் முற்பட்டதென்று நினைத்தற்கு இடமுண்டு.

---

## சீயகங்கன் வரலாறு[1]

இந்நூலை ஆக்குவித்தோனாகிய சீயகங்கன் என்பவன் கங்கர் குடியிற் பிறந்தவன்; மூன்றாங் குலோத்துங்கனுடைய ஆட்சிக்கு அடங்கி யொழுகிய ஓர் அரசன்; வீரத்திற் சிறந்தவன். இவன் குலத்தினர், "நன்ன னேற்றை நறும்பூ ணத்தி, துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி" (அகநா. 44), "பங்களர் கங்கர் பல்வேற் கட்டியர்" (சிலப். 25 : 157) என்று பழைய நூல்களிலும், "கங்கரிவ ரையகரு நாடரிவ ரைய" (திருவிளை. மெய்க் காட்டிட்ட. 30) என்று பிற்காலத்து நூலிலும் கூறப்படுதல் காண்க.

"துன்னருங் கடுந்திறற் கங்கன்" என இவன் முன்னோனொருவனும், 'அமராபரணன்' என இவனும் விதந்து கூறப் பெற்றிருத்தலை நோக்குகையில் இக்குடியிற் பிறந்தாருடைய வீரச் சிறப்பு நன்கு புலனாகும். கங்கமென்பது நாட்டின் பெயராகவும் வழங்கும்.

1. இந்நூற் சிறப்புப்பாயிரத்தையும், ஸ்ரீ து. அ. கோபிநாத ராவ், எம். ஏ. அவர்கள் செந்தமிழ், நான்காந்தொகுதியில் எழுதிய 'நன்னூல்' என்னும் ஆராய்ச்சிக்குறிப்பு முதலியவற்றையும் கருவியாகக்கொண்டு இவ் வரலாறு எழுதப்பெற்றது.

கங்கராச்சியத்தைத் தாபித்தவர் சைனசாரியர்களில் ஒருவரான ஸிஹ்மநந்தியாசாரியரென்றும், கங்க பரம்பரையினரிற் பலர் சைனமதத்தைத் தழுவியொழுகினரென்றும் சொல்லுவதுண்டு.

அமராபரணன், ஸ்ரீமத் குவளாலபுரபரமேசுவரன், கங்ககுலோற்பவனென்று சீயகங்கன் தன் மெய்க்கீர்த்திகளிற் பாராட்டப்பெறுவன்; மூன்றும் குலோத்துங்க சோழ தேவனுடைய ஆட்சியின் 27-ஆம் ஆண்டான கி. பி. 1205-இல் வெட்டப்பெற்ற சாஸனமொன்றால் இவனுக்குத் திருவேகம்பமுடையானென்னும் ஒரு பெயருண்டென்றும் தெரிகின்றது. [1]காஞ்சீபுரம் அருளாளப் பெருமாள் கோயிலிலுள்ள சாஸனமொன்றால் இவனுடையதந்தை சோழேந்த்ர ஸிம்ஹனென்னும் பெயருடையவனென்று தெரிய வருகிறது.

குவளாலபுர பரமேசுவரன் என்று கூறப்படுதலால் இவனுடைய இராசதானி குவளாலபுரம் (கோலார்) என்று தெரிகின்றது; வடமொழி நூல்களில் இது கோலாகலமென்று கூறப்படுகின்றதென்பர். இந்நூலாசிரியர் வரலாற்றால் இவனுடைய பிறவரலாறுகள் சில புலப்படும்.

---

# நூல்

இந்நூல், நூற்பா அகவல்களால் யாக்கப்பெற்றது. "முன்னோர் நூலின் வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்" (சிறப்புப் பாயிரம், 18-9) என்றதனால், இது முதனூலன்று; [2]எதிர்நூலுமன்று; தொல்காப்பிய முதலியவற்றை நோக்கும்போது வழிநூலாகவும் அகத்தியத்தை நோக்கும்போது [3]சார்புநூலாகவும் கருதப்படும்; இந்நூலுள் ஆங்காங்குச் சூத்திரங்களின் இறுதிகளில் அமைத்திருக்கும் 'என்ப' என்னும் பகுதிகளும் இதற்குச் சான்றாகும்.

தொல்காப்பியத்திற்குப் பின்பு இயற்றப்பெற்ற இலக்கண நூல்களுள் இதைப்போலச் சிறந்தது வேறொன்றில்லையென்பது பெரியோர்கருத்து. இது பவணந்தி முனிவருடைய நூலாராய்ச்சிப் பெருமையையும் நூற்பாவியற்றும் வன்மையையும் புலப்படுத்து

1. Annual Report of South Indian Epigraphy, 1919-No. 589.
2. நன். சூ. 62, மயிலை. விசேடவுரையையும் அதன் கீழ்க்குறிப்பையும் பார்க்க. 3. நன். சூ. 90, மயிலை. பார்க்க.

வது. 49-ஆம் சூத்திரவுரையில் தன்மையாற் பெயர்பெற்ற நூலுக்கு இந்நூற்பெயர் உதாரணமாகக் காட்டப்பெற்றிருத்தலே இதன் பெருமையை நன்கு விளக்கும்.

இந்நூல் ஐந்ததிகாரங்களை உடையதாகவே ஆதியிற் செய்யப் பெற்றதென்பதை, '' ஏற்புழி யெடுத்துடன் '' என்னும் சூத்திரத்தின் விசேடவுரையில், 'அஃதேல், பாட்டிற்குரிய பொருள்கோளை ஈண்டுச்சொல்லவேண்டிய தென்னையோவெனின் அஃதே! நன்று சொன்னாய்; மேல், ஒருமொழி, தொடர்மொழி, பொதுமொழியென்று சொற்கூறு செய்து அவையாமாறு சொன்னாரன்றே; அவற்றுள், தொடர்மொழி அடிமறி மாற்றொழித்த ஏனை ஏழு பொருள்கோளும் படத் தொடர்வனவுளவாகலின், ஈண்டு வைத்தாரென்க. அஃதேற் பெரும்பாலும் யாப்பிற்கே உரிமை யுடைமையின் ஆண்டே வைக்கற் பாலவெனின், முன்னம் சொல்லறிந்து யாப்பறிய வேண்டுதலிற் சொல் அறிவுழி வைக்கவேண்டுமென்க' என்றும், '' பழையன கழிதலும் '' என்னுஞ் சூத்திரக் கருத்துரையில், 'இந்நூலிற் சொன்ன ஐந்ததிகாரத்திற்கும் சிங்கநோக்காய் நிற்பதொரு புறனடையுணர்த்துதல் நுதலிற்று' என்றும், 'இவ்வாறே மேல் வரும் அதிகாரங்களிலும் கண்டுகொள்க' என்றும் மயிலைநாதர் எழுதியிருப்பவையும், இவ்வுரையில், 'இயற்றமிழை அரும் பொருளைந்தெனக் கூறினமையின், இந்நூலுட் கூறிய பொருள் யாப்பு அணிகளென்னும் மூன்றதி காரங்களும் அக்காலத்துள்ளன போலும்' (சிறப்புப்பாயிரம், உரை) என எழுதப்பெற்றிருத்தலும், '' தமிழநன் னூற்றுறைக ளஞ்சுக் கிலக்கியம் '' (பெரியதிருமொழித் தனியன்) என்றதும், அதனுரை யாசிரியரான ஸ்ரீபிள்ளை லோகாரிய சீயர், 'தமிழுக்கு எழுத்து முதலான அஞ்சுலக்ஷணத்தையும் அறுதியிடுவதான நன்னூ லென்று ஒரு சாஸ்திரம் உண்டு' என்று அதற்கு ஒருவகையாகப் பொருள் செய்திருத்தலும் வலியுறுத்துகின்றன.

பவணந்திமுனிவர், எழுத்து முதலிய ஐந்திலக்கணங்களையும் தொல்காப்பியத்திற்போல எழுத்துச் சொற்பொருளென்னும் மூன்றதிகாரத்தினுள் அடக்கினரென்றும் அவற்றின் முதலிற் படைப்புமுதலிய முத்தொழிற்கும் உரிய நான்முகன் முதலிய மூன்று கடவுளராயுள்ளான் அருகதேவனே யென்னும் தமது சமயக்கொள்கைக்கு இயைய [1]நான்முகன் முதலிய மூவர்க்கும் முறையே பொருந்துமாறு சமற்காரமாக அருகக் கடவுள் வணக்

1. அருகதேவனை அம்மூன்று பெயர்களால் அவர்கள் வழங்குதலை, '' முனிமைமுகடாய '' (சீவக. 1609) என்பது முதலிய மூன்று செய்யுட்க

கங் கூறினரென்றும், பின்னது இறந்து போகவே முன்னவை இரண்டுமட்டும் வழங்கலாயினவென்றும் சைனரிற் சிலர் கூறுகின்றனர்.

இவ்விருவகைக் கொள்கைகளிலும் அதிகாரத்தொகையில் வேறுபாடுண்டே யன்றி இந்நூல் ஐந்திலக்கணத்தையும் உணர்த்துவதென்பதில் வேறுபாடில்லை.

வழங்கப்பெற்ற பகுதிகளைக் கண்டு இந்நூல் இரண்டதிகாரங்களையே உடையதென்று பிற்காலத்து ஆசிரியர் வழங்குவாராயினர்; இக்காரணம்பற்றியே இது சிற்றதிகாரமென்றும் கூறப்படுவதாயிற்று.

இந்நூற் சூத்திரங்களெல்லாம் பவணந்திமுனிவராலே செய்யப்பெற்றவையல்ல; தானெடுத்து மொழிதலாக இவராற் பழைய நூல்களிலிருந்து எடுத்தாளப்பெற்றவையும் உண்டு.

இதன் பாயிரப்பகுதிகளுட் சிலசில இறையனுரகப் பொருட் பாயிரத்திலும் தொல்காப்பியப்பாயிரவுரைகள் முதலிய உரைகளிலும் வேறுபட்டும் வேறுபடாமலும் சூத்திரங்களாகவும் உரைநடையாகவும் காணப்படுகின்றன; அப்பகுதிகளுள் மூன்று சூத்திரங்கள் (7, 16, 17) தொல்காப்பியம்; ஐந்து (10 - 14) [1]பாடலனுர் செய்தவை; இரண்டு (52 - 3) பனம்பாரம். "பூமலியசோகின்" என்பது முதலியனவே பவணந்தி முனிவராற் செய்யப்பெற்றன வென்றும் அவற்றுள், ஏழு சூத்திரங்கள் (90, 252, 317, 396, 404, 408, 439) தொல்காப்பிய மென்றும், திருக்குறள் நுண்பொருண்மாலையுடையார் கொள்கையின்படி "ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழாஅ" (398) என்பது இந்நூலாசிரியர் வாக்கன்றென்றும் இப்போது தெரிய வருகின்றது. தொல்காப்பிய உரையாசிரியர்களைப்போலவே மயிலைநாதரும், சிறப்புப்பாயிரத்துக்கும் அதன் உரைக்கும் இடையே பாயிரச் சூத்திரங்களை அமைத்திருத்தலும், நன்னூற்சூத்திரத் தொகைகளைக் குறிப்பிடும் இரண்டு வெண்பாக்களிலும் (பக்கம், 374) பொதுப்பாயிரச்சூத்திரத்தொகை சேர்க்கப்படாமையும் இக்கருத்தை வலியுறுத்துகின்றன. இந்நூற் சிறப்புப்பாயிரம் இன்னுரால் இயற்றப்பெற்றதென்று தெரியவில்லை.

---

ளாலும், அவற்றின் இறுதியில் உள்ள, 'அயனும் அரியும் அரனும் இவனே யென்பது கருத்து' என்னும் விசேடவுரையாலும், "திருமாலே திசைமுகனே சிவனே" (திருப்பருத்திக்குன்றப்பத்து, 9) என்பதனுலும் அறிக.

1. யா. கா. ஒழிபு. 8, உரை; இப்பெயர் மாடலனுரென்றும் வழங்கும்.

**பிரயோகவிவேகத்தில்**, 2, 5-8, 12, 16, 18, 19, 21, 24, 26, 33-7, 39, 42, 49-ஆம் கலித்துறைகளினுரைகளில் அந்நூலுரை யாசிரியரும், **இலக்கணக்கொத்தில்** 6-8, 12, 43, 85, 86, 117, 129, 131-ஆம் சூத்திரங்களினுரைகளில் அந்நூலுரையாசிரியரும், [1] தொல்காப்பியப்பாயிரவிருத்தியில், " திரிபுடையவாயினும் மரபுநிலை திரியாதன யாவையெனின் " என்பது முதலியவற்றிலும், **இலக்கண விளக்கச் சூறுவளியில்** எழுத்தியல், 6, 23, 27, 31, பதவியல், 1, உயிரீற்றுப் புணரியல், 2, 7, 9, 19, 35, பெயரியல், 37-ஆம் சூத்திரவுரைகளிலும் திருவாவடுதுறையாதீனத்து **ஸ்ரீ சிவஞானயோகிகளும்** எழுதியிருக்கும் இனிய அரிய வாக்கியங்கள் இந்நூலின் அருமை பெருமைகளையும் ஆசிரிய ருடைய கல்விவன்மையையும் இவர்பால் அவர்களுக்குள்ள நன்மதிப்பையும் விளங்கத் தெரிவிக்கும்.

தொல்காப்பியத்திற் குற்றியலுகரப்புணரியலிலுள்ள விதிகளை இந்நூலில் 181-ஆம் சூத்திரமுதலியவற்றிலும், அந்நூலில் வேற்றுமையியல் முதலிய மூன்றுறுப்புக்களிலடங்கியவற்றை இந்நூலில் 291-ஆம் சூத்திரமுதலியவற்றிலும் அடக்கி யிருப்பது முதலியனவும், அந்நூலிற் சுருங்கிக்கிடந்த கால இடைநிலை முதலியவற்றை இதில் விரித்துக்கூறியிருப்பது முதலியனவும், அந்நூலில் இல்லாத வடமொழி விதிகளைப் பெயர்த்து இதிற் பதவியலில் அமைத்திருத்தலும் தொகுத்தல் விரித்தல் மொழி பெயர்ப்பு நூல்யாப்புக்கள் இந்நூலில் அமைந்திருத்தலை முறையே காட்டுகின்றன. தொகைவிரி யென்னும் நூல்யாப்பு சூத்திரக் கிடக்கை முறையால் இந்நூலுள் ஆங்காங்கு உணரலாகும்.

இந்நூற் பொருளையும் இதன் பெயரையும் அமைத்து நலமுறப் பாராட்டிய தமிழ்நூல்களும் உண்டு ; அவற்றுட் சிலவருமாறு :—

**(தமிழ்விடுதூது, 23)**

" எண்முதலா கப்பகரு மீரா றெனும்பருவம்
மண்முதலோர் செய்து வளர்க்குநாள்."

**(பிரபுலிங்க லீலை)**

" குறில்வழி லகரந் தனிநிலை யாயுங் கூடிய தகரமுன் னெழுத்தென்
றறிகுறி வடிவந் திரிதல்போ னந்தி யடல்விடை மெய்திரிந் துறினும்
நறுமலர் விழியிற் கண்டவ ரெல்லா நந்தியே யென்றுள மகிழ்ந்தார்."

1. பழையபதிப்பு, பக்கம், 6 ; புதியபதிப்பு, பக்கம், 7.

(திரு வெங்கையுலா, 393-4)

“ புன்றுரும்பு போன்றலைந்தார் போற்று மவி காரிமுனம்
சென்று வருசொற் றிரிதல்போல் - மென்றளிராம்
மேனி திரிந்தார். ”

(திருத்தணிகையுலா, அரிவை)

“ சிற்றதிகா ரங்களெலாந் தேவர் முதலாக
உற்றவதி காரிகளுக் கோர்ந்தளித்தான் - முற்றுலகாள்
பேரதிகா ரந்தனைத்தான் பேணுந் திருத்தணிகை
ஊரதிகா ரன்றேர்வந் துற்றிடலும் - காரிகையும்
நன்னூ லிடையைய நண்ணிப் பணிந்தெழுந்து
முன்னூ லுரையகல மோகித்தாள் - பன்னூலும்
ஓதா துணரு முயர்புலவீர் மெய்யினுயிர்
போதா திருக்கப் புணர்ப்பதுண்டோ - தாதாரும்
ஆய்தங் குறுகி யரைமாத் திரையினுடல்
தேய்தந்த தென்விதியோ செப்பிடீர் - வாய்தமிழ்சேர்ந்
தேறு முயிரளவா யேய்ந்தவுட லவ்வளவு
மாறி யழிந்த வகையென்னே - கூறிடீர்
வல்லினத்து ளோரிரண்டு மற்றை மருங்கான
மெல்லினத்துக் கேபகையாய் விட்டதென்னே - புல்லொருசார்
அல்வழியும் வேற்றுமையே யாகி மதிமருட்டும்
சொல்வழிவா ராததென்ன சூழ்ச்சியோ - நல்ல
இயற்கைக் குயின்மொழிதா னென்னே மிகுத்த
செயற்கைக் கொழிபதனைச் செப்பீர் - பயிற்சிபெறு
நேமிநா தத்தா னிலைதெரியாச் சொற்புணர்ச்சி
காமர்நன்னூற் சூத்திரத்தாற் காட்டிடீர் - சேமமுறு
செவ்வேழ மெய்க்குமுனஞ் சேர்ந்துதட வாமென்கை
ஒவ்வா வியல்பென்கை யோதிடீர்.”

(கோடீச்சுரக்கோவை, 44, 241)

“ செறிப்புறு வான்புகழ்க் கோடீச்சு ரேசர் சிலம்பிடைநாம்
உறுப்பமை நன்னூ லிடைநீடு மைம்பா லுறுதொடர்பைச்
சிறப்புறு கேள்வி பெறுபாங்க னுக்குத் தெளிவுபெறக்
குறிப்பினு மோதும் வெளிப்படைச் சொல்லினுங் கூறுதுமே. ”

“ நின்னூர் தனக்கன்று நீபோன பின்பு நெடுவளத்தின்
மன்னூர முத்தமிழ்க் கோடீச் சுரநம்பர் மால்வரைமேல்
பொன்னூர் வரைதனிற் கொண்டெமர் பாலிப் புலவரெலாம்
நன்னூ லிடையெழிற் காரிகை கேட்க நணுகினரே.”

(சிரகிரிக்கோவை, 8)

“ சேவிய லார்கோடி யெம்மான் சிராமலைத் தேமலரார்
காவிய லாரு மளிகா னுமக்குக் கழறுவதென்
பாவிய லாருநற் காரிகை யோதியின் பாலமர்ந்து
மேவிய லாருநன் னூலிடை யாயா விதமதென்னே.

# சங்கரநமச்சிவாயர் வரலாறு

இந்நூலுரையாசிரியராகிய ஸ்ரீ சங்கரநமச்சிவாயருடைய ஊர் திருநெல்வேலி; அதில் இவர் வாழ்ந்த இடம் தடிவீரையன் கோயில் தெரு; குலம் பாண்டிநாட்டு வேளாளர் குலம்; சமயம் சைவம். இவருடைய வழித்தோன்றலாகிய பௌராணிகர் சண்முகம்பிள்ளை யென்பவரையும் அவர் புதல்வராகிய வேலாயுதம் பிள்ளை யென்பவரையும் யான் கண்டு பழகியிருக்கிறேன்; அந்த வேலாயுதம்பிள்ளை நாங்குனேரி, தென்காசி முதலிய இடங்களில் தாலூகா குமாஸ்தாவாக இருந்தனர். சங்கரநமச்சிவாய பிள்ளை யென்று இவரதுபெயர் அக்காலத்தில் வழங்கப்பட்டுவந்த தென்றும் முத்துக்குமாரபிள்ளை யென்ற பெயருள்ள ஒரு புதல்வர் இவருக்கு உண்டென்றும் அவர்களால் தெரிந்துகொண்டேன். புலவரென்பது கல்விச்சிறப்பால் இவருக்கு அமைந்த பெயர். புலம்-அறிவு.

நெல்லை ஈசானமடத்திலிருந்த இலக்கணக்கொத்து ஆசிரிய ராகிய ஸ்ரீ சாமிநாததேசிகரிடம் இவர் தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களையும் சங்க இலக்கியமுதலியவற்றையும் வடநூல்கள் சிலவற்றையும் முறையே கற்றுத்தேர்ந்தவர். மேற்கூறியவற் ரோடு திருமுறைகள் முதலியவற்றிலும் சைவசித்தாந்த நூல்களி லும் திவ்யப்பிரபந்தமுதலிய வைஷ்ணவநூல்களிலும் கம்ப ராமாயணம் முதலிய பெருங்காப்பியங்களிலும் இவருக்கு நல்ல பயிற்சியுண்டென்று இவருடைய உரை தெரிவிக்கின்றது.

சாமிநாததேசிகர்மட்டுமன்றி இலக்கணவிளக்கம் வைத்திய நாததேசிகர் முதலியோரும் அவரைப்போன்ற வேறு சில பெரி யோரும் இவர் காலத்தில் திருநெல்வேலியில் இருந்தவர்களாதலின் கல்வி கேள்விகளிற் சிறந்து ஓர் இலக்கணநூலுக்கு உரை இயற்று தற்குப் போதிய ஆற்றலைப் பெறுவது இவருக்கு எளிதாயிற்று.

"எந்நூற்கும்......சங்கரநமச்சிவாய னென்னும்,......புலவன்", "முன் னூற்கு......நன்னூற்கு விரித்துரைசெய் தான்" (உரைச்சிறப்புப்பா யிரம் 1, 3)

என்பவற்ருல் இவருடைய கல்வியாற்றல் புலப்படும்.

நன்னூற்சூத்திரங்களில் விருப்பும் மயிலைநாதருரை அந் நூலுக்கு ஏற்றவுரையன்றென்பதுபற்றி அதன்பால் வெறுப்பும் கொண்ட தம் ஆசிரியர் சாமிநாததேசிகர், "நன்னூலுக்குச் சிறந்ததோருரை நீர் செய்திடுக" என்று பணித்தமையாலும், கல்வி கேள்விகளிற் சிறப்புற்று, 'முத்தமிழ்ப் புலமையும் முறை

யரசுரிமையும் இத்தலத் தெய்திய இறைமகன்' என்று பாராட்டப் படும் ஊற்றுமலை மருதப்பத்தேவருடைய வேண்டுகோளாலும் இந் நூலுக்கு மிக அழகிதாகிய ஒருரையை இவர் இயற்றுவராயினர். சாமிநாததேசிகருக்கு அக்கருத்துக்களுண்மை, 'சேற்று நிலத்திற் கவிழ்ந்த பால் தேன் நெய் முதலியனவும் சேருறுற்போல் நன்னூற் சூத்திரமும் [1] அவ்வுரையுடனே கலந்து குற்றப்பட்ட தென்க; முன்னூலொழியப் பின்னூல் பலவினுள் நன்னூலார் தமக்கு எந் நூலாரும் இணையோ வென்னுந் துணிவேமன்னுக; முன்னோ ரொழியப் பின்னோர் பலரினுளென்றலு மொன்று' (இ. கொ. சூ. 8, உரை), "அவனருளால்" (சிறப்புப் பாயிரம்) என்பவற்று லும், மருதப்பத்தேவர் விரும்பினமை, "நன்னூலுட் கருத்துலகோ ரறியவுரை செய்கவென" (உரைச் சிறப்புப்பாயிரம்) என்பது முதலிய மூன்று அருமைச்செய்யுட்களாலும் விளங்கும். மருதப்ப ரென்பது அந்த ஜமீன்தலைவர்களுக்கெல்லாம் உரிய பொதுப் பெயர்; அவருடைய இயற்பெயர் தெரியவில்லை.

மேற்கூறிய மருதப்பத்தேவருடைய பரம்பரையினரும் அருங்கலைவிநோதருமாக இருந்த ஸ்ரீ ஹ்ருதயாலயமருதப்பத் தேவரவர்கள்பால் முன்பு ஒருமுறை நான் போயிருந்தபொழுது வடமொழி தென்மொழிகளில் மிக்க தேர்ச்சியுற்றவரும் சில தலை முறைகளை நன்கு அறிந்தவருமாக அங்கேயிருந்த பெரியசாமித் தேவரென்னும் முதியவரிடம் சங்கரநமச்சிவாயருடைய வரலாற் றைப்பற்றி வினவியதற்கு அவர், "சங்கரநமச்சிவாயர் இந்த ஸமஸ்தான வித்துவான்களுள் முதன்மைவாய்ந்திருந்தவர்; நன்னூற்கு உரையியற்றும்பொழுது மாதமொன்றுக்கு நான்கு கோட்டை நெல்லும் தினந்தோறும் ஒருபடி பாலும் அவருக்கு அரண்மனையிலிருந்து கொடுக்கப்பட்டு வந்தன; உரையை அரங் கேற்றிய பின்பு தக்க பரிசிலும் நன்மதிப்பும் பெற்று விடைபெற்றுச் சென்று திருநெல்வேலியையே தமக்கு இருப்பிடமாக ஆக்கிக் கொண்டு இருந்து வந்தனர்" என்பது தாமறிந்த கர்ண பரம்பரைச் செய்தி யென்று கூறினர்.

"மலர்தலை......உய்வது மறியேன்" (பக்கம், 2)

என்பதனால் இவருடைய அடக்கமும், "......ஒருபொரு ளாக...... தொழுது" (பக்கம், 2)

என்பதனால் இவருடைய குருபக்தியும் விளங்குகின்றன.

---

1. மயிலைநாதருரையை நான் தேடிக் கண்டுபிடிக்கும்படி செய்தது இந்த வாக்கியமே.

# உரை ஆராய்ச்சி

இவர் மயிலைநாதருரையைப் பின்பற்றியவராக இருப்பினும் அவராற் புலப்படுத்தப்படாத அரிய விஷயங்கள் பல இவருரையிற் காணப்படுகின்றன. பல இடங்களில் தக்க காரணங்கள் கூறி அவர் உரையை இவர் மறுக்கின்றார். பதசாரம் எழுதிச் செல்லுதலிலும் பொருளை நுட்பமாக அறிந்து தக்க ஆதாரங் காட்டி விளக்குதலிலும் உவமைகாட்டலிலும் பிறவற்றிலும் இவருரை அவருரையைக்காட்டிலும் மேற்பட்டதென்று சொல்லலாம்; காரணம் அவருடைய காலத்திற்குப்பின்பு பற்பல ஆசிரியர்கள் தோன்றி இயற்றித்தந்த நூல்கள் உரைகளாகியவற்றின் பேருதவி தானென்று சொல்லவேண்டும். இவருடைய உரையிற் சிலபகுதிகள் சேனாவரையம் முதலியவற்றைப்போற் சிறந்திருக்கின்றனவென்று சிலசமயங்களில் ஆசிரியர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

இவருடைய ஆசிரியராகிய சாமிநாததேசிகர் இலக்கணக்கொத்தில் தொல்காப்பியம், திருக்குறள், திருக்கோவையார் என்னும் மூன்று நூல்களையும் மிக உயர்த்திக் கூறுகின்றார். அவருடைய மாணாக்கராகிய இவர் அம்மூன்றையும் நன்றாக ஆராய்ந்து அறிந்திருந்தனரென்பது இவருரையாற் புலப்படும்.

## தொல்காப்பியம்

மயிலைநாதர் எடுத்துக்காட்டுவனவற்றை யன்றி இவர் தாமாகத் தொல்காப்பியத்துட் கூறப்பட்டவற்றோடு நன்னூற் கருத்துக்கள் ஒத்திருத்தலையும் சில இடங்களில் வேறுபட்டிருத்தலையும் அங்கங்கே எடுத்துக் காட்டுகின்றார். அவற்றுட் சில வருமாறு :—

உயிரளபெடையின் வடிவெழுத்தில் இடப்படும் குற்றெழுத்து அறிகுறிமாத்திரையே யென்பதற்கும் (சூ. 91), இல்லென்னும் நிலைமொழியோடு வல்லினமுதன்மொழி புணரும் புணர்ச்சி விதிக்கும் (சூ. 233), பெயர் வினை இடை உரி யென்னும் முறைவைப்பிற்கும் (சூ. 270), வடசொல் இலக்கணத்துக்கும் (சூ. 274), ஆறும் வேற்றுமையுருபுகளாகிய அது, அ என்பன உயர்திணை ஒருமை பன்மைப்பெயர்கள் முடிக்குஞ் சொல்லாயின் வாரா என்பதற்கும் (சூ. 300) தொல்காப்பியச் சூத்திர மேற்கோள்களை எடுத்துக் காட்டுகின்றார்.

குற்றியலுகரத்தைத் தொல்காப்பியர் தொகுத்துக் கூற நன்னூலார் நெடிற்றொடர் முதலிய ஆறாக வகுத்துக் கூறியதையும்,

நுந்தையென்னு முறைப்பெயர்க்கண் உகரத்தைத் தொல்காப்பியர் குற்றுகரமாகக் கொள்ள நன்னூலார்க்கு அஃது உடன்பாடன்மையின் கூருதொழிந்ததையும் (சூ. 94), வருமொழிவினைக்கு முன்னர் யாநின்ற நிலைக்களத்து ஞாநிற்பினும் ஒக்கும்போலியைத் தொல்காப்பியர் கூறியிருப்ப நன்னூலார் இறந்தது விலக்கலென்னும் உத்தியால் கூருது விடுத்ததையும் (சூ. 124), மொழிகளை வடநூல் வழக்குப்பற்றி ஓரெழுத்தொருமொழி, ஈரெழுத் தொருமொழி, இரண்டிறந்திசைக்கும் தொடர்மொழி எனத் தொல்காப்பியர் வகுத்திருப்ப நன்னூலார் ஒருமொழி தொடர்மொழி யென்பவற்றுள் அவற்றை அடக்கியதையும் (சூ. 128), பன்மைப்பொதுப் பெயர்கள் ஐம்பாலுள் உயர்திணைப்பன்மைப்பாலொழிய ஏனை நாற்பாலினையும் ஏற்குமெனத் தொல்காப்பியர் கூறியிருப்ப நன்னூலார் மறுத்தலென்னும் மதம்பற்றித் தன்பாலேற்கு மென்றதையும் (சூ. 284) இவர் எடுத்துக்காட்டுகின்ருர்.

நொ, து என்பதன் முன்வரும் " இடையினம் மிகுதலை ஆசிரியர் தொல்காப்பியனுரும் 'அவற்றுள், மெல்லெழுத்தியற்கை யுறழினும் வரையார்' என உம்மையாற் றழீஇயினர் ; அச் சூத்திரத்திற்கு அவ்வாசிரியர் கருத்தன்றி வேறுரை செய்வாருமுளர் " (சூ. 158) என்றும், " குற்றிய லுகரமு மற்றென மொழிப" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்திலுள்ள அற்றென்னும் மாட்டேற்றிற்கு மெய்யீறுபோலக் குற்றியலுகர வீறும் புள்ளியொடு நிற்குமெனப் பொருள் கொள்ளவேண்டுமென்று கூறி, வேறுவகையாகக் கூறப்படும் பொருளை மறுத்து, 'இவ்வாறு அந்நூலோடு பொருந்தாவுரைக்கோள் பல வுள. அவற்றை அந்நூற் கருத்தாகத் துணிந்து அந்நூலோடு இந்நூல் மறுதலைப்பட்டதென்று கோடற்க' (சூ. 164) என்றும், " சொல்லெச்சமென்பது சொல் விகற்பங்களின்றிச் சொல்லென்னுஞ் சொல் எஞ்சிநிற்பதென்பதூஉம் பெற்றும். 'சொல்லெனெச்ச முன்னும் பின்னும், சொல்லளவல்ல தெஞ்சுத லின்றே' என்ருர் ஆசிரியர் தொல்காப்பியனுரென்க. இவ்வாசிரியவசனத்திற்கு இப்பொருளன்றி வேறு கூறுவாருமுளர் " (சூ. 360) என்றும் தொல்காப்பியச் சூத்திரங்கள் சிலவற்றிற்குத் தாமே உரைகூறிப் பிறருரையை மறுக்கின்றனர். வேறு பல இடங்களில் இவரால் மறுக்கப்படும் கொள்கைகள் தொல்காப்பிய உரையாசிரியர்களுடையனவாகக் காணப்படுகின்றன. இவற்ருல் இவர் தொல்காப்பியத்திலும் அதன் உரைகளிலும் ஆழ்ந்த பயிற்சியுடையவரென்பது தெளியப்படும்.

## திருக்குறள்

இவர் இந்நூலில் உள்ள பல இலக்கணங்களுக்குத் திருக்குறளிலிருந்து உதாரணங்களைக் காட்டுதலும், " படைப்பு முதலிய ஐந்தொழிற்குமுரிய எல்லாக் கடவுளாகியும் நின்ற வொருவனே யென்பார் அருகனை நான்முகனென்றுங் கூறினர்; இவ்வாறு வள்ளுவநாயனாரும், 'மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார், நிலமிசை நீடுவாழ் வார்' என வரையாது கூறுதல் காண்க" (சூ. 56) என்றும், " இருமையென்பது, 'ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையும், தான்புக் கழுந்து மளறு' என்றாற்போலக் குணியைக் குணமாகக் கூறுவதொரு மரபுவழுவமைதி" (சூ. 162) என்றும், " உடன்படலென்பது உடம்படலென மரீஇயிற்று; 'உடம்பா டிலாதவர் வாழ்க்கை' எனவருதல் காண்க" (சூ. 162) என்றும், " கீழிருந்துங் கீழல்லார் கீழல்லவர் என்றாற் போலக் கீழென்பது பண்பாகு பெயராய், இத்தொடர் இருபெயரொட்டுப் பண்புத்தொகையாமென்க" (சூ. 226) என்றும் பொருளாட்சிக்கும் சொல்லாட்சிக்கும் திருக்குறளிலிருந்து மேற்கோள் காட்டுதலும், கருத்தாவாகுபெயர்க்குத் திருவள்ளுவரென உதாரணம் காட்டுதலும், இசையெச்சத்துக்கு உதாரணம் எடுத்துக்காட்டும்போது 'இணரெரி தோய்வன்ன இன்னா செயினும்' என்பதற்கு விரிவுரை எழுதியிருத்தலும் திருக்குறளின்பால் இவருக்குள்ள பெருமதிப்பை விளக்குகின்றன. " முப்பால், பகுத்ததிரு வள்ளுவரே முதன்ஞான நூல்களெல்லாம் பகல்செய் வான்போல், இகத்திலுரை செயவலசங் கரநமச்சி வாயனெனும் இயற்பேர் பெற்ற, தகைப்புலவன்" (உரைச் சிறப்புப்பாயிரம்) என்பதும் காண்க.

## திருக்கோவையார்

'பல்வகைத் தாதுவின்' (268) என்னுஞ் சூத்திரவுரையில் அச்சூத்திரத்திற் கூறப்படும் இலக்கணமெல்லாம் அமைந்தசெய்யுளுக்கு இலக்கியமாகத் திருச்சிற்றம்பலக் கோவையார்ச் செய்யுளொன்றையும் வேறு சில இடங்களில் (சூ. 290, 392) சில செய்யுட்களையும் காட்டியிருத்தல் அந்நூற் பெருமையை இவர் உணர்ந்திருத்தலைப் புலப்படுத்தும்.

## 'சைவசிகாமணி'

சைவசிகாமணி என்று பாராட்டப்படுதற்கு ஏற்பத் தேவாரம் முதலியவற்றிலிருந்து அங்கங்கே மேற்கோள் காட்டுவர் :—தேவார மேற்கோள்களை 124, 344-ஆம் சூத்திர உரைக

ளிலும், திருவாசக மேற்கோள்களை 229, 299, 338, 341, 349, 378-9-ஆம் சூத்திர உரைகளிலும் காணலாம். இவற்றையன்றி, 'ஆனைமுகக்கடவுள் முதலியோர்க்கும் மூன்று கண்ணுள' (சூ. 62) என்றும், 'ஆனைமுகக்கடவுளை மும்மதத்தனென்றாற்போல' என்றும் கூறுதலிலும், குறிப்புவினைக்கு உதாரணங் கூறுகையில் உரிச்சொல் நிகண்டிலுள்ள விநாயகக்கடவுள் காப்பை எடுத்துக் காட்டுதலிலும் (சூ. 321) அக்கடவுளைப்பற்றிய செய்திகளை இவர் அமைக்கின்றார்; குமரகோட்டம் (சூ. 159), 'சூருயிர்குடித்த' (சூ. 232), 'வேட்டுக்குமரன்றன்பெயர் முட்டையென்றற் றொடக் கத்தன இடுகுறி ஆக்கந் தொடர்ந்தன' (சூ. 275), 'வேற்கை முருகன்' (சூ. 403) என்பவற்றில் முருகக்கடவுளைப்பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

ஒற்றளபெடைக்கு உதாரணங் கூறுகையில் சிவபெருமானைப் பற்றிய இரண்டு குறள்வெண்பாக்களைக் காட்டுகின்றார். பரமன், முக்கணன் (சூ. 62), மண்புகுந்தும் விண்பறந்து மாலுமயனுங் காணுவொரு பொருள் (சூ. 257), மூவிலையவேல் (சூ. 340), நாம் அரன் உடைமை (சூ. 379) இறைவற்குக் கண் மூன்றும் முச்சுடர், இறைவற்கு உடை போர்வை இரண்டும் தோல் (சூ. 399) என்பவற்றில் சிவபிரானைப்பற்றிய செய்திகள் அமைந்துள்ளன.

உம்மைத்தொகைக்குரிய உதாரணங்கள் பலவற்றுள் அறுபத்து மூவர் என்பதைக் காட்டி, அதனை அறுபதும் மூன்றுமாகியவர் என்றது அறுபதின்மரும் மூவரும் என விரித்துக்காட்டுகிறார்; அறுபத்துமூன்று நாயன்மார்களுள் அறுபது நாயன்மார்களையும் மூன்று சமயாசாரியர்களையும் நினைந்து அங்ஙனம் காட்டுகின்றாரென்று தோற்றுகின்றது.

இவற்றாலும், சைவசித்தாந்த நூற்கருத்துக்களையும் மேற்கோள்களையும் அங்கங்கே எடுத்துக் கூறுதலாலும் (நூற்சிறப்புப் பாயிரம், சூ. 58, 73, 89, 255, 259, 320, 321, 404, 449, 451-உரை) இவருடைய சிவபக்தியும் சாஸ்திரப்பற்றும் அறியப்படும். ஆதிரையான், கண்ணன் (சூ. 132) எனவும், திருவாசகம் திருவாய்மொழி (சூ. 290) எனவும், ஆதிரையான் ஓணத்தான் (சூ. 321) எனவும் காட்டப்பட்டுள்ள உதாரணங்களை நோக்குகையில் இவர் வைணவத்தில் வெறுப்பில்லாத நிலையையுடையவரென்று தெரிகின்றது.

## வடமொழியறிவு

'இவ்வாறே வடநூலார் இடுகுறியை ரூடியென்றும் காரணத்தை யோகமென்றும் காரணவிடுகுறியை யோகரூடியென்றும் வழங்குப' (சூ. 62), 'பிரகிருதி விகிருதி என்னும் ஆரியமொழிகள் பகுதி விகுதி எனத் திரிந்துநின்றன' (சூ. 133), 'வடநூலார் சொற்பொருளை வாச்சியம் வெங்கியம் இலக்கணை என மூன்றெனவும் இலக்கணையை வெங்கியத்துளடக்கி இரண்டெனவும் கூறுப' (சூ. 269) என்பவற்றையும் அங்கங்கேகாட்டும் வடமொழிப் பிர

யோகங்களையும் நியாயங்களையுங்கொண்டு இவரது வடநூற் பயிற்சியினளவை அறிந்து கொள்ளலாம்.

## உவமைகள்

உவமைமுகத்தாற் பொருள்களை விளக்கும் வழக்கம் உடையவர் இவர் : தொகை வகை விரி என்பன ஒன்றேடொன்று தொடர்படப் பகுக்கப்பட்டு நிற்றலுக்கு மரத்தினது பராரையினின்றும் கவடு கொம்பு கோடு வளார் பலவாய் ஒன்றேடொன்றெழுந்து தொடர்பட்டு நிற்றலையும், முதனூல் வழிநூல் சார்புநூல் என்பவற்றிற்குத் தந்தை மகன் மருமான் என்பவர்களையும், முதலெழுத்துக்கள் இருமருங்கும் நின்றெழுப்ப இடையெழுந்தொலிக்கும் ஆய்தத்திற்கு இருசிறகெழுப்ப எழும் உடலையும், ஙகரம் சுட்டுவினவெழுத்துக்களை முதலில் பெற்றுவருதற்கு முடவன் கோலூன்றி வருதலையும், உயிரொடு புணர்த்திய மெய்தன்னளவு தோன்றாது ஒன்றாய் நிற்றற்கு அப்பொடுபெய்த உப்பையும், மொழிக்கண் எழுத்து நிற்றற்கு மாலையின்கண் மலர் இருத்தலையும், தன்னியல்பில் நிற்கும் பகுதிப்பொருளை இடைநிலை முதலியவற்றோடு முன்னின்று தன்னிடத்து அவாவ விகுதி விகாரப்படுத்துதற்குத் தன்னியல்பில் நிற்கும் ஒருவன் உள்ளத்தை ஆடை அணி முதலியவற்றோடு ஒருத்தி முன்னின்று தன்னிடத்து அவாவ விகாரப்படுத்தலையும், பிறவினைப்படுத்தவரும் விகுதிகள் அன் ஆன் முதலிய விகுதிகளைக் குறிக்கப் பகுதியாதலுக்குத் தந்தையைக் குறிக்க மகனெனப்பட்டான் ஒருவன் தன் மகனைக்குறிக்கத் தந்தையாதலையும் உவமை கூறுகின்றார்.

சில சொல்வழக்காறுகளுக்கு உவமையாக வேறு சில வழக்காறுகளை எடுத்துக் காட்டுகின்றார்.

'புணர்ச்சி இன்னதென்பதூஉம் பொதுப்புணர்ச்சியும் முறையே தலைப்பெய்து உயிரீற்றுப்பதம் புணரும் சிறப்புப் புணர்ச்சி கூறுவார் கமுகந்தோட்டம் என்றாற்போல மிகுதி பற்றிய குறியாய் இவ்வியற்கு உயிரீற்றுப் புணரியலெனப் பெயர் தந்தமையின்' (சூ. 151), 'ஒருவன் ஒருத்தி என்ற மாத்திரையின் அவர் கை கால் முதலிய அகத்துறுப்பும் ஆடை அணி முதலிய புறத்துறுப்பும் அடங்குதல்போலப் பெயர்வினை என்ற மாத்திரையின் அவற்றின் அகத்துறுப்பாகிய விகுதியுருபு முதலிய இடைச்சொற்களும் புறத்துறுப்பாகிய வேற்றுமை முதலிய இடைச்சொற்களும் அடங்குதலானும்' (சூ. 270), 'இயற்சொல் திரிசொல் என்றது அவற்றின் எழுத்துக்கள் திரியாமையும் திரிந்தமையுமன்று. வானரத்தின் முகம்தன்னியல்பாயிருந்ததேனும்நரர்முகச்செவ்விக்கு மறுதலைப் பட்டமை கருதி வலிமுகம் எனப்பட்டது போலக் கல்வியேதுவானன்றி இயல்பாகத் தன்பொருளை உணரநிற்றலின் இயற்சொலென்றும் அவ்வியல்புக்கு மறுதலைப்பட்டுக் கல்வியேதுவால் தம் பொருளை உணரநிற்றலின் திரிசொலென்றும் கூறப்பட்டன என்க' (சூ. 272) என்பன முதலியவற்றைக் காண்க.

## நீதிகளும் அரிய செய்திகளும்

இவர் காட்டும் உதாரணங்கள் சிலவற்ருல் சில நீதிகளும் சில அரிய செய்திகளும் புலப்படுகின்றன.

'ஆடவருள் ஒருவர் அறத்தின்வழி நிற்பார், பெண்டிருள் ஒருவர் கொழுநன்வழி நிற்பார்' (சூ. 289), 'கற்றகேட்ட பெரியோர்' (சூ. 355), 'அறஞ்செயிற் சுவர்க்கம் புக்கான்' (சூ. 384), 'பாவஞ் செய்தான் நரகம் புகும்' (சூ. 402) என்பவற்ருல் முறையே ஆடவர் அறத்தின்வழி நிற்கவேண்டுமென்பதும், பெண்டிர் கொழுநன் வழி நிற்கவேண்டு மென்பதும், கற்றலும் கேட்டலும் பெருமைக்குக் காரணமென்பதும், அறம் சொர்க்கத்தையும் பாவம் நரகத்தையும் தரும் என்பதும் குறிப்பிக்கப்படுகின்றன.

'கண்தழைப்பான்கதிரவற் றெழுதார்' (சூ. 345), 'எறும்பு முட்டைகொண்டு திட்டையேறின் மழைபெய்தது', (சூ. 384), 'மைந்தன் பிறந்தான்; அதனுல் தந்தை உவக்கும்' (சூ. 394), 'கடுவுங் கைபிழியெண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்ல வாயின' (சூ. 404) என்பவற்ருல் சில அரிய செய்திகள் அறியப் படுகின்றன.

## சான்ருேர்பாலுள்ள மதிப்பு

இவர் பண்டைய நூல்களிடத்தும் நூலாசிரியர்களிடத்தும் நன்மதிப்புடையவர்.

'சான்ருேர் செய்யுட்கண்ணும் ஏற்ற பெற்றிகொள்க' (சூ. 184), 'சான்ருேர் செய்யுட்கண்ணும் இவ்வாறு அமைந்து கிடந்தனவுங் கொள்க' (சூ. 197), 'சான்ருேர் வழக்கினுள்ளும் செய்யுளுள்ளும் பயின்றுவரும் மரபறிந்துகொள்க' (சூ. 388) என்பவற்றில் சான்ருேர் செய்யுளொடு பொருத்தி இலக்கணம் கூறுகின்ருர். செந்தமிழ்நிலம் சோணடு என்பாரை மறுத்து, 'பாண்டியனையே தமிழ்நாடனெனச் சான்ருேர் கூறுதலானும் அஃது உரையன்றென்க' (சூ. 271) என்று கூறுவதிலும், 'இலக்கணப் போலியினையும், மரூஉவினையும் வேறறிதற்குச் சான்ருேராட்சியே காரணமென்க' (சூ. 267), என்பதிலும் சான்ருேராட்சியை இலக்கணமாக எடுத்துக் காட்டுகின்ருர்; 'கொய்தளிர்த்தண்டலை' என்னும் பாட்டில் வழுவுண்டென்று கூறுவாரை மறுக்குமிடத்துச் சில காரணங்கள் காட்டி இறுதியில் 'இது சான்ருேரிலக்கிய மாதலானும் அது பொருளன்றென்க' (சூ. 397) என்று கூறுவதனுல் இவருக்குச் சான்ருேரிலக்கியங்களிலுள்ள நன்மதிப்பு நன்கு வெளியாகும்.

வடநூற்கடலையும் தென்றமிழ்க்கடலையும் நிலைகண்டுணர்ந்த ஸ்ரீ சிவஞானயோகிகள் இருமொழிக்கண்ணும் தாம் ஆராய்ந்தறிந்த அரிய விதிகளை அமைத்தற்குத் தக்க இடமென்று இவருரையைக் கொள்வராயின் இவருடைய பெருமையைக் கூறவல்லவன் யாஞே?

---

உ

கணபதி துணை

# நன்னூல் மூலமும் சங்கர நமச்சிவாயருரையும்

## நூற்சிறப்புப்பாயிரம்

மலர்தலை யுலகின் மல்கிரு ளகல
இலகொளி பரப்பி யாவையும் விளக்கும்
பருதியி னொருதா னாகி முதலீ
றொப்பள வாசை முனிவிகந் துயர்ந்த
அற்புத மூர்த்திதன் னலர்தரு தன்மையின்
மனவிரு ளிரிய மாண்பொருண் முழுவதும்
முனிவற வருளிய [1] மூவறு மொழியுளும்
குணகடல் குமரி குடகம் வேங்கடம்
எனுநான் கெல்லையி னிருந்தமிழ்க் கடலுள்
அரும்பொரு ளைந்தையு மியாவரு முணரத்
தொகைவகை விரியிற் றருகெனத் துன்னார்
இகலற நூறி யிருநில முழுவதும்
தனதெனக் கோலித் [2] தன்மத வாரணம்
திசைதொறு நிறுவிய * திறலுறு தொல்சீர்க்
கருங்கழல் வெண்குடைக் கார்நிகர் வண்கைத்

### குறிப்பு

பிரதிபேதம். * 'தெறலுறு'

1. மூவறு மொழி: "முட்டிலா மூவறு பாடை மாக்கள்" (சீவக. 93); "பதினெண் டேய மாந்தருங் கிளந்தசொற் றிரட்சி" திருவிளை. நகர. 67.

2. வென்ற அரசன் வெல்லப்பட்டவருடைய தேயத்தின் எல்லையில் வென்றதற்கு அறிகுறியாகத் தன் யானைகளை நிறுத்துதல் மரபென்பர். இப்பகுதிக்கு மயிலைநாதர் எழுதியுள்ள உரையைப் பார்க்க; "எல்லை நின்ற வென்றியானை யென்னநின்ற வாயில்" என்றார் கம்பரும்; கம்ப. நகரப். 22.

[1] திருந்திய செங்கோற் சீய கங்கன்
அருங்கலை விநோத னமரா பரணன்
மொழிந்தன னாக முன்னோர் நூலின்
வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்
பொன்மதிற் சனகைச் சன்மதி முனியருள்
பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி
என்னு நாமத் திருந்தவத் தோனே.

என்பது பாயிரம்.

மலர்தலை யுலகிற் பலநூ லாய்ந்து
[2] செய்வதுந் தவிர்வதும் பெறுவது முறுவதும்
உய்வது மறியே னொருபொரு ளாக
நன்னெறி பிறழா நற்றவத் தோர்பெறும்
தன்னடித் தாமரை தந்தெனை யாண்ட
கருணையங் கடலையென் கண்ணைவிட் டகலாச்
* சுவாமி நாத குரவனை யனுதினம்
மனமொழி மெய்களிற் றொழுதவ னருளாற்
பொன்மலை யெனவிப் புவிபுகழ் பெருமை
மன்னிய வூற்று மலைமரு தப்பன்
முத்தமிழ்ப் புலமையு முறையர சுரிமையும்
இத்தலத் தெய்திய விறைமக னாதலின்
நன்னூற் குரைநீ நவையறச் செய்து
பன்னூற் புலவர்முன் பகர்தியென் றியம்பலின்
[3] நன்னா வலர்முக நகைநா ணாமே
என்னா லியன்றவை யியற்றுமிந் நூலுள்,

(பி - ம்.) * ‘ பரம குரவனைப் பணிந்தவ னருளாற், பொன்மலை ’

1. இங்கே ‘ செங்கோல் ’ என்பது திருந்தியவென்னும் அடையடுத்தமையாற் கோலென்னும் தன்மையதாய் நின்றது ; “ கோடாத செங்கோல் ” (சீவக. 7) என்பதன் உரையைப் பார்க்க.

2. செய்வது - விதி ; தவிர்வது - விலக்கு ; பெறுவது - பேறு, இன்பம் ; உறுவது - ஊறு, துன்பம் ; உய்வது - பிழைத்தல். அன்றி, செய்வதும் தவிர்வதும் அறம், பெறுவது பொருள், உறுவது இன்பம், உய்வது வீடு என்று கூறுவதும் உண்டு.

3. இவ்வடி, “ எனக்கே நகைதருமால், ஆனா வறிவி னவர்கட்கென்னாங்கொலென் னாதரவே ” (யா. கா. அவையடக்கம்) என்பதை நினைப்பிக்கின்றது.

இப்பாயிரம் என்னுதலிற்றோவெனின், சிறப்புப் பாயிரத் திலக்கணமாக மேல் வகுக்கப்படும் ஆக்கியோன் பெயர் முதலியன உணர்த்துதல் நுதலிற்று.

(இதன் பொருள்.) மலர்தலை யுலகின் - பரந்த இடத்தை யுடைய உலகத்தின்கண்ணே, மல்கு இருள் அகல - நிறைந்த கண்ணிருள்கெட, இலகு ஒளி பரப்பி - விளங்கும் கதிரை விரித்து, யாவையும் விளக்கும் - கட்பொறிக்கு விடயமாகிய உருவமனைத் தினையும் காட்டும், பருதியின் - சூரியனைப்போல, ஒருதானாகி - உலகுக்கெல்லாம் தான் ஒரு முதலேயாகி, முதல் ஈறு ஒப்பு அளவு ஆசை முனிவு இகந்து உயர்ந்த - தோற்றமும் ஒடுக்கமும் உவமையும் அளவும் விருப்பும் வெறுப்புமாகிய அவற்றை இயல்பாகவே நீங்கி நிற்றலால் தலைவனாகிய, அற்புத மூர்த்தி - ஞானமே திருமேனியாகவுடையான், தன் அலர்தரு தன்மையின் - தனது விரிந்த தன்மையாகிய கருணையினாலே, மனவிருள் இரிய - உயிர்களின் மனத்திருளாகிய [1] அவித்தை கெட, மாண்பொருள் முழுவதும் - மாட்சிமைப்பட்ட அறம்பொருளின்பம் வீடென்னும் நான்கு பொருளையும், முனிவு அற அருளிய - விருப்புடன் அருளிச்செய்த, மூவறு மொழியுளும் - பதினெண்ணிலத்து மொழிகளுள்ளும், குணகடல் குமரி குடகம் வேங்கடமெனும் நான்கு எல்லையின் இருந்தமிழ்க் கடலுள் - இந்நான்கெல்லையினையுடைய நிலத்து மொழியாகிய பெரிய தமிழென்னுங்கடலுள், அரும் பொருளைந்தையும் - அவ்வற முதற் பொருள் நான்கையுமுணர்தற்குக் கருவியாய் அருமையவாகிய எழுத்துச் சொற்பொருள் யாப்பு அணியென்னும் ஐந்து பொருளையும், யாவருமுணர - புத்தியான் வலியோரேயன்றி எளியோரு முணர, தொகை வகை விரியின் தருகென - இம்முத்திறமும் ஒருங்கமைத்துக் கூறப்படும் யாப்பினாற் பாடித்தருகவென, துன்னார் இகல் அற நூறி - பகைவரது பகைமைகெட அவரைத் துணித்து, இருநிலமுழுவதும் தனதெனக் கோலி - பெரிய பூமியனைத்தினையும் தன்னுடையதாகப் பற்றிக்கொண்டு, தன்மதவாரணம் திசைதொறும் நிறுவிய திறலுறு தொல்சீர் - தன்மதயானைகளை எட்டுத்திக்கிலும் திசைக்களிறுகள் போல நிறுத்திய வெற்றி மிகுந்த தன்னளவேயன்றித் தன்தாதை மூதாதைமுதலியோரைத் தொட்டு வருங் கீர்த்தியினையும், கருங்கழல் - பெருமை பொருந்திய வீரக்கழலையும், வெண்குடை - வெண்கொற்றக் குடையினையும், கார்நிகர் வண்கை - மேகத்தைப்போலக் கைம்மாறு கருதாது

1. அவித்தை - அஞ்ஞானம்.

கொடுக்கும் வண்கையினையும், திருந்தியசெங்கோல் - கோடாத செங்கோலினையுமுடைய, சீயகங்கன் - சிங்கம் போன்ற கங்கன், அருங்கலை விநோதன் - அரியநூல்களை ஆராய்தலே பொழுது போக்கும் விளையாட்டாகவுடையான், அமராபரணன் - தன்னகத்து [1]விழுப்புண்பட அமர் செய்தலையே ஆபரணமாகவுடையான், மொழிந்தனனாக - சொன்னாக, முன்னோர் நூலின் வழியே- தொல்லாசிரியர் நூலின்வழியே நன்னூற்பெயரின் வகுத்தனன் - நன்னூலென்னும் பெயரினாற் செய்தனன், பொன் மதில் சனகை- பொன்மதில் சூழ்ந்த [2]சனகாபுரத்துள் இருக்கும், சன்மதிமுனியருள் - சன்மதி முனிவன் பெற்ற, பன்னருஞ்சிறப்பிற் பவணந்தி என்னும் நாமத்து - சொல்லுதற்கரிய ஞானவொழுக்கச் சிறப்பினையும் பவணந்தியென்னும் பெயரினையும் உடைய, இருந்தவத்தோன் - பெரிய தவத்தினையுடையோனென்றவாறு.

இதனுள் பவணந்தியென ஆக்கியோன் பெயரும், முன்னோர் நூலின்வழியேயென வழியும், நான்கெல்லையென எல்லையும், நன்னூலென நூற்பெயரும், [3]தொகைவகைவிரியென யாப்பும், அரும்பொருளைந்தென நுதலியபொருளும், [3]சீயகங்கன் தருகென மொழிந்தனனெனக் கேட்போரும், [3]மாண்பொருண்முழுவதுமெனப் பயனும், சீயகங்கனெனவே அவன் காலத்துப்பாடி அவன் அவைக்களத்து ஏற்றியதெனக் காலமும் களனும், யாவருமுணரவெனக் காரணமும் உணர்த்தியவாறு காண்க.

தருகவெனக் கேட்போரைக் கேட்போரென்றது இந்நூலை [4]அரங்கேற்றுழிக் கேட்போரைக் கேட்போரென்பாருமுளர்; களனென்றது கேட்போரவையையாதலின் அது கூறியது கூறலாமென்க. நூலைக் கூறுவோர்க்கும் கேட்போர்க்கும் பயன் அறம் முதலிய நான்குமென்பது தோன்ற "நாற்பொருட்பயத்தோடு" (சூ. 4) என்றும், "அறம்பொரு ளின்பம்வீ டடைதனூற்

1. விழுப்புண் - மார்பிலும் முகத்திலும் படும்புண்; "விழுப்புண் படாத நாளெல்லாம் வழுக்கினுள், வைக்குந்தன் னாளை யெடுத்து" குறள், 776.

2. சனநாதபுரமென்பர் மயிலைநாதர்; நன். மயிலை. ப. 16.

3. சிவஞானமுனிவர் வேறு கூறுவர்; நன்னூல் புத்தம் புத்துரை.

4. அரங்கேற்றுழிக் கேட்போரைக் கேட்போரென்பவர்கள், இறையனாரகப்பொருளுரைகாரரும் (சூ. 1, உரை), மயிலைநாதரும் (நன். ப. 17), இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் (தொல். பாயிரவுரை), இலக்கணவிளக்க உரைகாரரும் சிறப்புப் பாயிரவுரையில் இங்ஙனமே கூறினர்; இராமாநுச கவிராயர் இங்கே கேட்போன் சீயகங்கன் என்றனர்.

பயனே'' (சூ. 10) என்றும் [1] கூறுவதறிந்தும் யாவரு முணர்தலைப் பயனெனவும் கூறுப. அன்றியும், யாவரு முணர வேண்டுவார் வேட்டனவும் அவ்வறமுதலிய பயனுன்குமேயாதலானும் அது பொருந்தாதென்க.

[2] நால்வகையாப்பினுள் தொகைவிரியாப்பென ஒன்று போந்த தன்றித் தொகைவகைவிரியெனப் போந்ததில்லையாலோ வெனின், நடுநின்ற வகை பின்னின்ற விரியைநோக்கிற் றொகையாகவும், முன்னின்ற தொகையைநோக்கின் விரியாகவு மடங்குதலின் இது தொகை விரி யாப்பென்றதன்பாற் படுமென்க. எனவே தொகை விரியென இரண்டாய்வரினும் மரத்தினது [3] பராரையினின்றும் கவடு கோடு கொம்பு வளார் பலவாய் ஒன்றேடொன்று தொடர்பட் டெழுந்து நிற்றல்போல் தொகையினின்றும் ஒன்றேடொன்று தொடர்படப் பகுக்கப்பட்டுப் பலவாய் வரினும் தொகைவிரியாப் பேயாமென்க.

நுதலியபொருள் அரும்பொருளைந்தென உணர்த்தினமையின், இந்நூலுட் கூறிய பொருள் யாப்பு அணியென்னும் மூன்ற திகாரங்களும் அக்காலத்துள்ளன போலும். இப்பாயிரம் ஒரு நூற்குரித்தாதலிற் சிறப்புப்பாயிரமாமென்க.

---

1. இங்ஙனம் கூறுபவர்கள் மயிலைநாதரும், இலக்கணவிளக்க வுரைகாரரும். களவியலுரைகாரர் வீடுபேற்றைப் பயனுகக் கூறுவர் (சூ. 1, உரை); இராமாநுச கவிராயர் அறம்பொருளின்பம் வீடடைதலைப் பயனென்றுர்.

2. நால்வகையாப்பு - தொகுத்தல், விரித்தல், தொகைவிரி, மொழி பெயர்ப்பு; நன்னூல், சூ. 50; "தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெயர்த் ததர்ப்பட யாத்தலொ டனைமர பினவே" (தொல், மரபு. 97) என்பதனுலும் களவியல் முதற் சூத்திரவுரையாலும் இதனை அறிய லாகும். இவற்றை வழியின் வகையெனக் கொள்வர் சிவஞான முனிவர்.

3. பராரை - பருத்த மர அடி; "வன்கட் பராரை முருக்கி" நற். 202.

## உரைச்சிறப்புப்பாயிரம்

(விருத்தம்)

(1) நன்னூலுட் கருத்துலகோ ரறியவுரை செய்கவென
நரேந்த்ரசிங்கம்
தென்னூற்று மலைமருதப் பன்புகலப் பொருள்விளங்கச்
செய்தான் பாரில்
எந்நூற்கு மெழுத்தொடுசொற் பொருளறிசங் கரநமச்சி
வாய னென்னும்
பன்னூற்செந் தமிழ்ப்புலவன் சைவசிகா மணிநெல்லைப்
பதியி னனே.

(2) அகத்தியந்தொல் காப்பியமே முதலியமுன் னூல்கள்பல
வாய்ந்து [1]முப்பால்
பகுத்த [2]திரு வள்ளுவரே முதன்ஞான நூல்களெலாம்
பகல்செய் வான்போல்
இகத்திலுரை செயவலசங் கரநமச்சி வாயனெனும்
இயற்பேர் பெற்ற
தகைப்புலவ னன்னூலுக் குரைவகுத்த தொருவியப்போ
தமிழ்வல் லோரே.

(3) [3]முன்னூற்கு மலயமுனி தன்னூற்கும் புவியிடத்து
முதியோ ராற்சொல்
எந்நூற்குந் தமிழ்க்கடலு ளினியியற்று நூற்கும்வகை
இதனுற் காட்டி
நன்னூற்கு விரித்துரைசெய் தான்றிகந் தத்தளவும்
நடத்துங் கீர்த்தித்
தென்னூற்று மலைமருதப் பன்சொலச்சங் கரநமச்சி
வாயன் றனே.

---

1. முப்பால் - அறம், பொருள், இன்பமென்னும் மூன்று பகுதிகள்.
2. திருவள்ளுவர் – திருக்குறள் ; கருத்தாவாகுபெயர்.
3. முன் நூற்கும் : நூற்கும் - நூலைச் செய்த ; நூற்றல் – நூலை இயற்றல் ; " உற்றிங்கொர் காதல் கிளரத்தமிழ் நூற்கலுற்றேன் " (சூளா. பாயிரம், 2) ; "நொய்தி னெய்யசொன் னூற்கலுற் றேன்" (கம்ப. அவையடக்கம்) ; " இராமன் கதைமேற்றமிழ் நூற்கலுற்றேன் " உத்தர. அவை.

# பொதுப்பாயிரம்

## பாயிரத்தின் பெயர்கள்

முகவுரை பதிக மணிந்துரை நூன்முகம்
புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம்.

என்பது சூத்திரம். என்னுதலிற்றோவெனின், பாயிரத்திற்கு வரும் [1] காரணக்குறிகள் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) பாயிரத்தினிலக்கணங்களை முன்னுணர்ந்தல்லது நூல்களைச்செய்தலும் அவற்றை ஈதலும் ஏற்றலும் முடியாமை கருதி முன்னுரைத்தலின் முகவுரையென்றும், "பதிகக் கிளவி பல்வகைப் பொருளைத், தொகுதி யாகச் சொல்லுத றனே" என்ப வாகலின் மேல்வகுக்கும் ஐந்துபொதுவும் பதினொரு சிறப்புமாகிய பல்வகைப்பொருளையும் தொகுத்துச் சொல்லுதலிற் பதிகமென்றும், நூலினது பெருமைமுதலிய விளங்க அணிந்துரைத்தலின் அணிந் துரை யென்றும், முகவுரையென்றதுபோல நூன்முகமென்றும், [2] நூல்நுதலியபொரு ளல்லனவற்றை உரைத்தலிற் புறவுரை யென்றும், நூற்குள்ள நுதலிய பொருளல்லனவற்றை அதற்குத் தந்துரைத்தலின் தந்துரை யென்றும், அணிந்துரை யென்றாற் போலப் புனைந்துரையென்றும் பாயிரத்திற்குப் பெயராம் எ - று.

பாயிரமென்பது வரலாறு. பாயிரங்கூறப் *புகுந்தவர் நிகண்டுபோல அதன் பெயர்விகற்பங்களைக்கூறியது என்னை யெனின், இப்பாயிரம் பதிகமாகிய புறவுரையாய்த் தந்துரைக்கப் படுவதேனும் நூற்கு இன்றியமையாத அணியாய் முன் உரைக்கப் படுவதென்பது இக்காரணக்குறிகளான் விளங்குதலினென்க. (1)

## பாயிர வகை

2. பாயிரம் பொதுச்சிறப் பெனவிரு பாற்றே.

எ-ன், மேற் பாயிரமென்றதனை வகுத்துணர்த்துதனுதலிற்று.

---

(பி - ம்.) *'புகுந்தோர்'

1. காரணக்குறிகள் - காரணப்பெயர்கள்.

2. நூல் நுதலிய பொருளல்லன, நுவல்வோன் திறன் முதலியன வென்றும் நூற்குள்ள நுதலிய பொருளல்லனவற்றை அதற்குத் தந்து ரைப்பவை மதமுதலியவைகளென்றும் கூறப்படும்.

(இ - ள்.) மேற்பாயிரமென்றது, பொதுப்பாயிரமும் சிறப்புப் பாயிரமுமென இருவகையினையுடைத்து எ-று. (2)

## பொதுப்பாயிரத்திலக்கணம்

3. நூலே நுவல்வோ னுவலுந் திறனே
கொள்வோன் கோடற் கூற்றா மைந்தும்
எல்லா நூற்கு மிவைபொதுப் பாயிரம்.

எ - ன், இருவகைப் பாயிரத்துட் பொதுப்பாயிரத்தை விரித் துணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) நூலினது வரலாறும் ஆசிரியனது வரலாறும் அவ்வாசிரியன் நூலை மாணாக்கற்குச் சொல்லுதலின் வரலாறும் மாணாக்கனது வரலாறும் அவன் கேட்டலின் வரலாறும் என்னும் ஐந்தும் எல்லா நூற்கும் ஆமாதலின், இவ்வைந்து வரலாற்றையும் விளங்க உணர்த்துவது பொதுப்பாயிரமாம் எ-று.

திறன் - கூற்று; என்றது வரலாற்றையாதலின் அதனை ஏனையவற்றுள்ளும் பிரித்துரைத்தாம். ஆமென்பதனை எல்லா நூற்குமாமெனக் கூட்டுக.

“ ஈவோன் றன்மை யீத லியற்கை
கொள்வோன் றன்மை கோடன் மரபென
ஈரிரண் டென்ப பொதுவின் றொகையே ”

[1]என்பாருமுளராலோவெனின், பாயிரங்கூறுதல் நூல்கட்கன்றிப் பிறவற்றிற்கன்றே? அங்ஙனமாதலின், நூல்களின் வரலாறொன் றுமே கூறவேண்டும்; அதனோடு ஆசிரியன் வரலாறு முதலிய நான்கினையும் உடன்கூறுதல் வரலாற்று முறைமையின் வாரா தார் நூல்களைக் கற்பிக்கவும் கற்கவும்புகின்,

“ பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின் ” (குறள், 836)

என்றவாறேயாய் நூல்களருமையும் பெருமையும் கெட்டுப் பயன் படாவாமென்பது கருதியென்க. (3)

## 1. நூலின் வரலாறு

4. நூலி னியல்பே நுவலி னோரிரு
பாயிரந் தோற்றி மும்மையி னொன்றாய்

1. என்பார் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் இலக்கண விளக்க உரைகாரரும்; தொல். சிறப்பு. உரை; இ. வி. பொதுப்பாயிரம்.

நாற்பொருட் பயத்தோ டெழுமதந் தழுவி
ஐயிரு குற்றமு மகற்றியம் மாட்சியோ
டெண்ணுன் குத்தியி னேத்துப் படலம்
என்னு முறுப்பினிற் சூத்திரங் காண்டிகை
விருத்தி யாகும் விகற்பநடை பெறுமே.

எ - ன், மேற்கூறிய ஐந்தனுள் நூலினது வரலாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மேற்கூறிய ஐந்தனுள் நூலினது வரலாற்றைச் சொல்லின், இருவகைப் பாயிரத்தையும் முன்னுடைத்தாதல் முதலாக இங்ஙனம் விகற்பித்த பதினொரு விகற்பநடைகளைப் பெற்று வரும் எ - று. (4)

## நூல்களின் வகை

5. முதல்வழி [1]சார்பென நூன்மூன் றுகும்.

எ - ன், நூலினது வரலாற்றைத் தொகுத்துக் கூறினர், அவற்றுள் ஓரிரு பாயிரத்திற்கு [2]வகை போந்து கிடந்தமையின் அதனை யொழித்து ஏனையவற்றை வகுத்துக் கூறுவான் றொடங்கி " மும்மை யினென்றுய் " (சூ. 4) என்றதனை வகுத்து உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) முதனூல் வழிநூல் சார்புநூலென மூன்று கூற்றதாம் நூல் எ - று. (5)

## முதனூல்

6. அவற்றுள்,
வினையி னீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்.

எ - ன், நூல் மூன்றனுள் முதனூலாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) வினையின் நீக்கி விளக்கப்படும் அறிவினையுடைய உயிர்கட்கு வினையின் நீங்கி விளங்கிய அறிவினையுடைய முதல்வன் ஆதிக்கண்ணே செய்தது யாது? அதுமுதனூலாம் எ - று. (6)

## வழி நூல்

7. முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி
அழியா மரபினது வழிநூ லாகும்.

1. ' புடையென ' என்று பாடங்கொள்வார் மயிலைநாதர்.
2. இந்நூல் 2-ஆம் சூத்திரத்தால் வகை போந்துகிடந்தது.

எ - ன், வழிநூலாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) தொல்லாசிரியர் நூல்களின் பொருண்முடிபு முழுவது மொத்து வழி நூல் செய்வோன் முதனூலுளதாகவும் தான் வழிநூல் செய்தற்குக் காரணமாக வேண்டிய விகற்பங்களையும் உடன்கூறி அவ்விகற்பங்கள் உணர்வுடையோர் பலர்க்கும் ஒப்ப முடிந்தமையின் அழியாது உலகத்து நின்று நிலவும் மரபினை உடையது வழிநூலாம் எ - று.

பின்னோன்வேண்டும் விகற்பங்கூறலாவது, பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல (சூ. 462) வென்று அவற்றை இறந்தது விலக்கல் எதிரது போற்றலென்னும் உத்திகளான் விலக்கியும் போற்றியுங் கூறுதல் முதலின.

'முனைவன்கண்டது முதனூலாகும்' (சூ. 6) என ஒருமையாற் கூறினர். ஈண்டு முன்னோர் நூலெனப் பன்மையாற் கூறியது, இறைவனூலையும் அவனருள் வழிப்பட்டுத் தத்தமரபின்வரும் குரவர் பலர் நூலையும் தழீஇக்கோடற்கென்க. எனவே முதனூல் மாத்திரையாய் நிற்பது இறைவனூலும் வழிநூல் மாத்திரையாய் நிற்பது இறுதி நூலுமன்றி இடைநிற்கும் நூல்களெல்லாம் [1]ஒருவற்கு மைந்தனுயினுன் மற்றொருவற்குத் தந்தையாயினுற் போல முதனூலாயும் வழி நூலாயும் நிற்குமென்பது பெற்றும். (7)

## சார்பு நூல்

8. இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடைநூ லாகும்.

எ - ன், சார்புநூலாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) முதனூல் வழிநூலென்னும் இருதிறத்து நூல்கட்கும் பொருண்முடிபு ஒருபுடையொத்து ஒழிந்தனவெல்லாம் ஒவ்வாமையுடையது சார்புநூலாம் எ - று.

எனவே, முதனூற்கு வழிநூலும் சார்புநூலும் ஒருவற்கு மைந்தனும் [2]மருமானும் போலுமென்க. ஒருநூல், தனக்கு வழி நூலைநோக்கின் முதனூலாகவும், முதனூலைநோக்கின் வழி நூலாகவும், அயனூலை நோக்கிற் சார்புநூலாகவும் நிற்குமாயினும் இம் முத்திறத்தினுள் ஒரு திறத்தின்கண் மற்றொரு திறமின்மையின் மும்மையினொன்று யென்றனர். (8)

1. இவ்வுவமை இந்நூல் 139-ஆம் சூத்திர வுரையிலும் வந்துளது.
2. மருமான் - சகோதரியின் புதல்வன் ; மருமகனுமாம்.

## வழிநூல் சார்புநூற் சிறப்புவிதி

(வெண்பா)

9. முன்னோர் மொழி *பொருளே யன்றி யவர்மொழியும்
பொன்னேபோற் போற்றுவ மென்பதற்கும்—முன்னோரின்
வேறுநூல் செய்துமெனு மேற்கோளில் லென்பதற்குங்
கூறுபழஞ் சூத்திரத்தின் கோள்.

எ - ன், வழிநூற்கும் சார்புநூற்கும் எய்தியதன்மேற் சிறப்பு விதி உணர்த்துதனுதலிற்று; முன்னோர் நூலின் பொருண்முடிபு முழுவதும் ஒப்பவும் ஒருபுடையொப்பவும் கூறுவதன்றி அந்நூற் சூத்திரங்களையும் ஒரோவழி எடுத்துக் கூறுக வென்றலின்.

(இ - ள்.) முன்னோர் மொழிந்த பொருளையே யன்றி அவர் மொழியினையும் பொன்போலப் போற்றிக்கொள்வ மென்பதற்கு இலச்சினையாகவும் முன்னோர் நூலையே கூறாது அந்நூலினின்றும் வழிநூல் சார்புநூல் செய்தோமாயினும் ஆசிரியவசனங்களை ஒரோ வழி எடுத்து உடன் கூறுதல் வழி நூற்கும் சார்புநூற்கும் இலக்கண மாதலின் இந்நூலகத்து ஆசிரியவசனமில்லை யெனக் குற்றங் கூறுவாராதலின் அக்குற்றம் ஒழிதற்காகவும் பழஞ் சூத்திரத்தின் கோளைக் கூறு எ - று.

ஆசிரியவசனமெனினும் மேற்கோளெனினும் பழஞ்சூத்திரத் தின் கோளெனினும் ஒக்கும். முன் போற்றுவம், செய்துமென உளப்பாட்டுத் தன்மைப்பன்மைமுற்றாகவும், பின்னர்க் கூறென முன்னிலையொருமை யேவலாகவும் கூறினமையின், வழிநூலும் சார்புநூலும் செய்வோர் பலர் குழீஇ ஒருவர்க் கொருவர் கூறுங் கூற்றாக இச் சூத்திரஞ் செய்யப்பட்டதென்க. (9)

## நாற்பொருட்பயன்

10. அறம்பொரு ளின்பம்வீ டடைதனூற் பயனே.

எ - ன், நாற்பொருட் பயத்தோடென்றதனை வகுத்துணர்த் துதனுதலிற்று.

(இ - ள்.) அறமுதலிய நான்கினையும் ஓதினோரடைதல் நூலான் வரும் பயனும் எ - று. (10)

---

(பி - ம்.) *'பொருளுமன்றி'

## எழு மதம்

11. [1]எழுவகை மதமே யுடன்படன் மறுத்தல்
பிறர்தம் மதமேற் கொண்டு களைவே
தாஅ னாட்டித் தனாது நிறுப்பே
இருவர் மாறுகோ ளொருதலை துணிவே
*பிறர்நூற் குற்றங் காட்ட லேனைப்
பிறிதொடு படாஅன் றன்மதங் கொளலே.

எ - ன், எழுமதமென்றதனை வகுத்துணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மேல் எழுவகை மதமென்று சொல்லப்பட்டன இங்ஙனம் பிறர்மதத்தை உடன்படல்முதலியவாக விதந்தனவாம் எ-று.

நூல்தழுவிய மதங்கள் பலவாயினும் தலைமைபற்றி மதமேழென்பது நூல் வழக்காமென்க.

குற்றம் பத்து, அழகு பத்து, உத்தி முப்பத்திரண் டென்பனவும் அன்ன.

இவ்வெழுவகை மதங்கட்கும் பதப்பொருளோடு உதாரணம் விளங்க இந்நூலுள் வந்துழி வந்துழிக் காட்டுதும்; ஆங்காங் குணர்க. (11)

## குற்றம் பத்து

12. [2]குன்றக் கூறன் மிகைபடக் கூறல்
கூறியது கூறன் மாறுகொளக் கூறல்
வழூஉச்சொற் புணர்த்தன் மயங்க வைத்தல்
வெற்றெனத் தொடுத்தன் மற்றொன்று விரித்தல்
சென்றுதேய்ந் திறுத னின்றுபய னின்மை
என்றிவை யீரைங் குற்ற நூற்கே.

(பி - ம்.) *'பிறநூற்'

1. இம்மதங்களை இவ்வுரையாசிரியர் பின்கண்ட இடங்களில் எடுத்தாளுகிறார்: உடன்படல்: சூ. 94, 106; மறுத்தல்: சூ. 3, 94, 106; பிறர்தம் மதமேற்கொண்டுகளைவு: சூ. 106: தாஅனாட்டித்தனாது நிறுப்பு: சூ. 145, உரை; இருவர் மாறுகோ ளொருதலை துணிவு: ஒருதலைதுணிதலென்னும் உத்தியைப் பார்க்க; பிறர்நூற்குற்றங்காட்டல்: சூ. 128; பிறிதொடு படாஅன் றன்மதங் கொளல்: சூ. 58.

2. இக் குற்றங்களில் சிலவற்றைப்பற்றிய செய்திகள் வரும் சூத்திர எண்கள்:—குன்றக் கூறல்: 406, 460; மிகைபடக் கூறல்: 121, 265, 406;

எ - ன், பத்துக் குற்றமென்பதனை வகுத்துணர்த்துதனுத லிற்று.

(இ - ள்.) நூற்குப் பத்துக் குற்றங்களாவன குன்றக் கூறல் முதலியவைகளாம் எ - று.

நூல்கள் இக்குற்றங்கள் சாராது வருதல் காண்க. (12)

## அழகு பத்து

13. [1]சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்
நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல்
ஓசை யுடைமை யாழமுடைத் தாதல்
முறையின் வைப்பே யுலகமலை யாமை
விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த
தாகுத னூலிற் கழகெனும் பத்தே.

எ - ன், பத்தழகென்றதனை வகுத்துணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) நூலிற்கு அழகென்று சொல்லப்படும் பத்தாவன சுருங்கச் சொல்லல் முதலியவாம் எ - று.

நூல்கள் இப்பத்தழகோடுங் கூடிவருதல் காண்க. (13)

## உத்தி முப்பத்திரண்டு

14. [2]நுதலிப் புகுத லோத்துமுறை வைப்பே
தொகுத்துச் சுட்டல் வகுத்துக் காட்டல்
முடித்துக் காட்டன் முடிவிடங் கூறல்
தானெடுத்து மொழிதல் பிறன்கோட் கூறல்

---

கூறியது கூறல் : நூற்சிறப்புப்பாயிரம், 265, 286 ; மாறுகொளக் கூறல் : 265 ; மற்றொன்று விரித்தல் : 265, 460.

1. இவ்வழகிற் சிலவற்றை உரையாசிரியர் குறிப்பிடும் சூத்திரங்கள் ; சுருங்கச் சொல்லல் : 116, 406, 460 ; பத்தழகு : 137.

2. இவ்வுத்திகளை உரையாசிரியர் குறிப்பிடும் சூத்திரங்கள்:—நுதலிப் புகுதல் : 56 ஓத்துமுறை வைப்பு: 58 ; தொகுத்துச் சுட்டல் : 57 வகுத்துக் காட்டல் : 57 ; முடித்துக் காட்டல் : 145 ; முடிவிடங் கூறல் : 97 ; தானெடுத்து மொழிதல் : 90 ; பிறன்கோட் கூறல்: 124 ; சொற்பொருள் விரித்தல் : 135 ; தொடர்ச்சொற் புணர்த்தல்: 158 ; இரட்டுறமொழிதல் : 62, 137, 140, 171, 245, 248, 291, 315, 318, 399, 402 ; இரட்டுற மொழிதலுக்கு இனம் : 138 ; ஏதுவின் முடித்தல் : 72 ; ஒப்பின் முடித்தல் : 136, 137, 176, 209, 243 ; மாட்டெறிந் தொழுகல் : 133, 139, 164, 197, 242, 253 ; இறந்தது விலக்கல் : 7, 124 ; எதிரது போற்றல் : 7, 140 ; முன்மொழிந்து கோடல் : 94 ; பின்னது நிறுத்தல் : 100 ; விகற்பத்தின்

சொற்பொருள் விரித்த றொடர்ச்சொற் புணர்த்தல்
இரட்டுற மொழித லேதுவின் முடித்தல்
ஒப்பின் முடித்தன் மாட்டெறிந் தொழுகல்
இறந்தது விலக்க லெதிரது போற்றல்
முன்மொழிந்து கோடல் பின்னது நிறுத்தல்
விகற்பத்தின் முடித்தன் முடிந்தது முடித்தல்
உரைத்து மென்ற லுரைத்தா மென்றல்
ஒருதலை துணித லெடுத்துக் காட்டல்
எடுத்த மொழியி னெய்த வைத்தல்
இன்ன தல்ல திதுவென மொழிதல்
எஞ்சிய சொல்லி னெய்தக் கூறல்
*பிறநூன் முடிந்தது தானுடன் படுதல்
தன்குறி வழக்க மிகவெடுத் துரைத்தல்
சொல்லின் முடிவி னப்பொருண் முடித்தல்
ஒன்றின முடித்த றன்னின முடித்தல்
உய்த்துணர வைப்பென வுத்தியெண் ணான்கே.

எ - ன், முப்பத்திரண்டு உத்தியென்றதனை வகுத்துணர்த்துத னுதலிற்று.

(இ - ள்.) முப்பத்திரண்டுத்தியாவன நுதலிப்புகுதல் முதலியவாம் எ - று.

இவற்றுள் ஒன்றினமுடித்தல் தன்னினமுடித்தலென்பது ஓர் உத்தி; உய்த்துணரவைப்பென்பதனை உத்திக்கு அடையாக்கி உய்த்துணரவைப்பெனும் உத்தி எண்ணான்கேயெனப் பாடமோதி அதனை இரண்டுத்தியாக்கினுமமையும்.

---

முடித்தல் : 126, 145 ; முடிந்தது முடித்தல் : 126, 137 ; முடிந்தது முடித்தலுக்கு இனம் : 382 ; உரைத்து மென்றல் : 132 ; உரைத்தா மென்றல் ; 99 ; ஒருதலை துணிதல் : 91, 188; எடுத்துக் காட்டல் : 135 ; எடுத்த மொழியி னெய்த வைத்தல் : 136 ; இன்னதல்லது இதுவென மொழிதல் : 102 ; எஞ்சிய சொல்லி னெய்தக் கூறல் : 109 ; பிறநூல் முடிந்தது தானுடன் படுதல் : 101 ; தன்குறி வழக்கம் மிகவெடுத் துரைத்தல் : 137 ; சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல் : 109 ; ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல் : 67, 170, 188, 281, 334 ; உய்த்துணரவைப்பு : 96.

(பி - ம்.) * 'பிறர்நூல்'

இவ்வுத்திகட்குப் பதப்பொருளோடு உதாரணம் விளங்க இந் நூலுள் வந்துழி வந்துழிக் காட்டுதும் ; ஆங்காங்குணர்க. மதத்தி னுள்ளும் அழகினுள்ளும் வருவன சிலவற்றை உத்தியுள்ளும் கூறி யது என்னையெனின், கொள்கை வகையான் மதமென்றும் சிறப்பு வகையான் அழகென்றும் இம்மதம் அழகு முதலியவெல்லாம் புத்தி நுட்பத்து அமையும் வகையான் உத்தியென்றும் கூறப்படுமென்க. அங்ஙனமாயின், மதம் அழகெல்லாவற்றையும் உத்தியின்பாற்படுத் திக் கூறுது சிலவற்றைக் கூறியது என்னையெனின், [1] வரம்பின்றி வரும் உத்தியுள் தலைமைபற்றிக் கூறும் முப்பத்திரண்டில் வந்தன கூறினரென்க. (14)

## உத்தி இன்னதென்பது

15. நூற்பொருள் வழக்கொடு வாய்ப்பக் காட்டி
ஏற்புழி யறிந்திதற் கிவ்வகை யாமெனத்
தகும்வகை செலுத்துத றந்திர வுத்தி.

எ - ன், மேல் தொகுத்தும் வகுத்துங் கூறிய உத்திக்கு இலக் கணம் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஓர் இலக்கணநூலால் உணர்த்தப்படும் பொருளை நூல்வழக்கோடும் உலகவழக்கோடும் பொருந்த உணர்த்தி அப் பொருளை மற்றோர் இலக்கிய நூற்கண்ணும் ஏற்குமிடம் அறிந்து இவ்விடத்திற்கு இஃதாமெனக்கருதித் தக்கவகையாகச் செலுத்து தல் தந்திரவுத்தியாம் எ - று.

தந்திரமென்பது நூல். உத்தியான் அமைக்கும் பொருளை உத்தியென்றது ஆகுபெயர். (15)

## ஓத்திலக்கணம்

16. நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை யொருவழி வைப்ப
தோத்தென மொழிப வுயர்மொழிப் புலவர்.

எ - ன், இருவகையுறுப்பினுள் ஓத்துறுப்பாமாறுணர்த்துத னுதலிற்று.

---

1. தொல். மரபியல், சூ. 110-ல் கூறப்படும் உத்திகளுள் இங்கே கூறப்படாதனவும், இவ்வுரையாசிரியர் இவ்வுரையில் எடுத்துக்காட்டுவன வாகிய மொழிந்த பொருளோ டொன்ற அவ்வயின் மொழியாததனையும் முட்டின்று முடித்தல், உரையிற் கோடல், உடம்படுபுணர்த்தல், எதிர்மறை முகத்தால் எய்தாத தெய்துவித்தல், ஏற்புழிக்கோடல் முதலியனவும் இங்கே அறிதற்குரியன.

(இ - ள்.) ஒருசாதியாயுள்ள மணிகளை முறையே பதித்தாற் போல ஒருசாதியாயுள்ள பொருள்களை ஒருவழிப்படக் கூறுவது ஓத்துறுப்பாமெனச் சொல்லுவர், உயிர்க்கு உறுதி பயக்கும் மெய்ம்மொழிகளையுடைய புலவர் எ - று.

நேர்தல் - ஒன்றுபடுதல். இவ்வாறு வருதல் இந்நூலுறுப்பி னுட் காண்க. (16)

## படலவிலக்கணம்

17. [1]ஒருநெறி யின்றி விரவிய பொருளாற்
பொதுமொழி தொடரி னதுபடல மாகும்.

எ - ன், படலவுறுப்பாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஒருவழிப்படாது விராயபொருளொடு பொருந்திப் பல பொருளை யுணர்த்தும் பொதுச்சொற்கள் ஓரோவழியின்றித் தொடர்ந்துவரின் அது படலவுறுப்பாம் எ - று.

படலவுறுப்பினையுடைய காப்பியங்களுள் பாட்டுடைத் தலைவனது சரிதையேயன்றி மலை கடல் நாடு முதலிய பலபொருட் டிறங்களும் விரவிவருதலும் பல பொருளையுணர்த்தும் பொதுச் சொற்கள் ஓரோவழியன்றித் தொடர்ந்துவருதலும் காண்க. (17)

## சூத்திரவிலக்கணம்

18. [2]சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச்
செவ்வ னாடியிற் செறித்தினிது விளக்கித்
திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம்.

எ - ன், சூத்திரமாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) சிறிய கண்ணாடியிற் பெரிய யாக்கை முதலியவற்றின் சாயை செவ்வாகச் செறிந்து இனிதாக விளங்கினாற்போலச் செவ்வாகச் செறிந்து இனிதாக விளங்கச் சில்வகை யெழுத்துக் களான் இயன்ற யாப்பின்கட் பலவகைப்பட்ட பொருள்களைச்

---

1. இச்சூத்திரம், தொல். செய். சூ. 171. இதற்கு இளம்பூரணர் எழுதியுள்ள உரை வருமாறு : "ஒரினமாகிய நெறியின்றிப் பலநெறியான் வரும் பொருளானே பொதுமொழியால் தொடரப்படின், அது படலமென்று பெயராமென்றவாறு; அது கிளவியாக்கம் முதலாக எச்சவியல் ஈறாகக் கிடந்த ஒன்பதோத்தினும் வேறுபாடுடையதாயினும் சொல்லிலக்கணம் உணர்த்தினமையாற் சொல்லதிகாரமெனப் பெயர்பெறும். அதிகார மெனினும் படலமெனினு மொக்கும்."

2. தொல்.: மரபு சூ. 100; வடமொழியில் சூத்திரவிலக்கணம் கூறப்பட்டவழிக் கண்ணாடியுவமை இல்லை யென்பர்.

செவ்வாகச் செறித்து இனிதாக விளக்கி அப்பலபொருட்டிண்மையும் நுண்மையும் சிறந்துவருவன சூத்திரங்களாம் எ - று.

திட்பம் - குற்றமின்மையின் அலைவற நிற்றல். இவ்வாறு வருதல் இச்சூத்திரத்துள்ளுங் காண்க. (18)

## சூத்திர நிலை

19. [1]ஆற்றொழுக் கரிமா நோக்கந் தவளைப்
பாய்த்துப் [2]பருந்தின்வீழ் வன்னசூத் திரநிலை.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மேற்கூறிய சூத்திரங்கள் ஒன்றோடொன்று தொடர்ந்து நிற்கும் நிலைகள் ஆற்றொழுக்கு முதலிய நான்கினையும் போலும் எ - று.

[3]இவ்வாறு நிற்றல் இந்நூலுள் வந்துழி வந்துழிக் காட்டுதும்; ஆங்காங்குணர்க. (19)

## சூத்திரவகை

20. பிண்டந் தொகைவகை குறியே செய்கை
கொண்டியல் புறனடைக் கூற்றன சூத்திரம்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) பிண்டமெனவும், தொகையெனவும், வகையெனவும், குறியெனவும், செய்கையெனவும் இவற்றை அலைவறக் கொண்டு இவற்றின் புறத்து அடையாய் வரும் புறனடையெனவும் கூறும் கூற்றினையுடையனவாம், மேற்கூறிய சூத்திரங்கள் எ - று.

1. ஆற்றொழுக்கென்பது ஆற்றுநீர் தொடர்வறுது ஒழுகுதலைப் போலச் சூத்திரங்களும் தம்முள் இயைபுடையனவாக ஒழுகுதல். அரிமா நோக்கம் சிங்கநோக்கமெனவும் கூறப்படும்; சிங்கம் நோக்குமிடத்து முன்னுள்ளவர்களையும் பின்னுள்ளவர்களையும் நோக்குதலைப்போல முன்னுள்ள சூத்திரத்தினோடும் பின்னுள்ள சூத்திரத்தினோடும் தொடர்புடையதாகி நிற்றல். தவளைப்பாய்த்தென்பது தவளை பாய்கின்றவிடத்து இடையிடையே நிலம் கிடப்பப் பாய்வதுபோலச் சூத்திரம் இடையிட்டுப்போய் இயைபு கொள்வது. பருந்தின்வீழ்வென்பது பருந்து நடுவே விழுந்து தான் கருதும் பொருளை எடுத்துக்கொண்டு போவதுபோலப் பல சூத்திரங்களின் தொடர்பால் முடிக்கப்படும் பொருளை முடித்துப்போம் இயைபினது; நன். மயிலை.

2. 'பருந்தின் விழுக்காடு' என்று பாடங்கொள்வர் மயிலைநாதர்.

3. இவ்வுரையாசிரியர் இவற்றை எடுத்துக்காட்டிய இடங்கள் வருமாறு:

ஆற்றொழுக்கு: சூ. 291; அரிமாநோக்கம்: சூ. 109; தவளைப் பாய்த்து; சூ. 101; பருந்தின்வீழ்வு: சூ. 96.

இவற்றுட் பிண்டமாவன: "பன்னிருபாற் றதுவே" (சூ. 57) என்றற்றொடக்கத்துத் தொகைபோலாது, "நன்கியம்புவனெ முத்தே" (சூ. 56) என்றற் றொடக்கத்துப் பொதுப்படவருவன. தொகையும் வகையும் புறனடையும் வந்துழிவந்துழிக் காட்டுதும்; ஆங்காங்குணர்க. விரி வகையின்பாற் படுதலிற் கூறுராயினர். குறியாவன: இவை உயிர், இவை ஒற்று, இவை பெயர், இவை வினை என்றற் றொடக்கத்து அறிதன் மாத்திரையாய் வருவன. குறியென்பது அறிதலையுணர்த்திய முதனிலைத் தொழிற் பெயர். செய்கையாவன: [1]பதமுன் விகுதியும் பதமு முருபும் புணரும் புணர்ச்சி விதியறிந்து அங்ஙனமறிதன் மாத்திரையாய் நில்லாது அவ்வாறு வேண்டுழிப் புணர்த்தலைச் செய்தலும், பெயர் வினை முதலிய கொள்ளும் முடிபு விதியறிந்து அங்ஙனம் அறிதன் மாத்திரையாய் நில்லாது அவ்வாறு வேண்டுழி வேண்டுழி முடித்தலைச்செய்தலு முதலியன. இப்பிண்டம் முதலிய ஆறு பெயரும் அப்பொருளையுணர்த்துஞ் சூத்திரங்கட்கு ஆகுபெயராய் வந்தன. எல்லாச் சூத்திரங்களும் பிண்டம், தொகை, வகை, புறனடை யென்னும் நான்கனுள் அடங்குமன்றோ? அங்ஙனமாகக் குறியினையும் செய்கையினையும் வேறோதியது, எல்லா நூலுள்ளும் சொல்லப்படுவன [2]அறிவதும் செய்வதுமன்றி வேறின்மையிற் பிண்டமாக்கியும் தொகுத்தும் வகுத்தும் புறத்தடை கொடுத்தும் கூறப்படுவன குறியும் செய்கையுமே யென்பது தோன்றற்கென்க. இங்ஙனங் கூறவே எல்லா நூலுள்ளும் வரும் எல்லாச் சூத்திரங்களும் குறிச்சூத்திரம் செய்கைச் சூத்திரமென இரண்டா யடங்கு மென்பது பெற்றாம். இவ்வாறன்றிக் குறியென்பதற்குப் பெயர்களை யுணர்த்தும் சூத்திரமென்றும், செய்கை யென்பதற்கு எழுத்துப்புணர்ச்சியை யுணர்த்தும் சூத்திரமென்றும் பொருள் கூறுவாருமுளர். அங்ஙனங்கூறின், ஏனையிலக்கணங்களைக் கூறும் சூத்திரங்களையும் விதந்து கூறவேண்டும்; அவை இன்மையானும் பெயரும் புணர்ச்சியும் இவ்விலக்கண நூற்கன்றிப் பொதுப்பாயிரமாய் எல்லா நூற்கும் பொருந்தாமையானும் அது பொருளன்றென்க. (20)

## உரையின் பொதுவிலக்கணம்

21. பாடங் கருத்தே சொல்வகை சொற்பொருள்
தொகுத்துரை யுதாரணம் வினாவிடை விசேடம்

1. சூ. 243. 2. அறிவது - ஞாபகம்; செய்வது - காரகம்.

விரிவதி காரந் துணிவு பயனே
டாசிரிய வசனமென் றீரே முரையே.

எ - ன், மேற் காண்டிகையுரை விருத்தியுரை யென்றார், அவற்றை உணர்த்துவான்றொடங்கி, உரையினது பொது விலக்கணம் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்) இப்பதினான்கு வகையான் உரைக்கப்படும் நூற்கு உரை எ - று.

இவற்றுள், விசேடமாவது : சூத்திரத்துட் பொருளன்றி ஆண்டைக்கு வேண்டுவன தந்துரைத்தல் ; விரிவாவது : வேற்றுமை முதலிய தொக்கு நின்றனவற்றை விரிக்கவேண்டுழி விரித்துரைத்தல் ; அதிகாரமாவது : எடுத்துக்கொண்ட அதிகாரம் இதுவாதலின் இச்சூத்திரத்து அதிகரித்த பொருள் இதுவென அவ்வதிகாரத்தோடு பொருந்த உரைக்கவேண்டுழி உரைத்தல் ; துணிவாவது : ஐயுறக் கிடந்துழி இதற்கு இதுவே பொருளென உரைத்தல் ; ஏனைய பொருள் விளங்கிக் கிடந்தன.

இப்பதினான்கும் இவ்வுரையுள் வந்துழி வந்துழிக் காட்டுதும் ; ஆங்காங்குணர்க. (21)

## காண்டிகையுரை

22. கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும்
அவற்றொடு வினாவிடை யாக்க லானும்
சூத்திரத் துட்பொரு டோற்றுவ காண்டிகை.

எ - ன், காண்டிகையுரையாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மேற்கூறிய பதினான்கினுட் கருத்துரையும் பதப்பொருளும் உதாரணமுமாகிய மூன்றனையும் உரைத்தலானும் அம்மூன்றனோடு வினா விடை யென்னும் இரண்டனையும் கூட்டியுரைத்தலானும் சூத்திரத்துட்பொருளை விளக்குவன காண்டிகையுரைகளாம் எ - று. (22)

## விருத்தியுரை

23. சூத்திரத் துட்பொரு ளன்றியு மாண்டைக்
கின்றி *யமையா யாவையும் விளங்கத்
†தன்னுரை யானும் பிறர்நூ லானும்
ஐய மகலவைங் காண்டிகை யுறுப்பொடு
மெய்யினை யெஞ்சா திசைப்பது விருத்தி.

---

(பி - ம்.) * ‘அமையாதியாவையும்’ †‘தானுரையானும் பிறநூலானும்’

எ - ன், விருத்தியுரையாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) காண்டிகையுரைபோற் சூத்திரத்துட்பொருள் விளக்குதன்மாத்திரையினில்லாது அவ்விடங்கட்கு இன்றியமை யாத பொருள்கள் யாவையும் விளங்கத் தானுரைக்கு முறை யானும் ஆசிரியவசனங்களானும் மேற்கூறிய காண்டிகையுறுப்பு ஐந்தனுனும் ஐயந்தீரச் சுருங்காது மெய்ம்மைப்பொருளை விரித் துரைப்பது விருத்தியுரையாம் எ - று.

சூத்திரத்துட்பொருளன்றியு மென்றமையான், மேற்கூறிய [1]பதின்குறுப்புங் கொண்டது விருத்தியுரை யென்பது பெற்றும். (23)

## நூலென்னும் பெயர்க்காரணம்

(வெண்பா)

24. [2]பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச்
செஞ்சொற் புலவனே சேயிழையா—எஞ்சாத
கையேவா யாகக் [3]கதிரே மதியாக
மையிலா நூன்முடியு மாறு.

எ - ன், நூலென்னும் பெயர் வருமாறு உணர்த்துதல் நுத லிற்று.

(இ - ள்.) நூல் முடியுமாறு இதுவாதலின், நூலென்றது உவமவாகுபெயராம் எ - று. (24)

25. உரத்தின் வளம்பெருக்கி யுள்ளிய தீமைப்
புரத்தின் வளமுருக்கிப் பொல்லா—மரத்தின்
கனக்கோட்டந் தீர்க்குநூ லஃதேபோன் மாந்தர்
மனக்கோட்டந் தீர்க்குநூன் மாண்பு.

---

1. இதனை மறுத்து, 'ஐங்காண்டிகையுறுப்பிற்கு மேற்பட்டு வருவன வெல்லாம் விருத்தியுரை யென்பதே இதன் கருத்தெனக் காண்க' என்பர் இராமாநுச கவிராயர்.

2. பஞ்சி : பஞ்சுக்குப் பஞ்சியென்னும் பெயருமுண்டு. இதனை - "பஞ்சிநுண் டுகிலன்ன பைங்கழற் சேவடி யுடையார்" (தே. வாள்கொளி புத்தூர்), "பஞ்சியடிப் பவளத்துவர் வாயவள்" (சீவக. 216), "கிடையும் பூளையுங் கிழியும் பஞ்சியும்", "கேள்விச் செவியிற் கிழித்துகிற் பஞ்சி" (பெருங் 1. 43 : 186 ; 1. 48 : 136) என்பனவற்றுலறிக.

3. கதிர் : இது மிகக்கூரியதோர் இருப்புக் கருவி ; நூல் நூற்றற்குரி யது ; "கதிர்மூக் காரல்" (புறநா. 249) ; "காம்புங் கதிருங் கூம்புமணிக் குமுதமும்" (பெருங். 2. 6 : 87.)

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அந்நூல்போற் செப்பஞ்செய்தலானும் நூலென்றது உவமவாகுபெயராம் எ - று.

புரத்தினது உரத்தின் வளம் பெருக்கி உள்ளிய தீமைவள முருக்கியெனக் கூட்டுக. புரம் - உடம்பு; உரம் - நெஞ்சு. பின்பு தீமைவளமென்றமையான் முன்பு நல்வளமெனத் தந்துரைக்க; நல்வளம் - அறிவு; தீமைவளம் - அறியாமை. (25)

## 2. ஆசிரியரியல்பு

### நல்லாசிரியர்

26. குலனரு டெய்வங் கொள்கை மேன்மை
கலைபயி றெளிவு கட்டுரை வன்மை
நிலமலை நிறைகோன் மலர்நிகர் மாட்சியும்
உலகிய லறிவோ டுயர்குண மினையவும்
அமைபவ னூலுரை யாசிரி யன்னே.

எ - ன், நிறுத்தமுறையானே ஆசிரியனது வரலாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இவ்வியல்பினையுடையார் கற்பிக்கும் ஆசிரியராவார் எ - று. (26)

27. தெரிவரும் பெருமையுந் திண்மையும் பொறையும்
பருவ முயற்சி யளவிற் பயத்தலும்
மருவிய நன்னில மாண்பா கும்மே.

எ - ன், மேற்கூறிய உவமையை விரித்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நிலத்தினது மாட்சிமை இதுவாதலின், இஃது உவமையாயிற்று எ - று. (27)

28. அளக்க லாகா வளவும் பொருளும்
துளக்க லாகா நிலையுந் தோற்றமும்
வறப்பினும் வளந்தரும் வண்மையு மலைக்கே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மலையினது மாட்சிமை இதுவாதலின், இஃது உவமையாயிற்று எ - று. (28)

29. ஐயந் தீரப் பொருளை யுணர்த்தலும்
மெய்ந்நடு நிலையு மிகு [1] நிறை கோற்கே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) நிறைகோலினது மாட்சிமை இதுவாதலின், இஃது உவமையாயிற்று எ - று. (29)

30. மங்கல மாகி யின்றி யமையா
தியாவரு மகிழ்ந்து மேற்கொள *மெல்கிப்
பொழுதின் முகமலர் வுடையது பூவே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மலரினது மாட்சிமை இதுவாதலின், இஃது உவமை யாயிற்று எ - று.

இவ்வுவமைகளினது மாட்சிமைபோலப் [2] பொருள்களினது மாட்சிமையையும் விரித்துக்கொள்க. (30)

## ஆசிரியரல்லாதவர்

31. மொழிகுண மின்மையு மிழிகுண வியல்பும்
அழுக்கா றவாவஞ்ச மச்ச மாடலும்
கழற்குட மடற்பனை பருத்திக் குண்டிகை
முடத்தெங் † கொப்பென முரண்கொள் சிந்தையும்
உடையோ ரிலரா சிரியரா குதலே.

எ - ன், ஆசிரியராகார் இவரென உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இக்குற்றங்களையுடையோர் கற்பிக்கும் ஆசிரிய ராகார் எ - று. (31)

32. பெய்தமுறை யன்றிப் பிறழ வுடன்றரும்
செய்தி [3] கழற்பெய் குடத்தின் சீரே.

---

(பி - ம்.) * 'மல்கி' † 'ஒப்பன'

1. நிறைகோலென்பது கழச்சுக்கோல், கயிற்றுக்கோல், துலாக் கோலெனவும் வழங்கும்.

2. பொருள்கள் - உவமேயங்கள்.

3. பண்டைக்காலத்தில் கழற்சிக்காயினால் கணக்கிடுவதுண்டென்று, "பரந்தாடு கழங்கழி மன்மருங்கு", "எல்லா மெண்ணி னிடுகழங்கு தபுந" (பதிற். 15, 32) என்பனவற்றால் தெரிதலின், 'கழற்பெய்குடம்' என்றதற்கு, 'கணக்கிடுதற்குரிய கழற்சிக்காய்களைப் பெய்யுங் குடம்' என்று பொருள் கொள்வது நேர்.

எ - ன், மேற்கூறிய உவமையை விரித்து உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) கழற்பெய்த குடத்தின் குற்றம் இதுவாதலின், இஃது உவமையாயிற்று. (32)

33. தானே தரக்கொளி னன்றித் தன்பால்
மேவிக் கொளக்கொடா விடத்தது மடற்பனை.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மடற்பனையின் குற்றம் இதுவாதலின், இஃது உவமையாயிற்று எ - று. (33)

34. அரிதிற் பெயக்கொண் டப்பொரு டான்பிறர்க்
கெளிதீ வில்லது பருத்திக் குண்டிகை.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) பருத்திபெய்த குண்டிகையின் குற்றம் இதுவாதலின் ஈது உவமையாயிற்று எ - று. (34)

35. பல்வகை யுதவி வழிபடு பண்பின்
அல்லோர்க் களிக்கு மதுமுடத் தெங்கே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) முடத்தெங்கினது குற்றம் இதுவாதலின், இஃது உவமையாயிற்று எ - று.

இவ்வுவமைகளின் குற்றம்போலப் பொருள்களின் குற்றமும் விரித்துரைத்துக்கொள்க. (35)

## 3. பாடஞ்சொல்லுதலின் இலக்கணம்

36. ஈத லியல்பே யியம்புங் காலைக்
காலமு மிடனும் வாலிதி னோக்கிச்
சிறந்துழி யிருந்துதன் றெய்வம் வாழ்த்தி
உரைக்கப் படும்பொரு ளுள்ளத் தமைத்து
விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து
கொள்வோன் கொள்வகை யறிந்தவ னுளங்கொளக்
கோட்டமின் மனத்தினூல் கொடுத்த லென்ப.

எ - ன், நிறுத்தமுறையானே ஆசிரியன் கற்பிக்குமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) கற்பிக்குமாறு இவ்வாறெனச் சொல்லுவர் புலவர் எ - று. (36)

## 4. மாணாக்கர்

37. தன்மக னாசான் மகனே மன்மகன்
பொருணனி கொடுப்போன் வழிபடு வோனே
உரைகோ ளாளற் குரைப்பது நூலே.

எ - ன், நிறுத்தமுறையானே மாணாக்கனது வரலாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இவ்வறுவர்க்கும் சொல்லப்படுவதுநூல் எ - று. (37)

### மாணாக்கர் வகை

38. அன்ன மாவே மண்ணொடு கிளியே
[1] இல்லிக் குடமா டெருமை [2] நெய்யரி
அன்னர் தலையிடை கடைமா ணாக்கர்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மேற்கூறிய அறுவருள் அன்னமும் பசுவும் போல்வார் தலைமாணாக்கர்; மண்ணும் கிளியும் போல்வார் இடைமாணாக்கர்; இல்லிக்குடமும் ஆடும் எருமையும் நெய்யரியும் போல்வார் கடைமாணாக்கர் எ - று.

இவ்வுவமைத்திறமும் பொருட்டிறமும் விரித்துரைத்துக் கொள்க. (38)

### கற்பிக்கப்படாதோர்

39. [3] களிமடி மானி காமி கள்வன்
பிணிய னேழை பிணக்கன் சினத்தன்
துயில்வோன் மந்தன் றொன்னூற் கஞ்சித்
தடுமா றுளத்தன் றறுகணன் பாவி
படிறனின் னோர்க்குப் பகரார் நூலே.

1. இல்லிக்குடம் - ஓட்டைக்குடம்.

2. நெய்யரி - பன்னாடை; நெய் - தேன்; அதனை வடிக்கட்டுதற்குக் கருவியாக இருத்தலின், பன்னாடை 'நெய்யரி' என்று பெயர்பெற்றது; இக்காலத்துப் புத்துருக்கு நெய்யும் அதனால் வடிக்கட்டப்படுகின்றது; "நல்லவை யகத்திட்டு நவையுறத் திடுவது, நெய்யரி மாண்பென நினைதல் வேண்டும்" என்பதனைக் காட்டி நெய்யரியை முதன் மாணாக்கருக்குவமை கூறுவர்; ந. இ. வி.

3. களி - கட்குடியன். மடி - சோம்பேறி. மானி - மானமுடையவன். ஏழை - அறிவில்லாதவன்; வறுமையுடையவனெனினும் ஆம். தறுகணன் - அஞ்சத்தக்கனவற்றிற்கு அஞ்சாதவன். படிறன் - வஞ்சகமுடையவன்.

எ - ன், மாணுக்கராகாரிவரென உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இக்குற்றங்களை யுடையார்க்கு நூலைச் சொல்லார் ஆசிரியர் எ - று. (39)

## 5. பாடங்கேட்கும் முறை

40. கோடன் மரபே கூறுங் காலைப்
பொழுதொடு சென்று [1]வழிபடன் முனியான்
குணத்தொடு பழகி யவன்குறிப் பிற்சார்ந்
திருவென விருந்து சொல்லெனச் சொல்லிப்
பருகுவ னன்ன வார்வத்த னாகிச்
சித்திரப் பாவையி னத்தக வடங்கிச்
செவிவா யாக நெஞ்சுகள னாகக்
கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்துப்
போவெனப் போத லென்மனார் புலவர்.

எ - ன், நிறுத்தமுறையானே மாணுக்கன் நூலைக் கற்குமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) கற்குமாறு இவ்வாறெனச் சொல்லுவர் புலவர் எ - று. (40)

### பயிற்சி

41. நூல்பயி லியல்பே நுவலின் வழக்கறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்
ஆசாற் சார்ந்தவை *யமைவரக் கேட்டல்
அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்
வினுதல் வினுயவை விடுத்த லென்றிவை
கடனுக் கொளினே மடநனி யிகக்கும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்வாறு நூலைப் பயின்றவர்க்கு அறியாமை மிகுதியும் போம் எ - று. (41)

42. ஒருகுறி கேட்போ னிருகாற் கேட்பின்
பெருக நூலிற் பிழைபா டிலனே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) ஒருகாற் கேட்ட துணையானே அமையாது இருகாற்

(பி - ம்.) * 'அமைவுறக்'

1. "பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே" புறநா. 183 : 2.

கேட்டானாயின் அந்நூலின்கட் பிழைபாடு மிகுதியும் இலன் எ - று. (42)

43. முக்காற் கேட்பின் முறையறிந் துரைக்கும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) முக்காற் கேட்பானாயின் ஆசிரியன் கற்பித்த முறை யறிந்துரைப்பன் எ - று. 43)

44. ஆசா னுரைத்த தமைவரக் கொளினும்
காற்கூ றல்லது பற்றல னாகும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) ஆசிரியன் கற்பித்தனவற்றைத் தன் அறிவின் கண் அமையக் கற்றானாயினும் புலமைத்திறத்திற் காற்கூறல்லது பற்றான் எ - று. (44)

45. அவ்வினை யாளரொடு பயில்வகை யொருகால்
செவ்விதி னுரைப்ப வவ்விரு காலும்
மையறு புலமை மாண்புடைத் தாகும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) தன்போலியரொடு பயிலும்வகையாற் காற்கூறும் அக்கல்வியைத் தன் மாணாக்கர்க்கும் அவைக்களத்தோர்க்கும் உணர விரித்துரைத்தலான் அரைக்கூறுமாகக் குற்றமற்ற புலமை நிரம்பும் எ - று. (45)

## வழிபாடு

46. [1]அழலி னீங்கா னணுகா னஞ்சி
• நிழலி னீங்கா னிறைந்த நெஞ்சமோ
டெத்திறத் தாசா னுவக்கு மத்திறம்
அறத்திற் றிரியாப் படர்ச்சி வழி பாடே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்வாறொழுகுதல் வழிபாடாம் எ - று. (46)

## சிறப்புப்பாயிரத்திலக்கணம்

47. ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே

---

1. அழலி னீங்கா னணுகான் : "அகலா தணுகாது தீக்காய்வார் போல்க" (குறள், 791); "அழலிற் சாரா தகலா தொழுக" (சீவக. 1648.) 'நிழலினீங்கான்' என்பது "நிழலி னீங்கார்" (சீவக. 1648) என்பதை நினைப்பிக்கின்றது.

கேட்போர் பயனோ டாயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே.

எ - ன், பாயிரம் பொதுச் சிறப்பென (சூ. 2) மேல் நிறுத்த முறையானே "மலர்தலை யுலகின்" என்றற்றொடக்கத்தவாய் எல்லா நூற்கண்ணும் வரும் சிறப்புப்பாயிரங்களினது பொது விலக்கணம் உணர்த்துதனுதலிற்று.

இதனையும் பொதுப்பாயிரத்துட் கூறினர், பொது ஐந்தனுள் நூன்முகத்தினது இலக்கணமாதலினென்க.

(இ - ள்.) இவ்வெட்டுப்பொருளையும் விளங்க உணர்த்துவது சிறப்புப்பாயிரத்தினது இலக்கணமாம் எ - று.

ஆக்கியோன் பெயரே யென்றற் றொடக்கத்தனவற்றுட் சிறப்பென்பது தோன்றினமையிற் பாயிரமென வாளா கூறினரென்க. (47)

48. காலங் களனே காரண மென்றிம்
மூவகை யேற்றி மொழிநரு முளரே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அவ்வெட்டினோடு இம்மூன்றினையுங் கூட்டிப் பதினொன்றாகக் கூறுவாருமுளர் எ - று. (48)

## நூற்பெயர் வகை

49. முதனூல் கருத்த னளவு மிகுதி
பொருள்செய் வித்தோன் றன்மைமுத னிமித்தினும்
இடுகுறி யானுநூற் கெய்தும் பெயரே.

எ - ன், மேற்கூறிய பதினொன்றனுள் நூற்பெயர்க்கும் யாப்பிற்கும் சிறப்புவிதியுணர்த்தவேண்டுதலின் அவ்விரண்டனுள் நூற்பெயர்க்குச் சிறப்புவிதி உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) முதனூன்முதல் தன்மையீறாகக் கூறிய ஏழும் பிறவுமாகிய காரணங்களாலும் இடுகுறியானும் நூற்குப் பெயர் வரும் எ - று.

**வரலாறு** :—முதனூலாற் பெயர்பெற்றன: *ஆரியப்படலம், பாரதமுதலாயின; கருத்தனாற் பெயர்பெற்றன: அகத்தியம், தொல்காப்பிய முதலாயின; அளவினாற் பெயர் பெற்றன: பன்னிரு படலம், நாலடிநானூறு முதலாயின; மிகுதியாற் பெயர்பெற்றன: [1]களவியல் முதலாயின; பொருளாற் பெயர்பெற்றன: அகப்

(பி - ம்.) *'ஆசியப்'

1. களவியல் - இறையனாரகப்பொருள்.

பொருள்முதலாயின; செய்வித்தோனாற் பெயர்பெற்றன: சாதவாகனம், இளந்திரைய முதலாயின; தன்மையாற் பெயர் பெற்றன: சிந்தாமணி, நன்னூல்முதலாயின; இடுகுறியாற் பெயர் பெற்றன: நிகண்டு, கலைக்கோட்டுத்தண்டு முதலாயின; பிறவுமன்ன. (49)

## நூல்யாப்பு

50. தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெயர்ப்
பெனத்தகு நூல்யாப் பீரிரண் டென்ப.

எ - ன், யாப்பினுக்குச் சிறப்புவிதி உணர்த்துத னுதலிற்று.

(இ - ள்.) நூல்யாப்பு இந்நான்கு கூற்றதா மென்று சொல்லுவர் புலவர் எ - று.

வெண்பாமுதலிய யாப்பினோடு இவற்றிற்கு வேற்றுமை தோன்ற நூல்யாப்பென்றார். (50)

## சிறப்புப்பாயிரஞ் செய்தற்குரியோர்

51. தன்னா சிரியன் றன்னொடு கற்றோன்
தன்மா ணாக்கன் றகுமுறை காரனென்
றின்னோர் பாயிர மியம்புதல் கடனே.

எ - ன், இவ்விலக்கணங்களையுடைய சிறப்புப்பாயிரம் கூறுதற்குரியார் இவரென உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஒருவன் கூறிய நூற்கு இந்நால்வருளொருவர் சிறப்புப்பாயிரம் கூறுதல் முறைமை எ - று. (51)

## சிறப்புப்பாயிரம் பிறராற் செய்யப்படுதற்குக் காரணம்

52. தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினும்
தான்றற் புகழ்த றகுதி யன்றே.

எ - ன், சிறப்புப்பாயிரம் பிறர் கூறுதற்குக் காரணம் உணர்த்துத னுதலிற்று.

(இ - ள்.) தோன்றாத நுட்பங்களெல்லாம் தோற்றிப் பல துறைப்பட்டு விரிந்தநூலைச் செய்துமுடித்தானாயினும் தன்னைத் தான் புகழ்தல் தகுதியன்றாமாதலின், நூல் செய்தானது புகழாகிய சிறப்புப்பாயிரத்தைப் பிறர் கூறவேண்டும் எ - று. (52)

53. [1]மன்னுடை மன்றத் [2]தோலைத் தூக்கினும

1. இதனையும் இதற்கு முந்திய சூத்திரத்தையும் பனம்பார மென்று கூறுவர் மயிலைநாதர்.

2. ஓலைத்தூக்கு - சீட்டுக்கவி.

தன்னுடை யாற்ற லுணரா ரிடையினும்
மன்னிய வவையிடை வெல்லுறு பொழுதினும்
தன்னை மறுதலை பழித்த காலையும்
தன்னைப் *புகழ்தலுந் தகும்புல வோர்க்கே.

எ - ன், தற்புகழ்ச்சியும் ஒரோவழிக் குற்றமன்றென்பது உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இவ்விடங்களாயின், தன்னைப் புகழ்தலும் தகுதி யாம் புலவோர்க்கு எ - று.

புகழ்தலுமென்ற உம்மையான் இவ்விடங்களிலும் தன்னைப் புகழாமையே தகுதியென்பது பெற்றும். (53)

## பாயிரம் நூலுக்கு இன்றியமையாததென்பது

54. ஆயிர முகத்தா னகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே.

எ - ன், இருவகைப் பாயிரங்களும் நூற்கு இன்றியமையா தனவென்பது உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஆயிரம் உறுப்புக்களான் விரிந்த நூலாயினும் பாயிரமில்லாதது நூலன்று எ - று. (54)

(வெண்பா)

55. [1]மாடக்குச் சித்திரமு மாநகர்க்குக் கோபுரமும்
ஆடமைத்தோ ணல்லார்க் கணியும்போல் - நாடிமுன்
ஐதுரையா நின்ற வணிந்துரையை யெந்நூற்கும்
பெய்துரையா வைத்தார் பெரிது.

எ - ன், மேற்பாயிரமில்லது பனுவலன்றென்றார், அஃது அன்றாதற்குக் காரணம் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) அறிவுடையோர் மாடமுதலிய மூன்றற்கும் சித்திர முதலிய மூன்றும்போலக் கருதி அழகியதாகிய பொருளை உணர்த்தாநின்ற இருவகைப்பாயிரங்களையு முரைத்து எவ்வகைப் பட்ட பெரிய நூல்கட்கும் முன்னர்ப் பெய்துவைத்தார் பெரும் பாலும்; ஆதலிற் பாயிரமில்லது பனுவலன்றாம் எ - று. (55)

---

(பி - ம்.) *'புகழ்வதுந்'

1. மாடக்கு......கோபுரமும்: "எயின லம்புனை கோபுர மாபுரத் தெழுதுமா ளிகைதோறும்" வி. பா. சம்பவ. 119.

முதலாவது

# எழுத்ததிகாரம்

---

முதலாவது

## எழுத்தியல்

### கடவுள் வணக்கமும் அதிகாரமும்

56. பூமலி யசோகின் புனைநிழ லமர்ந்த
நான்முகற் றொழுதுநன் கியம்புவ னெழுத்தே.

எ - ன், கடவுள் வணக்கமும் அதிகாரமும் உணர்த்துத னுதலிற்று.

(இ - ள்.) பூக்கள் மலிந்த அசோகமரத்தினது அலங்கரிக்கும் நிழலின்கண் எழுந்தருளியிருந்த நான்கு திருமுகங்களையுடைய கடவுளை வணங்கி நன்றாகச் சொல்லுவன் எழுத்திலக்கணத்தை எ - று.

எல்லா நூலும் மங்கலமொழி முதல்வகுத்துக் கூறவேண்டுதலிற் பூமலியென்றும், எல்லாச் சமயத்தோராலும் வணங்கப்படும் படைப்புமுதலிய ஐந்தொழிற்குமுரிய எல்லாக்கடவுளாகியும் நின்றுனொருவனே யென்பார் அருகனை நான்முகனென்றும் கூறினார். இவ்வாறு வள்ளுவநாயனாரும்,

"மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்" (குறள், 3)

என [1]வரையாது கூறுதல் காண்க. [2]எழுத்தென்பது ஆகுபெயர்; ஏகாரம் ஈற்றசை. எல்லாம்வல்ல கடவுளை வணங்கலான் இனிது முடியுமென்பது கருதி நன்கியம்புவனென்று புகுந்தமையின் இது நுதலிப்புகுதலென்னும் உத்தி. (1)

### எழுத்திலக்கண வகை

57. எண்பெயர் முறைபிறப் புருவ மாத்திரை
முதலீ றிடைநிலை போலி யென்றா
பதம்புணர் பெனப்பன் னிருபாற் றதுவே.

---

1. வரையாது - ஒருதெய்வத்தைக் குறியாமல்.
2. எழுத்தென்பது காரியவாகு பெயர்; 290 - ஆம் சூத்திர உரை.

எ - ன், அவ்வெழுத்திலக்கணம் இத்துணைத்தென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இப்பன்னிருபகுதியினையு முடைத்து அவ்வெழுத்திலக்கணம் எ - று.

என்றுவென்பது எண்ணிடைச்சொல். இச்சூத்திரம் தொகுத்துச் சுட்டலென்னும் உத்தி; மேல்வருவனவெல்லாம் வகுத்துக் காட்டல். (2)

## 1. எழுத்தின் எண்

58. மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி
எழுத்தது முதல்சார் பெனவிரு வகைத்தே.

எ - ன், ''பன்னிரு பாற்றதுவே'' (சூ. 57) என்றவற்றுள், எழுத்தினது அகத்திலக்கணமாகிய பத்தையும் ஓரியலாகவும், அதன் புறத்திலக்கணமாகிய பதம் புணர்பென்னுமிரண்டனுள் அவ்வெழுத்தாளுகும் பதத்தை ஓரியலாகவும், அப்பதம் புணரும் புணர்ப்பை மூன்றியலாகவும் ஓத்துமுறைவைப்பென்னும் உத்தியான்வைக்கப்புகுந்து முதற்கண் வைத்த எழுத்தியலில் எழுத்தினது எண்ணினை நிறுத்த முறையான் உணர்த்துவான்றொடங்கி எழுத்து இன்னதென்பதூஉம் அதன் வகையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மொழிக்கு முதற்காரணமாய் அணுத்திரளின் காரியமாய் வரும் ஒலியாவது எழுத்து; அது முதலெழுத்தென்றும் சார்பெழுத்தென்றும் இருவகையினை உடைத்து எ - று.

எனவே மொழிக்கு முதற்காரணம் எழுத்தாறுற்போல எழுத்துக்கு முதற்காரணம் அணுத்திரளென்பது பெற்றும். ஆமென்னும் பெயரெச்சம் ஒலியென்னும் பெயரொடு முடிந்தது. [1]முற்கு வீளை முதலியவற்றிற்கு முதற்காரணமாய் அணுத்திரளின் காரியமாய் வருமொலி எழுத்தாகாமையின், மொழி முதற்காரணமாம் ஒலியென்றுர். [2]சிதலதுநீர்வாய்ச் சிறு துகளாற் பெரும் புற்றுருவமைந்த பெற்றிய தென்ன ஐம்புலப் பேருரு

---

1. முற்கு - முக்குதலின் ஒலி; வீளை - நாவை மடித்துச் செய்யப்படும் சீழ்க்கை யென்னும் ஒலி; அது 'சிட்டி, என இக்காலத்து வழங்கும் (குறிஞ்சிப். 161); முற்கு வீளை இலதை யென்பன, அடிநாவடியிற் காட்டப்படும் ஒலிக்குறிப்பென்பர், இராமாநுச கவிராயர்; நன். சூ. 58.

2. சிதல் - கறையான்.

வைந்தும் [1] ஐந்தணுவால் இம்பரிற் சமைவ தியாவரு மறிதலின், [2]அநாதிகாரணமாகிய மாயையினை ஈண்டுக் கூறாது ஆதிகாரண மாகிய செவிப்புலனும் அணுத்திரளை எழுத்திற்கு முதற்காரண மென்றார். இவ்வாசிரியர்க்கு மாயை உடன்பாடன்று; அணுத் திரளொன்றுமே துணிவெனின், பிறிதொடுபடான் தன்மதங் கொளலென்னும் மதம்படக் கூறினரென்றுணர்க. ஈண்டு அணு வென்றது ஒலியினது நுட்பத்தை. (3)

## முதலெழுத்து

59. உயிரு முடம்புமா முப்பது முதலே.

எ - ன், முதலெழுத்தின் விரி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உயிரும் உடம்புமாகும் முப்பதெழுத்தும் முத லெழுத்தாம் எ - று.

## சார்பெழுத்து

60. உயிர்மெய் யாய்த முயிரள பொற்றள
பஃகிய இஉ ஐஔ மஃகான்
தனிநிலை பத்துஞ் சார்பெழுத் தாகும்.

எ - ன், சார்பெழுத்தின் விரி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) இப்பத்தும் சார்பெழுத்தாம் எ - று.

அஃகுதல் - சுருங்குதல். தனிநிலை - ஆய்தம். உயிர்களோடும் மெய்களோடுங் கூடியும் கூடாதும் [3]அலிபோலத் தனி நிற்றலின் தனிநிலையெனப்படும். உயிர்மெய் உயிரும்மெய்யும் கூடிப்பிறத்த லானும், ஆய்தம் உயிர்போல,

"அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு" (குறள், 943)

என அலகு பெற்றும், மெய்போல,

"தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று" (குறள், 236)

என அலகு பெறாதும் ஒருபுடை யொத்து அவற்றின் இடையே

---

1. ஐந்து அணுவாவன: சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றமென்ற ஐந்தின் நுட்பங்கள்.

2. மாயையை அநாதிகாரண மென்பது வைதிக மதத்தார் கொள்கை; "பதினெண், தேய மாந்தருங் கிளந்தசொற் றிரட்சிதான் றாய, மாய காரிய வொலியன்றி" திருவிளை. நகர. 67.

3. ஆய்தத்தை அலியெழுத்தென்பார் பாட்டியலுடையார்.

சார்ந்துவருதலானும், ஏனைய தத்தம் முதலெழுத்தின் திரிபு விகாரத்தாற் பிறத்தலானும் [1] சார்பெழுத்தாயின வெனக் கொள்க. (5)

## சார்பெழுத்தின் விரி

61. உயிர்மெய் யிரட்டுநூற் றெட்டுய ராய்தம்
எட்டுயி ரளபெழு மூன்றொற் றளபெடை
ஆறே ழஃகு மிம்முப் பானேழ்
உகர மாறு றைகான் மூன்றே
ஔகா னொன்றே மஃகான் மூன்றே
ஆய்த மிரண்டொடு சார்பெழுத் துறுவிரி
ஒன்றொழி முந்நூற் றெழுபா னென்ப.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) உயிர்மெய் இருநூற்றுப்பதினாறு ; குறுகாத ஆய்தம் எட்டு ; உயிரளபெடை இருபத்தொன்று ; ஒற்றளபெடை நாற்பத்திரண்டு ; குற்றியலிகரம் முப்பத்தேழு ; குற்றியலுகரம் முப்பத்தாறு ; ஐகாரக்குறுக்கம் மூன்று ; ஔகாரக் குறுக்கம் ஒன்று ; மகரக்குறுக்கம் மூன்று ; ஆய்தக்குறுக்கம் இரண்டுடனே சார்பெழுத்தினது மிகுந்த விரி முந்நூற்றறுபத்தொன்பதாமென்று சொல்லுவர் புலவர் எ - று.

இவை இத்துணையவாதல் [2] பிறப்பதிகாரத்தினுட் காண்க. இவ்வாறு உயிர்மெய் ஒழிந்தனவற்றையும் விரித்தல் தொன்னெறி யென்பார், என்பவென்றார். (6)

## பெயர்களின் பொதுவிலக்கணம்

62. இடுகுறி காரணப் பெயர்பொதுச் சிறப்பின.

எ - ன், நிறுத்த முறையானே எழுத்தின் பெயராமாறு உணர்த்துவான்றொடங்கிப் பெயர்க்கெல்லாம் பொதுவிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இடுகுறிப்பெயரும் காரணப்பெயருமாகிய இரண்

1. "தம்மொடு தாம் சார்ந்தும் இடம் சார்ந்தும் இடமும் பற்றுக் கோடும் சார்ந்தும் விகாரத்தால் வருதலிற் சார்பெழுத் தென்றாயின" நன். மயிலை.

2. 'பிறப்பதிகாரம்' என்றது, "நிறையுயிர் முயற்சியின்" என்னும் இந்நூலின் 74-ஆம் சூத்திர முதலியவையுள்ள பகுதியை.

டும் பல பொருட்குப் பொதுப்பெயராகியும் ஒரு பொருட்குச் சிறப்புப் பெயராகியும் வருவனவாம் எ - று.

ஒரு பொருளைக் குறித்தற்குக் கடவுளானும் அறிவுடையோ ரானும் இட்டகுறியாகிய பெயர் இடுகுறிப்பெயர் ; காரணத்தான் வரும்பெயர் காரணப்பெயர்.

(உ - ம்.) மரமென்பது இடுகுறிப்பொதுப்பெயர். பனையென் பது இடுகுறிச் சிறப்புப்பெயர். அணியென்பது காரணப்பொதுப் பெயர். முடியென்பது காரணச் சிறப்புப்பெயர்.

இனி இரட்டுறமொழிதலென்னுமுத்தியான் இச்சூத்திரத்திற்கு இடுகுறியென்றும் காரணமென்றும் சொல்லப்படும் இலக்கணங்களை யுடைய பெயர்கள் இடுகுறிகாரணமென்னும் இரண்டற்கும் பொது வாயும் இடுகுறிக்கே சிறப்பாயும் காரணத்திற்கே சிறப்பாயும் வருவனவாமென்றும் பொருளுரைத்துக் கொள்க.

(உ - ம்.) மரமென்பது இடுகுறிப்பெயர். பரமனென்றது காரணப்பெயர். முக்கணன், அந்தணன், மறவன், முள்ளி, கறங்கு, மொழி, சொல்லென்பன காரண இடுகுறிப்பெயர். இவை காரணவிடுகுறியாயதென்னையெனின், இவற்றுள் முக்கணனென் னும் பெயர் ஆனைமுகக்கடவுள் முதலியோர்க்கும் மூன்று கண்ணுள வாதலிற் காரணங்கருதியவழி மூன்று கண்ணினையுடையோர் பலர்க் கும் சேறலானும் காரணங்கருதாவழி இடுகுறி மாத்திரையேயாய்ப் பரமனுக்கே சேறலானும் காரண விடுகுறியாயிற்று. ஏனைப் பெயர்கட்கும் இவ்வாறே காண்க. இவ்வாறே வடநூலார் இடு குறியை ரூடியென்றும் காரணத்தை யோகமென்றும் காரண விடு குறியை யோகரூடியென்றும் வழங்குப.

இவ்விலக்கணத்தான் எழுத்தினது பெயரும் பிறபெயரும் வருமாறு காண்க. (7)

## 2. எழுத்தின் பெயர்

63. அம்முத லீரா றாவி கம்முதல்
மெய்ம்மூ வாறென விளம்பினர் புலவர்.

எ - ன், ஒருசாரெழுத்தினது பெயராமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அகரமுதல் ஔகாரவீறாகக் கிடந்த பன்னிரண் டினையும் ஆவியென்றும் ககரமுதலாகக் கிடந்த பதினெட்டினையும் மெய்யென்றும் நூல்களாற் சொன்னர் அறிவுடையோர் எ - று.

கடவுளால் ஆவிமெய்யென்று அமைத்த பெயர்க்காரணம் உயிர்களான் முற்றும் உணர்தற்கு அருமையும் [1]கடவுணூல் உணர்ந்தோர்வழிச் செல்லும் தமது பெருமையும் தோன்ற விளம்பினர் புலவரென்றுர். ஆவிமெய்யும்போறலின் 'இவ்விருவகையெழுத்திற்கும் ஆவி மெய்யென்பன உவமவாகுபெயராய்க் காரணப் பொதுப்பெயராயின. ஏனையவும் இவ்வாறே காண்க. (8)

## குறில்

64. அவற்றுள்,

அஇ உஎ ஒக்குறி லைந்தே.

எ - ன். இதுவுமது.

(இ - ள்.) ஆவி மெய் என்றவற்றுள் இவ்வைந்தும் குற்றெழுத்தாம் எ - று. (9)

## நெடில்

65. ஆஈ ஊஏ ஐஓ ஒள நெடில்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்வேழும் நெட்டெழுத்தாம் எ - று. (10)

## சுட்டெழுத்துக்கள்

66. அஇ உம்முதற் றனிவரிற் சுட்டே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இம்மூன்றெழுத்தும் மொழிக்குப்புறத்தும் அகத்தும் முதற்கண் தனித்துச் சுட்டுப்பொருளுணர்த்தவரிற் சுட்டெழுத்தாம் எ - று.

முதலெனப் பொதுப்படக்கூறினமையிற் புறத்தும் அகத்துமென்பது பெற்றும்.

(உ - ம்.) அக்கொற்றன் இக்கொற்றன் உக்கொற்றன் எனவும், அவன் இவன் உவன் எனவும் வரும்.

அவனென்பதன்கண் அகரம் அறமென்பதன்கண் அகரம் போலப் பின் எழுத்துக்களோடு தொடர்ந்துநின்று ஒருபொருளையுணர்த்தாது மலையனென்பதன்கட் பகுதிபோல வேறு நின்று சுட்டுப்பொருளுணர்த்தலின் அகத்துவரும் இதனையும் தனிவரினென்றுர். இவ்வுரை வினுவிற்குங் கொள்க. (11)

---

1. கடவுணூல் - பதிநூல்.

## வினாவெழுத்துக்கள்

67. எயா முதலும் ஆஓ ஈற்றும்
ஏஇரு வழியும் வினாவா கும்மே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) புறத்தும் அகத்தும் மொழிமுதற்கண் எகரமும் யாவும், ஈற்றின்கண் ஆகாரமும் ஓகாரமும், இவ்விரண்டிடத்தினும் ஏகாரமும் தனித்து வினாப்பொருளுணர்த்தவரின் வினாவெழுத்தாம் எ - று.

மேல் தனிவரினென்றதனை ஈண்டும் கூட்டுக. இவை புறத்தும் அகத்தும் வருதல் ஏற்றபெற்றி கொள்க.

ஒன்றினமுடித்தல் தன்னினமுடித்தலென்னும் உத்தியான் யாவினாவையும் உடன்கூறினார்.

(உ - ம்.) எக்கொற்றன் எனவும் எவன், யாவன் எனவும், முதற்கண் வந்தன. கொற்றனா, கொற்றனோ வென ஈற்றின்கண் வந்தன. ஏவன், கொற்றனே என ஈரிடத்தும் வந்தன. ஏனைப் பெயர்வினைகளோடும் ஏற்ற பெற்றி ஒட்டிக்கொள்க. (12)

## வல்லினம்

68. வல்லினங் கசடத பறவென வாறே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்வாறும் வல்லினமாம் எ - று. (13)

## மெல்லினம்

69. மெல்லினம் ஙஞணந மனவென வாறே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்வாறும் மெல்லினமாம் எ - று. (14)

## இடையினம்

70. இடையினம் யரலவ ழளவென வாறே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்வாறும் இடையினமாம் எ - று. (15)

## இனவெழுத்து

71. ஐஔ இஉச் செறிய முதலெழுத்
திவ்விரண் டோரின மாய்வரன் முறையே.

எ - ன், இனமடைத்தல் நுதலிற்று.

(இ - ள்.) [1]இனமில்லாத ஐகார ஔகாரங்கள் ஈகார ஊகாரங்கட்கு இனமாகிய இகர உகரங்களைத் தமக்கும் இனமாகப் பொருந்த முதலெழுத்துக்கள் இவ்விரண்டு ஓரினமாய் வருதல் முறையாதலால் அவை இனவெழுத்தென்றும் பெயர் பெறும் எ - று. (16)

## இனமென்றதற்குக் காரணம்

72. தான முயற்சி யளவு பொருள்வடி
வானவொன் றுதியோர் புடையொப் பினமே.

எ - ன், மேல் இனமென்றதற்குக் காரணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தானமுதலியவாய இவற்றுள் ஒன்றுமுதலாக ஒரு புடை யொத்தலால் இனமாம் எ - று.

தானம் - உர முதலியன ; முயற்சி - இதழ்முயற்சி முதலியன ; அளவு - மாத்திரை ; பொருள் - பாலன் விருத்தனுற்போலக் குறிலினது விகாரமே நெடிலாதலின் இரண்டற்கும் பொருளொன் றென்று முதனூலால் நியமிக்கப்பட்ட பொருள் ; வடிவு - ஒலி வடிவு, வரிவடிவு. [2]இவற்றுள் ஒன்றும் பலவுமொத்து இனமாய் வருதல் கண்டுகொள்க.

சார்பெழுத்திற்குப் பெயர் கூறுதொழிந்தார், ஆய்தம் தனி நிலையாதலானும் ஏனைச் சார்பெழுத்திற்குச் சுட்டுவினுவென்று விதந்தோதினவையொழிந்த முதலெழுத்தின் பெயரே பெயரா யடங்குதலானு மென்க.

இச்சூத்திரம் ஏதுவின்முடித்த லென்னும் உத்தி. (17)

## 3. எழுத்தின் முறை

73. சிறப்பினு மினத்தினுஞ் செறிந்தீண் டம்முதல்
நடத்த றுனே முறையா கும்மே.

எ - ன், நிறுத்தமுறையானே முறையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) சிறப்பினுனும் இனத்தினுனும் பொருந்தி இவ்வுலகத்து அகரமுதலாக வழங்குதருனே எழுத்தினது முறையாம் எ - று.

---

1. இங்ஙனம் இனமடைத்தல் அளபெடையிலும் பொருத்தத்திலும் பயன்படும்.

2. இதன் விரிவை மயிலைநாதர் இச்சூத்திரத்திற்கு எழுதிய உரையால் உணரலாம்.

குறிலினது விகாரமே நெடிலாதலாற் குறில் முன்னிற்றலிற் சிறப்பினென்றும், நெடில் இனமாய்ப் பின்னிற்றலின் இனத்தினென்றும், [1]நாதமாத்திரையாய் எல்லா எழுத்திற்கும் காரணமாய் முன்னிற்றலின் அம்முதலென்றும், எல்லாவெழுத்திற்கும் வைத்த முறைக்காரணம் உயிர்களான் முற்றுமுணர்தலாகாமையின் நடத்தருனேயென்றும் கூறினர்.[2] (18)

## 4. எழுத்தின் பிறப்பு

74. நிறையுயிர் முயற்சியி னுள்வளி துரப்ப
எழுமணுத் திரளுரங் கண்ட முச்சி
மூக்குற் றிதழ்நாப் பல்லணத் தொழிலின்
வெவ்வே றெழுத்தொலி யாய்வரல் பிறப்பே.

எ - ன், நிறுத்தமுறையானே பிறப்பாமாறு உணர்த்துவான் தொடங்கி அதன் பொதுவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒலியெழுத்தாகிய காரியத்திற்கு வேண்டும் காரணங்களில் ஒருவாற்ருனும் குறைவின்றி நிறைந்த உயிரினது முயற்சியால் உண்ணின்ற வளியெழுப்ப எழும் செவிப்புலனும் அணுக்கள் உரமுதலிய நான்கிடத்தையும் பொருந்தி இதழ் முதலிய நான்கின் தொழில்களால் வெவ்வேறு எழுத்தாகிய ஒலிகளாய்த் தோன்றுதல் அவற்றின் பிறப்பாம் எ - று. (19)

### முதலெழுத்துக்களின் இடப்பிறப்பு

75. அவ்வழி,
ஆவி யிடைமை யிடமிட ருகும்
மேவு மென்மைமூக் குரம்பெறும் வன்மை.

---

1. 'அகரத்திற்குத் தலைமை விகாரத்தானன்றி நாதமாத்திரையாகிய இயல்பாற் பிறத்தலானும்' (குறள். 1, பரிமேல்.) என்பதும், 'இறைவன் இயங்குதிணைக் கண்ணும், நிலைத்திணைக் கண்ணும், பிறவற்றின் கண்ணும் அவற்றின் தன்மையாய் நிற்குமாறு எல்லார்க்கும் ஒப்ப முடிந்தாற்போல அகரமும் உயிர்க்கண்ணும் தனிமெய்க்கண்ணும் கலந்து அவற்றின் தன்மையாயே நிற்குமென்பது சான்றோர்க் கெல்லாம் ஒப்ப முடிந்தது' (தொல். மொழி. சூ. 13, ந. உரை) என்பதும், 'அகாரம் சகல சப்தத்துக்கும் காரணமாய் நாராயண பதத்திற்குச் சங்கிரகமாக இருக்கையாலே' (அஷ்டாதச ரகசியம், திருமந்திரப்கரணம்) என்பதும், "மொழிக் காரணமாம் நாதகாரிய வொலியெழுத்து" இ. வி. சூ. 3) என்பதும் இங்கே அறிதற்குரியன.

2. இதன் பின்னர், சிவஞானயோகிகள் தம் புத்தம்புத்துரையில் முறைக்காரணத்தை ஒருவாறு விளக்கியுள்ளார்.

எ - ன், முதலெழுத்துக்கட்கு இடம்வகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) மேற்கூறியநெறியாற் பிறக்குங்கால், ஆவி இடையினமென்னும் இருவகை யெழுத்தினது இடம் மிடறுரும்; மெல்லினம் மூக்கை இடமாகப் பொருந்தும்; வல்லினம் நெஞ்சை இடமாகப் பெறும் எ - று.

## முதலெழுத்துக்களின் முயற்சிப் பிறப்பு

76. அவற்றுள்,
முயற்சியுள் அஆ வங்காப் புடைய.

எ - ன், முதலெழுத்துட் சிலவற்றிற்கு முயற்சி வகையாற் பிறப்புணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல் இடம்வகுக்கப்பட்ட முதலெழுத்துக்களுள், அகர ஆகாரங்கள் நால்வகை முயற்சியுள் [1] அண்ணத்தின் தொழிலாகிய அங்காத்தலை யுடையவாய்ப் பிறக்கும் எ - று. (21)

77. இஈ எஏ ஐஅங் காப்போ
டண்பன் முதனா விளிம்புற வருமே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்வைந்தெழுத்தும் அங்காப்புடனே [2]அண்பல்லை அடிநா விளிம்பு பொருந்தப் பிறக்கும் எ - று. (22)

78. உஊ ஒஓ ஔவிதழ் குவிவே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்வைந்தெழுத்தும் பிறத்தற்கு ஏதுவாய முயற்சி இதழ்குவிவாம் எ - று. (23)

79. கஙவுஞ் சஞவும் டணவு முதலிடை
நுனிநா வண்ண முறமுறை வருமே.

எ - ன், இதுவுமது.

இ - ள்.) கவ்வும் ஙவ்வும் முதனா முதலண்ணத்தையும், சவ்வும் ஞவ்வும் இடைநா இடையண்ணத்தையும், டவ்வும் ணவ்வும் நுனிநா நுனியண்ணத்தையும் பொருந்த இம்முறையே பிறக்கும் எ - று. (24)

80. அண்பல் லடிநா முடியுறத் தநவரும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அண்பல்லடியை நாநுனி பொருந்தத் தவ்வும் நவ்வும் பிறக்கும் எ - று. (25)

---

1. அண்ணம் - மேல்வாய். 2. அண்பல் - மேல்வரிசைப்பல்.

81. மீகீ ழிதழுறப் பம்மப் பிறக்கும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மேலிதழும் கீழிதழும் பொருந்தப் பவ்வும் மவ்வும் பிறக்கும் எ - று. (26)

82. [1]அடிநா வடியண முறயத் தோன்றும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அடிநா அடியண்ணத்தைப் பொருந்த யகரம் பிறக்கும் எ - று. (27)

83. அண்ண நுனிநா வருட ரழவரும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அண்ணத்தை நுனிநாத் தடவ ரவ்வும் ழவ்வும் பிறக்கும் எ - று. (28)

84. அண்பன் முதலு மண்ணமு முறையின்
நாவிளிம்பு வீங்கி யொற்றவும் வருடவும்
லகார ளகாரமா யிரண்டும் பிறக்கும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அண்பன்முதலை நாவிளிம்பு வீங்கி ஒற்ற லகார மாகியும், அண்ணத்தை நாவிளிம்பு வீங்கி வருட ளகாரமாகியும் இவ்விரண்டெழுத்தும் பிறக்கும் எ - று. (29)

85. மேற்பல் லிதழுற மேவிடும் வவ்வே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) [2]மேற்பல் கீழிதழைப் பொருந்த வகாரம் பிறக்கும் எ - று. (30)

86. அண்ண நுனிநா நனியுறிற் றனவரும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அண்ணத்தை நுனிநா மிகப்பொருந்தில் றவ்வும் னவ்வும் பிறக்கும் எ - று. (31)

---

1. இச்சூத்திரம் தொல்காப்பியத்திற்கு வேறுபட்டுள்ளது; தொல் பிறப்பு, 17-ஆம் சூத்திரம் பார்க்க.
2. 'மேற்பல்லைக் கீழிதழ் பொருந்த' என்பர் இராமாநுச கவிராயர்.

## சார்பெழுத்தின் இடமும் முயற்சியும்

87. [1]ஆய்தக் கிடந்தலை யங்கா முயற்சி
சார்பெழுத் [2]தேனவுந் தம்முத லனைய.

எ - ன், சார்பெழுத்துக்கட்கு இடமுயற்சி வகையாற் பிறப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஆய்தம் பிறத்தற்கு இடம் தலை; முயற்சி அங்காத்தலாம்; ஒழிந்த சார்பெழுத்துக்களும் இடமுயற்சிகள் தம் முதலெழுத்துக்களோடு ஒப்பனவாய்ப் பிறக்கும் எ - று.

சார்பின் சார்பாகிய ஆய்தக்குறுக்கமும் அதன் முதல் போலப் பிறக்குமென்பார் எதிரதுதழீஇ எனவுமென்றார். (32)

## பிறப்பின் புறனடை

88. [3]எடுத்தல் படுத்த னலித லுழப்பிற்
றிரிபுந் தத்தமிற் சிறிதுள வாகும்.

எ - ன், மேற்கூறிய பிறப்பிற்கு ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பலவெழுத்திற்கும் பிறப்பு ஒன்றாகச் சொல்லப் பட்டனவேனும் எடுத்தல் படுத்தல் நலிதலென்னும் எழுத்திற்குரிய ஒலிமுயற்சியான் ஒன்றற்கொன்று பிறப்பு வேறுபாடுகளும் அவ் வவற்றின்கட் சிறிது உளவாம் எ - று. (33)

## உயிர்மெய்

89. புள்ளிவிட் டவ்வொடு முன்னுரு வாகியும்
*ஏனை யுயிரோ டுருவு திரிந்தும்
உயிரள வாயதன் வடிவொழித் திருவயிற்
பெயரொடு மொற்றுமுன் னாய்வரு முயிர்மெய்.

(பி - ம்.) * 'ஏனவுயிரோடு'

1. ஆய்தத்துக்கிடம் நெஞ்சென்பர் நச்சினார்க்கினியரும் (தொல். பிறப்பு. 19, உரை), இ. வி. நூலுடையாரும்; சூ. 13.

2. ஏன - மற்ற; "முதலா வேன தம்பெயர் முதலும்" தொல். மொழி. 33.

3. எடுத்தல் முதலிய மூன்றொலியோடு விலங்க லோசை யென்று ஒன்றுண்டென்றும், அதனையுடையது ஐகாரமென்றும், வல்லினம் தலை வளியுடையது, மெல்லினம் மூக்குவளியுடையது, இடையினம் மிடற்று வளியுடைய தென்றும் கூறுவர்; தொல். பிறப்பு. சூ. 6, ந. உரை.

எ - ன், மேற் பிறப்புணர்த்திய சார்பெழுத்திற்குச் சார்ந்து வருமாறும் ஒரு பிறப்பாதலிற் பிறப்பதிகாரத்துள் அடக்கி உணர்த்துவான்றொடங்கி அவற்றுள் உயிர்மெய் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மெய் புள்ளியை விட்டு அகரத்தோடு கூடியவழி விட்ட உருவே உருவாகியும் ஒழிந்த உயிர்களோடு கூடிய வழி உருவுவேறுபட்டும் தன்மாத்திரை தோன்ருது உயிர்மாத்திரையே மாத்திரையாய் அதன் வரிவடிவினது விகாரவடிவே வடிவாய் உயிர் வடிவை ஒழித்து மெய்யுயிரென்னும் பெயராகிய இரண்டிடத்தும் பிறந்த உயிர்மெய்யென்னும் பெயருடனே ஒற்றொலி முன்னும் உயிரொலி பின்னுமாகி வரும் உயிர்மெய்யெழுந்து எ - று.

ஒழித்தென்றும் ஒற்றுமுன்னுயென்றும் வந்த சினைவினைகள் இருவயிற் பெயரொடும் வருமென்னும் முதல்வினையொடு முடிந்தன.

[1]பூதி முதலியவற்றிற்றீட்டிய வரிவடிவும் ஒலிவடிவுபோலப் பயன்றரும் ஒற்றுமை குறித்து ஈண்டு அவ்விருதிறனும் விரவிக் கூறினர்.

இவ்விலக்கணத்தான் ஒவ்வொரு மெய்யிற் பன்னீருயிருங் கூடப் பன்னிருபதினெட் டிருநூற்றிருபத்தாருய் வருமாறு வழங்கும் வரிவடிவுள்ளும் ஒலிவடிவுள்ளும் காண்க. (34)

## முற்ருய்தம்

90. [2]குறியதன் முன்ன ராய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே.

எ - ன், முற்ருய்தம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) புள்ளிவடிவினதாய ஆய்தம் குற்றெழுத்தின் முன்னதாய் உயிரொடு கூடிய வல்லெழுத்தாறன்மேலதாய் வரும் எ - று.

உயிர்வருக்கத்து இறுதிக்கட்டந்த ஆய்தவடிவைப் பிற்காலத்து [3]வேறுபட வரைந்து வழங்குவராதலின், தொல்லை வடிவுதோன்ற ஆய்தப்புள்ளியென்ருர்.

---

1. பூதி - புழுதி; திருநீற்றின்பால் அமைக்கப்படும் யந்திரத்தில் எழுதப்படும் மந்திர உருவான அக்கரங்கள் பயன்றருதல் கண்கூடாதலின், பூதியென்பதற்குத் திருநீறென்று பொருள்கொள்ளலும் பொருந்தும்.

2. இது தொல்காப்பியச் சூத்திரம்; மொழி. சூ. 5.

3. சில ஏட்டுச் சுவடிகளில் ஆய்தம் வருமிடங்களில் 'கு' என்ற

(உ - ம்.) எஃகு, கஃசு, இருபஃது, அஃகடிய, அஃகான், வஃகான் எனவும், தனிக்குறிலென்று வரைந்தோதாமையின்

“ விலஃஃகி வீங்கிரு ளோட்டுமே மாதர்
இலஃஃகு முத்தி னினம் ”

எனவும் வரும். பிறவுமன்ன.

இச்சூத்திரம் மேற்கோளாதலால் தானெடுத்து மொழிதலென்னு முத்தி. வல்லினவகையான் இயல்பாகவந்த ஆய்தம் ஆறனோடு [1]புணர்ச்சிவிகாரத்தான் வருமாய்தமும் செய்யுள் விகாரத்தான் வருமாய்தமும் கூடி எட்டாய் வருமாறு காண்க. (35)

## உயிரளபெடை

91. இசைகெடின் மொழிமுத லிடைகடை நிலைநெடில்
அளபெழு மவற்றவற் றினக்குறில் குறியே.

எ - ன், உயிரளபெடை வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செய்யுட்கண் இசை குன்றின் மொழிமுதலினும் இடையினும் கடையினும் நின்ற நெட்டெழுத்தேழும் அவ்விசை நிறைக்கத் தம் மாத்திரையின் மிக்கொலிக்கும்; அவ்வாறு அள பெடுத்தமை அறிதற்கு அவற்றின்பின் அவற்றிற்கு இனமாகிய குற்றெழுத்துக்கள் வரிவடிவின்கண் அறிகுறியாய் வரும் எ - று.

(உ - ம்.)

[2] “ ஆஅ அளிய வலவன்றன் பார்ப்பினோ
டீஇ ரிரையுங்கொண் டீரளைப் பள்ளியுட்
டூஉந் திரையலைப்பத் துஞ்சா திறைவன்றோள்
மேஎ வலைப்பட்ட நம்போ னறுநுதால்
ஓஒ வுழக்குந் துயர் ”

எனவும்,

“ உறுஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறுஅஅய் *வாழியவென் னெஞ்சு ” (குறள், 1200)

எனவும்,

“ அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ளுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை ” (குறள், 1115)

---

எழுத்து எழுதியிருத்தலின் ‘வேறுபட வரைந்து வழங்குவர்’ என்பது அதனைச் சுட்டியது போலும்; உ - ம். அஃதை, அகுதை.

(பி - ம்.) * ‘வாழியநெஞ்சு’

1. நன்னூல், சூ. 235, பார்க்க.
2. யா. வி. மேற்; யா. கா. மேற்.

எனவும் வரும். 'செருஅஅய் வாழிய' என்புழி நான்கு மாத்திரை யாயும் ஏனைய மூன்றுமாத்திரையாயும் அலகுபெற்றுச் செய்யுளிசை நிறைத்து மூவிடத்தும் வந்தவாறு காண்க. பிறவுமன்ன.

இனி இசைகெடினென்று பொதுப்படக் கூறினமையான்,

> " கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
> எடுப்பதூஉ மெல்லாமழை " (குறள், 15)

எனக் குறில்நெடிலாய் அளபெழுந்து அலகுபெற்றும் பெறாதும் இன்னிசை நிறைப்ப வருவனவும்,

> " உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்
> வரனசைஇ யின்னு முளேன் " (குறள், 1263)

என அளபெழுந்து அலகுபெற்றும் பெறாதும் சொல்லிசை நிறைப்ப வருவனவும்,

> " வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
> வீழப் படாஅ ரெனின் " (குறள், 1194)

என்பதனுட் கெழீஇயிலரென அளபெழுந்து அலகு பெறாது சொல் லிசை நிறைப்ப வருவனவும் கொள்க.

எழுத்துப் பலவாயின ஒலிவேற்றுமையானன்றே? அங்ஙன மாக, நெடிலது விகாரமாய் ஓரொலியாய்ப் பிறக்கும் அளபெடையை இரண்டெழுத்துக் கூடி மூன்றுமாத்திரையாயிற்றெனக்கொள்ளின், இரண்டெழுத்தொலி அங்ஙனம் இன்மையானும் அளபெடையென் னும் பெயர் ஏலாமையானும் அவ்வாறு கொள்ளாது அறிகுறியே யென்று கோடற்குக் குறியேயென்றார். இக்கருத்தேபற்றி ஆசிரியர் தொல்காப்பியரும், [1] " குன்றிசை மொழிவயி னின்றிசை நிறைக்கு, நெட்டெழுத்து " என்றும் 'அவற்றின்பின் அறிகுறி யாய்வரும் ஒத்தகுற்றெழுத்து' என்றும் *கூறினாரன்றே? குறியே யென்றது, இவ்விரண்டு மேற்கோளில் ஒன்று துணிதலான் ஒரு தலை துணிதலென்னு முத்தியும் அம்மதமும்பட வந்ததென்க.

இதனுள், இடவகையான் உயிரளபெடை எழுமூன்றாய் வரு மாறு காண்க. (36)

(பி - ம்.) * 'கூறினர் அன்றேற்குறி'

1. " குன்றிசை மொழிவயி னின்றிசை நிறைக்கும், நெட்டெழுத் திம்ப ரொத்தகுற் றெழுத்தே " தொல். மொழி. சூ. 8.

## ஒற்றளபெடை

92. ஙஞண நமன வயலள வாய்தம்
அளபாங் குறிலிணை குறிற்கீ ழிடைகடை
மிகலே யவற்றின் குறியாம் வேறே.

எ - ன், ஒற்றளபெடை வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செய்யுட்கண் இசைகுன்றின், குறிலிணைக் கீழும் குறிற்கீழுமாய் மொழியிடையினும் ஈற்றினும் நின்ற இப்பத்தொற்றும் ஆய்தமும் அவ்வோசையை நிறைக்கத் தம் மாத்திரையின் மிக்கொலிக்கும்; இவ்வாறு அளபெடுத்தன அறிதற்கு அவற்றின்பின் அவ்வெழுத்துக்களே வரிவடிவின்கண் வேறு அறி குறியாய் வரும் எ - று.

"ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" (சூ. 358) என்பதனால் மேல் இசைகெடினென்றதனை இவ்வளபெடைக்கும் வருவித்துக்கொள்க. மாத்திரை நிறைத்தற்கன்றி அறிகுறி மாத்திரையாய் வருமென்று கோடற்கு வேறே யென்றார்.

(உ - ம்.)

"இலங்ங்கு வெண்பிறைசூ டீசனடி யார்க்குக்
கலங்ங்கு *நெஞ்சமிலைக் காண்"

எனவும்,

"எங்ங் கிறைவனுள னென்பாய் மனனேயான்
எங்ங் கெனத்திரிவா ரின்"

எனவும்,

"கலங்ங்கொண்ட கவின்மார்பர்"

"மடங்ங் கலந்த மனனே களத்து
விடங்ங் கலந்தானை வேண்டு"

எனவும்,

"அங்ங் கனிந்த வருளிடத்தார்க் கன்புசெய்து
நங்ங் களங்கறுப்பா நாம்"

எனவும் ஙகரம் குறிலிணைக்கீழும் குறிற்கீழும் மொழிக்கிடையினும் கடையினும் முறையே அளபெழுந்தது.

"கண்ண் கருவிளை கார்முல்லை கூரெயிறு
பொன்ன் பொறிசுணங்கு போழ்வா யிலவம்பூ
மின்ன் னுழைமருங்கு மேதகு சாயலாள்
என்ன் †பிறமகளா மாறு"

---

(பி - ம்.) *'நெஞ்சமில்லைகாண்' † 'குறமகள்'

என ணகாரமும் னகாரமும் குறிற்கீழ் மொழியீற்றின் அளபெழுந்தன.

“ எஃஃ கிலங்கிய கையரா யின்னுயிர்
வெஃஃகு வார்க்கில்லை வீடு ”

என ஆய்தம் குறிற்கீழ் மொழிக்கிடையின் அளபெழுந்தது; பிறவுமன்ன.

ஆய்தம் ஒற்றோடும் ஒருபுடையொத்துவருதலின் ஈண்டுத் தந்துரைத்தார். நகரம் விதியீறாய்வருதலின் அதனை விலக்காது, ஆய்தம் ஒருமொழிக்கண்ணும் தொடர்மொழிக் கண்ணும் விதித்த முதலெழுத்துக்கள் இருமருங்கு நின்றெழுப்ப இருசிறகெழுப்ப எழூமுடலதுபோல் இடையெழுந்து ஒலிப்பதன்றி ஒருவாற்றானும் ஈறாய்வரும் தன்மையதன்றாகலின், அஃகடிய முதலியவற்றின்கண் திரிந்த ஆய்தம் அஃகான் முதலியவற்றின் கட்டோன்றிய ஆய்தம் போலத் தொடர்மொழிக்கண் இடை நிலையாயதன்றி விதியீறன் றென்று அதனுண்மை துணிந்து அதனை இறுதிக்கண் விலக்கி, ஒற்றளபெடை நாற்பத்திரண்டென்று மேலுரைத்தவாறு இங்ஙனம் வருதல் காண்க. (37)

## குற்றியலிகரம்

93. யகரம் வரக்குற ளுத்திரி யிகரமும்
அசைச்சொன் மியாவி னிகரமுங் குறிய.

எ - ன், குற்றியலிகரம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) [1] யகரம் வருமொழிக்கு முதலாகிவர நிலைமொழிக்கு ஈறாகி நின்ற குற்றியலுகரந்திரிந்த இகரமும் மியாவென்னும் அசைச்சொல்லின்கண் இகரமும் குற்றியலிகரங்களாம் எ - று.

எனவே இங்ஙனம் வருமாயின் இவ்வெழுத்தின்றொடர்பாற் குறுகுமென்பது பெற்றாம்.

(உ - ம்.) நாகியாது எஃகியாது வரகியாது கொக்கியாது குரங்கியாது அல்கியாது எனவும், கேண்மியா சென்மியா எனவும் வரும். பிறவு மன்ன.

பொதுப்படக் கூறிய குற்றியலுகரம் முப்பத்தாறாலும் அசைச்சொல் மியாவினாலும் குற்றியலிகரம் முப்பத்தேழாய் வருமாறு காண்க. (38)

---

1. யகரம் வரக் குற்றியலுகரந்திரிதல் 164-ஆம் சூத்திரத்தாற் பெறப்படும்.

## குற்றியலுகரம்

94. நெடிலொ டாய்த முயிர்வலி மெலியிடை
தொடர்மொழி யிறுதி வன்மையூ ருகரம்
அஃகும் பிறமேற் றொடரவும் பெறுமே.

எ - ன், குற்றியலுகரம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தனிநெடிலுடனே ஆய்தமும் உயிரும் வல்லொற்றும் மெல்லொற்றும் இடையொற்றுமாகிய எல்லா வெழுத்தினுள்ளும் யாதானுமொன்று தொடரப்பட்ட மொழியிறுதிக்கண் வல்லொற்றுக்களை ஊர்ந்துவந்த உகரம் தன் மாத்திரையிற் குறுகும்; அது தன் மாத்திரையிற் குறுகுதற்கும் மொழி நிரம்புதற்குங் காரணம் இவ்வோரெழுத்துத் தொடர் தன் மாத்திரையின் அமையாது பிறவெழுத்துக்களுள் ஒன்றும் பலவும் மேலே தொடரவும் பெறும் எ - று.

நெடிலை ஒடுக்கொடுத்துப் பிரித்தார், தனிநெடிலாதலின். உயிரென்றது குற்றுயிர் நெட்டுயிர் இரண்டினையும். தொடரென்னும் வினைத்தொகை வன்மையூருகரமென்னும் செயப்படு பொருளொடு முடிந்தது. பிறவென்றது [1]பகாப்பதமேழும் பகுபத மொன்பதுமென்று வரையறுத்தவற்றின் இங்ஙனம் ஈற்றயலும் ஈறுமாகக் கூறிய இரண்டுமொழித்து ஒழிந்த ஐந்தும் ஏழுமாய எழுத்துக்களை. தொடரவுமென்றவும்மை இறந்ததுதழீஇ நின்றது. பெறுமேயென்றது, தனிநெடிலொழிந்த ஐந்தொடரும் வன்மையூருகரம் குறுகுதற்கும் மொழி நிரம்புதற்கும் மேற்றொடர்தலும் இன்றியமையாமையின்.

(உ - ம்.) நாகு, எஃகு, வரகு, பலாசு, கொக்கு, குரங்கு, அல்கு என வரும்; பிறவு மன்ன.

ஆசிரியர் தொல்காப்பியர்,

"நெட்டெழுத் திம்பருந் தொடர்மொழி யீற்றும்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே" (மொழி. சூ. 3.)

எனத் தொகுத்துக் கூறியவாறே கூறுது எல்லா எழுத்தையும் கூறுவார், அவற்றையே ஆய்தமுதல் ஐந்தாக வகுத்துத் தனிநெடிலோடு ஆறாகக் கூறுதல் குற்றுகரத்தை அறுவகையாக வழங்குதற்கு இலக்கணந்தோன்றவெனக் கொள்க. இது [2]முன்

1. நன். சூ. 130.

2. பின்னர்ப் புணரியலில் குற்றுகரப்புணர்ச்சியில் இவ்வறுவகை வேறுபாடுகளும் பயன்படுதலின் இங்கே இச்சூத்திரம் 'முன்மொழிந்து கோடல்' ஆயிற்று.

மொழிந்து கோடலென்னும் உத்தி. அவ்வாசிரியர் [1]நுந்தையென்னு முறைப்பெயர்க்கண் உகரத்தைக் குறுக்கமென்றார். அஃது இவர்க்கு உடன்பாடன்மையிற் கூறாதொழிந்தார். இது மறுத்தலென்னும் மதம்; ஏனைய உடன்படல்.

மயக்கவிதியின்மையின், இடையினந்தொடராத டகார றகாரங் களை ஊர்ந்த உகரமிரண்டினையும் விலக்காது [2]ஆனைமுகக் கடவுளை மும்மதத்த னென்றாற்போல இலக்கணை யென்னும் விதியாற் குற்றியலுகரம் முப்பத்தாறென்று மேற்கூறியவாறே [3]வன்மையூ ருகரம் ஆறேடு நெடில் முதலிய ஆறையுமுறழ முப்பத்தாறாய் வருமாறு காண்க. (39)

## ஐகாரக்குறுக்கமும் ஔகாரக்குறுக்கமும்

95. தற்சுட் *டளவொழி யைம்மூ வழியும்
நையு மௌவு முதலற் றாகும்.

எ - ன், ஐகார ஔகாரக்குறுக்கங்கள் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

(பி - ம்.) * 'அளபொழி'

1. தொல். மொழி. சூ. 34. நுந்தை - உன் தந்தை.

2. ஆனைமுகக் கடவுளை மும்மதத்த னென்றது பொருந்துமென் றல்: "யானை யுறுப்புக் கழுத்திற்கு மேலன்றியின்மையான் மும்மதத்த னுதல் யாங்ஙன மென்பார்க்கு மும்மதம் யானைக்கு அடையென்பாரும், ஒரு கோட்டன் முதலியனபோல மும்மதத்தனென விநாயகப்பிரானுக்கே அடையாய் நிற்றலின் யானைக்கு அடையாமாறு யாங்ஙன மென மறுத்து இச்சா ஞானக் கிரியைகள் ஈண்டு மும்மத மென உருவகம் செய்யப் பட்டன வென்றுரைப்பாரும், ஒரு கோடு முதலிய ஏனை யடையெல்லாம் உறுப்பினை யுணர்த்திநிற்றலின், இதுமாத்திரம் இனம்பற்றாது உருவக மாதல் செல்லாமையானும் உருவகஞ் செய்தற்குரியதோர் இயைபு விசேடம் இன்மையானும் கந்தன் முதலியோரையும் அக்கருத்துப்பற்றி மும்மதத்த னெனல் யாண்டுமின்மையானும் அதுவும் உரையன்றென மறுத்துப் பஞ்சாக்கரத்தின் பேதமாகிய எட்டெழுத்து ஆறெழுத்து நாலெழுத்து முதலியனவும் பஞ்சாக்கரமென வழங்கப்படுமாறு போல மும்மதத்தின் வகையாகிய ஒருமதமும் இருமதங்களும் மும்மதமென வழங்கப்படு மாகலின், அதுபற்றி ஆசங்கை என்னையென் றொழிவாரு முளர்" சிவ. சித். காப்பு, சிவஞான. உரை.

3. குற்றியலுகரம் முப்பத்தாறுக்கு வகை வேறு கூறுவர் சிவஞான முனிவர்.

(இ - ள்.) ஐகாரம் தன்னைக் கருதித் தன்பெயர் கூறுமளவிற் குறுகாது, ஒழிந்த மொழிமுதல் கடை இடையென்னு மூன்றிடத்தும் முன்னும் பின்னும் இருமருங்குமாய எழுத்தின் தொடர்பால் தன் மாத்திரையிற் குறுகும். ஔகாரமும் தன் பெயர் கூறுமள விற் குறுகாது, ஒழிந்த மொழி முதற்கட் பின்வருமெழுத்தின் தொடர்பால் தன் மாத்திரையிற் குறுகும் எ - று.

சுட்டளவென்பது வினைத்தொகை. அளவென்றார், எழுத்தின் சாரியை தொடரினும் குறுகுமென்பது கருதி. எனவே ஓரெழுத் தொரு மொழியாய் நிலைமொழி வருமொழியாய்த் தொடர்ந்து தனித்து ஒரோவிடத்துவரின், தன்மாத்திரை குறுகாதென்ப தூஉம் பெற்றாம்.

(உ - ம்.) ஐப்பசி மைப்புறம் எனவும், வளையன் எனவும், குவளை எனவும், மௌவல் எனவும் வரும்.

இனி அளபெனப் பாடங்கொண்டு அளபென்பதனை அள பெடையாக்கித் தன்னைச்சொல்லுதற்கண்ணும் அளபெடுத்தற் கண்ணும் குறுகாதெனப் [1] பொருள் கூறுவாருமுளர். தன்னியல் பாய இரண்டுமாத்திரையினின்றும் குறுகுதல் இல்லனவற்றை யொழிப்பார், விகாரத்தால் மூன்றுமாத்திரையும் நான்குமாத்தி ரையுமாய் மிக்கொலிக்கும் அளபெடையை ஒழிக்கவேண்டா மையின் அது பொருந்தாதென்க.

இடவகையான் ஐகாரக்குறுக்கங்கள் மூன்றும், ஔகாரக் குறுக்கம் ஒன்றும் வருமாறு காண்க. (40)

### மகரக்குறுக்கம்

96. ணனமுன்னும் வஃகான் மிசையுமக் குறுகும்.

எ - ன், மகரக்குறுக்கம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ணகர னகரங்களில் ஒன்று நின்றுதொடர்ந்திட அதன்முன்வரினும், வகரம் வந்துதொடர்ந்திட அதன் மேல்நிற் பினும் மகரம் தன் அரைமாத்திரையிற் குறுகும் எ - று.

(உ - ம்.)

"பசுப்போல்வார் முற்பட்டாற் பாற்பட்ட சான்றோர்
முசுப்போல * முள்காந் திருப்பார் – பசுத்தான்

---

(பி - ம்.) *' முள்காத்திருப்பார் '

1. பொருள்கூறுபவர் மயிலை நாதர். இதற்கு ஆதாரம்,

" அளபெடை தனியிரண் டல்வழி ஐஔ
உளதா மொன்றரை தனிமைய மாகும் "

என்னும் அவிநயச் சூத்திர மென்று தோற்றுகின்றது.

வெருளினு மெல்லாம் வெருளுமஃ தன்றி
மருளினு மெல்லா மருண்ம்'' எனவும்,
"திசையறி மீகானும் போன்ம்" (பரி. 10 : 55) எனவும்,
"தரும் வளவன்" எனவும் வரும்.

இனி [1] ணகர னகரங்களின் முன்வந்த மகரம் செய்யுமென்னும் வாய்பாட்டு முற்றீற்றதென்பதூஉம், [2] அவ்வீற்றயலுகரங் கெட அவ்வுகரமூர்ந்த ளகர லகரங்கள் ஈற்றுமகரத்தொடு மயங்காமையின் [3] மயங்குதற்குரிய ணகர னகரமாய்த் திரிந்தன ஈண்டு நின்ற ணகர னகரமென்பதூஉம், [4] இவற்றுள் ஒன்றுடன் ஈரொற்றாய் மயங்கின் மகரங் குறுகுமென்பதூஉம், இவற்றின் முன் குறுகுதல் செய்யுட்கண்ணதென்பதூஉம், காணும் கூறு மென இயல்பாகநின்ற ணகர னகரங்கண்முன் இவ்வாறு வந்து மகரம்குறுகாதென்பதூஉம், பிறவும் மேல்வரும் சூத்திரங்களெல்லாவற்றையும்வேண்டிப் பருந்தின்வீழ்வாய் நின்ற இச்சூத்திரத்து உய்த்துணர்ந்து கொள்க. இஃது உய்த்துணரவைப் பென்னு முத்தி. (41)

## ஆய்தக்குறுக்கம்

97. லளவீற் றியைபினு மாய்த மஃகும்.

எ - ன், ஆய்தக்குறுக்கம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) லகாரளகாரவீற்றுப் புணர்ச்சியினால் வரும், "குறில்வழி லளத்தவ் வணையி னாய்த, மாகவும் பெறூஉம்" (சூ. 228) என்ற ஆய்தம் இருமருங்குமாய எழுத்தின் தொடர்பால் தன் அரைமாத்திரையிற் குறுகும் எ - று.

(உ - ம்.) கஃறீது, முஃடீது என வரும்.

இதுமுடிவிடங்கூறலென்னு முத்தி. இவ்வாய்தம் குறுகா தெனக் [5]காண்டல்விரோதங் கூறுவாருமுளர். (42)

# 5. எழுத்தின் உருவம்

98. தொல்லை வடிவின வெல்லா வெழுத்துமாண்
டெய்து [6]மெகர மொகரமெய் புள்ளி.

---

1. நன். சூ. 341. 2. நன். சூ. 114. 3. நன். சூ. 227.
4. நன். சூ. 120.

5. காண்டல் விரோதம் - பிரத்தியட்சவிரோதம். கூறுபவர் இலக்கணவிளக்கவுரைகாரர் ; சூ. 5, உரை.

6. இச்சூத்திரத்தை 'ஏகார மோகார மெய்புள்ளி' எனத் திருத்தினர் இராமநுசகவிராயர்.

எ - ன், நிறுத்தமுறையானே உருவமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எல்லாவெழுத்தும் பலவேறுவகைப்பட்ட வரைந்து வழங்கும் பழைய வடிவினை யுடையவாம்; அவ்வடிவினவாய் வழங்குமிடத்துத் தனித்தும் உடம்பூர்ந்தும் வரும் [1] எகரமும் ஒகரமும் தனிமெய்களும் இயல்பாய புள்ளியைப் பிற்காலத்து ஒழித்துவரைந்து ஏகார ஓகாரங்களோடும் உயிர்மெய்களோடும் ஐயப்பட வழங்கும் வழக்கினை யுடையவன்றித் துணியப்படும் தொல்லைவடிவினது உறுப்பாய புள்ளியைப் பெறும் எ - று.

(வ - று.) எ் எ; ஒ் ஒ; கெ் கெ; கொ் கொ; க் க என வரும். (43)

## 6. எழுத்தின் மாத்திரை

99. மூன்றுயி ரளபிரண் டாநெடி லொன்றே
குறிலோ டையௌக் குறுக்க மொற்றள
பரையொற் றிஉக் குறுக்க மாய்தம்
கால்குறண் மஃகா னய்த மாத்திரை.

எ - ன், நிறுத்தமுறையானே மாத்திரையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உயிரளபெடைக்கு மாத்திரை மூன்றும்; நெடிலுக்கு மாத்திரை இரண்டாம்; குறிலுக்கும் ஐகாரக்குறுக்கத்திற்கும் ஔகாரக்குறுக்கத்திற்கும் ஒற்றளபெடைக்கும் தனித்தனி மாத்திரை ஒன்றும்; ஒற்றிற்கும் குற்றியலிகரத்திற்கும் குற்றியலுகரத்திற்கும் ஆய்தத்திற்கும் தனித்தனி மாத்திரை அரையாம்; மகரக்குறுக்கத்திற்கும் ஆய்தக்குறுக்கத்திற்கும் தனித்தனி மாத்திரை காலாம் எ - று.

---

1. எகரமும் ஒகரமும் புள்ளிபெறுதலைப் பின்வரும் மாத்திரைச் சுருக்க அணியமைந்த செய்யுட்களாலுணரலாம்: "நேரிழையார் கூந்தலி னோர் புள்ளிபெற நீண்மரமாம், நீர்நிலையோர் புள்ளி பெறநெருப்பாம்" (தண்டி. மேற்.), "மயிர்நிறுவி மற்றதற்கோர் புள்ளி கொடுப்பின், செயிர்தீர் மரமாகுஞ் சென்று" (நன். சூ. 269, மேற்.); "நெய்கொண்டென் னெட் கொண்டெ னெற்கொண்டென் கொட்கொண்டென், செய்கொண்டென் செம்பொன்கொண்டென்" என்பதும், 'எல்லாவெழுத்தும் புள்ளியுடையனவே வந்தமையால் இதுவும் பிந்துமதி' என்னும் உரையும் இதனை வலியுறுத்தும்.

உயிர்மெய்க்கு அளவுகூறுதொழிந்தார், மேல், [1] உயிரளவா யென்றுரைத்தலின்; இஃது உரைத்தாமென்னு முத்தி. உயிரள பெடை நான்குமாத்திரையவாதல் [2] ஆரிடத்துள்ளும் அவை போல்பவற்றுள்ளும் அருகிவந்து செய்யுள் வழுவமைதியாய் முடிதலின், அதனையொழித்து எல்லார்க்கும் ஒப்பமுடிந்து பயின்றுவருவது மூன்றுமாத்திரையேயாகலான், மூன்றுயிரள பென்றார். (44)

100. இயல்பெழு மாந்த ரிமைநொடி மாத்திரை.

எ - ன், எழுத்தொலியெழுச்சி பலவற்றையும் அளந்து கோடற்குக்கூறிய ஒருமாத்திரையென்னும் [3] காலசங்கையினை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மாந்தருடைய இயல்பாகவெழும் [4] இமைப்பொழுதும் நொடிப்பொழுதும் ஒருமாத்திரை யென்னும் வரையறைப் பொழுதாம் எ – று.

இமையென்றது இமைத்தலை; நொடியென்றது ஒலித்தலை. இவையிரண்டும் ஆகுபெயராய்க் காலத்தையுணர்த்திநின்றன. இயல்பெழுமென்னும் பெயரெச்சம் இமை நொடியென்னும் பெயர்களோடு முடிந்தது. எழுத்தொலி முதலியவற்றை இயல்பு கெடுத்து ஒருவன் வேண்டியவாறே யெழுப்பினும் அவ்வா றெழாநிற்கும், இமையும் நொடியும் இயல்புகெடுத்தெழுப்ப வேண்டினும் அவ்வாறே எழாது இயல்பாகவே எழாநிற்கு மாதலின் இயல்பெழுமெனவும் மேலைச்சூத்திரத்து எழுத்தொலிகளை வேண்டியவாறே எழுப்பாது இவ்வளவான் அளந்தெழுப்புக வெனவும் கூறினார்.

பின்னது நிறுத்தலென்னும் உத்தியான் இவ்வளவுகருவி பிற்கூறப்பட்டது. (45)

---

1. நன். சூ. 89, பார்க்க.
2. "ஆரிடத் துள்ளு மவைபோல் பவற்றுளும்
நேரு மென்ப நெறியுணர்ந் தோரே" தண்டி. சூ. 113.
3. கால சங்கை - காலஅளவு.
4. 'கட்புலனாய இமைக்காலமும் செவிப்புலனாய நொடிக்காலமும் கருதிக்கோடற்கு இரண்டும் ஓதினா ரென்க' என்பர் மயிலைநாதர். இந்த அளவினைச் சார்த்தியளத்தலென்பதன்பாற்படுத்துவர் நச்சினார்க்கினியர். மாத்திரையின் கூறுகளை அறிதற்கு, "உன்னல் காலே யூறுத்த லரையே, முறுக்கல் முக்கால் விடுத்த லொன்றே" என்னும் சூத்திரம் கருவியாகும்.

101. ஆவியு மொற்று மளவிறந் திசைத்தலும்
மேவு மிசைவிளி பண்டமாற் றாதியின்.

எ - ன், தவளைப்பாய்த்தாய் ஒன்றிடையிட்டு நின்ற மேலதற்கு ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முதல் சார்பனைத்துமாய ஆவியும் ஒற்றும் மேற் கூறிய அளவிறந்து மிக்கொலித்தலையும் பொருந்தும், இசைவிளி [1]பண்டமாற்று முதலியவற்றின்கண் எ - று.

ஆதியென்றமையான், நாவல் குறிப்பிசை முறையீடு புலம் பலுங் கொள்க. இசையின் அளவிறந்திசைக்குங்கால் ஆவி பன்னிரண்டுமாத்திரை ஈருகவும் ஒற்றுப் பதினொருமாத்திரை யீருகவும் இசைக்கு மென்றார் இசைநூலார்; இது பிறநூன் முடிந்தது தானுடன் படுதலென்னும் உத்தி. ஏனையவற்றின் அள விறந்திசைக்குங்கால் உலகநடை பிறழாதிசைப்பதே வரையறை யென்க.

[2]நாவலென்பது நெற்போர் *தெழிக்கும் பகட்டினங்களைத் துரப்பதொரு சொல்;

“ காவ லுழவர் கடுங்களத்துப் போரேறி
நாவலோஒஒ வென்றிசைக்கு நாளோதை—மாவலவன்
கொல்யானை மேலிருந்து கூற்றிசைத்தாற் போலுமே
நல்யானைக் கோக்கிள்ளி நாடு ” (முத்தொள்ளாயிரம்)

என்பதனுலறிக.

†“ கஃஃஃஃ றென்னுங் கல்லத ரத்தம் ”,
“ சுஃஃஃஃ றென்னுந் தண்டோட்டுப் பெண்ணை ”

என்பன குறிப்பிசை; ஏனைய பொருள்தோன்றிக்கிடத்தலின், அளவிறந்திசைத்தல் வந்தவழிக் காண்க. (46)

## 7. முதனிலை

102. பன்னீ ருயிருங் கசதந பமவய
ஞஙவீ ரைந்துயிர் மெய்யு மொழிமுதல்.

எ - ன், நிறுத்தமுறையானே மொழிக்குமுதலாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பன்னிரண்டுயிரும் உயிரூர்ந்த இப்பத்து மெய்யும் மொழிக்கு முதலாம் எ - று.

---

(பி - ம்.) *‘ தெளிக்கும் ’ † ‘ கல்லென்னுங் ’

1. பண்டமாற்று - பண்டங்களை விற்றல்.

2. கடா விடும்போது எருதுகளை ஓட்டும் சொல்.

(உ - ம்.) அடை, ஆடை, இடை, ஈடு, உடை, ஊடல், எடு, ஏடு, ஐயம், [1]ஒதி, ஓதி, ஔவியம் எனவும், களி, [2]சவடி, தளிர், நலம், படை, மலை, *வளம், [3]யவனர், ஞமலி, அங்ஙனம் எனவும் வரும் ; பிறவு மன்ன.

உயிர்போல் தனித்து முதலாந்தன்மைய அல்லவாதலின் உயிர் மெய்யென்றார். இஃது இன்னதல்ல திதுவெனமொழித லென்னு முத்தி. (47)

103. உஊ ஒஓ அலவொடு வம்முதல்.

எ - ன், பொதுவிதியுட் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இந்நான்குமல்லாத எட்டுயிரோடு வகரம் மொழிக்கு முதலாம் எ - று.

(உ - ம்.) வளி, வாளி, விளி, †வீழி, வெளி, வேளை, வைகல், வௌவு என வரும். (48)

104. அஆ உஊ ஒஔ யம்முதல்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ் வாறுயிரோடும் யகரம் மொழிக்கு முதலாம் எ - று.

(உ - ம்.) யவனர், யானை, யுகம், [4]யூகி, யோகம், யௌவனம் என வரும்.

மேலை ஒடுவை வருவித்துக் கொள்க. (49)

105. அஆ எஒவ்வொ டாகு ஞம்முதல்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இந்நாலுயிரோடும் ஞகரம் மொழிக்கு முதலாகும் எ - று.

(உ - ம்.) [5]ஞமலி, ஞாலம், [6]ஞெகிழி, [7]ஞொள்கிற்று என வரும். (50)

---

(பி - ம்.) *'வனம்' †'வீளி'

1. ஒதி - ஒரு மரம். 2. சவடி - ஒரு காதணி.

3. யவனர் : இச்சாதியர் பலவகைச் சிற்பத் தொழில்களிலும் அரசர் முதலியோரிடத்துச் செய்யும் பலவகைப் பணிகளிலும் பெயர் பெற்று முன்பு விளங்கினார்களென்று பெருங்கதை முதலியவற்றால் தெரிகின்றது.

4. யூகி - யூகத்தை உடையவன் ; இப்பெயருடையானொருவன் பெருங்கதையில் கூறப்படுகிறான்.

5. ஞமலி - நாய். 6. ஞெகிழி - கொள்ளி. 7. ஞொள்கிற்று - இளைத்தது.

106. சுட்டியா எகர வினவழி அவ்வை
ஒட்டி ஙவ்வு முதலா கும்மே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மூன்றுசுட்டும் யாவினவும் எகரவினவுமாய இடைச்சொற்களின்பின் அகரத்தையொட்டி ஙவ்வும் மொழிக்கு முதலாம் எ - று.

(உ - ம்.) அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், யாங்ஙனம், எங்ஙனம் என வரும்.

இவற்றை அங்கு, எங்கு என்றாற்போல ஒருமொழிகளென்றால் என்னையெனின், அஞ்ஞான்று என்பன்போலப் பிளவுபட்டு இடையே மெல்லொற்று மிக்குவருதலின் தொடர்மொழிகளே யாமென்க; ஙனமென்பது இடத்தினையும் தன்மையினையுமுணர்த்தும் பலபொருளொருசொல்லாய் வரினும் தனித்து வருந்தன்மைய தன்றி முடவன் கோலூன்றிவந்தாற்போலச் சுட்டு வினவாகிய இடைச்சொற்களை முன்னிட்டு வருதலான் வழியென்றும், ஏனைய மெய்கள்போல முதலாகாமையின் அவ்வோடென்றது ஒட்டியென்றும், ஒருவாற்றான் முதலாதலின் இழிவு சிறப்பாக ஙவ்வுமென்றும் கூறினர். இங்ஙனங் கூறலான் ஙகரம் மொழிக்கு முதலாகாதென்பார்க்கு உடன்படலும் மறுத்தலுமாய்ப் பிறர்தம் மத மேற்கொண்டு களைவேயென்னும் மதம்படக் கூறினரென்றுணர்க.

இனி முதலாமென்ற பத்துயிர்மெய்யுள் வகரமுதலிய நான்கினையும் விதந்துகூறவே ஒழிந்த ஆறு மெய்யும் பன்னிரண்டுயிரோடும் முதலா மென்பது [1]அருத்தாபத்தியாற் பெற்றாம். (51)

## 8. ஈற்றுநிலை

107. ஆவி ஞணநம னயரல வழளமெய்
சாயு முகர நாலாறு மீறே.

எ - ன், நிறுத்தமுறையானே மொழிக்கீறாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தனித்தும் ஒற்றோடும் வரும் ஆவிமுதலாக இங்ஙனம் கூறிய இருபத்துநான்கெழுத்தும் மொழிக்கு ஈறாம் எ - று.

---

1. அருத்தாபத்தி: பிரமாணங்களு ளொன்று; அஃதாவது: ‘பகலுண்ணான் பருத்திருப்பான்’ என்றால், உண்ணாதவன் பருத்திருத்தல் கூடாமையின், ‘இரவிலுண்பான்’ என்று கொள்ளுதல்.

(உ - ம்.) [1]ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ எனவும்; சுட்டும் விறுவும் உவமவுருபடியுமாய ஓரெழுத்தொருமொழியாம் இடைச் சொல்லாகிய அ, இ, உ, எ, ஒ எனவும்; விள, பலா, கரி, [2]குரீ, கடு, மரூ, சே, தை, கோ எனவும்; உரிஞ், மண், பொருந், மரம், பொன், வேய், வேர், வேல், தெவ், வீழ், வாள், அஃகு எனவும் வரும். காட்டாதொழிந்தன வருஞ் சூத்திரத்தாற் காண்க. குற்றுகரமும் உயிராய் அடங்குமேனும் புணர்ச்சி வேறுபாடு தோன்ற வேறெடுத்தோதினரென்க. (52)

108. குற்றுயி ரளபி னீறும் எகரம்
மெய்யொ டேலா தொந்நவ் வொடாம்ஔ
ககர வகரமொ டாகு மென்ப.

எ - ன், குற்றுயிர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியும் எகரத்திற்கு எய்தியது ஒருமருங்குவிலக்கலும் ஒகரத்திற்கும் ஔகாரத்திற்கும் எய்தியவற்றுட் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) குற்றுயிர் அளபெடையின்கண் [3]வரிவடிவின் அறிகுறியாய்த் தனித்து ஈறும்; எகரம் மெய்யோ டீறுகாது; ஒகரம் நகரமொன்றுடன் ஈறும்; ஔகாரம் ககர வகரங்களிரண்டுடனும் ஈறு மென்று சொல்லுவர் புலவர் எ - று.

(உ - ம்.) " ஆஅ வளிய வலவன் "
எனவும், [4]நொ எனவும், கௌ வௌ எனவும் வரும்.

நெடில் அளபெடுப்புழி வரிவடிவில் அறிகுறியாய்வருங் குற்றுயிர் நெடிலொடு தொடர்ந்து உடம்படுமெய்யுடன் ஈறுந் தன்மையதன்றித் தனித்து நிற்றலிற் குற்றுயிரளபி னீறு மென்றார்.

---

1. ஆ - பசு; ஈ - ஒருபறவை, கொடு; ஊ - மாமிசம்; ஏ - அம்பு; இசை - உயர்வு; ஐ - அழகு, கோழை, தலைவன்; ஓ - மதகுநீர் தாங்கும் பலகை, நீங்கு; ஔ - அவ்வென்பதன் போலி.

2. குரீ - குருவி; இப்பெயர் குரீஇயெனவும் பழைய நூல்களில் வழங்கும்; கடு - ஒரு மரம்; இதனோடு காய் என்பதனைக் கூட்டிக் கடுக்காய் மரம் என்று வழங்குவதும் உண்டு; " ஆய்தருங்கடுக்காய் வனத்திடை " (மாயூரபுராணம், காமன் பூசை.); சே - ஒரு மரம்; " சேவென் மரப்பெய ரொடுமர வியற்றே " தொல். உயிர்மயங்கு. சூ. 76.

3. உயிரளபெடை வருமாறுணர்த்தும் சூத்திரத்தில் (91) உள்ள " அவற்றவற் றினக்குறில் குறியே " என்னும் பகுதியும், ' அவற்றின் இனமாகிய குற்றெழுத்துக்கள் வரிவடிவின்கண் அறிகுறியாய் வரும் ' என்றெழுதிய உரையும் இங்கே அறிதற்குரியன.

4. நொ - வருத்தப்படு; கௌ - கவ்வு; வௌ - வவ்வு.

தானே ஈருதலன்றிக் குற்றுயிர் அளபினுமீருமென உம்மை கொடா தொழிந்தார், உயிர்கழிந்த வுடம்பை, "படுமகன் கிடக்கை காணூஉ" (புறநா. 271) என்றாற் போல. அறிகுறி மாத்திரையாய் நின்றதனை இங்ஙனம் குற்றுயிரென்றதன்றி அஃது ஓரெழுத் தன்றாகலின், எகர ஒகர ஒளகாரங்களை விதந்தோதவே ஏனை யுயிர்கள் தமக்கேற்ற மெய்களோடு ஈருமென்பது பெற்றாம்.

முதலும் சார்புமாய் வகுத்து விரித்துக்கொண்டே எல்லா வெழுத்தும் உயிரும் மெய்யும் ஆய்தமுமாயடங்குதலின், முதலும் ஈறுமாகாத ஆய்தத்தை யொழித்து ஒழிந்த உயிரும் மெய்யுமாய இரண்டினையும் உயிர்முதல், மெய்ம்முதல், உயிரீறு, மெய்யீறென வகுத்துக் கொண்டார். மேல்வரும் புணர்ச்சிவிதி அடங்குதற் பொருட்டெனக் கொள்க. (53)

109. நின்ற நெறியே யுயிர்மெய் முதலீறே.

எ - ன், எழுத்தினது முதலும் ஈறுமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உயிர்மெய்யினது முதல் யாது, அதன் ஈறு யாதெனின், ஒற்றுமுன்னும் உயிர் பின்னுமாய் ஒலித்து நின்ற நெறியே மெய் அதன் முதலாம், உயிர் அதன் ஈறாம் எ - று.

எனவே உயிரும் ஒற்றும் ஆய்த முதலிய ஒன்பது சார்பெழுத் துக்களும் ஓரெழுத்தாதலின், அவற்றிற்கு முதலுமீறும் அவையே யாமென்பது அருத்தாபத்தியாற் கூறினார்; இஃது [1]எஞ்சிய * சொல்லி னெய்தக்கூற லென்னு முத்தி. இத்தொடக்கத்த வல்லன சொல்லின் முடிவி னப்பொருள் முடித்த லென்னு முத்தி. முன்னர் மொழிக்கு முதலீறென்றவற்றுள்ளும் பின்னர் இடைநிலை போலி பதம் புணர்பென்பவற்றுள்ளும் உயிர்மெய்யைப் பிரித்துத் தனி மெய்யும் தனியுயிரும்போல வைத்து இலக்கணங் கூறலின், மொழிக்கு முதலும் ஈறுங் கூறுதலன்றி எழுத்திற்கு முதலுமீறும் கூறினாரென்றுணர்க. இச்சூத்திரம் [2] சிங்க நோக்கம் : அற்றன்றி ஆற்றொழுக்காய் முன்னின்ற மொழிமுதலீறுரைக்கும் சூத்திரங் களையே தொடர்ந்துவந்த தென்பாருமுளர்; பின், "நம்முன்

(பி - ம்.) * 'மொழியின்'

1. எஞ்சிய சொல்லி னெய்தக்கூற லென்னும் உத்தியை அருத்தா பத்தி யென்பர் இராமாநுச கவிராயர்.

2. சிங்கநோக்கம் : இது சூத்திரநிலைகளுளொன்று; நன். சூ. 19. இதனை வடநூலார் 'ஸிம்ஹாவலோகனம்' என்பர்; "பணிவருஞ் சிங்க நோக்கிற் பணையெருத் துறழ நோக்கி" சீவக. 1569.

கவ்வாம்" (சூ. 111) என்றும், "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன், கசதப மிகும்" (சூ. 165) என்றும் உயிர்மெய்யின் உயிரையும் மெய்யையும் வேறுபிரித்தோதுவது இலக்கணமன்றாய் முடியுமாதலின், அது பொருந்தா தென்க.

எண்ணதிகாரத்துள். உயிர்மெய்யை ஒரெழுத்தாக எண்ணினூர் ஈண்டு இரண்டாகவைத்து இலக்கணங் கூறுவ தென்னையெனின், [1] அப்பொடு பெய்த உப்பே போல உயிரொடு புணர்த்திய மெய் தன்னளவு தோன்றாது ஒன்றாய்நிற்றலின் ஒன்றுமாய், ஒற்று முன்னும் உயிர் பின்னுமாய் ஒலித்து நின்ற நெறியான் இரண்டு மாய் நிற்றலினென்றுணர்க. இவ்வாற்றான் உயிர்மெய்யென்னுஞ் சொல் மாத்திரைவகையான் உம்மைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகவும், ஒலிவகையான் உம்மைத் தொகை யாகவும் கொள்ளப்படும். (54)

## 9. இடைநிலை மெய்ம்மயக்கம்

110. கசதப வொழித்த வீரேழன் கூட்டம்
மெய்ம்மயக் குடனிலை ரழவொழித் தீரெட்
டாகுமிவ் விருபான் மயக்கு மொழியிடை
மேவு முயிர்மெய் மயக்கள வின்றே.

எ - ன், நிறுத்தமுறையானே மொழிக்கு இடைநிலையாமாறு உணர்த்துங்கால் உயிருடன் உயிர்மயங்கலும் மெய்யுடன் மெய் மயங்கலும் இவ்விரண்டும் மாறி மயங்கலுமென மூன்றாக வகுக்கப் படும்; இவற்றுள் உயிருடனுயிர்க்கு மயங்கும் தன்மை இன்மையின் அதனை யொழித்து ஏனை யிரண்டினையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மெய்பதினெட்டனுள், கசதப வென்னு நான்கையு மொழித்த பதினான்கு மெய்யும் பிறமெய்களோடு கூடுங் கூட்டம் வேற்றுநிலை மெய்ம்மயக்கமாம்; ரகார ழகார மென்னு மிரண்டினையு மொழித்து ஒழிந்த பதினாறு மெய்யும் தம்மொடு கூடுங் கூட்டம் உடனிலை மெய்ம்மயக்கமாம்; இவ்விரண்டு பகுதி மயக்கமும் மொழிக்கு இடையே வரும்; இவ்வாறு மெய்யுடன் மெய் மயங்குதலன்றி உயிருடன் மெய்யும் மெய்யுடன் உயிரும் மாறி

1. இங்கே, "நாழியப்பு நாழியுப்பு நாழியாய வாறுபோல்" (சிவ வாக்கியம், 54), "நசித்து மலம், அப்பணைந்த வுப்பினுள மழிந்து" (சிவஞான போதம். சூ. 11-உதா. வெண். 5) என்பவை நினைவுக்கு வருகின்றன.

உயிரு மெய்யும் மயங்கு மயக்கத்திற்கு வரையறை யின்று : வேண்டியவாறே மயங்கும் எ - று.

கூட்டமெனினும் மயக்கமெனினும் ஒக்கும். உடனிலை யென்றதனாற் பிறமெய்யென்பது பெற்றும். மொழியென்றது ஒருமொழி தொடர்மொழி யென்னும் இரண்டினையும். உயிரும் மெய்யும் மயங்குதற்கு இடம் விதந்துகூறாது பொதுப்படக் கூறினர், மொழியினும் உயிர்மெய்யினும் ஒரெழுத்தினும் வருதலின்.

இச்சூத்திரத்தான் மெய்யுடன் மெய் மயங்குங்காற் கசதப வென்னும் நான்கும் தம்மொடு தாமே மயங்குமெனவும், ரழவென்னும் இரண்டும் தம்மொடு பிறவே மயங்குமெனவும், ஒழிந்த பன்னிரண்டு மெய்யும் தம்மொடு தாமும் பிறவும் மயங்குமெனவும் பெற்றும்.

உயிரும் மெய்யும் மயங்குதற்கு உதாரணம் : அல் வில் எனவும், கா எனவும் மொழிக்கண் மயங்கின ; க என எழுத்தின் கண் மயங்கின. மெய்யுடன் மெய் மயங்குதற்கு உதாரணம் மேல்வரும் சிறப்புச் சூத்திரத்திற் காண்க.

[1] இவ்விடைநிலையை ஒருமொழி தொடர்மொழி யிரண்டினுங் கொள்ளாது ஒருமொழிக்கேயெனக் கொள்வாரு முளர். எவ்விடத்துவரினும் இரண்டெழுத்து இணங்கிப் பொருந்தும் பொருத்துவாயை இடைநிலையென் றோதலானும், இணங்காதனவரின் விகாரப்படுதலானும் அது நூற்கருத்தன்றென்க.

இனி, உயிர்மெய்மயக்களவின்றே யென்பதற்கு [2] உயிர்மெய்முன் உயிர்மெய் மயங்குதல் வரையறையின்றெனப் பொருள் கூறுவாருமுளர் ; இங்ஙனம் உயிர்மெய்யை இரண்டெழுத்தாகப் பிரித்து மயக்கவிதி கூறுவார், அதனையே ஒன்றாக வைத்து மயக்கவிதி கூறாராதலானும், கூறினும் இடைநிலைமயக்கமுழுவதும் இச்சூத்திரத்து அடங்காமையானும் அது பொருந்தாதென்க. (55)

## மெய்ம்மயக்கம்

111. ஙம்முன் கவ்வாம் வம்முன் யவ்வே.

எ - ன், வேற்றுநிலை மெய்ம்மயக்கத்துள் விதந்து சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

---

1. இடைநிலைமயக்கத்தை ஒருமொழிக்கேயெனக்கொள்பவர் நச்சினார்க்கினியர் ; தொல். நூன். சூ. 27.

2. உயிர்மெய்முன் உயிர்மெய் மயங்குதல் உளதென்று கூறுபவர்கள் மயிலைநாதரும், நச்சினார்க்கினியரும் ; தொல். நூன். 22, உரை; இ. வி. உரைகாரரும் ; சூ. 31. உரை.

(இ - ள்.) ஙகரமுன்னர்க் ககரமும் வகரமுன்னர் யகரமும் மயங்கும் எ - று.

(உ - ம்.) கங்கன், [1] தெவ்யாது என வரும். (56)

112. ஞநமுன் றம்மினம் யகரமொ டாகும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்விரண்டுமெய்முன்னரும் தமக்கினமாகிய சகர தகரங்களும் யகரமும் மயங்கும் எ - று.

(உ - ம்.) கஞ்சன், உரிஞ்யாது; கந்தன், பொருந்யாது என வரும். (57)

113. டறமுன் கசப மெய்யுடன் மயங்கும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்விரண்டு மெய்ம்முன்னரும் கசப வென்னும் மூன்றுமெய்யும் இணங்கி மயங்கும் எ - று.

(உ - ம்.) [2] கட்கம், [3] கட்சி, நுட்பம்; கற்க, கற்சிறுர், கற்ப எனவரும். (58)

114. ணனமுன் னினங்கச ஞபமய வவ்வரும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்விரண்டு மெய்ம்முன்னரும் தமக்கினமாகிய டறக்களும் கசஞபமயவ என்னும் ஏழு மெய்யும் மயங்கும் எ - று.

(உ - ம்.) விண்டு, வெண்கலம், வெண்சோறு, வெண்ஞமலி, வெண்பல், வெண்மலர், மண்யாது, மண்வலிது எனவும்; [4] புன்றலை, புன்கண், புன்செய், புன்ஞமலி, புன்பயிர், புன்மலர், பொன்யாது, பொன்வலிது எனவும் வரும். (59)

115. மம்முன் பயவ மயங்கு மென்ப.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மகரமெய்ம்முன்னர்ப் பகர யகர வகரங்கள் மயங்கு மென்று சொல்லுவர் புலவர் எ - று.

(உ - ம்.) [5] கம்பன், கலம்யாது, கலம்வலிது என வரும். (60)

---

1. தெவ் - பகை. 2. கட்கம் - வாள். 3. கட்சி - காடு, கூடு.

4. புன்றலை - சிவந்த தலை; " புன்றலை மகாஅர் " (மலைபடு. 253); புல்லிய இடமுமாம்; " புன்ற லைப்புனங் காப்புடை போதர " கம்ப. நாடு. 34.

5. கம்பன் : பண்டைக்காலத்திற் காளிமுதலிய தெய்வங்களைப் பூசிக்கும் சாதியாருக்குக் கம்பரென்ற பெயருண்டென்று தெரிகின்றது.

116. யரழ முன்னர் மொழிமுதன் மெய்வரும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இம்மூன்று மெய்ம்முன்னரும் மொழிமுதற்கு விதந்து கொண்ட பத்துமெய்யும் மயங்கும் எ - று.

(உ - ம்.) வேய், வேர், [1] வீழ் ; கடிது, சிறிது, தீது, பெரிது, நீண்டது, மாண்டது, [2] ஞான்றது, யாது, வலிது எனவும்; [3] வேய்ங்குழல், [4] ஆர்ங்கோடு, பாழ்ங்கிணறு எனவும் வரும்.

சுருங்கச்சொல்லலென்னும் வனப்புவகையான் மொழிமுதன் மெய்யெனக் கூறலின், யகரத்தின்முன் யகரமயங்குமுடனிலை ஈண்டுக் கொள்ளாதொழிக. (61)

117. லளமுன் கசப வயவொன் றும்மே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்விரண்டு மெய்ம்முன்னரும், கசபவய என்னும் ஐந்து மெய்யும் மயங்கும் எ - று.

(உ - ம்.) வேல், வாள் : கடிது, சிறிது, பெரிது, வலிது, யாது என வரும். (62)

## உடனிலை மயக்கம்

118. ரழவல் லனதம்முற் றுமுட னிலையும்.

எ - ன், உடனிலைமெய்ம்மயக்கத்தின் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ரகார ழகாரமல்லனவாகிய வேற்றுநிலை மெய்ம் மயக்கத்துட் கூறிய பன்னிரண்டு மெய்யும் உடனிலைக்கே உரிய கசதப வென்னு நான்கும் தம்மிற்றும் உடனின்று மயங்கும் எ - று.
(உ - ம்.) அங்ஙனம், அவ்வை, அஞ்ஞானம், அந்நீர், [5]அட்டு,

---

இச்சாதியார் உவச்சர் என்றும் பாரசவர் என்றும் வழங்கப்படுவர். திருவிளையாடற்பயகரமாலையை இயற்றிய ஆசிரியரின் பெயர் ஓர் ஏட்டுச்சுவடியில் ' வீரபத்திரக்கம்பர் ' என்று எழுதப்பட்டிருந்தது.

1. வீழ் - விழுது. 2. ஞான்றது - தொங்கிற்று.

3. வேய்ங்குழல் - புல்லாங்குழல் ; " வேய்ங்குழ லோசையும் விடை மணிக் குரலும் " திவ். திருப்பள்ளி. 4.

4. ஆர்ங்கோடு - ஆத்திமரத்தின் கிளை.

5. அட்டு - தீங்கட்டி.

[1] அற்றம், அன்னே, அண்ணம், அம்மை, [2] அய்யம், [3] அல்லி, [4] அள்ளல் எனவும்; [5] அக்கு, அச்சு, [6] அத்து, அப்பு எனவும் வரும். (63)

119. யரழவொற் றின்முன் கசதப ஙஞநம
ஈரொற் றும்ரழத் தனிக்குறி லணையா.

எ - ன், தனிமெய்யுடன் தனிமெய்யாயும் மயங்குவன இனைய வென்பதூஉம், மொழிக்கு உறுப்பாக மயங்காதன இனையவென் பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) யரழ வென்னு மூன்றொற்றும், இவற்றின் முன் மயங்குமென விதித்த பத்தொற்றுள் இங்ஙனம் கூறிய எட்டொற்றும் தனிமெய்யும் உயிரூர்ந்த மெய்யுமாய் மயங்குவனவன்றி ஈரொற்றாயும் மயங்குவனவாம்; ரகார ழகார வொற்றும் தனிக்குறிலும் மயங்குந் தன்மையவாயினும் மொழிக்குறுப்பாக வருவதும் நிற்பதுமாய் மயங்கா எ - று.

ஈரொற்றுமாமென்னும் உம்மையும் மொழிக்கு உறுப்பாக வென்னும் சொற்களும் எஞ்சி நின்றன.

(உ - ம்.) வேய்க்குறை, வேர்க்குறை, வீழ்க்குறை; சிறை, தலை, புறம் எனவும், வேய்ங்குழல், ஆர்ங்கோடு, பாழ்ங்கிணறு; காய்ந்தனம், நேர்ந்தனம், வாழ்ந்தனம் எனவும் வரும்.

ஏனைய வந்தவழிக் காண்க.

அணையா வென்ற ஆகாதனவற்றிற்கு உதாரணங்காட்டலா காமை யுணர்க. (64)

120. லளமெய் திரிந்த னணமுன் மகாரம்
நைந்தீ ரொற்றுஞ் செய்யு ளுள்ளே.

எ - ன், செய்யுட்குரியவாய் ஈரொற்றுடனிற்பன இனைய வென்பது உணர்த்துதல் நுதலிற்று.

---

1. அற்றம் - மறைத்தற்குரியது; "அற்றமறைத்தலோ புல்லறிவு" (குறள், 846); "அற்றங்காவாச் சுற்றுடைப் பூந்துகில்" மணி 3 : 139.
2. அய்யம் - ஐயம்.
3. அல்லி - பூவின் உள்ளிதழ்; "அல்லி சேரணங் கிற்கணங்கன் னவள்" சீவக. 162. 4. அள்ளல் - சேறு.
5. அக்கு - உருத்திராக்கம்; "அக்கு மாலைகொ டங்கையி னெண் ணுவார்" (தே. பொது); "அக்கும் புலியி னதளு முடையாரவர்" திவ். பெரிய திரு. 9. 6 : 1. 6. அத்து - சிவப்பு.

(இ - ள்.) லகார ளகார வொற்றுத்திரிந்த னகார ணகார முன்வரும் மகர வொற்று முன்னர்க்கூறியவாறே குறுகி அவற்றுடன் ஈரொற்றுடனிலையாம், செய்யுளகத்து எ - று.

(உ - ம்.) "திசையறி [1]மீகானும் போன்ம்" (பரி. 10.55) எனவும், [2]"மயிலியன் மாதர் மருண்ம்" எனவும் வரும்.

மகாரநைந்தென [3]அனுவதித்தார், மகரங்குறுகுதற்குத் தொடரும் னகரணகரங்கள் லகரளகரந் திரிந்தனவென்பதூஉம் அக்குறுக்கம் செய்யுட்கண்ணதென்பதூஉம் உய்த்துணர்தற் கென்க. (65)

121. தம்பெயர் மொழியின் முதலு மயக்கமும்
இம்முறை மாரியு மியலு மென்ப.

எ - ன், மொழிமுதல் ஈறு இடைநிலைகட்கு ஆவதொரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எழுத்துக்கள் தம்பெயர்களை மொழிந்து நிலைமொழி வருமொழியாகப் புணர்க்குமிடத்து, எல்லா மொழி முதற்கும் இங்ஙனம் விதித்தனவும் விலக்கியனவுமாகிய எல்லா வெழுத்தும் முதலாம்; மயக்கத்திற்கு இங்ஙனம் விதித்தனவும் விலக்கியனவுமாகிய எல்லா வெழுத்தும் மயங்குமென்று சொல்லுவர் புலவர் எ - று.

இங்ஙனம் எல்லாவெழுத்தும் தனித்தனி அதற்கதுவே முதலாக வருமெனவே, ஈற்றிற்கு விதித்தனவும் விலக்கியனவுமாகிய எல்லாவெழுத்தும் தனித்தனி அதற்கதுவே ஈறாக வருமெனச் சொல்லாதே அருத்தாபத்தியான் அமைதலின் ஈறுமென மிகைபடக் கூறாதொழிந்தார்.

(உ - ம்) "அவற்றுள், லளஃகான் முன்னர் யவவுந் தோன்றும்" (தொல். நூன். சூ. 24)
என்புழி லகரம் முதலாகியும் [4]கூனிறுதி ளகர வொற்றோடு மயங்கியும் நின்றது. [5]கெப்பெரிது என்புழி எகரம் மெய்யோ டீறாய் நின்றது. பிறவும் வரையறையின்றி வருதல் காண்க.

---

1. மீகான் - கப்பலோட்டி. 2. நன். சூ. 119, மயிலை. மேற்.

3. அனுவதித்தல் 'வழிமொழிதல்' என்று தமிழில் வழங்கப்படும்; "கூறின பின்னுங் கூறின சிலவவை, அனுவாத மென்றே யறிந்தே யடக்குக" இ. கொ. சூ. 7.

4. கூனிறுதி ளகராவொற்றென்றது, 'அவற்றுள்' என்பதிலுள்ள ளகரவொற்றை. 5. 'கெ' என்னும் எழுத்துப் பெரிது.

ஆய்தத்திற்குப் பிறப்பதிகாரத்துள் வருவாய் கூறியவழி மயக்கவிதி அமைந்து கிடந்தமையானும் தன்பெயர் மொழிய வாராமையானும் கூறுதொழிந்தார். (66)

## 10. போலி

### மொழியிறுதிப்போலி

122. மகர விறுதி யஃறிணைப் பெயரின்
னகரமோ டுறழா நடப்பன வுளவே.

எ - ன், நிறுத்தமுறையானே போலியாமாறு உணர்த்துவான் றொடங்கி மொழியிறுதிப்போலி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பால்பகா அஃறிணைப்பெயர்களினிடத்து இறுதி மகரம் னகரத்தோடு ஒத்து நடப்பன உளவாம் எ - று.

மகரவிறுதி என்றதனாற் பால்பகாவஃறிணைப் பெயரென்பது பெற்றும். மகரம் னகரத்தோடொத்தலாவது பெயரிறுதிக்கண் மகரம் நின்ற நிலைக்களத்து னகரம் நிற்பினும் வேற்றுமையின்றி யொத்தல்.

(உ - ம்.) "அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில்" (குறள், 84.)

இதனுள், [1]அகம் - அகன், முகம் - முகன் எனவும்; தலம் - தலன், நிலம் - நிலன், கலம் - கலன், நலம் - நலன், வலம் - வலன் எனவும் வருதல் காண்க. பிறவுமன்ன.

உறழா நடப்பனவுள வென்னுஞ் சொல்லாற்றலான் உறழாதன பெரும்பால வென்க. அவை: [2]வட்டம், குட்டம், மாடம், கூடம் முதலாயின. பால்பகாவஃறிணைப்பெயரிடத்து இயல்பாய மகர விறுதிநிலையின் னகரம் போலியாய் வருமெனவே அகன் முகன் முதலிய சொற்களைப் பால்பகுத்த [3]ஆடூஉவறி சொல்லெனக் கொள்ளற்க என்பதூஉம், [4]எகின், [5]பயின், [6]குயின், [7]வயின்

1. அகன், அகம் - மனம்.
2. வட்டம் என்பதும் சிறுபான்மை சிலாசாஸனங்களில் 'ஆட்டை வட்டன்' என்பதுபோல னகரம்பெற்றும் வரும்.
3. ஆடூஉவறிசொல்-ஆண்பாலை அறியுஞ் சொல்.
4. எகின் - அன்னம், புளி; "மரமல் லெகின்" நன். சூ. 215.
5. பயின்-பிசின்; "சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய, கற்போற் பிரியலம்" அகநா. 1.
6. குயின் - மேகம்; "குயினூன் வேற்றுமைக் கண்ணுமியல்பே" நன். சூ. 216.
7. வயின் - இடம்; "வயின்வயி னெயிற்றி மாதர் வயிறலைத் தோட வோடி" (கம்ப. ஆற்று. 14); வயிறுமாம்.

முதலிய னகரவீற்றுப்பெயர்க்கு இவ்வையப்பாடில்லை யென்பதூஉம் பெற்றும்.

இனி, இவ்விறுதிப்போலியை முற்கூறியதனுல், சுரும்பு - சுரும்பர், அரும்பு - அரும்பர், சாம்பல் - சாம்பர், பந்தல் - பந்தர் முதலியனவும் கொள்க. (67)

(மொழிமுதற்போலியும் மொழியிடைப்போலியும்)

123. அஐ முதலிடை யொக்குஞ் சஞயமுன்.

எ - ன், மொழிமுதற் போலியும் மொழியிடைப் போலியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மொழிமுதலினும் இடையினும் அகர ஐகாரங்கள் வேற்றுமை யின்றி ஒத்து *நடப்பனவாம், சகர ஞகர யகரங்கட்கு முன்னர் வருமாயின் எ - று.

ஈண்டு முன்னென்றது, காலமுன்னெனக் கொள்க.

(உ - ம்.) பசல் - பைசல் (பையல்), மஞ்சு - மைஞ்சு, மயல் - மையல் எனவும் ;அமச்சு - அமைச்சு, இலஞ்சி - இலஞ்சி, அரயர்- அரையர் எனவும் வரும். பிறவுமன்ன. (68)

## மொழியிடைப்போலி

124. ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி
ஞஃகா னுறழு மென்மரு முளரே.

எ - ன், இதுவும் மொழியிடைப்போலி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மொழியிடைக்கட் சிலவிடத்து ஐகாரத்தின் பின்னும் யகரவொற்றின்பின்னும் இயல்பாய்வரும் நகரத்தோடு ஞகரம் உறழு மென்று சொல்வாருமுளர் எ - று.

இப்போலி அருகிவருதலிற் சில்வழியென்றும், எல்லார்க்கும் ஒப்ப முடிந்ததன்ருகலின் என்மருமென்றும் கூறினர்.

(உ - ம்.)

" செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
மைஞ்ஞின்ற வொண்கண் மலைமகள் கண்டு மகிழ்ந்துநிற்க
நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீல மணிமிடற்றன்
கைஞ்ஞின்ற வாடல்கண்டாற்பின்னைக் கண்கொண்டு காண்ப
தென்னே "

(தே. கோயில், திருநா. திருவிருத்தம் " பாளையுடை ",5) எனவும், ஐஞ்ஞூறு எனவும் வரும்.

---

(பி - ம்.) *' நடப்பன வுள '

இச்சூத்திரம் பிறன்கோட்கூற லென்னு முத்தி.

"மண்யாத்த கோட்ட மழகளிறு தோன்றுமே"

"மண்ஞாத்த கோட்ட மழகளிறு தோன்றுமே" எனவும்,

"பொன்யாத்த * தார்புரவி பரிக்குமே"

"பொன்ஞாத்த தார்புரவி பரிக்குமே"

எனவும் வருமொழி வினைக்குமுன்னர் யா நின்ற நிலைக்களத்து ஞா நிற்பினு மொக்கும்போலிக்கு ஆசிரியர் தொல்காப்பியர்,

"ணனவென் புள்ளிமுன் யாவும் ஞாவும்
வினையோ ரனைய வென்மனார் புலவர்" (தொகை. சூ. 4)

எனச் சூத்திரஞ்செய்தவாறு இவ்வாசிரியரும் சூத்திரஞ் செய்யா தொழிதல் இறந்ததுவிலக்கலென்னும் உத்தி. பிறவு மன்ன.

இம்மூன்று சூத்திரத்தானுங்கூறிய போலிகளை இடைநிலை மயக்கத்தின் பாற்படுத்திப் [1]பொருள் கூறுவாருமுளர்; இங்ஙனம் கூறிய எழுத்துக்கள் மொழிக்குறுப்பாகி ஒன்று நின்ற நிலைக் களத்து மற்றொன்று அதுபோல மொழிநிரப்ப நிற்பதன்றி ஒன்றோ டொன்று மயங்கி இரண்டெழுத்தும் உடனிற்பதின்மையானும், முதலீறிடைநிலைகட்குப் புறனடையுங்கூறிக் குறை வறுத்தமை யானும், 'உறழாநடப்பன' என்றும் 'ஒக்கும்' என்றும், 'உறழும்' என்றும் உவமவுருபு கொடுத்து இம்மூன்று சூத்திரமும் கூறுத லானும் அது பொருந்தாதென்க. (69)

## எழுத்துப் போலி

125. அம்முன் இகரம் யகர மென்றிவை
எய்தின் ஐயொத் திசைக்கும் அவ்வோ
டுவ்வும் வவ்வும் ஔவோ ரன்ன.

எ - ன், [2]எழுத்துப்போலி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அகரத்தின்முன்னர் இகரமும் யகரவொற்றும் வரு மாயின் ஐகாரம் போன்றொலிக்கும்; அகரத்தோடு உகரமும் வகர வொற்றும் வருமாயின் ஔகாரம் போன்றொலிக்கும் எ - று.

---

(பி - ம்.)* 'தார்ப்புரவி'.

1. பொருள்கூறுபவர் மயிலைநாதர்.

2. இச்சூத்திரத்தை, 'சந்தியக்கர மென்பவற்றுள் ஐ ஔ வென்னும் நெட்டெழுத்துக்களின் வடிவு புலப்படுத்தல்' உணர்த்துவதாகக்கொண்டு இங்கே கூறிய உரை முதலியவற்றை மறுப்பர் சிவஞான முனிவர்; மயிலைநாதர் இங்கே கூறியவாறே கூறினர்.

உயிரோடுயிர்க்கு மயக்கமின்மையின் இங்ஙனங்கூறிய குற்று யிர்களை வலிந்து மயக்கிக்கூறின், *ஐகார ஔகாரம்போல் இசைத் தலானும் குற்றெழுத்துக்கள் ஒன்றரைமாத்திரையவாதலின் இரண்டு மாத்திரையவாகிய ஐகார ஔகாரங்களோடு ஒவ்வாமையின் ஒலி வகையான் மயக்கிக் கூறின் அவை ஒத்திசைத்தலானும் அவற் றுள்ளும் வகரம் பிறப்புவேறுபாட்டான் ஒலியும் ஒருபுடையொத்த லானும் எய்தினென்றூர்.

(உ - ம்.) அஇ=ஐ, அய்=ஐ, கஇ=கை, கய்=கை, அஉ= ஔ, அவ்=ஔ, கஉ=கௌ, கவ்=கௌ எனவும்,

" கய்வேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும் " (குறள், 774) எனவும்,
" அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்
கேடு நினைக்கப்படும் " (குறள், 169) எனவும் வரும்.

இச்செய்யுட்கண் தொடைநோக்கி ஐகார ஔகாரம் நின்ற நிலைக் களத்துப் போலி வந்தவாறு காண்க. (70)

## எழுத்தின் சாரியை

126. மெய்கள் அகரமு நெட்டுயிர் காரமும்
ஐஔக் கானு மிருமைக் குறிலிவ்
விரண்டொடு கரமுமாஞ் சாரியை பெறும்பிற.

எ - ன், மேல் எழுத்திலக்கணங்கூறிய முகத்தாற் போந்த எழுத்தின் சாரியைகளைத் தொகுத்து இனமடைத்தல் நுதலிற்று.

(இ - ள்.) மெய்கள் அகரச்சாரியையும், நெட்டுயிர்கள் காரச் சாரியையும், அவற்றுள் ஐகார ஔகாரங்கள் காரச்சாரியையுடனே கான்சாரியையும், உயிர்க்குறிலும் உயிர்மெய்க்குறிலும் காரம் கானென்னும் இவ்விரண்டுடனே கரச்சாரியையும் பெறும் எ - று.

மெய்களை முற்கூறினூர், அவற்றிற்கு அகரச்சாரியை இன்றி யமையாமையின். மெய்கள் அவ்வுமென்னுது அகரமு மென்றூர், அங்ஙனம் கரம் காரம் கான்கள் வரிற் சாரியை அகரத்தினது சாரியையென்றுகோடற்கு. ஆஞ்சாரியை யென்றூர், கார முதலிய சாரியைகளை ஏற்றபெற்றி கோடற்கு.

(உ - ம்) க ங எனவும், ஆகாரம் ஐகாரம் ஔகாரம் எனவும், ஐகான் ஔகான் எனவும், அகாரம் அஃகான் அகரம் மகாரம் மஃகான் மகரம் எனவும் வரும். பிறவு மன்ன.

---

(பி - ம்).* ' ஐகாரம் போலிசைத்தலானும் '

பிற வென்றமையாற் குறிலொடு கான்புணருங்கால் இடையே ஆய்தத்தோற்றமும் வழங்கும். [1]பிறசாரியைகளும் கொள்க. உயிர் மெய் நெடிலும் ஆய்தமும் கூறுதொழிந்தார், [2]உயிர்மெய் நெடில் இங்ஙனங்கூறிய மூன்றுசாரியையும் ஏலாமையானும் ஆய்தம் பிற வழி வாராமையின் [3]மொழியிடைப்படுத்து அம்மொழியிறுதிக்கட் பிறசாரியைதந்து உயிர்வருக்கத்து இறுதிக்கண்ணே வழங்குதலானு மென்க.

விகற்பத்தின்முடித்தலென்னும் உத்தியான் மேல் விரிந்து முடிந்து கிடந்தனவற்றைப் புலப்படவேண்டி ஈண்டுத்தொகுத்து முடித்தலான் இச்சூத்திரம் முடிந்தது முடித்தலென்னும் உத்தி. (71)

## புறனடை

127. மொழியாய்த் தொடரினு முன்னனைத் தெழுத்தே.

எ - ன், இவ்வியலுக்கு ஆவதொரு புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்வெழுத்துக்கள் பதமாயினும் அப்பதம் தம் மொடும் உருபொடும் புணரினும் அவற்றுற் பிறழாது முன்னர்க் கூறிய அப்பத்திலக்கணத்தையும் உடையவாம் எ - று.

எழுத்து, சுண்ணத்தின்கண் [4]அரிசன முதலிய போலாது மாலையின்கண் மலர்போல அவற்றில் நிற்றலின் முன்னனைத் தென்றார். எழுத்தென்பது சாதியொருமையாதலின், அனைத் தென்னும் ஒருமையொடு முடிந்தது. முன்னனைத்தாதல் பதவியல் முதலிய நான்கியலுள்ளுங் காண்க. (72)

எழுத்தியல் முற்றிற்று

---

1. பிறசாரியை : அன ஏன ; மயிலை.

2. உயிர்மெய்நெடிலை, 'ககர ஆகாரம் (கா)', 'பகர ஊகாரம் (பூ) என்பனபோல வழங்குவர்.

3. ஆய்தத்தை அஃகேனமென வழங்குவர் ; அவிநய ஆசிரியர்.

4. சூ. 128, உரை பார்க்க. அரிசனம் - மஞ்சள்.

இரண்டாவது

# பதவியல்

---

## பதம்

128. எழுத்தே தனித்துந் தொடர்ந்தும் பொருடரிற்
பதமா மதுபகாப் பதம்பகு பதமென
இருபா லாகி யியலு மென்ப.

எ - ன், நிறுத்த முறையானே பதத்தினது இலக்கணம் உணர்த்துவான் தொடங்கி எழுத்தாற் பதமாதலும் அஃது இத்துணையதென்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எழுத்துக்கள் தாமே ஒவ்வொன்று தனித்தும் இரண்டு முதலாகத் தொடர்ந்தும் பிறபொருளைத் தருமாயின் அது பதமாம்; அப்பதம் பகாப்பதமெனவும் பகுபதமெனவும் இரண்டு பகுதியதாகி நடக்குமென்று சொல்லுவர் புலவர் எ - று.

எழுத்தானுய பதம் அரிசனமுதலியவற்ருற் சமைத்த சுண்ணம் போலாது மலராற் சமைத்த மாலைபோல் நிற்றலின் எழுத்தே யென்றும், ஓரெழுத்தேனும் பிறபொருள்தருதலிற் பதமாமென்பார் தனித்தென்றும், [1] ஒன்று இரண்டு பலவென்பன வடநூல் வழக்கு, ஒன்றல்லன வெல்லாம் பலவென்பது தமிழ்நடையாதலின் வடநூல் வழக்குப்பற்றி ஆசிரியர் தொல்காப்பியர்,

> " ஓரெழுத் தொருமொழி யீரெழுத் தொருமொழி
> இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி யுளப்பட
> மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே " (மொழி. சூ. 12)

என்ருர்க்கு இரண்டெழுத்துத் தொடர்ந்தன வல்லவெனின் அது மொழியுமன்றென்பார் தனிநிலை யொழிந்தவற்றைத் தொடர்ந்தென்றும், இறிஞ்சி மிறிஞ்சியெனிற் ருெடருமேனும் தன்னையுணர்த்து மன்றிப் பிறபொருள்தாராமையிற் பதமாகாதென்பார் பொருள்தரினென்றும்,

---

1, " ஒன்றல் லவைபல தமிழ்நடை வடநூல், இரண்டல் லவைபல வென்றிசி னேரே " (யா. கா. மேற்) ; ' ஒன்றல்லவை பலவென்பது தமிழ் நடை ' தக்க. 466, உரை.

[1]" தன்னை யுணர்த்தி னெழுத்தாம் பிறபொருளைச்
சுட்டுதற் கண்ணேயாஞ் சொல் "

என்பவாகலிற் பொருளென்றது பிறபொருளென்பார் உணர்த்தி னென்றது தரினென்றும், அணுவென்னும் ஒலிநுட்பத்தான் எழுத்தாறற்போல (சூ. 58) எழுத்தென்னும் ஒலி நுட்பத்தான் மொழியாமென்பார் பதமாமென்றும், [2] இப்பதவியலுக்கு மேற்கோள் ஆரியமே யென்பார் மொழியென்றது பதமென்றும் கூறினர்.

இச்சூத்திரத்துள் தொடர்ந்துமென்றது பிறர்நூற் குற்றங் காட்டலென்னும் மதம். (1)

## ஓரெழுத்தொருமொழி

129. உயிர்மவி லாறுந் தபநவி லைந்தும்
கவசவி னாலும் யவ்வி லொன்றும்
ஆகு நெடினொது வாங்குறி லிரண்டோ
டோரெழுத் தியல்பத மாறேழ் சிறப்பின.

எ - ன், மேல் எழுத்துத் தனித்தும் தொடர்ந்தும் ஒரு மொழியா மென்றார், அவற்றுள் ஓரெழுத்தொருமொழி இவை என்பதூஉம், இத்துணைய வென்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உயிர் வருக்கத்தும் மவ்வருக்கத்தும் அவ்வாறும், தவ்வருக்கத்தும் பவ்வருக்கத்தும் நவ்வருக்கத்தும் ஐவைந்தும், கவ்வருக்கத்தும் வவ்வருக்கத்தும் சவ்வருக்கத்தும் நந்நான்கும், யவ்வருக்கத்து ஒன்றும் ஆகும் நெட்டெழுத்தாகிய மொழி நாற்பதும்; நொவ்வும் துவ்வுமாகும் குற்றெழுத்தாகிய மொழி இரண்டுடனே ஓரெழுத்தாகிய மொழி இந்நாற்பத்திரண்டும் சிறப்பினவாம் எ - று.

(உ - ம்.) ஆ ஈ ஊ ஏ ஐ ஓ எ - ம், [3] மா மீ மூ மே மை மோ எ - ம், தா தீ தூ தே தை எ - ம், பா பூ பே பை போ எ - ம், நா நீ நே நை நோ எ - ம், கா கூ கை கோ எ - ம், வா வீ வை வௌ எ - ம், சா சீ சே சோ எ - ம், யா எ - ம், நொ து எ - ம் வரும்.

---

1. அவிநயப்புறனடை ; நன். சூ. 127, மயிலை. மேற்.

2. மேல், 137-ஆம் சூத்திரவுரையில், ' வடநூன் மேற்கோளாக ஒரு மொழிகளை விதந்து பகாப்பதம் பகுபதமெனக் காரணக்குறி தாமே தந்து ' என்பர்.

3. மா - பெருமை முதலியன ; மீ - மேல் ; மூ - மூத்தலென்பதன்

இவற்றுள் ஊ - இறைச்சி ; ஓ - மதகுநீர் தாங்கும் பலகை ; பே - நுரை ; நே - அன்பு ; சோ - அரண் ; நொ து என்னும் குறிலிரண்டும் துன்பி * புசி என்னும் ஏவல்.

இவை சிறப்பினவெனவே வகரவீற்றுச் சுட்டுப் பெயர்ப் பொருளை ஒப்புமையான் உணர்த்திநிற்றலான் ஔ என்னும் ஓரெழுத்தொரு மொழியும் சுட்டு வினு உவமைப்பொருளைத் தரும் இடைச்சொல்லாதலாற் குற்றுயிரைந்தானுய ஓரெழுத்தொரு மொழிகளும் கௌ வென்னும் உயிர்மெய்யானுய ஓரெழுத்தொரு மொழியும் இவைபோல்வன பிறவும் சிறப்பில்லனவெனக் கொள்க. (2)

## தொடரெழுத்தொருமொழி

130. பகாப்பதமேழும் பகுபத மொன்பதும்
எழுத்தீ ருகத் தொடரு மென்ப.

எ - ன், தொடரெழுத்தொருமொழியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பகாப்பதம் இரண்டெழுத்து முதல் ஏழெழுத்தீருகவும், பகுபதம் இரண்டெழுத்து முதல் ஒன்பதெழுத்தீருகவும் தொடருமென்று சொல்லுவர் புலவர் எ - று.

(உ - ம்.) அணி, அறம், அகலம், [1]அருப்பம், [2]தருப்பணம், உத்தரட்டாதி எ - ம் ; கூனி, கூனன், குழையன், பொருப்பன், [3]அம்பலவன், அரங்கத்தான், உத்தராடத்தான், [4]உத்தரட்டாதியான் எ - ம் வரும். எழுந்திருக்கின்ருர், நடத்துவிப்பிக்கிருர், நடத்துவிப்பிக்கின்ருர், நடத்துவிப்பிக்கிருர்கள், நடத்துவிப்பிக்கின்ருர்கள், நடத்துவிப்பிக்கின்றவர்களெனப் பகுதி முதலிய

---

(பி - ம்.) *'பொசி'

முதனிலை ; மே - மேல் ; மை - மேகம் முதலியன ; மோ - மோத்தலென் பதன் முதனிலை ; தா - கொடு முதலியன ; தீ - நெருப்பு முதலியன ; தூ - பற்றுக்கோடு முதலியன ; தே - தேன் முதலியன ; தை - ஒரு மாதம் முதலியன ; பா - செய்யுள் முதலியன ; பூ - மலர் முதலியன ; பை - படம் முதலியன ; நீ - முன்னிலை யொருமை முதலியன ; நை - வருந்து; நோ - நோய் ; கா - சோலை முதலியன ; கூ - பூமி ; கை - கரம் முதலியன; கோ - அரசன் முதலியன ; வீ - பறவை முதலியன; வை - கூர்மை முதலியன ; வௌ - வவ்வு ; சா - இற ; சீ - நீக்கு ; சே - ஒரு மரம் முதலியன ; யா - ஒரு மரம், எவை.

1. அருப்பம் - அருமை. 2. தருப்பணம் - அவல், கண்ணுடி. 3. " அம்பலவன் மலையத்து " சிற். 15. 4. சீவக. 387.

உறுப்பு வேறுபட்டு வருவனவற்றிற்கு இவ்வரையறை இல்லையென்க. (3)

## பகாப்பதம்

131. பகுப்பாற் பயனற் றிடுகுறி யாகி
முன்னே யொன்றாய் முடிந்தியல் கின்ற
பெயர்வினை யிடையுரி நான்கும் பகாப்பதம்

எ - ன், மேற்பதம் பகாப்பதம் பகுபதமென இரண்டு பகுதியதாய் நடக்குமென்றார், அவற்றுட் பகாப்பதம் இனையவென்பதூஉம், இத்துணையவென்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பகுபதம்போல் இதனைப் பகுத்துப் பார்க்கின் அப்பகுப்பாற் பகுதிவிகுதி முதலிய உறுப்பின் பயன்விளைவதின்றிக் காரணத்தான் வரும் அப்பதம்போலாது இடுகுறியாய்ப் பகுதி விகுதி முதலிய ஆறுறுப்பானும் பின்பு முடிக்கப்படும் அப்பதம் போலாது படைப்புக்காலந்தொட்டு ஒன்றாய் முடிந்து நடக்கின்ற பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என்னும் நான்கும் பகாப்பதமாம் எ - று.

பகுபதத்திற்கு மறுதலைப்பட்டதென்பார் இவ்வாறு கூறினார்

(உ - ம்.) நிலம் நீர் எனவும், நட வா எனவும், மன் கொல் எனவும் உறு கழி எனவும் வரும். பிறவுமன்ன. (4)

## பகுபதம்

132. பொருளிடங் காலஞ் சினைகுணந் தொழிலின்
வருபெயர் பொழுதுகொள் வினைபகு பதமே.

எ - ன், பகுபதம் இனையவென்பதூஉம், இத்துணைய வென்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனங்கூறிய பொருளாதியாறும் காரணமாக வரும் பெயர்ச்சொற்களும், தெரிநிலையாயும் குறிப்பாயும் காலத்தைக் கொள்ளும் வினைச்சொற்களுமாகிய இரண்டும் பகுபதமாம் எ - று.

பொழுதுகொள்வினை பகுபதமெனவே அவ்விருவகை வினையாலணையும் பெயரும் பகுபதமாமென்பது அருத்தாபத்தியாற் கூறினாரென்க. புளி, கடு முதலிய ஆகுபெயரும் காரணத்தான் வருமேனும் விகுதி முதலிய உறுப்பின்மையின் அஃதொழிந்தனவற்றையே வருபெயரென்றும், நட வா முதலிய ஒருமையேவல் பொழுதுகொள்

வினையாயினும் பகுதியொன்றுமே பொருளான் வேறுபட்டதன்றிப் பகுத்தற்கு விகுதி முதலிய உறுப்பின்மையிற் பகாப்பதமேயன்றிப் பகுபதமாகாமையின் அஃதொழிந்தனவற்றைப் பொழுதுகொள் வினை யென்றும் கூறினரென்க.

(உ - ம்.) பொன்னன், அகத்தன், ஆதிரையான், கண்ணன், கரியன், ஊணனெனப் பெயர்ப்பகுபதம் வந்தன. நடந்தான் நடக்கின்றான் நடப்பான் எ - ம், நடந்த நடக்கின்ற நடக்கும் எ - ம், நடந்து நடக்க நடக்கின் எ - ம், நடவான் எ - ம், நடவாத எ - ம், நடவாமல் எ - ம் தெரிநிலையுடன்பாட்டு வினைமுற்றும் எச்சமும் எதிர்மறைவினைமுற்றும் எச்சமுமாய வினைப்பகுபதங்கள் முறையே வந்தன. பொன்னன் அகத்தன் ஆதிரையான் கண்ணன் கரியன் ஊணன் எ - ம், கரிய பெரிய எ - ம், அன்றி இன்றி எ - ம் குறிப்பு வினைமுற்றும் எச்சமுமாய வினைப்பகுபதங்கள் வந்தன. நடந்தான், நடந்தவனெனத் தெரிநிலை வினையாலணையும் பெயர்ப்பகுபதம் வந்தன. பொன்னன் ஊணனெனக் குறிப்பு வினையாலணையும் பெயர்ப்பகுபதம் வந்தன. பிறவுமன்ன.

அவன் இவன் உவனென்னும் சுட்டுப்பெயரும், எவன் யாவனென்னும் வினாப்பெயரும், தமர் நமர் நுமரென்னும் கிளைப்பெயரும், தந்தை எந்தை நுந்தை யென்னும் முறைப்பெயரும், இவை போல்வன பிறவும் சுட்டுப்பொருளும் வினாப்பொருளும் கிளைப் பொருளும் முறைப்பொருளும் காரணமாகப் பிறபொருட்குவரும் பெயராய்ப் பகுதிவிகுதி முதலியவுறுப்பும் உறுப்பின் பொருளும் தந்து வெள்ளிடைக்கிடக்கும் பகுபதமாய்ப் பகுக்கப்படுதலால் இவற்றைப் பகுபதமென்னாது [1]பகாப்பதமெனக் கூறின் அது பொருந்தாதென்க.

இனிப் பகுதி விகுதி முதலிய உறுப்பும் உறுப்பின் பொருளும் தரும் ஒரு சொல்லைப் பகுபதமென்றமையின் சொன்மை, பொருண்மை, [2]வின்மை, செம்மை, சிறுமை, நடத்தல், வருதல் முதலிய சொற்கள் பகுதி விகுதியாகப் பகுக்கப்படுதலானும் விகுதிக்கு வேறு பொருளின்றிப் பகுதிப்பொருள் விகுதியாய் நிற்றலானும் சொன்னிலையாற் பகுபதமென்றும் பொருணிலையாற் பகாப் பதமென்றும் கொள்ளப்படுமென்க.

---

1. அவன் முதலியவற்றைப் பகாப்பதமென்றவர் மயிலைநாதர்; நன். சூ. 130, உரை.

2. வின்மை - ஒளித்தன்மை; வில்லினதுதன்மையுமாம்; "வின்மையினீண்ட மேரு" பெரிய. மூர்த்தி. 13.

மேல், சொல்லதிகாரத்துள் திணைபாலிட முதலிய இலக்கணங் களான் விதந்து, "கிளையெண் குழூஉமுதற் பல்பொருள்" (276) என்னும் சூத்திர முதலியவற்றால் நான்கியலுள்ளு முணர்த்தலால் ஆண்டுணரவரும் பெயர்வினையிடையுரிகள் ஈண்டு உணர வாரா வேனும் உரைத்துமென்னும் உத்தியான் அவற்றைப் பகாப்பதம் பகுபத மென்றார். (5)

133. பகுதி விகுதி யிடைநிலை சாரியை
சந்தி விகார மாறினு மேற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்.

எ - ன், பகுபதவுறுப்பு இத்துணையவென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனம் கூறிய பகுதி முதலிய ஆறுறுப்பினுள்ளும் இப்பதப்பொருளமைதிக்கு ஏற்பனவற்றைக் கருதி அறிவுடையோராற் கூட்டி முடிப்ப எவ்வகைப்பட்ட பகுபதங்களும் முடியும் எ - று.

பிரகிருதி, விகிருதி, யென்னும் ஆரியமொழிகள் பகுதி, விகுதி யெனத் திரிந்துநின்றன. தன்னியல்பில் நிற்றலிற் பகுதியென்றும், தன்னியல்பில் நிற்கும் ஒருவனுள்ளத்தை ஆடை அணி முதலிய வற்றோடு ஒருத்தி முன்னின்று தன்னிடத்து அவாவ விகாரப் படுத்தல்போலத் தன்னியல்பில் நிற்கும் பகுதிப்பொருளை இடைநிலை முதலியவற்றோடு முன்னின்று தன்னிடத்து அவாவ விகாரப்படுத்த லின் விகுதியென்றும், முதனிலைப்பகுதிக்கும் இறுதிநிலை விகுதிக் கும் இடைநிற்றலின் இடைநிலை யென்றும், இவ்விகுதி முதலிய புணர்ப்பைச் சார்ந்து ஆண்டைக்கு இயைந்து நிற்றலிற் சாரியை யென்றும், நால்வகைச் சொல்லும் ஒன்றோடொன்று சந்தித்தலான் வரும் தோன்றல் திரிதல் கெடுதல்கள் சந்தியென்றும், செய்யுட் டொடை முதலியவற்றான் வலித்தல் மெலித்தல் முதலாக விகாரப் படுதலின் விகாரமென்றும் ஆறும் காரணக்குறியாய் வந்தன. அல் வழி, வேற்றுமைப் புணர்ச்சிக்கு விதித்த தோன்றல் திரிதல் கெடு தலையும் செய்யுட்கு விதித்த ஒன்பது விகாரத்தையும் இப்பதம் பெறுமென மாட்டுதலின் இது மாட்டெறிந்தொழுகலென்னும் உத்தி. (6)

## பகுதி

134. தத்தம்,
பகாஅப் பதங்களே பகுதி யாகும்.

எ - ன், பகுபதவுறுப்பு ஆறனுட் பின்னைய மூன்றும் புணரியலுள் உணர்த்தப்படுதலின் அவையொழித்து முன்னைய மூன்றனுட் பகுதி இனையவென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பெயர்ப்பகுபதங்களுள்ளும் வினைப்பகுபதங்களுள்ளும் தத்தம் முதனிலையாய பகாப்பதங்களே அவற்றின் பகுதியாம் எ - று.

பகுபதத்துட் பகுதி விகுதி முதலிய உறுப்பெல்லாம் பகாப்பதமாயினும் விகுதி முதலியவற்றை மேல் விதந்து கூறலின் ஈண்டுத் தத்தம் பகாப்பதங்களென்றது முதனிலைகளையே யென்பது [1]பாரிசேடத்தாற் பெற்றும்.

பகுபதவுறுப்பாம் முதனிலை இறுதிநிலை இடைநிலைகளாய பகாப்பதங்களினின்றும் முதனிலைப்பகாப்பத மொன்றினையுமே பிரித்துத் தந்தமையிற் பகாப்பதங்களேயென்னும் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

[2]முதனிலைப் பெயர்வினை யென்னாது தத்தம் பகாப்பதங்களென்றமையின், இருவகைப் பகுபதத்துள்ளும் பகுதியும் ஒருறுப்பாதலின், விகுதி முதலியவற்றோடு தொடர்ந்து நிற்பதன்றிப் பிரிந்து நில்லாமையானும் பிரித்தவழிப் பகுதியாய் உறுப்பின் பொருள் தாராமையானும் இருவகைப் பகுதியுறுப்புக்களும் இடைப் பகாப்பதமென்பது பெற்றும். (7)

135. செம்மை சிறுமை சேய்மை தீமை
வெம்மை புதுமை மென்மை மேன்மை
திண்மை யுண்மை நுண்மை யிவற்றெதிர்
இன்னவும் பண்பிற் பகாநிலைப் பதமே.

எ - ன், பண்புப்பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனம் கூறிய பதினொன்றும், இவற்றிற் கெதிரான வெண்மை கருமை பொன்மை பசுமைகளும், பெருமை அணிமை நன்மை தண்மை பழமை வன்மை கீழ்மை நொய்ம்மை இன்மை பருமைகளும், இவைபோல்வன பிறவும் பகுதியாய பண்புப் பொருளினின்றும் வேறு பொருள் பகுக்கப்படாத நிலைப்பதமாம் எ - று.

---

1. பாரிசேடம் - எஞ்சியது; பிரமாணங்களுள் ஒன்று.

2. 'முதனிலைப் பெயர்வினை' என்றதற்கு முதனிலைப் பெயரெனவும் முதனிலைவினையெனவும் பிரித்துக் கூட்டிப் பொருள் கொள்க.

இங்ஙனங் கூறிய வாய்பாடு முதலியவெல்லாம் சொன்னிலை யாற் பகுபதமாயினும் மைவிகுதிக்குப் பகுதிப்பொருளன்றி வேறு பொருளின்மையிற் பொருணிலையாற் பகுக்கப்படாதென்பார் பண் பிற்பகா வென்றும், "மெய்யி னியக்க மகரமொடு சிவணும்" (தொல். மொழி. சூ. 13) என்றாற்போல இங்ஙனங் கூறிய வாய் பாட்டுப் பண்புகள் மைவிகுதியின்றி இயங்காமையின் இவ்விகுதி யினையும் பகுதியாக நிறீஇ மேல்வரும் விகுதியொடு புணர்க்கப்படு மென்பார் நிலைப்பதமென்றுங் கூறினர்.

பண்புப்பகாப்பதமென்னாது பண்பிற்பகாநிலைப்பத மென்றல் சொற்பொருள் விரித்தலென்னும் உத்தி. செம்மை சிறுமை முதலிய வாய்பாடுகள் எடுத்துக்காட்டலென்னும் உத்தி. (8)

136. ஈறு போத லிடையுகரம் இய்யாதல்
ஆதி நீட லடியகரம் ஐயாதல்
தன்னொற் றிரட்டன் முன்னின்ற மெய்திரிதல்
இனமிக லினையவும் பண்பிற் கியல்பே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மேற் செம்மை சிறுமை முதலாகத் தெரித்த வாய் பாடுகளின் இறுதிவிகுதிபோதலும், இடையினின்ற உகரம் இகர மாதலும், முதனின்ற குறில் நெடிலாதலும், முதனின்ற அகரம் ஐகாரமாதலும், இடையே தன்னொற்று மிகுதலும், முன்பு நின்ற மெய்திரிதலும், வருமெழுத்திற்கு இனவெழுத்து மிகுதலும், இவை போல்வன பிறவும் அப்பண்பினுக்கு இயல்பாம் எ - று.

"மெய்யி னியக்க மகரமொடு சிவணும்" (தொல். மொழி. சூ. 13) என்ற அகரம் பன்னீருயிரும் மெய்யொடு புணரவருங் காலத்து நீங்கினாற்போல விகுதி முதலிய புணரவருங்காலத்துப் பண்படிநிற்க அப்பகுதிப் பொருள்விகுதி நீங்குமென்பார் ஈறு கெடுத லென்னாது ஈறுபோதலென்றும், விதந்துகூறு விகாரங்களு முள அவை வந்தவழிக்காண்க வென்பார் இனையவென்றும், இவ் விகாரம் ஒருதலையன்று சிவப்பன் கறுப்ப னென்னும் பிற வாய் பாடுகள் போலச் செம்மையன் சிறுமையனெனவும் முடியு மென்பார் எதிர்மறையும்மை கொடுத்து இனையவு மென்றும், பெயர் விகுதி யொடும் வினைவிகுதியொடும் பதங்களோடும் புணரினும் ஒருவழி இவ்விகாரப்படுமென்பார் பகுதிக்கென்னாது பொதுமையிற் பண்பிற் கியல்பே யென்றும் கூறினர்.

பதப்புணர்ச்சிக்கும் ஈண்டுக்கூறல் ஒப்பின் முடித்தலென்னும் உத்தி.

(உ - ம்.) நல்லன், வல்லன் என்பன ஈற்று விகுதிபோயின. கரியன் பெரியன் என்பன ஈற்று விகுதிபோய் உகரம் இகரமாயின. பாசி, பாசடை என்பன ஈற்று விகுதிபோய் ஆதி நீண்டன. பைங்கண், பைந்தார் என்பன ஈற்று விகுதிபோய் இடையுகரம் சகரத்தொடுகெட்டு வருமெழுத்துக்கு இனமிகுந்து அடிஅகரம் ஐகாரமாயின. வெற்றிலை, [1]நெட்டணை என்பன ஈற்றுவிகுதிபோய்த் தன்னொற்றிரட்டின. சேதா, [2]சேதாம்பல் என்பன ஈற்றுவிகுதிபோய் ஆதி நீண்டு முன்னின்ற மகரவொற்றுத் தகரவொற்றாய்த் திரிந்தன.

செம்மை, சிறுமை முதலாக விதந்தும் இன்னவுமென அடக்கியுங் கூறிய பலவேறு வகைப்பட்ட பண்புவாய்பாட்டு விகற்பங்க ளெல்லாம் [3]பொதுவிதியானும் ஈறுபோதன் முதலாக விதந்தும் இனையவுமென அடக்கியுங்கூறிய சிறப்புவிதியானும் விகுதிபதங்களொடு புணர்ந்து அமைந்து கிடந்தமை உற்றுணர்ந்து கொள்க.

இங்ஙனம் விதந்துகூறிய விகாரங்கள் அன்பன் அழகன் முதலிய வாய்பாடுகட்கு எய்தாமையானும், செம்மை சிறுமை முதலாக எடுத்துக்காட்டுமொழிகட்கு எய்தினமையானும் இஃது எடுத்தமொழியினெய்த வைத்தலென்னும் உத்தி. (9)

137. நடவா மடிசீ விடுகூ வேவை
நொப்போ வெளவுரி ஞுண்பொருந் திருந்தின்
தேய்பார் செல்வவ் வாழ்கே ளஃகென்
றெய்திய விருபான் மூன்ரு மீற்றவும்
செய்யென் னேவல் வினைப்பகாப் பதமே.

எ - ன், தெரிநிலை வினைப்பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்பு விதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நட வா மடி சீ விடு கூ ஏ வை நொ போ வெள உரிஞ் உண் பொருந் திரும் தின் தேய் பார் செல் வவ் வாழ் கேள் அஃகு என்று தனிநிலையாயும் முதனிலையாயும் எய்திக்கிடந்த இவ்விருபத்து மூன்ருகும் உயிரும் ஒற்றும் குற்றுகரமுமாகிய

1. நெட்டணை - நெடுமையான பஞ்சுமெத்தை; "நெட்டணையருகாக் கொட்டைகள் பரப்பி" திருவிடை. மும்மணி. 19.

2. சேதாம்பல்: "சேதாம்பற் போதனைய செங்கனிவாய்" கம்ப. நகர்நீங்கு. 101.

3. பொதுவிதி என்றது இந்நூல், 158, 162, 165-ஆம் சூத்திரங்களை.

ஈற்றினையுடைய இத்தொடக்கத்து வாய்பாடுகளெல்லாம் செய்யென்னும் [1] ஏவல்வினையும் செய்யென்னும் வினையினது பகாப்பதமாகிய பகுதியுமாம் எ - று.

[2] மேற்கூறிய அகர வகரப்போலியை வலியுறுத்துவார் வவ் (வௌ) எனவும், இத்தொடக்கத்து வாய்பாடுகளென்பார் அஃகாமென்றுது அஃகென்று எனவும், ஈற்றவும் எனவும், எகரவுயிர் விறுவிடைச்சொற்கண்ணும் தன்பெயர்க்கண்ணுமன்றிப் பிறவழி ஈருகாமையின் அஃதொழிந்தவை ஈண்டைக்காமென்பார் ஆமீற்ற எனவும், விகற்பத்தின் முடித்தலென்னும் உத்தியான் இருபத்து மூன்று ஈற்றவாக விகற்பித்து எடுத்துக்காட்டும் வாய்பாடுகள் முதலியவெல்லாம் இப்பொது வாய்பாட்டின் அடங்குமென்பார் முடிந்தது முடித்தலென்னும் உத்தியாற் செய் எனவும் கூறினர்.

இரட்டுறமொழிதலென்னும் உத்தியான் எடுத்துக்கொண்ட ஏவற்பொருளும் பகுதிப்பொருளும் தந்துநிற்கும் நட வா முதலிய வாய்பாடுகளை எண்ணித் தொகுத்த இருபான்மூன்ருமீற்றவென்னுந்தொகை செய்யெனேவலென்னும் பயனிலையோடும் செய்யென் வினைப்பகாப்பதமென்னும் பயனிலையோடும் தனித்தனி முடிந்தன.

விகுதிப்புணர்ச்சியோடு பதப்புணர்ச்சிக்கு மேலைச் சூத்திரத்து இலக்கணங் கூறினற்போலப் பகுதியோடு ஏவல் வினைக்கும் ஈண்டிலக்கணங்கூறலின், இதுவும் ஒப்பின்முடித்தலென்னும் உத்தி.

முன்னர் வினைப்பதமுணர்த்தி அதனகத்து வினையடியைப் பின்னுணர்த்திவருதலின், வினையியலுட் கூருத ஏவல்வினையை முற்கூறினர்.

ஏவல்வினைக்கு உதாரணம் இச்சூத்திரத்து எடுத்துக்காட்டிய வாய்பாடுகளைப் பகுதிப்பொருளொழியக் கொள்க.

பகுதிக்கு உதாரணம்: நடந்தான், வந்தான், படித்தான், சீத்தான், விட்டான், கூவினன், ஏவினன், வைத்தான், நொந்தான், போயினன், வௌவினன், உரிஞினன், பொருநினன், திருமினன், தின்ருன், தேய்த்தான், பார்த்தான், சென்ருன், வவ்வினன், வாழ்ந்தான், கேட்டான், அஃகினன், எ - ம், *கடந்தான், கண்டான் எ - ம், ஏகினன், குறுகினன், கட்டினன், பொருந்தினன் எ - ம் வரும். பிறவு மன்ன.

(பி - ம்.) * 'கிடந்தான்'

1. சிவஞானமுனிவர் 'ஏவலினது பகாப்பதமாகிய பகுதியும்' எனப் பொருளுரைப்பர். 2. சூ. 125.

இவற்றுட் பகுதி முதனிலையாய் எய்திக்கிடந்தமை காண்க.

கையறியா மாக்கட்கன்றி நூலியற்றும் அறிவினையுடைய மக்கட்குப் பல்கலைக்குருசில் பவணந்தி யென்னும் புலவர் பெருமான் புகழ்போல விளங்கிநிற்றலான், உலகமலையாமை யுள்ளிட்ட பத்தழகோடும் பிறந்துநின்றது இச்சூத்திரமென் றுணர்க.

வடநூன்மேற்கோளாக ஒருமொழிகளை விதந்து பகாப்பதம் பகுபதமெனக் காரணக்குறி தாமே தந்து அவற்றை நல்விருந் தென்ன நாவலர்பயில எடுத்தே தனித்துமென்னுஞ் சூத்திர (128) முதலாக இச்சூத்திரமீறுகப் பகாப்பதம் பகுபதமெனப் பலகாற் கூறுதல் தன்குறிவழக்க மிகவெடுத்துரைத்தலென்னும் உத்தி. (10)

138. செய்யென் வினைவழி விப்பி தனிவரிற்
செய்வியென் னேவ லிணையினீ ரேவல்.

எ - ன், மேல் இரட்டுறமொழிந்தவற்றுள் ஏவல்வினைக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற்கூறிய செய்யென்னும் வாய்பாட்டு நட வா முதலிய ஏவல்வினையின்பின், வி பி யென்னும் இரண்டு விகுதி யினுள் ஒன்று வருமாயிற் செய்யென்னும் ஏவன்மேல் ஓரேவலாய்ச் செய்வி யென்னும் வாய்பாட்டு ஏவல்வினையாம்; அவற்றின்பின் இவ்விகுதிகள் தன்னொடும் பிறிதொடும் இணைந்து வருமாயின், செய்யென்னுமேவன்மேல் ஈரேவலாய்ச் செய்விப்பியென்னும் வாய் பாட்டு ஏவல்வினையாம் எ - று.

விதந்த ஏவற் சிறப்பு வாய்பாட்டை யெல்லாம் செய்யென் னும் ஏவற்பொதுவாய்பாட்டுள் அடக்கி மேற்கூறலின், நட வா முதலிய வினைவழியென்பார் செய்யென் வினைவழி யென்றும், இவை பெருவழக்கல்லவென்பார் தனிவரினென்றும், இணையி னென்றும், இவ்விகுதி ஒன்றும் இரண்டும் ஏற்றபெற்றி வரு மென்பார் செய்பி யென்னுது செய்வி யென்றும், செய்யென்னும் வாய்பாடுகள் ஏவல் வினைமுதல் ஒன்றையும் இயற்றும் வினை முதல் ஒன்றையும் இருவருள் ஒருவர்க்கு ஒரு கருத்தனையும் செய்வியென்னும் வாய்பாடுகள் ஏவல்வினை முதல் இரண்டையும் இயற்றும் வினைமுதல் இரண்டையும் மூவருள் இருவர்க்கு ஒரு கருத்தனையும் செய்விப்பி யென்னும் வாய்பாடுகள் ஏவல் வினை முதல் மூன்றையும் இயற்றும் வினைமுதல் மூன்றையும் நால்வருள்

மூவர்க்கு ஒரு கருத்தனையும் தருமென்பார் ஈரேவலென்றும் கூறினர்.

இவ்வாறு செய்யென்னும் வாய்பாட்டு நட வா முதலிய ஏவல் நடப்பி, வருவி, நடப்பிப்பி, வருவிப்பி, என்னும் ஏவன்மேல் ஏவலாமெனவே செய்வி யென்னும் வாய்பாட்டு நடத்து வருத்து முதலிய ஏவலும் தனித்தும் இணைந்தும் வரும்; விப்பி யென்னும் விகுதிகளோடு புணர்ந்து நடத்துவி, வருத்துவி, நடத்துவிப்பி, வருத்துவிப்பி யென்னும் ஏவன்மேலேவலாமென்பது அருத்தா பத்தியாற் கூறினா ரென்க.

இவ்வாய்பாடுகளுள் நடத்து வருத்து முதலியன ஏவல் வினை முதலிரண்டையும் இயற்றும்வினை முதலிரண்டையும் மூவருள் இருவர்க்கு ஒரு கருத்தனையும், நடத்துவி வருத்துவி முதலியன ஏவல்வினை முதல் மூன்றையும் இயற்றும் வினைமுதல் மூன்றையும் நால்வருள் மூவர்க்கு ஒரு கருத்தனையும், நடத்துவிப்பி வருத்து விப்பி முதலியன ஏவல்வினைமுதல் நான்கையும் இயற்றும் வினை முதல் நான்கையும் ஐவருள் நால்வர்க்கு ஒரு கருத்தனையும் தந்துநின்றன.

இங்ஙனம், இருவர்முதல் ஐவரை உள்ளுறுத்த வாய்பாடுகளை எடுத்துக் கூறவே வரம்பின்றி ஏவன்மேலேவலும் இயற்றன்மேல் இயற்றலுமாய் வருவனவற்றிற்கு வாய்பாடின்றென்பது பெற்றும்.

நட வா முதலிய ஏவற்சிறப்பு வாய்பாட்டிற்கு இலக்கணம் கூறியமுகத்தே ஏவற்பொதுவாய்பாட்டிற்கும் செய் செய்வி செய் விப்பி யெனக் கூருக்கூற்றாய் இலக்கணம் அமைந்துகிடந்தமை யின், இக்கூற்று இரட்டுறமொழிதல் என்னும் உத்திக்கு இனம். இவைபோல்வன பிறவும் அது. (11)

139. விளம்பிய பகுதிவே றாதலும் விதியே.

எ - ன், வினைப்பகுதிக்கு ஆவதோர் புறனடையுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஏவல் வேறாதல்போல அதிகரித்து விளம்பிய வினைப்பகுதி வேறாதலும் விதியாம், விலக்கன்று எ - று.

ஏவலும் விளம்பப்பட்டதேனும் அதிகரித்ததன்றாகலின் வினைப் பகுதியினை விளம்பிய பகுதி யென்றார்.

(உ - ம்.) நடத்தினான், நடப்பித்தான், நடப்பிப்பித்தான், நடத்துவித்தான், நடத்துவிப்பித்தானெனவரும். பிறவுமன்ன.

ஈண்டும் *விப்பிகள் ஏற்றபெற்றி கொள்க.

இவற்றுள் நட வென்னும் தன்வினைப்பகுதி பிறவினைப்பகுதி யாய் வேறுபட்டு நின்றவாறு காண்க.

வேறுபடாதது பிரகிருதியாமன்றி வேறுபட்டது பிரகிருதி யாகாதேனும் தந்தையைக்குறிக்க மகனெனப்பட்டானொருவன் தன்மகனைக்குறிக்கத் தந்தையானாற்போலப் பிறவினைப்படுத்த வரும் இவ்விகுதிகளும் மேல்வரும் அன் ஆன் முதலிய விகுதிகளைக் குறிக்கப் பகுதியாமாதலின், விதியே யெனப் புறனடை தந்தார். இச்சூத்திரத்திற்கு வா வென்பகுதி முதலியன வந்தான் வரு கின்றானென விகாரப்படுதலைப் பொருளாகக் [1]கூறுவாருமுளர் : இவ்விகாரங்கள் பகுபதவுறுப்பாய் மாட்டெறிந்து கொண்ட [2]மூன்றுசந்தியுள்ளும் ஒன்பதுவிகாரத்துள்ளும் அமைந்துகிடத் தலின் அதுபொருந்தாதென்க. (12)

## விகுதி

140. அன்ஆன் அள்ஆள் அர்ஆர் பம்மார்
அஆ குடுதுறு என்ஏன் அல்அன்
அம்ஆம் எம்ஏம் ஓமோ டும்மூர்
கடதற ஐஆய் இம்மின் இர்ஈர்
ஈயர் கயவு மென்பவும் பிறவும்
வினையின் விகுதி பெயரினுஞ் சிலவே.

எ - ன், விகுதி இனைய வென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனம் அன் ஆன் முதல் முப்பத்தேழாகச் சொல்லப்படுவனவும் இவைபோல்வன பிறவும் தெரிநிலைவினை யின் விகுதிகளாம் ; பெயரிடத்தும் இவற்றுட் சில விகுதியாம் எ - று.

இரட்டுறமொழிதலென்னு முத்தியால் தன்மையொருமைக் கும் அஃறிணைப்படர்க்கையொருமைக்கும் பொதுவாக டு து று என்றும், அன் என்னும் தன்மையொருமைவிகுதி தொன்று தொட்டதன்றி இலக்கியம் கண்டமையின் எதிரதுபோற்ற லென்னுமுத்தியால் தழீஇக்கொண்டதாதலின், அதனை வலி யுறுத்திப் பின்னும் அன்னென விதந்தும் இன்னும் இவற்றுள்

---

(பி - ம்.) *' விப்பிக்கள் '

1. இங்ஙனம் பொருள் கூறுபவர் மயிலைநாதர் ; இ. வி. உரையா சிரியர் கொள்கையுமிதுவே ; இ. வி சூ. 45.

2. மூன்று சந்தி : தோன்றல் திரிதல் கெடுதல் என்பன.

இரட்டுறமொழிதலான் அடங்குவன அடங்க அடங்காவாய பெய ரெச்சம் வினையெச்சம் நடத்து நடப்பி முதலிய பிறவினை யென்ப வற்றுள்ளும் பிறவற்றுள்ளும் பகுதியை விகுதிப்படுத்தி வருவன யாவை அவையெல்லாம் விகுதி யென்று கருதிக்கோடற்குப் பிறவு மென்றுங் கூறினர்.

பெயரினுஞ் சில வென்றமாத்திரையிற் குறிப்புவினையினும் சில வென்பது கூறாதேயமைதலின், இங்ஙனம் வினை யென்றது அவ்விரண்டும் ஒழிந்த தெரிநிலைவினை யென்பது பெற்றாம்.

வ - று. நடந்தனன், நடந்தான் : இவை ஆண்பாற் படர்க்கை; நடந்தனள், நடந்தாள் : இவை பெண்பாற்படர்க்கை ; நடந்தனர், நடந்தார், நடப்ப, நடமார் : இவை பல்லோர்படர்க்கை ; நடந்தன, நடவா : இவை பலவின்படர்க்கை ; [1]நடக்கு, உண்டு, நடந்து, [2]சேறு, நடந்தனென், நடந்தேன், நடப்பல், நடப்பன் : இவை ஒருமைத்தன்மை ; நடந்தது, கூயிற்று, குண்டுகட்டு : இவை ஒன்றன்படர்க்கை ; நடப்பம், நடப்பாம், நடப்பெம், நடப்பேம், நடப்போம், நடக்கும், உண்டும், நடந்தும், சேறும் : இவை தன்மைப்பன்மை ; நடந்தனை, நடந்தாய், நடத்தி : இவை ஒருமை முன்னிலை ; நடமின், நடந்தனிர், நடந்தீர் : இவை பன்மை முன்னிலை ; நிலீயர், நடக்க, வாழிய : இவை வியங்கோள் ; நடக்கும் : இது செய்யுமென்னுமுற்று ; பிறவுமன்ன.

இவை திணை பாலிடங்களை யுணர்த்தி வினையின் இறுதிநிலை யாய் முழுவதும் வந்தன.

வில்லன், வில்லான், வளையள், வளையாள், ஊரர், ஊரார், [3]வில்லி, வாளி, அரசி, செட்டிச்சி, காதறை, மூக்கறை : இவை பெயர்க்கட் சில வந்தன. பிறவுமன்ன. (13)

## பெயரிடைநிலை

141. இலக்கியங் கண்டதற் கிலக்கண மியம்பலிற்
பகுதி விகுதி பகுத்திடை நின்றதை
வினைப்பெய ரல்பெயர்க் கிடைநிலை யெனலே.

எ - ன், இடைநிலையாமாறு உணர்த்துவான் தொடங்கிப் பெயர்க்கு இடைநிலை யுணர்த்துதல் நுதலிற்று.

---

1. நடக்கு - நடப்பேன். உண்டு - உண்டேன். 2. சேறு - செல்வேன்.

3. வில்லி, வாளி : " கண்டகர் வாளிகள் வில்லிகள் புறங்காக்குஞ் சீர் " தே. முதுகுன்றம்.

(இ - ள்.) அறிவுடையோரால் நியமிக்கப்படும் இலக்கியங் கண்டு அதனுக்கு அவ்விலக்கியத்தின் அமைதியே இலக்கணமாகக் கூறலின், மேற்கூறிய பகுதியையும் விகுதியையும் பகுத்து இடையே நின்றது யாது அதனை வினையாலணையும் பெயரல்லாத பெயர்கட்கு இடைநிலையென்று சொல்லுக. எ - று.

குறிக்கப்படும் இலக்கணத்தையுடையனவெல்லாம் இலக்கிய மாயினும் ஈண்டு இலக்கியமென்றது பெயர்ப்பகுபதத்தை ; இலக் கணமென்றது அதனகத்துப் பகுதி முதலிய உறுப்புக்களை.

மா பலா முதலியன பராரை முதலிய சினையொடு நின்றன வெனக் கண்டது கூறுவார்போலப் பகுபதம் பகுதி முதலிய உறுப்போடு நின்றதெனக் கண்டது கூறி அப்பதம்தந்த தோலா நாவின் மேலோ ராணையி னிற்றலிற் கண்டதற்கென்றும், சாரியை சந்தி விகாரங்களும் இடை நிற்குமேனும் அவை மேல் *விதக்கப் படுதலின் அவை யொழிந்தனவற்றை இடைநின்றதை யென்றும், மேல் வினைக்கு விதந்துகூறுமிடைநிலை வினையாலணையும் பெயர்க் கும் அமைதலின் வினைப்பெயரல்பெயர்க்கென்றும், இப்பெய ரிடைநிலை வரையறுக்கப்பட்டதன்று ஆங்காங்கு உணர்ந்துரைக்க வென்பார் எனலே யென்றுங் கூறினர்.

(உ - ம்.) அறிஞனென்பது ஞகரவிடைநிலை பெற்றது. ஓது வான், பாடுவானென்பன வகரவிடைநிலை பெற்றன. வலைச்சி புலைச்சியென்பன சகரவிடைநிலை பெற்றன. வண்ணாத்தி, பாணத்தி, மலையாட்டி, வெள்ளாட்டி, தந்தை, எந்தை நுந்தை யென்பன தகரவிடைநிலை பெற்றன. பிறவுமன்ன. (14)

### வினையிடைநிலை

142. தடறவொற் றின்னே யைம்பான் மூவிடத்
திறந்த காலந் தருந்தொழி[1] லிடைநிலை.

எ - ன், இறந்தகால வினைக்கு இடைநிலையுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தகர டகர றகரமெய்களும், [2]இன் என்னும் குற்றெற்றும் ஐம்பான் மூவிடத்தும் இறந்தகாலத்தைத் தரும் வினைப்பகுபத இடைநிலைகளாம் எ - று.

---

(பி - ம்.) *' விதிக்க '

1. வினைப்பகுபதத்தைத் தொழிலென்றது ஒருவகைக் குறிப்பு ; பின் வரும் வினை யென்பனவும் அன்ன.

2. ' இன் இடைநிலை எஞ்சியது எனக்கடைகுறைந்தும், போனது எனமுதல் குறைந்தும் வரும் ' சிவஞான.

(உ - ம்.) நடந்தான் நடந்தாள் நடந்தார் நடந்தது நடந்தன நடந்தேன் நடந்தேம் நடந்தாய் நடந்தீர் எ - ம், உண்டான் எ - ம், சென்றான் எ - ம், உறங்கினான் எ - ம் வரும். பிறவுமன்ன. (15)

143. ஆநின்று கின்று கிறுமூ விடத்தின்
ஐம்பா னிகழ்பொழு தறைவினை யிடைநிலை.

எ - ன், நிகழ்கால வினைக்கு இடைநிலை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஆநின்றென்பதூஉம் கின்றென்பதூஉம் கிறு வென்பதூஉம் ஐம்பான் மூவிடத்தினும் நிகழ்காலத்தைத்தரும் வினைப்பகுபதவிடைநிலைகளாம் எ - று.

தருவினையை அறைவினை யென்றது இலக்கணை. மேலைச் சூத்திரத்தில் (144) [1]வருவதூஉமது.

(உ - ம்.) நடவாநின்றான், நடக்கின்றான், நடக்கிறானென வரும்.

ஏனைப்பாலிடங்களினும் ஒட்டிக்கொள்க. (16)

144. பவ்வ மூவிடத் தைம்பா லெதிர்பொழு
திசைவினை யிடைநிலை யாமிவை சிலவில.

எ - ன், எதிர்கால வினைக்கு இடைநிலையும், முக்கால இடைநிலைகட்கு ஆவதோர் புறனடையுமுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பகர வொற்றும் வகர வொற்றும் ஐம்பான் மூவிடத்தும் எதிர்காலத்தைத் தரும் வினைப்பகுபத இடைநிலைகளாம்; இம்முக்காலமும் முறையே காட்டும் தகர வொற்று முதல் வகரவொற்றீறாய இடைநிலைகள் சில முற்றுவினை எச்ச வினைக்கு இலவாம் எ - று.

(உ - ம்.) நடப்பான், வருவான் என வரும்.

ஏனைப்பாலிடங்களினும் ஒட்டிக்கொள்க.

இனி, இவை சிலவில வெனவே காலத்தை இறுதிநிலைதருமென்பதூஉம், முதனிலைதருமென்பதூஉம், பிற இடைநிலைதருமென்பதூஉம் பெற்றும். இவ்விகற்பமெல்லாம் வருஞ்சூத்திரத்தாற் கூறுப. (17)

## காலங்காட்டும் விகுதி

145. றவ்வொ டுகரவும் மைநிகழ் பல்லவும்
தவ்வொ டிறப்பு மெதிர்வும் டவ்வொடு

1. வருவதூஉமென்றது 'இசைவினை' என்றதை.

கழிவுங் கவ்வோ டெதிர்வுமின் னேவல்
வியங்கோ ளிம்மா ரெதிர்வும் பாந்தம்
செலவொடு வரவுஞ் செய்யுநிகழ் பெதிர்வும்
எதிர்மறை மும்மையு மேற்கு மீங்கே.

எ - ன், மேலைச்சூத்திரத்து "இவை சிலவில" (144) என்றார், அவை இவை யென்பதுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) றகரத்தோடு கூடிய உகரவீறும் உம்மீறும் இறந்த காலமும் எதிர்காலமும், தகரத்தோடு கூடிய அவ்விரண்டீறும் அவ் விருகாலமும், டகரத்தோடுகூடிய அவ்விரண்டீறும் இறந்த காலமும், ககரத்தோடு கூடிய அவ்விரண்டீறும் எதிர்காலமும், மின்னீறும் ஏனை ஏவலின்வரும் அனைத்தீறும் வியங்கோளீறும் இகரவீறும் மாரீறும் எதிர்காலமும், பகரவீறு இறந்தகாலமும் எதிர்காலமும், செய்யுமென்னும் வாய்பாட்டு முற்றீறுகள் நிகழ்காலமும் எதிர்கால மும், முற்றுவிகுதி எச்சவிகுதிகளொடு புணர்தற்குரிய எதிர்மறை ஆகாரவீறு மூன்றுகாலமுமேற்கும்; மேலைச் சூத்திரத்து இவை சிலவில என்றவற்றுள் எ - று.

அந்தமென்பதனை எல்லாவற்றினும் ஒட்டிக்கொள்க.

றவ்வொடுகரவும்மீறும் தவ்வொடுகரவும்மீறும் பாந்தமும் இறந்த காலமும் எதிர்காலமும் ஏற்குமெனத் தொகுத்துக் கூறாது விகற்பத்தின் முடித்தலென்னு முத்தியான் வகுத்துக் கூறினார், புலப்பட வேண்டி யென்க.

இகரவீறு தனித்தியலாமையின் யாதானும் ஒரு மெய்யினை ஊர்ந்துவருமென்பதூஉம், அதுகாலங்காட்டாதென்பதூஉம், அது காலங்காட்டியதேல் இவ்வீறு காலங்காட்டாதென்பதூஉம், செய்யு மென்னும் வாய்பாட்டெச்சமும் இடைநிலையின்றி ஈறு காலங்காட்டு மேனும் அஃது எதிர்காலங்காட்டுமென (சூ. 340) மேல் *விதத் தலின் இங்ஙனம் செய்யுமென எடுத்தோதியது முற்றென்பதூஉம் பெற்றும். மூன்றுகாலமும் அவைபற்றிப் புடைபெயரும் வினையு மில்லனவற்றை எதிர்மறைவினை மூன்று காலமுமேற்குமென்று கூறுதல் இலக்கணையாதலிற் பிற்கூறினார்.

(உ - ம்.) சென்று, சென்றும், சேறு, சேறும், வந்து, வந்தும், வருது, வருதும், உண்டு, உண்டும், உண்கு, உண்கும், உண்மின், உண், உண்க, வாழிய, வாழியர், சேறி, உண்மார், உண்ப, உண்ணும், உண்ணுன் என வரும்.

(பி - ம்.) *' விதித்தலின் '

மும்மையுமென்னும் முற்றும்மையை, "முற்றும்மையொரோவழி யெச்சமுமாகும்" (426) என்பதனன் எச்சவும்மையாக்கி நடந்திலன், நடவாநின்றிலனென எதிர்மறை ஒருகாலமேற்றுவருதலும் கொள்க

சென்றி, செல்லாநின்றி என வருமாயின் இடைநிலை காலங் காட்டிய இகர வீற்றவாம்.

'இவை சில வில' என்றவற்றுள், இறுதிநிலை காலங்காட்டுவனவற்றை விதந்தோதி முதனிலையும், பிறவிடைநிலையும் காலங் காட்டுவனவற்றை ஓதாமையின், அவை சிறுபான்மைய, வந்த வழிக் காண்க வென்ருராயிற்று ; அவை வருமாறு :—

தொட்டான், விட்டான், உற்ருன், பெற்ருன், புக்கான், நக்கான் என்பவற்றுள், இடைநிலையின்றி முதனிலைவிகாரமாய் இறந்தகாலம் காட்டின.

[1]என்மனுர், [2]என்றிசினேர், என்மர் என்பவற்றுள் எடுத்தோதாப் பிற இடைநிலைகள் நின்று முன்னையவிரண்டும் இறந்தகாலமும் பின்னையதொன்று எதிர்காலமும் காட்டின. பிறவுமன்ன.

ஈங்கே யென்ற மிகையானே, "வருதி பெயர்தி வருந்துதி துஞ்சாய், பொருதி புலம்புதி நீயும்" என இகரவீறு நிகழ்காலங் காட்டலும், ஏனைய கூறிய காலத்திற் பிறழ்ந்து வருவனவுளவேல், அவையும் பெயரெச்ச வினையெச்சங்களில் இடைநிலையின்றி இறுதிநிலை காலங்காட்டுவனவுங் கொள்க.

இனிப் பகுதி முதலிய உறுப்புக்களாற் பதமுடியுமாறு :—

அவன் என்னும் சுட்டுப்பொருட் பெயர்ப் பகுபதம், அ என்னும் பகுதியும் அன் என்னும் விகுதியும் பெற்று, "எகர வினுமுச் சுட்டின்" (163) என்னுஞ் சூத்திரத்தால் வகரந் தோன்றி,

1. என்மனுர் : "என்மனுர் என்பது என்ப என்னும் முற்றுச் சொல்லை, 'குறைக்கும்வழிக் குறைத்தல்' என்பதனுல் பகரங் குறைத்து, 'விரிக்கும்வழி விரித்தல்' என்பதனுல் மன்னும் ஆரும் என இரண்டிடைச் சொற் பெய்துவிரித்தான்" என்பது இளம்பூரணம் ; "என்மனுர் என்பது செய்யுள் முடிபெய்தி நின்றதோர் ஆரீற்று எதிர்கால முற்றுச்சொல்" என் பது சேனுவரையம் ; "என்மனுர் என்பது ஓர் ஆரீற்று நிகழ்கால முற்று வினைத்திரிசொல்" என்பது நச்சினுர்க்கினியம் ; தொல். கிளவி. சூ. 1.

2. என்றிசினேர் : "என்றிசினேர் கண்டிசினேர் என்பன அவ்வாறு வந்த இறந்தகாலமுற்றுச்சொல்" என்பது சேனுவரையம் ; என்றிசினேரென்பது அவ்வாறு வந்த இறந்தகால முற்றுவினைத் திரிசொல்" என்பது நச்சினுர்க்கினியம் ; தொல். கிளவி. சூ. 1.

"உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே" (204) என்பதனுன் வகரத்தின்மேல் விகுதியுயிரேறி முடிந்தது.

தமன் என்னுங் கிளைப் பொருட்பெயர்ப் பகுபதம், தாமென்னும் பகுதியும் அன் என்னும் விகுதியும் பெற்று, "தான் தாம் நாம் முதல் குறுகும்" (247) என்பதனுற் பகுதி முதல் குறுகி உடன் மேலுயிரேறி முடிந்தது.

குறிஞ்சியான் என்னும் இடப்பெயர்ப் பகுபதம், குறிஞ்சி யென்னும் பகுதியும் ஆன் என்னும் விகுதியும்பெற்று யகரவுடம்படு மெய் தோன்றி உயிரேறி முடிந்தது.

பிரபவன் என்னும் காலப்பெயர்ப் பகுபதம் பிரபவவென்னும் பகுதியும் அன் என்னும் விகுதியும் பெற்று, "ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே" (156) என்பதனுற் பகுதி கடைக்குறையாய் வகரவொற்றின் மேல் விகுதி அகரவுயிரேறி முடிந்தது.

திணிதோளன் என்னும் சினைப்பெயர்ப்பகுபதம், திணிதோள் என்னும் பகுதியும் அன் என்னும் விகுதியும் பெற்று உடன்மேலுயி ரேறி முடிந்தது.

பெரியன் என்னும் குணப்பெயர்ப்பகுபதம் பெருமையென்னும் பகுதியும் அன் என்னும் விகுதியும் பெற்றுப் பகுதியீறுபோய் இடையுகரம் இகரமாய் யகர வுடம்படுமெய் தோன்றி உயிரேறி முடிந்தது.

ஓதுவான் என்னும் தொழிற்பெயர்ப்பகுபதம் ஓது என்னும் பகுதியும் ஆன் என்னும் விகுதியும் வகர இடைநிலையும் பெற்று உயிரேறி முடிந்தது.

நன்மையென்னும் பகுபதம் நல் என்னும் பகுதியும் மை யென் னும் விகுதியும் பெற்று, "மெலிமேவி னணவும்" (227) என்பதனுல் லகாரம் னகாரமாய்த் திரிந்து முடிந்தது.

வருதலென்னும் பகுபதம் வா என்னும் பகுதியும் தல் என்னும் விகுதியும் பெற்று, "வலித்தன் மெலித்தல்" (155) என்பதனுற் பகுதி முதல் குறுகி ரகரவுகரம் விரிந்து முடிந்தது.

நடந்தனனென்னும் இறந்தகால வினைப்பகுபதம் நட என்னும் பகுதியும் அன் என்னும் விகுதியும் இறந்தகாலந்தரும் தகர விடைநிலையும் அன்சாரியையும் பெற்றுப் பகுபதவுறுப்புக்கள் இடைச் சொல்லாதலின், "இடையுரி வடசொலி னியம்பியகொளாதவும்" (239) என்பதனுற் பகுதியீற்றினின்ற உயிர்முன் வந்த தகரவிடை நிலை மிகாது அதற்கினமிகுந்து இடைநிலைத் தகர வொற்றின் மேற் சாரியை அகரவுயிரேறிச் சாரியையீற்று னகர வொற்றின் மேல் விகுதி அகரவுயிரேறி முடிந்தது.

நடவாநின்றான் என்னும் நிகழ்கால வினைப்பகுபதம் நட வென்னும் பகுதியும் ஆன் என்னும் விகுதியும் ஆநின்று என்னும் இடைநிலையும் பெற்று உடம்படுமெய்தோன்றிக் குற்றுகரங்கெட்டு உயிரேறி முடிந்தது.

நடப்பானென்னும் எதிர்கால வினைப்பகுபதம் நட என்னும் பகுதியும் ஆன் என்னும் விகுதியும் பகர இடைநிலையும் பெற்று, "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன், கசதப மிகும்" (165) என்பதனாற் பகரமிகுந்து உடன்மேலுயிரேறி முடிந்தது.

நடந்தது என்னும் அஃறிணை ஒருமைப்படர்க்கை இறந்தகால வினைப்பகுபதம் துவ்விகுதிக்கும் தகரவொற்றுக்கும் இடையே அகரச் சாரியை பெற்று முடிந்தது.

நடத்து என்னும் ஏவற்பிறவினைப் பகுபதம் நட என்னும் பகுதியும் து என்னும் விகுதியும் பெற்றுத் தகர மிகுந்து முடிந்தது.

நடப்பி என்னும் அவ்வினைப் பகுபதம் நட என்னும் பகுதியும் பி என்னும் விகுதியும் பெற்றுப் பகரமிகுந்து முடிந்தது.

நடப்பிப்பி என்னும் அவ்வினைப் பகுபதம் நடப்பி என்னும் பகுதியும் பி என்னும் விகுதியும் பெற்றுப் பகரம் மிகுந்து முடிந்தது.

நடத்துவி என்னும் அவ்வினைப் பகுபதம் நடத்து என்னும் பகுதியும் வி என்னும் விகுதியும் பெற்று முடிந்தது.

நடத்துவிப்பி என்னும் அவ்வினைப் பகுபதம் நடத்துவி என்னும் பகுதியும் பி என்னும் விகுதியும் பெற்றுப் பகரமிகுந்து முடிந்தது.

விளம்பிய பகுதி வேறனவையும் இவ்வாறே முடிந்து அனைத்தும் ஒரு பகுதியாய் நின்று மேல்வரும் அன் ஆன் முதலிய விகுதியோடு புணர்ந்தமை காண்க.

நடவான் என்னும் எதிர்மறை வினைப்பகுபதம் நட என்னும் பகுதி எதிர்மறை ஆகார விகுதியோடு புணர்ந்து இரண்டும் ஒரு பகுதியாய் நின்று மேல்வரும் ஆன் விகுதியோடு புணர்ந்து, "ஒரு மொழி மூவழிக் குறைதலு மனைத்தே" (156) என்பதனன் விகுதியினது ஆகாரங் குறைந்து முடிந்தது.

நடவா என்னும் அஃறிணைப் பன்மைப் பகுபதம் "ஆவே யெதிர்மறைக் கண்ணா தாகும்" (329) என்பவாகலிற் பால் காட்டும் ஆகாரவிகுதியன்றி எதிர்மறை ஆகாரம் வேண்டாது முடிந்தது.

நடந்திலன், நடவாநின்றிலன் என்பவற்றுட் காலவிடைநிலையும் அவற்றை மறுத்த இல் என்னுமெதிர்மறை யிடைநிலையும் தந்து அவற்றை ஒரு பகுதியாக்கி முடிக்க.

இவ்வாறே பெயரெச்சவினையெச்சங்களும் பிறவும் பகுதி விகுதி முதலிய உறுப்புக்களோடு ஏற்றவாறு அமைந்து கிடந்தமை காண்க.

"பகுதி விகுதி" (133) என்னும் சூத்திர முதல் இச்சூத்திர மீறுகப் பகுபதங்களை மேலோர் முடித்தவாறு முடித்துக் காட்டினமையின் இது முடித்துக்காட்டலென்னும் உத்தி.

முன்னைத் தமிழ் நூல்களுள் இல்லனவற்றை இவ்வாசிரியர் தாமே பகாப்பதம் பகுபதமென முன்னர் நாட்டி இச்சூத்திரங்காறும் அவற்றிற்கு இலக்கணந்தந்து நிறுத்தமையின், தாஅனுட்டித் தனுஅது நிறுப்பென்னும் மதம். (18)

## வடமொழியாக்கம்

146. இடையி னன்கு மீற்றி லிரண்டும்
அல்லா வச்சை வருக்க முதலீறு
யவ்வாதி நான்மை ளவ்வாகு மையைம்
பொதுவெழுத் தொழிந்தநா லேழுந் திரியும்.

எ - ன், இவ்வியல் மொழியாக்கமாகலின் ஆரியமொழி திரிந்து வடமொழியாமாறு உணர்த்துவான் தொடங்கி அவற்றின் பொது விதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஆரிய மொழியுள், அச்சென்று வழங்கும் உயிர் பதினாறனுள்ளும் இடையினின்ற ஏழாமுயிர் முதனான்கும் ஈற்றினின்ற இரண்டுமான ஆறும் ஒழிந்துநின்ற அ ஆ இ ஈ உ ஊ ஏ ஐ ஓ ஔ என்னும் பத்தும், அல் என வழங்கும் முப்பத்தேழு மெய்யுள்ளும் க ச ட த ப என்னும் ஐந்து வருக்கத்தினிடையில் உரப்பியும் எடுத்தும் கனைத்தும் சொல்லப்பட்டு நிற்கும் மூன்றும் ஒழிந்த க ங ச ஞ ட ண த ந ப ம என்னும் பத்தும், ய ர ல வ என்னும் நான்கும், ளவ்வும் ஆகுமிருபத்தைந்தும் தமிழிற்கும் ஆரியத்திற்கும் பொதுவெழுத்தாம்; இவையன்றி மேல் உயிருள் ஒழிந்த ஆறும், ஐந்துவருக்கங்களினும் இடைகளினொழிந்த பதினைந்தும், முப்பதா மெய்முதலான எட்டனுள் ளகரமொழிந்த ஏழுமான இருபத்தெட்டும் ஆரியத்திற்குச் சிறப்பெழுத்தாய்த் தமக்கேற்ற பொதுவெழுத்தாகத் திரிந்து வடமொழியாம் எ - று.

மேல் ஏழாமுயிரென விதப்பாராதலின் இடையினான்கென விதவாது கூறினர்.

பொதுவெழுத்தெனவே சிறப்பெழுத்தென்பது பெற்றாம்; தமிழைநோக்கச் சிறப்பாயின.

சிறப்பெழுத்துத் திரியுமென வரையறை கூறவே பொதுவெழுத்து இயல்பாயும் தமக்கேற்ற விகாரமாயும் வருமென்பதூஉம் கூறினாராயிற்று. (19)

147. அவற்றுள்,

ஏழாமுயி ரிய்யு மிருவுமை வருக்கத்
திடையின் மூன்று * மவ்வம் முதலும்
எட்டே யவ்வு முப்பது சயவும்
மேலொன்று சடவு மிரண்டு சதவும்
மூன்றே யகவு மைந்திரு கவ்வும்
ஆவீ றையு மீயீ றிகரமும்.

எ - ன், மேலதற்குச் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல் திரியுமென்றவற்றுட் சிறப்பெழுத்தாகிய ஏழாமுயிர் (ஈ என்பது) இகரமும் இருவுமாம்; ஐந்துவருக்கங்களினும் இடையினின்ற மூன்றும் அவ்வவ்வருக்கங்களின் முதலெழுத்தாம்; எட்டாமெய்யான சவ்வருக்கத்துள் எடுத்துச்சொல்லும் மெய் (ஜ என்பது) ஒரோவிடத்து யகரமுமாம்; முப்பதாமெய் (ஶ என்பது) மொழிமுதற்கட் சகரமும் இடைக்கண் யகரமுமாம்; முப்பத்தொன்றுமெய் (ஷ என்பது) மொழிமுதற்கட் சகரமும் இடைக்கண் டகரமுமாம்; முப்பத்திரண்டாமெய் (ஸ என்பது) மொழிமுதற்கட் சகரமும் இடைக்கண் தகரமுமாம்; முப்பத்துமூன்றுமெய் (ஹ என்பது) மொழிமுதற்கண் அகரமும் இடைக்கட் ககரமுமாம்; முப்பத்தைந்தாமெய் (க்ஷ என்பது) இரண்டுககரமாம்; பொதுவெழுத்துள் மொழியிறுதி ஆகாரம் ஐகாரமாம்; மொழியிறுதி ஈகாரம் இகரமாம் எ - று.

மேல் திரியுமெனப் பொதுவிதி போந்தவற்றுட் பயின்று வருவனவற்றிற்குத் திரிபு கூறி ஏனைய வந்தவழிக்காண்க வென்பார் இகரமுமாகுமெனப் பயனில கொடுத்து முடியாது இகரமுமென [1]அவாய்நிலையாக முடித்தார்.

(வ - று.) இடபம், விடபம், திடம் எ - ம்; இருடி, மிருகம், விருத்தி எ - ம் ஏழாமுயிர் இகரமு மிருவு மாயிற்று. நகம், நாகம், மேகம் எ - ம்; [2]சலவாதி, விசயம், [3]சருச்சரை எ - ம்; பீடம்,

(பி - ம்.) *' அவ்வவ்முதலும் '

1. அவாய் நிலையாவது ஒருசொல் மற்றொரு சொல்லை வேண்டி நிற்பது.

2. சலவாதி - ஒரு கருத்துப்பற்றி ஒருவன் கூறிய மொழிக்கு வேறு பொருள் கற்பித்துக்கொண்டு பொருள் கூறுபவன்.

3. சருச்சரை - சுரசுரப்பு; எண்வகைப்பரிசத்துள் ஒன்று; நன்-

பீடை, திடம் எ - ம்; தலம், திநம், தரை எ - ம்; பலம், பந்தம், பாரம் எ - ம் ஐந்துவருக்கத்திலும் உரப்பியும் எடுத்தும் கனைத் துஞ் சொல்லுமூன்றும் *அவ்வம் முதலாயின. அயம், பங்கய மென எட்டாமெய் யகரமு மாயிற்று. சாலை, சூலை எ - ம்; மயானம் எ - ம் முப்பதாமெய் சகரமும் யகரமு மாயிற்று. சட்டி எ - ம் இடபம் எ - ம் முப்பத்தொன்றுமெய் சகரமும் டகரமு மாயிற்று. சித்தி, சூத்திரம், சேனை எ - ம்; ஆதனம், வாதனை எ - ம்; முப்பத்திரண்டாமெய் சகரமும் தகரமு மாயிற்று. அரன், அரி எ - ம்; சிங்கம், மோகம் எ - ம் முப்பத்து மூன்றுமெய் அகரமும் ககரமுமாயிற்று. பக்கம், [1]தக்கண மென முப்பத்தைந்தா மெய் இரண்டு ககரமாயிற்று. வேலை, சாலை, மாலை, உவமை, வனிதை என ஆகாரவீறு ஐகாரவீறாயிற்று. புரி, மேதிநி, குமாரி என ஈகாரவீறு இகரவீறாயிற்று. (20)

148. ரவ்விற் கம்முத லாமுக் குறிலும்
லவ்விற் கிம்முத லிரண்டும் யவ்விற்
கிய்யு மொழிமுத லாகிமுன் வருமே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) ரகர லகர யகரங்களை முதலாகவுடைய ஆரிய மொழிகள் வடமொழியாங்கால் அகர இகர உகரமென்னும் இம்மூன்று குற்றுயிரும் இங்ஙனம் சொன்னவாறே அவ்வட மொழிகட்கு முதலாய் அம்மூன்றெழுத்திற்கும் முன்னர் வரும் எ - று.

(வ - று.) அரங்கம், இராமன், உரோமம் எ - ம், இலாபம், உலோபம் எ - ம், இயக்கன் எ - ம் வரும். (21)

149. இணைந்தியல் காலை யரலக் கிகரமும்
மவ்வக் குகரமு நகரக் ககரமும்
மிசைவரும் ரவ்வழி யுவ்வு மாம்பிற.

எ - ன், இதுவுமது.

(இ-ள்.) ஆரியமொழியுள் இரண்டெழுத்திணைந்து ஓரெழுத்து நீர்மையாய் நடக்குங்கால் பின்னிற்கும் யரலக்கண்மிசை இகர

---

(பி - ம்.) *'அவ்வவ்'

சூ. 454, உரை; வடநூலார் இம்மொழிக்கு வேறுபொருள் கூறுவர்.

1. தக்கணம் - தெற்கு; "தருமவாத் திரையெனத் தக்கணம் போந்துழி" (பெருங். 1. 36 : 238); பாகதச்சிதைவு.

மும், மகரவகரங்கண்மீதே உகரமும், நகரமீதே அகரமும் வந்து வடமொழியாம்; இணைந்து முன்னிற்கும் ரகரத்திற்குப் பின்னர் உகரமும் வரும் எ - று.

(வ - று.) வாக்கியம், வாச்சியம், நாட்டியம் எ - ம்; வக்கிரம், வச்சிரம், சத்திரம், [1]அப்பிரம் எ - ம்; [2]சுக்கிலம், [3]ஆமிலம் எ - ம்; பதுமம் எ - ம்; பக்குவம் எ - ம்; அரதநம் எ - ம்; அருக்கன், அருத்தம், சருக்கம், கருப்பம், தருமம் எ - ம் வரும்.

பிறவென்றமையானே சத்தி, [4]கட்சி, காப்பியம், பருப்பதம் என்றற்றொடக்கத்துத் திரிபும் தூலம், அத்தம், ஆதித்தன், [5]அநத்தம் என்றற்றொடக்கத்துக் கேடும் மற்று விகாரத்தால் வருவனவுங் கொள்க. (22)

150. றனழள ஒவ்வு முயிர்மெய்யு முயிரள
பல்லாச் சார்புந் தமிழ்பிற பொதுவே.

எ - ன், வடமொழியாக்கங் கூறவேண்டி ஆரியத்திற்குப் பொதுவெழுத்துச் சிறப்பெழுத்தென விதந்தமையின் அவ்விதப்புத் தமிழிற்கு உண்டோ இன்றோ வென்று ஐயுறுவார்க்கு ஐயம் அறுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) முதலுஞ்சார்புமான நாற்பதெழுத்துள்ளும் றகர னகர ழகர எகர ஒகரமான முதலெழுத்தைந்தும், உயிர் மெய்யும் உயிரளபெடையும் அல்லாத சார்பெழுத்தெட்டும் தமிழிற்குச் சிறப்பெழுத்தாம்; ஒழிந்த இருபத்தேழும் தமிழிற்கும் ஆரியத் திற்கும் பொதுவெழுத்தாம் எ - று.

மெய்யை முற்கூறினர், எகர ஒகரம் பிராகிருதத்திற்கும் உரியவாதலினென்க. (23)

2. பதவியல் முற்றிற்று

---

1. அப்பிரம் - மேகம். 2. சுக்கிலம் - வெண்மை.
3. ஆமிலம் - புளி. 4. கட்சி (கக்ஷி) - கூடு.
5. அநத்தம் = அநர்த்தம் - கேடு.

மூன்றுவது

# உயிரீற்றுப் புணரியல்

---

### புணர்ச்சி

151. மெய்யுயிர் முதலீ ருமிரு பதங்களும்
தன்னொடும் பிறிதொடு மல்வழி வேற்றுமைப்
பொருளிற் பொருந்துழி நிலைவரு மொழிகள்
இயல்பொடு விகாரத் தியைவது புணர்ப்பே.

எ - ன், நிறுத்தமுறையானே மேலையியலுட்கூறிய பதங்கள் ஒன்றேடொன்று புணருமாறு உணர்த்துவான் தொடங்கிப் புணர்ச்சி இன்னதென்பதூஉம் பொதுப்புணர்ச்சியும் முறையே தலைப்பெய்து உயிரீற்றுப்பதம் புணருஞ் சிறப்புப்புணர்ச்சி கூறு வார், கமுகந்தோட்டமென்றற்போல மிகுதிபற்றியகுறியாய் இவ் வியற்கு உயிரீற்றுப் புணரியலெனப் பெயர்தந்தமையின் இவ் வியலில் வைத்தமுறையே புணர்ச்சி இன்னதென்பது உணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) மெய்யையும் உயிரையும் முதலும் ஈறுமாக உடைய பகாப்பதம் பகுபதமென்னும் இரண்டுபதங்களும், தன்னொடு தானும் பிறிதொடு பிறிதுமாய் அல்வழிப்பொருளினுதல் வேற்றுமைப் பொருளினுதல் பொருந்துமிடத்து நிலைமொழியும் வருமொழியும் இயல்பொடும் விகாரத்தொடும் பொருந்துவது மேற்கூறிய புணர்ச்சியாம் எ - று.

உயிர்மெய்முதலீறுமெனின் உயிர்மெய்யென்னும் ஓரெழுத் தாகப் பொருள்படுமாதலின், மெய்யுயிர்முதலீறுமென மெய்யை முற்கூறினர்.

திசைச்சொல்லும் வடசொல்லும் பெயர் வினை யிடை யுரி யாயடங்குமாதலின் அவற்றுள் அடக்கி இருபதங்களுமென்றார்.

வேற்றுமையல்லாதவழி அல்வழியாதலின், வேற்றுமை யல் வழியெனக் கூறல்வேண்டும்; அங்ஙனங்கூறின் வேற்றுமைப் பொருள் அல்வழிப்பொருளென இருபொருள்படாது வேற்றுமை யென்பது அல்வழியை விசேடித்ததாய் அல்வழிப்பொருளொன் றிலும் பொருந்துழியெனப் பொருள்படுமாதலின், அல்வழிவேற் றுமையென அல்வழியை முற்கூறினர்.

இயல்பெனினும் தன்மையெனினும் இயற்கையெனினும் ஒக்கும்; விகாரமெனினும் செயலெனினும் செயற்கையெனினும் விதியெனினுமொக்கும். இவ்விரண்டனுள்,

" நின்ற சொன்முன் னியல்பா கும்மே " (தொல். தொகை. சூ. 2) என இயற்கையைச் செயற்கையாகவும்,

" இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும்
வசையன்று வையத் தியற்கை " (நாலடி. மெய்ம்மை. 1)

எனச் செயற்கையை இயற்கையாகவும் கூறுதல் இலக்கணை.

புணரியன்மூன்றனுள்ளும் மெய்யுயிர் முதலீருமிருபதங்களும் இவ்வாறு புணர்ந்துவருதல் காண்க. (1)

## வேற்றுமை அல்வழி இவையென்பது

152. வேற்றுமை யைம்முத லாறு மல்வழி
தொழில்பண் புவமை யும்மை யன்மொழி
எழுவாய் விளியீ ரெச்சமுற் றிடையுரி
தழுவு தொடரடுக் கெனவீ ரேழே.

எ - ன், மேல் அல்வழிவேற்றுமையென்றார் அவை இவை யென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வேற்றுமைப் புணர்ச்சி, " பெயரே ஐ ஆல் " (292) என்னுஞ் சூத்திரத்து ஐமுதலிய ஆறுருபும் தொக்கும் விரிந்தும் வரப் பதங்கள் பொருந்தும் தொடர்ச்சியாம்; அல்வழிப் புணர்ச்சி வினைத்தொகை முதலிய ஐந்து தொகைநிலையும் எழுவாய்முதல் ஒன்பதுதொகாநிலையுமெனப் பதங்கள் பொருந்தும் தொடர்ச்சி பதினான்காம் எ - று.

வேற்றுமைத்தொகைநிலை தொகாநிலையென விதவாமையின் அவ்விரண்டும் வேற்றுமைப் புணர்ச்சியென்பதூஉம், முற்றெச்சங்களை விதந்தமையின் [1]தொழிலென்றது வினைத்தொகை யென்பதூஉம், வினைத்தொகைமுதலைந்தும் விரிந்தவழி, வினைத் தொகை பெயரெச்சமாயும் பண்புத்தொகையிரண்டும் பெயரெச் சக்குறிப்பாயும், உவமைத்தொகை இரண்டாம் வேற்றுமையொடு பயனிலையாயும், உம்மைத்தொகை இடைச்சொற்சந்தியாயும், அன் மொழித்தொகை பொற்றொடியென்பது பொன்னாலாய தொடியினை யுடையாளெனச் சொற்களும் சந்திகளும் பலவாயுமுடிதலானும், வேற்றுமைத்தொகையன்றி இத்தொகைகள் தொகாநிலையுமா மென மேற்சூத்திரம் செய்யாமையானும் இவ்வைந்து தொடரும் தொகைநிலையென்பதூஉம் பெற்றும்.

இரண்டென்பதனை முற்றென்பதனோடும் தழுவுதொடரென் பதனை எல்லாவற்றோடும் ஒட்டுக.

1. வினைத்தொகையைத் தொழிலென்பது ஒருவகைக் குறிப்பு.

அடுக்கும் தழுவுதொடராயினும் ஒருசொல் அடுக்கிவருதலின் ஏனையபோல் தழுவுதொடரன்றென்பார், விதந்து பிற் கூறினர்.

(வ - று.) பொன்னுடையான், பொன்னையுடையான்; கல்லெறிந்தான், கல்லாலெறிந்தான்; கொற்றன்மகன், கொற்றற்கு மகன்; மலைவீழருவி, மலையின்வீழருவி; மலையுச்சி, மலையினது உச்சி; மலைமுழை, மலைக்கண்முழையென வேற்றுமைப் புணர்ச்சி வந்தன. கொல்யானை, கருங்குதிரை, ஆயன்சாத்தன், பொற் சுணங்கு, இராப்பகல், பொற்றொடி, கொற்றன்கொடுத்தான், கொற்றாகொள், உண்டசாத்தன், உண்டுவந்தான், உண்டான் சாத்தன், குண்டுகட்டெருமை, "அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை," (குறள், 1081) "நனிபேதையே" (புறநா. 227), "படைபடை யென்றஞ்சி" என அல்வழிப் புணர்ச்சி வந்தன.

தழுவுதொடர் ஆறும் பதின்குமெனக்கூறவே தழுவாத தொடரும் சிலவுள, அவ்விருவழியுமென்றாராயிற்று. அவை வருமாறு:—கைக்களிறு, பொற்குடம், ஆடகப்பூண் என்பன; தழுவு தொடராகிய உருபும் பயனுமுடன்றொக்கமையின், களிறு குடம் பூண் என்பனவற்றோடு நிலைமொழிகள் தழுவாது தொடர்ந்து மூன்றுவிகாரமுமேற்ற வேற்றுமைப்புணர்ச்சி. "இரும்பு திரித் தன்ன மாயிரு மருப்பிற், பரலவ லடைய விரலை தெறிப்ப" (அகநா. 4) என்பதனுள், மருப்பினிரலை எனக் கொண்டு கூட்டாக வந்து இரண்டாம்வேற்றுமை உருபும் பயனும் உடன்றொக்கு மருப்பென்பது இரலையென்பதனோடு புணராது மருப்பிற்பர லெனப்புணர்ந்து திரிந்தது. இத்தொடக்கத்தனவெல்லாம் தழாத் தொடராயவேற்றுமைப் புணர்ச்சியாமென்க. "சுரை யாழ வம்மி மிதப்ப" என்பதனுள் மொழிமாற்றுய்ச் சுரைமிதப்பவெனத் தழுவுதொடராக வருவழி இயல்பாகமுடியும் எழுவாய்ப்புணர்ச்சி சுரையாழவெனத் தழாத்தொடராய் உடம்படு மெய்தோன்றி முடிந்தது. இத்தொடக்கத்தனவெல்லாம் தழாத்தொடராய அல் வழிப்புணர்ச்சியாமென்க.

மாடத்தைக்கட்டினனென வேற்றுமையுருபும் சாரியையும் விரிந்துநின்ற இருமொழியொருசந்தியாகிய வேற்றுமைச் சந்தியை வேற்றுமைநயங்கருதி நான்குசொல் மூன்றுசந்தியாக்கி, உருபும் சாரியையும் இடைச்சொல்லாதலின் அல்வழியுள் இடைச் சொற் சந்தியென்று கோடலுமொன்று.

" எட்டே வேற்றுமை " (291) என மேற்கூறுவார் எழுவாயும் விளியுமொழித்து 'வேற்றுமை யைம்முத லாறு' என்றதென்னை யெனின், பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலான் வேற்றுமை யெட்டென்பார், எழுவாய்க்கும் விளிக்கும் உருபுபெயரும் பெயரது விகாரமுமன்றி வேறின்மையின் அவ்விரண்டினையுமொழித்துத் தமக்கென உருபுடையன இடைநின்ற ஆறுவேற்றுமையுமே யாதலின், அவற்றின் உருபாறும் தொக்கும் விரிந்தும் இடைநிற்க அவ்வாறேடும் பதங்கள் பொருந்தும் புணர்ச்சியை வேற்றுமைப் புணர்ச்சி யென்றாரென்க.

வினைத்தொகை, பண்புத்தொகை, அன்மொழித்தொகை யென்னும் அல்வழிப் புணர்ச்சியவாய தொகைநிலைத்தொடர் மொழிகளை [1] ஒருமொழிகளென்பாருமுளர்; அவர்கூற்றுத் தாய் மலடியென்றற்போலும். (2)

## இயல்பு புணர்ச்சி

153. விகார மனைத்து மேவல தியல்பே.

எ - ன், மேல் இயல்பொடு விகாரத்தியைவதென்றார், அவற்றுள் இயல்பாவது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல்வரும் விகாரவகையனைத்தும் மேவாதது இயல்பு புணர்ச்சியாம் எ - று.

(வ - று.) பொன்மலை, புகழழகிது, ஒளிமணி எனவரும்.

இயல்புக்கு விதிகூறவேண்டுவ தென்னையெனின், மலர்க்கணை தொடுத்தானென விகாரமாயவழி மலராகிய கணையைத் தொடுத்தானெனவும், மலர்கணை தொடுத்தானென இயல்பாயவழி மலரையும் கணையையும் தொடுத்தானெனவும் பொருள் வேறுபடுதலிற் கூறவேண்டுமென்க. (3)

## விகாரப் புணர்ச்சி

154. தோன்ற றிரிதல் கெடுதல் விகாரம்
மூன்று மொழிமூ விடத்து மாகும்.

எ - ன், விகாரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மெய்யேனும் உயிரேனும் உயிர்மெய்யேனும் சாரியையேனும் ஒன்றும் பலவும் தோன்றுதலும் திரிதலும் கெடுதலும்

1. வினைத்தொகை, பண்புத்தொகை, அன்மொழித் தொகைகளை ஒரு மொழிகளென்று கூறுபவர் இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் (தொல். புணர். சூ. 8.); இ. வி. உரைகாரரும் பெரும்பாலும் இக் கொள்கையினரென்று தெரிகிறது; சூ. 334, உரை.

மேற்சொன்ன விகாரமாம். இம்மூவகை விகாரமும் நிலைமொழி வருமொழிகளின் முதலிடை கடையென்னும் மூன்றிடத்தும் ஏற்ற பெற்றி வரும் எ - று.

(வ - று.) பூக்கொடி, பூங்கொடி : வருமொழிக்கு முதலில் மெய் தோன்றின. [1]பஃறலை : வருமொழி முதலினும் நிலைமொழி யீற்றினும் மெய்திரிந்தன. நிலவலயம் : நிலைமொழியீற்றின் மெய்கெட்டது. அறுபது : நிலைமொழி முதலுயிர்திரிந்து வருமொழி இடையொற்றுக்கெட்டது. பல்பொருள் : நிலைமொழி ஈற்றுயிர் கெட்டது. நாடுரி : நிலைமொழியீற்றுயிர் மெய்கெட்டு, டகரந்தோன்றிற்று. தமிழப்பிள்ளை, பனங்காய் : நிலைமொழி யீற்றிற் சாரியைதோன்றின. காட்டாதொழிந்தன வந்தவழிக் காண்க.

இவ்விகாரங்கள் நிலைமொழி வருமொழிகளுள் ஒரு மொழியைச் சார்ந்து வந்தன.

ஒருமொழி தொடர்மொழியென விதவாது பொதுப்பட மொழி மூவிடத்துமாகு மென்றமையின், இருமொழியைச் சார்ந்து வருவனவும் உளவெனக் கொள்க. அவை வருமாறு:—ஆவழகிது : வகரவுடம்படுமெய்தோன்றிற்று ; [2] உரியநெய் : யகர உயிர்மெய் தோன்றிற்று ; புளியங்காய் : அம்முச்சாரியை தோன்றிற்று. இத்தோன்றல் விகாரங்கள் நிலைமொழிவருமொழிகளுள் ஒருமொழிக்கே உரியவன்றி இருமொழியையும் சார்ந்துவந்தமை காண்க. (4)

## செய்யுள் விகாரம்

155. வலித்தன் மெலித்த னீட்டல் குறுக்கல்
விரித்த றொகுத்தலும் வருஞ்செய்யுள் வேண்டுழி.

எ - ன், செய்யுள்விகாரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அல்வழிவேற்றுமையான்வரும் மேற்கூறிய மூன்று விகாரமுமேயன்றி, ஆறுக இங்ஙனம்கூறிய விகாரங்களும் வருவனவாம், செய்யுளகத்து அடிதொடை முதலிய நோக்கி அமைக்க வேண்டுமிடத்து எ - று.

இவ்வதிகாரத்துட் கூறுஞ் செய்யுண்முடிபும் பிறவும் அடங்குதற்கு இன்னது நோக்கியென வரைந்து கூறுராயினர்.

(வ - று.) "குறுத்தாட் பூதஞ் சுமந்த, அறக்கதி ராழியெம் மண்ணலைத் தொழினே": இது குறுந்தாளெனற்பாலது குறுத்

1. பஃறலை; "படங்கிளர் பஃறலைப் பாந்த ளேந்துபார்" கம்ப. திருவவ. 107.

2. உரி - நாழியிற்பாதி.

தாளென வலித்தவாறு. "தண்டையி னினக்கிளி கடிவோள், பண்டைய ளல்லண் மாணேக் கினளே": இது [1] தட்டையெனற் பாலது தண்டையென மெலித்தவாறு. "தீத்தொழிலே கன்றித் திரிதந் தெருவைபோற், போத்தரூர் புல்லறிவினர்" (நாலடி. கயமை, 1) : இது [2] 'பொத்தரூர்' எனற்பாலது போத்தருரென நீட்டியவாறு. [3] "யானே, யெருத்தத் திருந்த விலங்கிலைவேற் றென்னன், றிருத்தார் நன் றென்றேன் றியேன்": இது 'தீயேன்' எனற்பாலது தியேனெனக் குறுக்கியவாறு. "சிறியிலை வெதிரி னெல்விளை யும்மே" (புறநா. 109) : இது, 'விளையுமே' எனற் பாலது விளையும்மேயென ஒற்றில்வழி ஒற்றை விரித்தவாறு; இத னுள், 'சிறியவிலை' எனற்பாலது சிறியிலையெனத் தொகுத்தவாறு. "தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக், கற்றனைத் தூறு மறிவு" (குறள், 396) : இதுவும் தொட்டது, கற்றதெனற் பாலன தொட்டு, கற்று எனத் தொகுத்தவாறு. பிறவு மன்ன. (5)

156. ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அடி தொடை முதலிய நோக்கித் தொகுக்கும் வழித் தொகுத்தலன்றி வழக்கின்கண்மரூஉப்போலச் செய்யுட்கண்மரூஉ வாய் அடிப்பாடாக ஒருமொழி முதல் இடை கடையென்னு மூன்றி டத்தும் குறைந்துவருதலும் செய்யுள் விகாரமாம் எ - று.

(வ - று.) "மரையிதழ் புரையு மஞ்செஞ் சீறடி" எ - ம், "வேதின வெரிநி னோதிமுது போத்து" (குறுந். 140) எ - ம், "நீலுண் டுகிலிகை கடுப்ப" எ - ம் முறையே தாமரை ஒந்தி நீல மெனற் பாலன குறைந்தவாறு காண்க.

செய்யுட்கேயுரிய விகாரங்களை ஈண்டுக் கூறியதென்னை யெனின், செய்யுளகத்து அல்வழிவேற்றுமையான் வரும் மூன்று விகாரமும் இவ்வொன்பது விகாரமும் வருதலின் வேறுபாடறிதற் கென்க. (6)

157. ஒருபுணர்க் கிரண்டு மூன்று முறப்பெறும்.

எ - ன், அல்வழிவேற்றுமைப் புணர்ச்சி விகாரத்தின் வருவ தோர் ஐயமறுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருபுணர்ச்சிக்கண், தோன்றல் திரிதல் கெடுத

---

1. தட்டை - கிளிகடி கருவி.
2. பொத்து - பொந்து.
3. "பன்மாடக்கூடல்" என்னுஞ் செய்யுளிறுதியிலுள்ளது.

லென்ற விகாரம் எத்துணைவருமென்று ஐயுறற்க; ஒன்றேயன்றி இரண்டும் மூன்றும் வரப்பெறும் எ - று.

'விகாரத் தியைவது புணர்ப்பு' (151) எனவே ஒன்றுவருதல் கூறுதேயமைதலின் இரண்டு மூன்று மென்றார்.

(வ - று.) யானைக்கோடு, நிலப்பனை, பனங்காயென முறையே காண்க. (7)

## பொதுப்புணர்ச்சி

158. எண்மூ வெழுத்தீற் றெவ்வகை மொழிக்கும்
முன்வரு ஞநமய வக்க ளியல்பும்
குறில்வழி யத்தனி ஐந்நொது முன்மெலி
மிகலுமாம் ணளனல வழிநத் திரியும்.

எ - ன், பொதுப்புணர்ச்சி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இயல்பாகவும் விதியாகவும் இருபத்துநான்கெழுத்தையும் ஈறுகவுடைய பெயர்ச்சொல் வினைச்சொல் இடைச்சொல் உரிச்சொல் திசைச்சொல் வடசொலென்பன நிலைமொழியாக நிற்க, இவற்றிற்கு முன்னர்வரும் ஞகார நகார மகார யகார வகாரங்கள் அல்வழிவேற்றுமையாய் இருவழியும் இயல்பாதலும் குற்றெழுத்தின் பின் வரும் யகரவொற்றே ஓரெழுத்தொருமொழியான உயிர் உயிர்மெய் யென்னும் ஐகாரமே நொவ்வே துவ்வே என்பனவற்றிற்கு முன்னர்வரும் ஞகார நகார மகாரங்கள் பிறசொற்கண் முன் இயல்பாதலன்றி மிக்குமுடிதலுமாம்; ணகார ளகார னகார லகாரங்கட்கு முன்வரும் நகாரம் பிறவற்றின்முன் இயல்பாதலன்றித் திரியும் எ - று.

எவ்வகைமொழிக்கு மென்றமையான், விதியீறும் பெற்றாம்.

நகரம் இவ்வாறு திரியுமென ஈண்டுக்கூறிக் குறைவறுமையின், மேலவற்றோடு ஒருங்கெண்ணாது விதந்தார். புணரியலிடத்து யாண்டும் அல்வழி வேற்றுமையெனக் குறிப்பாயேனும் வெளிப் படையாயேனும் விதவாராயின் இருவழியுங் கொள்க.

(வ - று.) விள, பலா, புளி, தீ, கடு, பூ, சே, பனை, கோ, கௌ; உரிஞ், மண், பொருந், மரம், பொன், மெய், வேர், வேல், தெவ், யாழ், வாள், எஃகு என நிறுத்தி ஞான்றது, நீண்டது, மாண்டது, யாது, வலிது எ - ம், ஞாற்சி, நீட்சி, மாட்சி, யாப்பு, வலிமை எ - ம், [1] விளவைநாட்டினான், மண்ணைவைத்தான் எ - ம் வரு

1. விளவைநாட்டினான், மண்ணைவைத்தானென்பவை அகரஉயிரீற்றுப்பெயரின் பின்னும் ணகரமெய்யீற்றுப் பெயரின் பின்னும் வந்த உருபின்பின் மெல்லெழுத்தும் இடையெழுத்தும் இயல்பானமைக்கு உதாரணங்கள்.

வித்து இருவழியும் வருமொழிக்குமுதலாய மென்கணமும் இடைக் கணமும் இயல்பாயவாறு காண்க. ஒழிந்த உயர்திணைப் பெயர் முதலிய [1] அறுவகைச் சொற்களினும் இவ்வாறே யொட்டுக. மெய், கை : ஞான்றது, நீண்டது, மாண்டது எ-ம், ஞாற்சி, நீட்சி, மாட்சி எ-ம் இருவழியும் மிக்கன. நொ, து : ஞெள்ளா, நாகா, மாடா என இவை வினையாகலின் அல்வழியில் மிக்கன.

[2] தொழிற்பெயரிறுதிமெய் உகரம் பெறுதலும் நகரத்திரிபும் மேல்வரும் (207, 237) சிறப்புச்சூத்திரத்துட் காண்க.

மெலி மிகலுமாமென எண்ணின்கண் நிற்கும் எச்சவும்மை யானே நொ, து என்னும் இரண்டு சொன் முன்னும் இடையினம் மிகலுமாமெனக் கூறினுராயிற்று.

அவை வருமாறு : நொய்யவளு, நொவ்வளவா, துய்யவளு, துவ்வளவா எனவரும். இடையினமிகுதல், குறில்வழியவ்விற்கும் தனிஐக்கும் பொருந்தாமையின் உம்மையாற் றழீஇயினுர். இவ் வாறு இடையினமிகுதலை ஆசிரியர் தொல்காப்பியரும், "அவற் றுள், மெல்லெழுத் தியற்கை யுறழினும் வரையார்" (தொகை. 3) என உம்மை யாற்றழீஇயினுர். அச்சூத்திரத்திற்கு அவ்வாசிரியர் கருத்தன்றி [3] வேறுரை செய்வாருமுளர். நொ, து என்னும் இவ் விரண்டு சொல் முன்னும் மெல்லினமும் இடையினமும் மிகாவேற் புணர்ச்சியின்றி [4] விட்டிசைபோலும். அன்றேல், வாழைபழம், கீரைகறி என்ருற்போலும்.

எகரவீற்றிற்கு உதாரணம் காட்டிற்றிலம் ; அது வினு விடைச் சொற்கணன்றி ஈருகாமையானும், அவ்வினுவிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி மேற் (163) கூறுதலானுமென்க.

இச்சூத்திரம் முதலியன தொடர்ச்சொற்புணர்த்தலென்னு முத்தி. (8)

159. பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க ளீற்றுமெய்
வலிவரி னியல்பா மாவி யரமுன்
வன்மை மிகாசில விகாரமா முயர்திணை.

எ-ன், இதுவுமது.

---

1. அறுவகைச்சொல் : பெயர், வினை, இடை, உரி, திசைச்சொல், வடசொல். 2. தொழிற்பெயர்—முதனிலைத் தொழிற்பெயர்.

3. இளம்பூரணருப், நச்சினுர்க்கினியரும்.

4. விட்டிசை - வருமொழியோடு தொடர்தலின்றி வேறுபட்டு ஒலித் தலையுடையது ; "விட்டிசைத் தல்லான் முதற்கட் டனிக்குறி னேரசை யென், றெட்டப்படாது" யா-கா. ஒழிபு. சூ. 2.

(இ - ள்.) இருதிணைப் பொதுவான பெயர்க்கும் உயர்திணைப் பெயர்க்கும் ஈருனமெய்கள் வல்லினமுதல்மொழி வந்தால் இயல்பாம். உயிரே, யகாரமே, ரகாரமே என்னும் இவ்வீற்று அவ்விரு பெயர்கள் முன்னரும் வரும் கசதபக்கள் மிகாவாம். மெய்யுயிரீற்று உயர் திணைப் பெயர்கள் [1]நாற்கணங்களோடும் புணருமிடத்து நிலைமொழி வருமொழிகள் விகாரப்படுவன சிலவுளவாம் எ - று.

வல்லினத்துள் மயங்காதன மயங்கின் ஈற்றுமெய் விகாரப் படுவனவுமுளவாகலிற் பொதுப்பட வலிவரினென்றும், வல்லினம் மிகுதற்குரிய ழகரம் அஃறிணைக்கன்றி இவ்விருபெயர்க்கும் ஈரு காமையின் அதனையொழித்து யரமுன்னென்றும், வன்கணமே யன்றி ஏனைக்கணங்கள் புணரினும் விகாரப்படுமாதலின் இறந்தது தழீஇய எச்சவும்மை கொடுத்து விகாரமுமாமென்னுது விகாரமா மென்றும், அவ்விகாரம் நிலைமொழி வருமொழி யிரண்டினும் ஏற்ற பெற்றியாக வருதலின் உயர்திணையீறென்னுது உயர்திணை யென்றுங் கூறினர். உயர்திணைப்பெயரைப் பின்வைத்தார், பின் பும் எடுத்து விதித்தற்கென்க.

(வ - று.) சாத்தன், கொற்றன், ஆண்: குறிது, சிறிது, தீது, பெரிது ; குறியன், சிறியன், தீயன், பெரியன் எ - ம், கை, செவி, தலை, புறம் எ - ம் பொதுப்பெயரிறுதி னகர ணகரங்கள் வன்மை வர இருவழியும் இயல்பாயின. ஊரன், அவன் : குறியன், சிறியன், தீயன், பெரியன் எ - ம், கை, செவி, தலை, புறம் எ - ம் உயர்திணைப் பெயர்களீற்று னகரம் வன்மைவர இருவழியும் இயல்பாயிற்று. பிறவு மன்ன.

சாத்தி, கொற்றி, தாய்: குறிது, சிறிது, தீது, பெரிது; குறியள், சிறியள், தீயள், பெரியள் எ - ம், கை, செவி, தலை, புறம் எ - ம் பொதுப்பெயரீற்று இகர யகரங்கள்முன் வந்த வல்லினம் இருவழியும் மிகாவாயின. [2]நம்பி, [3]விடலை எ - ம், சேய் : குறியன், சிறியன், தீயன், பெரியன் எ - ம், கை, செவி, தலை, புறம் எ - ம் ; அவர், ஒருவர் : குறியர், சிறியர், தீயர், பெரியர், எ - ம், கை,

1. வன்கணம், மென்கணம், இடைக்கணம், உயிர்க்கணம்.

2. நம்பி - ஆடவர்களிற் சிறந்தவன் ; " நம்பியைக் காண நங்கைக் காயிரம் நயனம் வேண்டும் " (கம்ப. கார்முகப். 43) ; இச்சொல்லுக்குக் குணபூர்ணனென்று பொருளெழுதுவர் பெரியவாச்சான்பிள்ளை.

3. விடலை - பாலைநிலத்தலைவன் ; " கன்னி விடலை " (நம்பி. சூ. 21) ; " விடலையுற் ருரில்லை " சிற். 218.

செவி, தலை, புறம் எ - ம் உயர்திணை இகர ஐகார யகார ரகாரங்கள் முன்வந்த வல்லினம் இருவழியும் மிகாவாயின. பிறவு மன்ன.

[1]கபிலபரணர், வடுகநாதன், அரசவள்ளல் எ - ம், [2]ஆசீவகப் பள்ளி, [3]குமரகோட்டம், குமரக்கோட்டம் எ - ம் இருவழியும் உயர் திணையுட் சில தமக்கேற்ற விகாரமாயின. பிறவுமன்ன. (9)

160. ஈற்றியா வினாவினிப் பெயர்முன் வலியியல்பே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மூன்றீற்றுவினாமுன்னும், யாவென்னும் வினாப் பெயர்முன்னும், உயிரீறு ஒற்றீறாய விளிப்பெயர்கள்முன்னும் வரும் வல்லினம் இயல்பாம்.

(வ - று.) நம்பியா கொண்டான், சென்றான், தந்தான், போயி னான்; உண்கா கொற்றா, சாத்தா, தேவா, பூதா எ - ம், யா குறிய, சிறிய, தீய, பெரிய எ - ம் வினாமுன் வல்லினம் இயல்பாயின. நம்பி, [4]நம்பீ; விடலை, விடலாய்; கிள்ளை, கிள்ளாய்; சாத்தி, சாத்தீ; தாய், தாயே: கொள், செல், தா, போ என உயர்திணைப் பெயர் அஃறிணைப்பெயர் பொதுப்பெயரின் அண்மை விளிமுன்னும் சேய்மைவிளிமுன்னும் வரும் வல்லினம் இயல்பாயின. பிறவு மன்ன.

இறுதி ஏகார ஓகார வினாமுன்னர் வரும் வல்லினம் இயல்பா தற்கு உதாரணங் காட்டிற்றிலம், அவ்விரண்டற்கும் மேற் சிறப்பு விதி, "இடைச்சொல் ஏ ஓ" (201) என்னுஞ் சூத்திரத்துள் அடக் கிக் கூறுதலின். (10)

161. ஆவி யரழ விறுதிமுன் னிலைவினை
ஏவன்முன் வல்லின மியல்பொடு விகற்பே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) உயிரையும் யரழவென்னும் மூன்றொற்றையும் இறுதி யாக உடைய விகுதியுருபினவாய முன்னிலைவினை முன்னும், ஏவல் முன்னும் வரும் வல்லினம் இயல்புடனே விகற்பமாம் எ - று.

1. கபிலரும் பரணரும்: இவர்கள் கடைச்சங்கத்துப் புலவர்களுட் சிறந்தோர்.

2. ஆசீவகப்பள்ளி - ஆசீவகருடைய கோயில்; ஆசீவகர் - ஒருவகை மதத்தினர்.

3. குமரகோட்டம் - முருகக்கடவுள் கோயில்; "கச்சியிற் குமர கோட்டங் காதலித் துறையுங் கந்தன்" கந்த. திருநகர. 107.

4. நம்பீ: "என்னுடைய பந்துங் கழலுந் தந்து போகுநம்பீ" திருவாய். 6. 2 : 1.

(வ - று.) [1]உண்டி, தின்றி, உண்டனை, தின்றனை, உண்டாய், தின்ருய்; உண்டனிர், தின்றனிர்: கொற்ரு, சாத்தா, தேவா, பூதா; கொற்றரே, சாத்தரே, தேவரே, பூதரே என முன்னிலைவினை முன் இயல்பாயின. [2]கொணு, எறி, விடு, ஆய், சேர், தாழ்: கொற்ரு, சாத்தா, தேவா, பூதா என ஏவன்முன் இயல்பாயின. விகற்பம் வந்தவழிக்கண்டுகொள்க. நடகொற்ரு நடக்கொற்ரு, எய்கொற்ரு எய்க்கொற்ரு, ஈர்கொற்ரு ஈர்க்கொற்ரு, தாழ்கொற்ரு தாழ்க்கொற்ரு என ஏவன்முன் விகற்பித்தனவென்று கோடலு மொன்று. இவ்வாறு அருகி வருதலின் இயல்பொடு விகற்பேயென விகற்பத்தைப் பிரித்துக் கூறினர்.

ழகரவீறு முன்னிலைவினை ஏலாமையின் உதாரணம் காட்டிற் றிலம்.

முன்னிலைவினையென்ருர் ஏவலெனா விதந்ததென்னை யெனின் முன்னிலைவினையென்பது தன்மைவினை படர்க்கைவினைகட்கு இன மாகிய முன்னிலைவினையை உணர்த்துமல்லது இனமின்றி முன்னிலை யொன்றற்கேயுரிய ஏவல்வினையை யுணர்த்தாமையினென்க. (11)

## உயிரீற்றுச் சிறப்புப்புணர்ச்சி

162. இஈ ஐவழி யவ்வு மேனை
உயிர்வழி வவ்வும் ஏமுனிவ் விருமையும்
உயிர்வரி னுடம்படு மெய்யென் ருகும்.

எ - ன், உயிரீற்றுப்பதம்புணரும் சிறப்புப்புணர்ச்சி கூறுவான் ருெடங்கி உயிரீற்றின்முன் உயிர்முதல்வந்து புணருமாறு உணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) இகர ஈகார ஐகாரங்களின் வழியே யகரமும், அ ஆ உ ஊ ஒ ஓ ஔ என்னும் இவ்வேழுயிர்களின்வழியே வகரமும், ஏகாரத்தின்வழியே யகரமும் வகரமும் உயிர்முதன் மொழிவந்தால் உடம்படுமெய்யென்று வரும்.

இருமையென்பது, "ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமை யும், தான்புக் கழுந்து மளறு" (குறள், 835) என்ருற்போலக் குணியைக் குணமாகக் கூறுவதொரு மரபுவழுவமைதி.

1. உண்டி - உண்டாய். தின்றி - தின்ருய்.
2. கொணு - கொணர்வாய்.

(வ - று.) மணியழகிது, தீயெழுந்தது, அவையெளவியம் எ - ம், விளவழகிது, பலாவழகிது, கடுவழகிது, பூவழகிது, நொவ் வழகா, சோவழகிது, கௌவழகிது எ - ம், "ஏயேயிவளொருத்தி பேடியோ வென்றார்" (சீவக. 652), சேவழகிது எ - ம், அல்வழிக்கட் கூறியமுறையே உடம்படுமெய்பெற்றன. மணியொளி, விளவடி, மணியை யளித்தானென வேற்றுமைக்கண் வந்தன. பிறவு மன்ன.

"மாயிரு ஞாலம்" (மணி. 14 : 32) என உரிச்சொல் ஆகார வீற்றின் வழியகரவுடம்படுமெய் வந்ததென்னையெனின், அஃது "இடையுரிவடசொலி னியம்பிய கொளாதவும்" (239) என்னுஞ் சூத்திரத்தான் அமையுமென்க.

"விண்வத்துக் கொட்கும்" என மெய்யீற்றின் வழியும் உயிர் வரினுடம்படுமெய் பெறு [1]மென்பாரு முளராலோவெனின், உயிரீற் றின் முன் உயிர்முதல்வரின் உயிரோடுயிர்க்கு மயக்கமின்மையிற் புணர்ச்சியின்றி விட்டிசைத்து நிற்குமாதலின் உடம்படாத அவ் விரண்டும் உடம்படுதற்பொருட்டு இடையே வருமெய்யை உடம்படு மெய்யென்பவாகலின், வருமுயிரேறி ஒற்றுமைப்பட்டுப் புணர்தற் குரிய மெய்யீற்றின் வழித்தோன்றும் மெய்யை உடம்படுமெய்யென் பது பொருந்தாது. அவ்வகரமெய் தோன்றுதற்கு விதி வருஞ் சூத்திரத்துட் கூறுப.

உடன்படலென்பது உடம்படலென மரீஇயிற்று. "உடம்பா டிலாதவர் வாழ்க்கை" (குறள், 890) என வருதல் காண்க. உயி ரோடு உயிர்க்கு மயக்கமின்மையின், வருமுயிர்க்கு உடம்பாக அடுக்கும் மெய் உடம்படுமெய்யெனப் பொருள்கூறுதலுமொன்று.

இவ்வுடம்படுமெய்களின் தோற்றம் ஏனைத் தோன்றல் விகாரம் போலாது மயங்காதன மயங்குதற்கு [2]ஆசுபோலவந்தமையின் இப் புணர்ச்சியை இயல்புபுணர்ச்சியென்று கூறுவார் கூற்றும் அமையு மென்பார் உடம்படுமெய் தோன்றுமென்னாது உடம்படுமெய்யென் றருகு மென்றார்.

ஈண்டும் எகரவீறொழியக்கொள்க. (12)

163. எகர வினாமுச் சுட்டின் முன்னர்
உயிரும் யகரமு மெய்தின் வவ்வும்
பிறவரி னவையுந் தூக்கிற் சுட்டு
நீளின் யகரமுந் தோன்றுத னெறியே.

1. என்பார், நச்சினார்க்கினியர்; தொல். புணர். சூ. 38. உரை; புள்ளி. சூ. 10, உரை. 2. ஆசு - பற்றாசு.

எ - ன், 'இ ஈ ஐவழி' (162) என்னுஞ் சூத்திரத்தானும் 'எண் மூவெழுத்தீற்று' (158) என்னுஞ் சூத்திரத்தானும் எய்தியவிதிவி லக்கிப்பிறிதுவிதிவகுத்தலும் எய்தாதது எய்துவித்தலும் நுதலிற்று.

(இ - ள்.) எ என்னும் வினாவிடைச்சொல்முன்னும், அ இ உ என்னும் மூன்று சுட்டிடைச்சொன்முன்னும் உயிரும் யகரமும் வந்தால் வகரமும், ஒழிந்தமெய்கள் வந்தால் அம்மெய்களும், செய் யுட்கட் சுட்டு நீண்டிசைத்த வழியகரமும் அம்மிகுதல் முறைமை யாம் எ - று.

(வ - று.) எவ்வணி, எவ்யானை; அவ்வணி, அவ்யானை; இவ்வணி, இவ்யானை; உவ்வணி, உவ்யானை எ - ம், அ இ உ: குதிரை, சேனை, தண்டு, படை, ஞாலம், நாடு, மனை, வளை எ - ம், எங்ஙனம், அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், எ - ம், "ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்து" (தொல். பாயிரம்) எ - ம் வகரமும், வந்த மெய்களும், யகரமும் முறையே தோன்றியவாறு காண்க. பிறவு மன்ன.

யகரமுமெய்தின் வவ்வுமென்றமையின், இங்ஙனந்தோன்றிய வகர யகரங்கள் உடம்படுமெய்யல்ல வென்பதூஉம், சுட்டுநீளி னெனவே நீடல் உடன்பாடென்பதூஉம், நீடல் ஒருதலையன்றென் பதூஉம், யகரந்தோன்றுமெனவே இந்நீட்சி அடிதொடைநோக்கி நீட்டும்வழி நீட்டலன்றென்பதூஉம், யகரமுமென எண்ணின்கண் நின்ற இழிவுசிறப்பும்மையான் யகரம் உயிர்வரும் வழியன்றிப் பிறவழித் தோன்றுதென்பதூஉம், நெறியென்றமையின் இவ்வாறு நெறிப்படவருவனவெல்லாம் கோடல்வேண்டு மென்பதூஉம்பெற் றும். "ஆவயினுனை" (தொல். புள்ளி. சூ.1) எனச் சுட்டு நீண்டு, பிற வழியகரந் தோன்றுதாயிற்று. இவ்வாறு நெறிப்பட வருவன வரு மாறு: யாங்ஙனமென யாவினுமுன் வருமொழி ஙகரம் மிகுந்தது. ஆங்ஙனம், ஈங்ஙனம், ஊங்ஙனமெனச் சுட்டுநீண்டவழியும் வரு மொழி ஙகரம் மிகுந்தது. ஈது எ - ம், ஆங்கு, ஈங்கு, ஊங்கு எ - ம், ஆண்டு, ஈண்டு எ - ம் சுட்டுப்பெயர்ச் சொல் நீண்டன. "விண் வத்துக்கொட்கும்" எ - ம், "செல்வுழிச் செல்க" எ - ம், "சார்வுழிச் சார்ந்த தகையள்" எ - ம் மெய்யீற்றுமுன் உயிர் வருங்கால் இங்ஙனம் உடம்படுமெய் அன்றெனக் கூறும் வகரந் தோன்றின. பிறவு மன்ன. (13)

164. உயிர்வரி னுக்குறண் மெய்விட் டோடும்
யவ்வரின் இய்யா முற்றுமற் றொரோவழி.

கால் எ - ம் உயர்திணையஃறிணைப் பெயர்ப்பதமுன் வேற்றுமைக் கண் மிக்கன. ஆடிக்கொண்டான், ஆடாக்கொண்டான், ஆடூஉக் கொண்டான், ஆடெனக்கொண்டான், ஆடக்கொண்டான், [1] உண்பாக்குச் சென்றான், பூத்துக்காய்த்தது; பொள்ளெனப்பரந்தது; சாலப்பகைத்தது எ - ம், இருளின்றிக்கண்டார், பொருளன்றிக் காணார் எ - ம் பலவகைத் தெரிநிலை குறிப்பாய வினையெச்சங்கண் முன் மிக்கன. மற்றைச் சாதி எ - ம், [2] கடிக்கமலம் எ - ம், [3]சொன்றிக்குழிசி எ - ம், கங்கைச்சடை எ - ம் இடைச்சொல் உரிச்சொல் திசைச்சொல் வடசொல்முன் மிக்கன. பிறவு மன்ன.

விதவாதன பெரும்பாலும் மிகுமெனவே விதந்தன சிறு பான்மை மிகுமெனவும், விதவாதன சிறுபான்மை மிகாவெனவும் கூறினாராயிற்று. அவை வருமாறு : நொக்கொற்றா, துக்கொற்றா, சாத்தா, தேவா, பூதா என்பன, " ஏவன்முன் வல்லினமியல்பொடு விகற்பே " (161) என்று முற்கூறிய விதப்புவிதி பெறாது மிகுந் தன. எனவே, நொ து முன் மூவினமும் மிகுமென்றாராயிற்று. ஏரிகரை, குழந்தைகை, குழவிகை, " பழமுதிர் சோலை மலைகிழ வோனே " (முருகு. 317) எ - ம், கூப்புகரம், ஈட்டுதனம், நாட்டு புகழ் எ - ம் இருவழியும் பின்விதவாதன மிகாவாயின. பிறவு மன்ன. (15)

166. மரப்பெயர் முன்ன ரினமெல் லெழுத்து
வரப்பெறு னவுமுள வேற்றுமை வழியே.

எ - ன், உயிரீற்றுச் சில மரப்பெயர்முன் வரும் வல்லெழுத் திற்கு எய்தியது ஒருவழி விலக்கிப் பிறிதுவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உயிரீற்றுமரப்பெயர்கள் முன் மேலைப்பொது விதி (165) யான் வல்லெழுத்துமிகாது வரும் வல்லெழுத்திற்கினமான மெல்லெழுத்து மிகப்பெறுவனவுஞ் சில வுள, வேற்றுமைக்கண் எ - று.

பெறுவன வென்னுஞ்சொல் பெறுனவெனத் தொகுத்தல் விகாரமாயிற்று.

உரையாசிரியர் பெருநம்பியென்பதொரு பட்டமுண்டென்று கூறுதலின் நம்பியென்றும் ஒரு பட்டமுண்டென்று ஊகிக்கப்படுகின்றது.

1. உண்பாக்கு - உண்ணுதற்கு.

2. கடிக்கமலம் : " கடிக்கமல முகங்காட்டக்..............கருநெய்தல் கண்காட்டும் " (தே. பிரமபுரம்.)

3. சொன்றிக்குழிசி - சோற்றுப்பானை.

(வ - று.) [1] விளங்காய், களங்கனி, மாங்கொம்பு, செதிள், தோல், * பூ என வரும். பிறவுமன்ன.

இனமெல்லெழுத்துமென்றுமையிற் பொதுவிதியை இக் காட்டு ஏலாவென்க. (16)

## அகரவீற்றுச் சிறப்புவிதி

167. செய்யிய வென்னும் வினையெச்சம் பல்வகைப்
பெயரி னெச்சமுற் றற னுருபே
அஃறிணைப் பன்மை யம்மமு னியல்பே.

எ - ன், உயிரீறுகட்குத் தனித்தனி சிறப்புவிதி உணர்த்து வான்றொடங்கி, அகரவீற்றுட் சிலவற்றிற்கு எய்தியது விலக்கல் நுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனம் விதந்த அகரவீற்றுச் சொற்கள் ஆறன் முன்னும் வரும் வல்லினம் இயல்பாம் எ - று.

பல்வகை யென்பதனை முற்றென்பதனேடும் ஒட்டுக. பெயரி னெச்சமென இன்சாரியை தவிர்வழிவந்தமையின், விரித்தல் விகாரம்.

இதன் முதலிறுதிகளின் அகரவீற்றுச்சொல் வைத்தமையான் இடையனவும் அகரவீற்றவென்பதூஉம், பல்வகையென்றதனன் வினையடிநான்கினும் பிறந்த பெயரெச்சமுற்றென்பதூஉம், முற்றென விதந்தமையின் அஃறிணைப்பன்மை யென்றது பெய ரென்பதூஉம் பெற்றும்.

வினையடி நான்காவன: இயல்பாகிய வினையடியொன்றும், ஏனைப்பெயர் இடைஉரியடியாகப் பிறந்த வினையடி மூன்றுமாம்.

(வ - று.) உண்ணியகொண்டான், சென்றன், தந்தான், போயினனெனச் செய்யியவென்னும் வினையெச்சமுன் இயல் பாயின. உண்ட, உண்ணுநின்ற, உண்ணுத எ - ம், கடைக் கணித்த, [2] சித்திரித்த, வெளுத்த, சினவிய, [3] கறுவிய, [4] அமரிய எ - ம், திண்ணென்ற, பொன்போன்ற எ - ம், சான்ற, உற்ற எ - ம், குதிரை, செந்நாய், [5] தகர், பன்றி எ - ம் நால்வகைத் தெரிநிலைப்பெயரெச்சமுன்னும் இயல்பாயின. அமர்முகத்த,

(பி - ம்.) * 'பழம்'

1. "விளங்காய் திரட்டினு ரில்லை களங்கனியைக், காரெனச் செய் தாரு மில்" நாலடி. 103.

2. "சித்திரித் தியற்றிய" பெருங். 4. 17 : 76.

3. கறுவிய - கோபித்த. 4. அமரிய - விரும்பிய; அகநா. 5 : 1.
5. தகர் - ஆடு.

[1] "கடுங்கண்ண", சிறிய, பெரிய, உள, இல, பல, சில, எ - ம், பொன்னன்ன எ - ம், கடிய எ - ம், குதிரை, செந்நாய், தகர், பன்றி எ - ம், [2] மூவகைப் பெயரெச்சக் குறிப்பின்முன் இயல்பாயின. முற்றிற்கும் பொருள்வேறுபாடன்றிச் சொல்வேறு பாடின்மையின் இவையே காட்டாகக்கொள்க. வாழ்க வாழிய : கொற்றா, சாத்தா, தேவா, பூதா என வியங்கோண்முற்றின் முன் இயல்பாயின. 'முற்றுமுன் னியல்பாம்' என்றமையின், அருத்தா பத்தியான் இவ்வினைமுற்று வினையெச்சமாயும் குறிப்பு முற்று ஈரெச்சமாயும் நின்றவழி வரும் வல்லினம் இயல்பாதலும் கொள்க.

(வ - று.) உண்ட கண்டன எ - ம், அமர்முகத்த குதிரை எ - ம், அமர்முகத்த கலக்கின எனவும் வரும்.

தனைகைகள், செவிகள், தாள்கள், பதங்கள் என ஆறனுருபின் முன் இயல்பாயின. பல குதிரை, செந்நாய், தகர், பன்றி எ - ம், பல கொடுத்தான், செய்தான், தந்தான், படைத்தான் எ - ம் இரு வழியும் அஃறிணைப் பன்மைப்பெயர்முன் இயல்பாயின. பிற பெயர்களும் அன்ன. அம்ம கொற்றா, சாத்தா, தேவா, பூதா என உரையசையிடைச்சொன்முன் இயல்பாயின.

ஒருசொல்லையே பலவிடத்துங்காட்டியது என்னையெனின், இங்ஙனங்காட்டியவற்றுட் பலவென்னும் ஒருசொல் பெயரெச்சக் குறிப்பாயும், குறிப்புவினை முற்றாயும், குறிப்புமுற்றீரெச்சமாகும் பெயரெச்சக் குறிப்பாயும், வினையெச்சக் குறிப்பாயும், குறிப்பு வினையாலணையும் அஃறிணைப் பன்மைப் பெயராயும், பொரு ளாதியாறனுட் பண்பு காரணமாக வரும் அஃறிணைப்பன்மைப் பெயராயும் அறுவகைப்பட்டுப் பொருளுணைக்கம் முதலியவற்றான் இன்னதென்று துணியப்படுமாதலானென்க. பிறசொற்களும் அன்ன. இவ்விகற்பமெல்லாம் சொல்லதிகாரத்துட் காண்க. (17)

168. வாழிய வென்பத னீற்றி னுயிர்மெய்
ஏகலு முரித்தஃ தேகினு மியல்பே.

எ - ன், வியங்கோண்முற்றுச்சொற்கு எய்தாதது எய்து வித்தலும், எய்தியவழிப்புணரும் வல்லினத்திற்கு எய்தியது இகந்துபடாமைக் காத்தலும் நுதலிற்று.

---

1. "கடுங்கண்ண கொள்களிற்றால்" புறநா. 14.

2. மூவகைப்பெயரெச்சக்குறிப்பு - பெயர், இடை, உரி அடியாகப் பிறந்தவை.

(இ - ள்.) வாழிய என்னும் வியங்கோள்முற்றினது ஈற்றுயிர் மெய் குறைதலு முரித்து; குறைந்து இகரவீருய் நின்ருலும் வல்லினம் பொதுவிதியான் மிகாது சிறப்புவிதியுட்கூறிய இயல்பே யாம் எ - று.

(வ - று.) "ஆவாழி யந்தணர் வாழி", "படாஅதிவாழி" (குறள், 1210) என ஈற்றுயிர்மெய் குறைந்துவந்தது; வாழி கொற்ரு, சாத்தா, தேவா, பூதா எனக் குறைந்தவழியும் வல்லினம் இயல்பாயின.

ஏகலு முரித்தென முடித்துப் பின்பு அஃதெனச் சுட்டிப் புணர்ச்சிவிதி கூறுதலானும் செய்யுளிறுதிக்கண் வாழியென முடிந்து நிற்றலானும் இது புணர்ச்சி விகாரமன்று, கடைக்குறை யென்பதூஉம், இவ்வடிப்பாடாகக் குறைந்தியலும் தன்மை செய்யியவென்னும் வாய்பாட்டு வாழிய வென்னும் வினையெச்சத் திற்கின்மையின், வாழிய வென்னும் வியங்கோண் முற்றிற்கே இவ்விகாரம் கூறிஞரென்பதூஉம் பெற்ரும். (18)

169. சாவவென் மொழியீற் றுயிர்மெய் சாதலும்விதி.

எ - ன், சாவவென்னும் நிலைமொழிக்கு எய்தாததெய்துவித்தல் நுதலிற்று.

(இ - ள்.) சாவவென்னும் செயவெனெச்ச வினைச்சொல்லினது ஈற்றுயிர்மெய் கெட்டுப் புணர்தலும் விதியாம் எ - று.

(வ - று.) சாக்குத்திஞன் என வரும்.

இப்புணர்ச்சி சாவக்குத்திஞனென்னும் புணர்ச்சிபோற் சிறந்தது அன்மையிற் சாதலுமென்றும், ஒரோவழி அருகி வருதலின் விதியென்றும் கூறிஞர். (19)

170. பலசில வெனுமிவை தம்முன் ரும்வரின்
இயல்பு மிகலும் அகர மேக
லகரம் றகர மாகலும் பிறவரின்
அகரம் விகற்ப மாகலு முளபிற.

எ - ன், வருமொழிக்கு எய்தியது இகந்துபடாமைக் காத்தலும் அதன்மேற் சிறப்புவிதியும் நிலைமொழிக்கு எய்தாதது எய்து வித்தலும் நுதலிற்று.

மிகுதல் செய்யிய வென்னும் (167) சூத்திரத்தான் விலக்கி ஈண்டு விதித்தமையிற் சிறப்புவிதியாயிற்று.

(இ - ள்.) பல சில வென்னும் இவ்விருசொல்லும் தம்முன்னர்த் தாம் வருமாயின் இயல்பாகலும், மிகுதலும், அகரங் கெட லகரம்

றகரமாகலும், இவற்றின்முன் பிறமொழிகளுள் யாதானுமொன் றுவரின் அகரம் நிற்றலும், நீங்கலு முளவாம் எ - று.

(வ - று.) பலபல, சிலசில என இயல்பாயின. பலப்பல, சிலச்சில என மிக்கன ; இம்மிகுதி இயல்புபோற் பயின்றுவாராமை யின், வல்லினம் விகற்பமாதலு மென்றைது இயல்பும் மிகலு மென்றூர். பற்பல, சிற்சில என அகரமேக லகரம் றகரமாயின. பலகலை, பல்கலை ; பலசாலை, பல்சாலை ; பலதாழிசை, பஃறுழிசை ; பலபடை, பல்படை ; பலஞானம், பன்ஞானம் ; பலநாள், பன்னுள்; பலமணி, பன்மணி ; பலவளை, பல்வளை ; பலயானை, பல்யானை ; பலஅணி, பல்லணி ; பலஆயம், பல்லாயம் எனப் பிறவரின் அகரம் விகற்பமாயின. சில வென்பதற்கும் இவ்வாறே கொள்க.

பிறவென்ற மிகையானே பல்பல, சில்சில என அகரமேக லகரம் றகரமாகாது அருகிவருதலும், பிறவல்லினமொழிவரின் லகரம் றகரத்தோடு உறழும்வழி உறழாது இயல்பாதலும், அகரவீற்றுப்புணர்ச்சியுள் அமையாதொழிந்தன உளவேல் அவை யும் கொள்க.

அகரம் நீங்கநின்ற பல்லாய முதலியன நன்மை, வன்மை, மென்மை, அன்மை, இன்மை என்பனபோல லகரமெய்யீற்றுப் பண்படியாய் நின்று வருமொழியோடு புணர்ந்தனவன்றே, அவற்றை அகரவீற்றினவாக வைத்துப் புணர்த்ததென்னை யெனின், அப்பண்படி பன்மை சின்மையெனப் பகுதிப்பொருள் விகுதியோடேனும் பலர், பல, சிலர், சில என விகுதிப் பொருள் விகுதியோடேனுமன்றித் தனித்து நில்லா ஒற்றுமை நயம்பற்றி யென்க.

இஃது ஒன்றினமுடித்தல் தன்னின முடித்தலென்னும் உத்திக்கு இனம்.

அகரம் விகற்பமா மென்ற துணையானே பல் சில்லெனப் பண்படி தோன்றினமையின் இவ்விதி அல்வழிக்கே யென்பது கூறுதே யமையு மென்க. (20)

## ஆகாரவீற்றுச் சிறப்புவிதி

**171.** அல்வழி ஆமா மியாமுற்று முன்மிகா.

எ - ன், ஆகாரவீற்றுச்சொல்லுட் சிலவற்றிற்கு எய்தியது ஒருமருங்கு விலக்குதல் நுதலிற்று.

(இ - ள்.) அல்வழிக்கண் ஆவும் மாவுமாகிய இருபெயரும், மியாவென்னும் முன்னிலையசையிடைச் சொல்லும், ஆகார வீற்று

அஃறிணைப்பன்மை எதிர்மறைமுற்றுவினையும் நிற்க, இவற்றின் முன்வரும் வல்லினம் மிகா எ - று.

(வ - று.) ஆ குறிது, மா குறிது, சிறிது, தீது, பெரிது எ - ம், கேண்மியா கொற்றா, சாத்தா, தேவா, பூதா எ - ம், உண்ணு குதிரைகள், தின்னு குதிரைகள், செந்நாய்கள், தகர்கள், பன்றிகள் எ - ம் வரும்.

ஆமா என்றதுணையானே காட்டாவெனவும் பொருடர இரட்டுற மொழிந்தமையான் ஆமாகுறிது, சிறிது, தீது, பெரிதென மிகாமையும், முற்றுமுன் மிகா வென்றமையின் அருத்தாபத்தியான் அவ் வினையாலணையும்பெயர்முன் உண்ணு குதிரைகள், தின்னு குதிரைகள், செந்நாய்கள், தகர்கள், பன்றிகள் என மிகாமையும், அவ் வினைமுற்று வினையெச்சமாயவற்றின் முன் உண்ணு கிடந்தன, தின்னு கிடந்தன, சென்றன, தந்தன, போயின என மிகாமையும் கொள்க. உண்ணுக் குதிரைகள், உண்ணுக் கிடந்தன வெனப் பொதுவிதியான் மிகுமேல் எதிர்மறைப்பெயரெச்சமும், செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சமுமாமென்க. (21)

172. குறியதன் கீழாக் குறுதலு மதனோ
டுகர மேற்றலு மியல்புமாந் தூக்கின்.

எ - ன், ஆகாரவீற்றுட் சில சொல்லினது இறுதிக்கு எய்தாதது எய்துவித்தலும் அவ்வழி வருவதோர் ஐயம் அறுத்தலும் நுதலிற்று.

(இ - ள்.) குற்றெழுத்தின்கீழ் நின்ற ஆகாரம் குறுகலும், அக் குறுகலுடனே உகரம்பெறுதலும், அவ்விரண்டுமின்றித் தன்னியல்பில் நிற்றலுமாகிய மூன்று விதியும் பெறும், செய்யுட்கண் எ - று.

(வ - று.) "சுறமறிவன துறையெல்லாம்" (யா. வி. மேற்), "நிலவிரிகானல் வாய்" எ - ம், "இறவுப் புறத்தன்ன" (நற். 19) "சுறவுக் கோட்டன்ன" (நற். 19), "மருவினென் செய்யுமோ நிலவு" எ - ம், "நிலாவணங்கு வெண்மணன்மே னின்று" (யா. வி. மேற்.), "நெடிய கழியு மிரா" (குறள், 1169) எ - ம் முறையே காண்க.

ஈண்டு இயல்பு ஐயமறுத்தற்கு உரைத்தாரென்க.

இம்மூன்றுமாம் தூக்கினெனவே வழக்கில் இரண்டும் ஒன்றும் ஆமென்றாராயிற்று.

(வ - று.) 'உதித்தது நிலவு, நிலா; கண்டேன் கனவு, கனா எனக் குறுகுதலோடு உகரமேற்றலும் தன்னியல்புமாகிய இரண்

டும் வந்தன. [1]தரா, [2]மிடா எனத் தன்னியல்பு ஒன்றுமாய் நின்றன.

இவ்விகாரங்கள் அல்வழிவேற்றுமைப்புணர்ச்சியான் வந்தன வல்லவென்று ஐயமறுத்தற்குக் கூறப்பட்டன வென்க; இவ்வாறு வருவனவெல்லாம் அன்ன. (22)

## இகரவீற்றுச் சிறப்பு விதி

173. அன்றி யின்றியென் வினையெஞ் சிகரம்
தொடர்பினு ளுகர மாய்வரி னியல்பே.

எ - ன், இகரவீற்றுச் சொற்களுள் அன்றி இன்றியென்னும் வினையெச்சக் குறிப்பிற்கு எய்தாதது எய்துவித்தலும் எய்திய வழிப் புணரும் வல்லினத்திற்கு எய்தியது விலக்கலும் நுதலிற்று.

(இ - ள்.) அன்றி இன்றியென்னும் வினையெச்சக் குறிப்புச் சொல்லினது ஈற்றிகரம் செய்யுட்கண் உகரமாய் வருமாயின் க ச த பக்கள் பொதுவிதியான் மிகாது இயல்பாம் எ - று.

என் என்னும் வினைத்தொகையும் எஞ்சென்னும் வினைத் தொகையும் சொல்லென்னும் முதற்பெயரோடு முடியாது அதனகத்து இகரமென்னுஞ் சினைப்பெயரோடு முடிந்தன.

இவ்வாறு *உடம்படுபுணர்த்திக் [3]கூறினமையின் இதற்கு இதுவே விதி யென்பதூஉம் உகரமாய்வரினெனவே உகரமாதல் உடன்பாடென்பதூஉம் அஃது ஒருதலையன்றென்பதூஉம் பெற்றும்.

(வ - று.) "நாளன்று போகிப் புள்ளிடை தட்பப், பதனன்று புக்குத் திறனன்று மொழியினும், வறிது பெயர்குந ரல்லர் நெறி கொளப், பாடான் றிரங்கு மருவிப், பீடுகெழு மலையற் பாடியோரே" (புறநா. 124) எ - ம், "உப்பின்று, புற்கை யுண்கமா கொற்கை யோனே" எ - ம் வரும். பிறவு மன்ன. (23)

174. உரிவரி னாழியி னீற்றுயிர் மெய்கெட
மருவும் டகர முரியின் வழியே
யகரவுயிர் மெய்யா மேற்பன வரினே.

---

(பி - ம்.) *'உடம்பொடு'

1. தரா - ஓர் உலோகம்; "வெண்கலந் தராமுதல்" திருவிளை. இரத. 23.

2. மிடா - ஒருவகை நவபாண்டம்; "தீம்பய றியன்ற சோறு செப்பி னாயி ரம்மிடா" (சீவக. 6?2); இப்பெயர் முகத்தலளவையாகவும் கொங்கு நாட்டில் வழங்குகின்றது.

3. உடம்படுபு உணர்த்தியென்று பிரித்து, உடம்பட்டுத் தெரிவித் தெனப்பொருள் கொள்க.

எ - ன், எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) உரியென்னும் அளவுப்பெயர்வரின், நாழியென்னும் அளவுப்பெயரினது ஈற்றுயிர்மெய்கெட அவ்வழி டகர வொற்று வரும் ; உரியென்னும் அளவுப் பெயரின்பின் யகரவுயிர் மெய்வரும், அவ்வுயிர்மெய் வருதற்கு ஏற்ற வருமொழிகள் வருமாயின் எ - று.

(வ - று.) நாடுரி எ - ம், உரியவுப்பு, உரியபயறு, உரிய மிளகு, உரியவரகு எ - ம் வரும்.

ஏற்பன வரினெனவே ஏலாதனவரின் உரியரிசி, உரியாழாக்கு, உரியெண்ணெய் என இச்சிறப்புவிதி பெறுது பொது விதியே பெறுதல்கொள்க. [1]நாடுரி என்பது நாவுரியென இக்காலத்து மரீஇயிற்று. பொதுவிதியான் வரும் உடம்படு மெய்யை இச் சிறப்புவிதி விலக்கினமையின், [2]நாழியுரி யென்பது இலக்கண மன்றென்க. (24)

175. சுவைப்புளி முன்னின மென்மையுந் தோன்றும்.

எ - ன், எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) புளியென்னு மரமும் பழமுமன்றி அறுசுவையு ளொன்றை உணர்த்தும் புளிப்பெயர்முன் வரும் வல்லினம் மிகுதலேயன்றி அவற்றிற்கு இனமாய மெல்லினமும் ஒரோவழி மிகும் எ - று.

(வ - று ) [3]புளிங்கறி, சேறு, தயிர், பாளிதம் என வரும் ; பலசுவையு முடைத்தேனும் மிகுதிபற்றிப் புளிப்பாய கறியெனவும் புளிப்பையுடைய கறியெனவும் விரிதலின் இருவழிக்கும் இவையே காட்டாமென்க. மென்மையுமென்ற இறந்தது தழீஇய இழிவு சிறப்பும்மையாற் புளிக்கறியெனப் பொதுவிதியான் வரும் வல்லெழுத்துப்பேறே சிறப்புடைத்தென்க. (25)

## இகர ஐகாரவீற்றுச் சிறப்புவிதி

176. அல்வழி இஐம் முன்ன ராயின்
இயல்பு மிகலும் விகற்பமு மாகும்.

---

1. இது தென்பாண்டிநாட்டில் 'நாவுரி' என்று வழங்குகின்றது ; உரி - அரைநாழி.

2. நாழியுரியென்பது சிலாசாஸனங்களில் சிறுபான்மையாகக் காணப்படுகிறது.

3. புளிங்கறி : இதனை "அண்பனீரூறமிர்தம்" என்பர் ; சீவக. 928. இது புளிக்கறி, நெகிழ்கறியமுதெனவும் வழங்கப்படும்.

எ - ன், இகர ஐகாரவீற்று அஃறிணைப்பெயர்முன்வரும் வல்லினத்திற்கு ஒருவழி எய்தியது விலக்கலும், எய்தியது இகந்துபடாமைக்காத்தலும், எய்தியது விலக்கலுடன் விலக்காமையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இகர ஐகாரவீற்று அஃறிணைப்பெயர்முன் வல்லினம் அல்வழிக்கண் வருமாயின் இயல்பாயும், பொதுவிதியான் மிகுந்தும், ஒன்றற்கே ஒருகால்மிகாது ஒருகால்மிகுந்தும் புணரும் எ - று.

இவ்வீற்று உயர்திணைப்பெயர் பொதுப்பெயர் வினைகட்குப் பொதுச் சூத்திரங்களான் (159, 161, 165) இம்மூன்று விதியும் அமைந்து கிடந்தமையின் இச்சூத்திரத்தாற் கூறுதல் மிகுதியொன்றுமே அமைந்துகிடந்த அஃறிணைப்பெயர்க்கென்பது பெற்றாம்.

ஒப்பின்முடித்தலான் ஐகாரவீறும் உடன்கூறினர்.

(வ - று.) பருத்தி, [1]ஒதி, யானை, குதிரை : குறிது, சிறிது தீது, பெரிது என இயல்பாயின. கிளிகுறிது, கிளிக்குறிது ; தினைகுறிது, தினைக்குறிது என விகற்பித்தன. பிறவுமன்ன.

மிகுதி, எய்தியதிகந்துபடாமைக் கூறினமையிற் காட்டிற்றிலம். (26)

### ஈகாரவீற்றுச் சிறப்புவிதி

177. ஆமுன் பகரவீ யனைத்தும்வரக் குறுகும்
மேலன வல்வழி யியல்பா கும்மே.

எ - ன், தொடர்மொழியுட் பின்னின்ற இடக்கர்ச் சொல்லினது ஈற்று ஈகாரத்திற்கு எய்தாதது எய்துவித்தலும் எய்தியவழி அதன்முன்வரும் வல்லினத்திற்கு எய்தியது இகந்துபடாமைக் காத்தலும் நுதலிற்று.

(இ - ள்.) ஆவென்னும் பெயர்முன்னின்ற பகரவீகாரம் இருவழியும் நாற்கணங்களும்வரிற் குறுகும் ; குறுகி விதியிகர வீறாக நின்ற அதன்மேல்வரும் வல்லினம் அல்வழிக்கண் மேலைச் சூத்திரத்துட் கூறியவிதி மூன்றனுள் இயல்பைப்பெறும் எ - று.

குறுகுதற்குக் காரணம் அனைத்தும் வருதலேயன்றி மேனின்ற ஆவுமாமென்பார் ஆமுன்னென்றார்.

பகரவீ யென்றது இடக்கரடக்கல் ; வருஞ்சூத்திரத்துட் பவ்வீயுமது.

ஆவென்னுஞ் சொல்லும் நாற்கணத்துளொன்றும் முன்னும் பின்னுந்தொடராவேற் குறுகாதென்பார் வரக்குறுகுமென்றார்.

---

1. ஒதி - ஒருவகைமரம்.

இருமொழியை நிலைமொழியாக நிறீஇப் புணர்த்தமையான் வரும் ஈறு விதி இகரவீறுதலின் எய்தியது இகந்துபடாமை இயல் பாகுமென்றார்.

ஆகும்மே யென்றது விரித்தல்விகாரம்.

(வ - று.) [1] ஆப்பியரிது, ஆப்பிகுளிரும், ஆப்பிநன்று, ஆப்பி வலிது எ - ம், ஆப்பியருமை, ஆப்பிக்குளிர்ச்சி, ஆப்பிநன்மை, ஆப்பிவன்மை எ - ம் இருவழியும் ஈகாரம் குறுகுதலும் அல்வழிக் கண் வல்லினவியல்பு இகந்துபடாமையும் காண்க. (27)

178. பவ்வீ நீமீ முன்ன ரல்வழி
இயல்பாம் வலிமெலி மிகலுமா மீக்கே.

எ - ன், ஈகாரவீற்று இடக்கர்ப்பெயர்க்கும் நீ யென்னும் பெயர்க்கும் மீ யென்னும் பெயர்க்கும் முன்னர் வரும் வல்லினத் திற்கு ஒருவழி எய்தியது விலக்கலும், இவற்றுள் மீ யென்பதன் முன்வரும் வல்லினத்திற்கு எய்தியது இகந்துபடாமைக்காத்தலும், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தலும் நுதலிற்று.

(இ - ள்.) பகரவொற்றை ஊர்ந்துநின்ற ஈகாரவீற்று இடக்கர்ப் பெயரும் நீ யென்னும் முன்னிலையொருமையைப் பொதுப் பெயரும் மீ யென்னும் மேலாய பண்பையும் பண்பாகுபெயராய் மேலாய இடமுதலியவற்றையும் உணர்த்தி நிற்கும் பலபொருளொரு சொல்லும் நிற்க, இவற்றின் முன்வரும் வல்லினம் அல்வழிக்கண் இயல்பாம்; இங்ஙனம் புணரும் மீ யென்னுஞ்சொற்கு முன் அல்வழிக்கண் வல்லெழுத்து மிகலுமாம்; மெல்லெழுத்து மிகலுமாம் எ - று.

(வ - று.) பீ குறிது, சிறிது, தீது, பெரிது எ - ம், நீ குறியை, சிறியை, தீயை, பெரியை எ - ம், மீகண் எ - ம் இயல்பாயின. [2] மீக்கூற்று, மீக்கோள் (ஆசாரக். 31) என எய்தியதிகந்துபடாமை மிக்கது. மீந்தோல் (அகநா. 3 : 1 பி - ம்) என மெலி மிகுந்தது. பிறவும் ஏற்ற பெற்றி வருவனவுளவேல் அவையும் கொள்க.

மீகண்ணென்பது கண்ணினது மேலிடமெனப் பொருள் தந்துநிற்குமேனும் ஆறனுருபின் பயனிலையாம் மீ யென்னும் வருமொழி நிலைமொழியாய் நின்று வல்லெழுத்துமிகாது புணர்ந்த

1. ஆப்பி - கோமயம்; "மெழுகு மாப்பிகண் கலுழ்நீ ரானே" (புறநா. 249); "ஆப்பிநீ ரெங்குந் தெளித்து" ஆசாரக். 46.

2. மீக்கூற்று: இது மீக்கூற்றமெனவும் வழங்கும்; "இல்ல மிளமை யெழில்வனப்பு மீக்கூற்றம்" (நாலடி. 53); "பெருமீக் கூற்றமும் பேணான்" பெருங். 3. 25 : 83.

மையின் இலக்கணப்போலியாய் அல்வழியாயிற்று. மீக்கூற்றென்பது புகழ். அது மேலாயசொல்லாற் பிறந்த புகழென்னும் மேம்பாடெனப் பொருள் தந்து நிற்றலின், பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. மீக்கோளென்பது மேற்போர்வை; அது யாக்கையின் மேற்கொள்ளுதலையுடைய போர்வை யெனப் பொருள் தந்து நிற்றலின், ஏழாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. ஈண்டு மீ யென்றது இடப்பொருளோடு ஏழாம் வேற்றுமையுருபின் பொருள்பட நின்றதேனும் கண்ணுதியுருபு வேண்டாமையின் வேற்றுமைத் தொகையாயிற்று. மீந்தோலென்பது மேற்றோல்; அது மேலாய தோலெனப் பொருள் தந்து நிற்றலிற் பண்புத் தொகை; இஃது இக்காலத்துப் பீந்தோலென மரீஇயிற்று.

நீ யென்பதன்முன் வல்லினமியல்பாதல், "பொதுப் பெயருயர் திணைப் பெயர்க ளீற்றுமெய்" (159) என்னும் சூத்திரத்தான் அமையாதோ வெனின், விகார மொழியன்றி அல்வழிக்கண்ணும் வேற்றுமைக் கண்ணும் ஆவியரக்களில் ஓரீற்றதாய் நின்று புணரும் பொதுப்பெயர்க்கே வன்மை மிகாவென இருவழிக்குங் கூறியது அமையுமன்றி அல்வழிக்கண் நீ என உயிரீறாயும் [1]வேற்றுமைக்கண் நின்னென நெடில் குறுகி னகரவொற்றீறாயும் விகாரப்பட்டுநிற்கும் அப்பொதுப்பெயர்க்கு அவ்விதி அமையா தென்க. (28)

## முற்றுகரவீற்றுச் சிறப்பு விதி

179. மூன்று றுருபெண் வினைத்தொகை சுட்டீ
றாகும் உகர முன்ன ரியல்பாம்.

எ - ன், முற்றுகரவீற்றுட் சிலவற்றின்முன் வரும் வல்லினத்திற்கு எய்தியதுவிலக்கல் நுதலிற்று.

(இ - ள்.) முற்றுகரவீற்று மூன்றுமுருபே ஆறுமுருபே இயல்பாயும் விகாரமாயும் வருமெண்ணே வினைத்தொகையே சுட்டுப் பெயரே என்னுமிவற்றின்முன் வரும் வல்லினம் இயல்பாம் எ - று.

மூன்றுறுபெண்புழி ஆமென்னுஞ்சாரியை தொக்கது.

(வ - று.) சாத்தனொடு கொண்டான், சென்றான், தந்தான், போயினான் எ - ம், சாத்தனது கை, செவி, தலை, புறம் எ - ம், ஏழு, ஒரு, இரு, அறு: கை, செவி, தலை, புறம் எ - ம், அடுகளிறு,

1. சூ. 218, 247, பார்க்க.

சேனை, தானை, படை எ - ம், அது, இது, உது : குறிது, சிறிது, தீது, பெரிது எ - ம், அதுகண்டான், *செகுத்தான், தந்தான் படைத்தான் எ - ம் வரும்.

உதுகாண் [1] உதுக்காண் என இயல்பாயும் விகாரமாயும் வரப்பெறுமாலோவெனின், அஃது "இயல்பின் விகாரமும்" (255) என்னுஞ் சூத்திரத்து 'அன்னபிறவும்' என்பதனான் அமையு மென்க. (29)

180. அதுமுன் வருமன் றன்றந் தூக்கின்.

எ - ன், அதுவென்னுஞ் சுட்டுப்பெயர்முன் வரும் அன் றென்னுஞ் சொற்கு எய்தாததெய்துவித்தல் நுதலிற்று.

(இ - ள்.) அதுவென்னுஞ் சுட்டுப்பெயர்முன் வரும் அன் றென்னும் வினைக்குறிப்புச்சொல் முதல் நீளும், செய்யுளகத்து எ - று.

(வ - று.) [2] அதான்று எனவரும்.

ஆன்றேயாமென இயல்பைவிலக்காமையின், அதுவன்று, அதன்று என வருவனவும் கொள்க. அதுமுன்வரும் அன்று ஆன்றமென விதந்தமையான், ஏனை இது உது முன்வரும் அன்று ஆன்றகாதென்பது பெற்றாம். (30)

## குற்றுகரவீற்றுச் சிறப்பு விதி

181. வன்றொட ரல்லன முன்மிகா வல்வழி.

எ - ன், குற்றுகரவீற்றுட் சிலவற்றிற்கு எய்தியது ஒருவழி விலக்கல் நுதலிற்று.

(இ - ள்.) வன்றொடரொழிந்த ஐந்துகுற்றுகரவீற்றின் முன் னும் வரும் வல்லினம் மிகா, அல்வழிக்கண் எ - று.

(வ - று.) நாகு, எஃகு, வரகு, குரங்கு, [3] தெள்கு : கடிது, சிறிது, தீது, பெரிது எ - ம், ஏகுகால், அஃகுபிணி, பொருது சென்றான், அறிந்துதந்தான், எய்துகொன்றான் எ - ம் வரும். பிறவு மன்ன. (31)

182. இடைத்தொட ராய்தத் தொடரொற் றிடையின்
மிகாநெடி லுயிர்த்தொடர் முன்மிகா வேற்றுமை.

---

(பி - ம்.) *'செருத்தான்'

1. உதுக்காண் : "விடுத்தேன் வாழியர் குருசி லுதுக்காண்" (புறநா. 210.) 2. முருகு. 77, முதலியன.

3. தெள்கு - செள்ளுப்பூச்சி ; "சிறிய தெள்கு துள்ளிக், கருடனுர்க் குப் பறவைகற் பிப்பதென" அரிச்சந்திர. அவை.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இடைத்தொடர் முன்னும் ஆய்தத்தொடர் முன்னும் ஒற்றிடையேமிகாத நெடிற்றொடர்முன்னும் உயிர்த்தொடர் முன்னும் வரும் வல்லினம் மிகா, வேற்றுமைக்கண் எ - று.

(வ - று.) தெள்கின் கடுமை, எஃகின் கடுமை, நாகின்கடுமை, வரகின்கடுமை, சிறுமை, தீமை, பெருமை என வரும். சாரியைப் பேறு, "இதற்கிது சாரியை" (253) என்னுஞ் சூத்திரத்தான் அமைந்தன. சாரியை மிகுதலின், வல்லெழுத்து மிகாவென ஏது வரைந்துகூறுது மிகாவென வாளா கூறினமையின், வரகு கதிரெனச் சாரியை மிகாவழி வல்லினமிகாது வருவனவுளவேல் அவையும் கொள்க. (32)

183. நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுக ரங்களுள்
டறவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே.

எ - ன், மேலே நிலைமொழிக்கு ஒருபுறனடையாய் எய்தாத தெய்துவித்தலும் [1] எய்தியதன்மேற் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நெடிற்றொடர்க் குற்றுகரவீற்று மொழிகளுள்ளும் உயிர்த்தொடர்க் குற்றுகரவீற்று மொழிகளுள்ளும் அவ்வுகரப் பற்றுக்கோடாகிய வல்லெழுத்து ஆறனுள் டகார றகாரமான இரண்டொற்றும் பெரும்பாலும் வேற்றுமைக்கண் இரட்டும் எ - று.

குற்றுகரங்களென்னும் எழுத்துக்குறிப்பு அம்மொழிகளை உணர்த்தி நின்றது. வருமொழிவரையாமையின், நாற்கணமும் கொள்க.

(வ - று.) ஆட்டுக்கால், [2] பாற்றுக்கால், [3] முருட்டுக்கால், [4] முயிற்றுக்கால், செவி, தலை, புறம், ஞாற்சி, நிறம், மயிர், யாப்பு, வன்மை, அடி என வரும். இவ்விரண்டொற்றும் பெரும்பாலும்

---

1. "வருமொழிக்கு முதல் உயிரேல் இந்நிலைமொழிக்கு 'உயிர்வரி னுக்குறள்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியதன்மேற் சிறப்புவிதியும்" என்பது புத்தம்புத்துரை.

2. பாற்றுக்கால் - பருந்தின்கால்; பாறு - பருந்து.

3. முருடு - இருப்பை முதலிய மரங்களின் அடியிலுள்ள உருண்டை வடிவமுள்ள உறுப்பைப்போல்வது; "வன்ப ராய்முரு டொக்குமென் சிந்தை" திருவாசகம், செத்திலாப்பத்து, 4.

4. முயிறு - முசிடு; "பழனப் பாகன் முயிறுமூசு குடம்பை" நற், 180; ஐங். 99.

வேற்றுமைக்கண் இரட்டுமெனவே சிறுபான்மை வேற்றுமைக்கண் இரட்டாமையும், சிறுபான்மை அல்வழிக்கண் இரட்டுதலும், சிறு பான்மை இருவழியிலும் பிறவொற்றிரட்டுதலும் கொள்க.

(வ - று.) "காவிரி புரக்கு நாடுகிழ வோனே," (பொருந. 248) "காடக மிறந்தாற்கே யோடுமென் மனனேகாண்" (யா. வி. 91. மேற்), "கறைமிட றணியலுமணிந்தன் றக்கரை" (புறநா. கடவுள்.) என வேற்றுமைக்கண் இரட்டாவாயின. காட்டரண், களிற்றி யானையென அல்வழிக்கண் இரட்டின. "வெருக்குக்கண் வெங்கருனே" (நாலடி. 210), எருத்துக்கால் எ - ம். எருத்து மாடு எ - ம் இருவழியும் பிறவொற்றிரட்டின. (33)

184. மென்றொடர் மொழியுட் சிலவேற் றுமையில்
தம்மின வன்றொட ராகா மன்னே.

எ - ன், மென்றொடர்க் குற்றுகரமொழிகளுட் சில நிலை மொழிக்கு [1]எதிர்மறைமுகத்தான் எய்தாததெய்துவித்தலும் எய்தி யதன்மேற் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மென்றொடர்க் குற்றுகரமொழிகளுட் சில வேற் றுமைக்கண் தமக்கு இனமான வன்றொடராதலை யொழிந்தன, பெரும்பால எ - று.

சிலவென்னுமெழுவாய் ஆகாவென்னும் எதிர்மறைவினையா லணையும் பெயரகத்து முதனிலையோடு முடிந்தது. வருமொழி வரை யாமையின் நாற்கணமுங் கொள்க.

(வ - று.) மருத்துப்பை [2]சுருப்புநாண், கருப்புவில், [3]கற்று எனவரும்.

இவ்வாறு சில வருதலையும் [4]எதிர்மறைமுகத்தாற் கூறினமை யின் வழக்கின்கண்ணும், சான்றோர் செய்யுட்கண்ணும் ஏற்ற பெற்றி கொள்க. வண்டுக்கால், பந்துத்திரட்சி முதலியன வெல்லாம் வன்றொடராகாதனவென்க.

1. "மூவினமும் வரின் எதிர்மறைமுகத்தான் எய்தாததெய்துவித் தலும், உயிர்வரின் அவ்வெதிர்மறை முகத்தான் எய்தியதன்மேற் சிறப்பு விதியும்" என்பது புத்தம்புத்துரை.

2. சுருப்புநாண் - வண்டுகளாகிய நாணி; "சுருப்புநாண் கருப்பு வில்லருப்புக்கணை தூவ" மணி. 18 : 105.

3. கற்று - கன்றையுடைய பசு ; கற்றுவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே" (திருவா. திருப்புலம்பல், 3) ; "கற்றுதரல்போல்" (நல்வழி, 29) ; "கற்று மடிகொன்று" நீதிநெறி.

4. எதிர்மறைமுகம் : இதனை வ்யதிரேகமென்பர் வடநூலார்.

சில வன்றொடராமெனவே ஆகாதன பலவென்பது தாமே போதரவும் மன்னே யென்ற மிகையானே [1]எற்புடம்பு, [2] அற்புத் தளை, குரக்குமனம் என அல்வழிக்கண் அருகி வன்றொடராதலுங் கொள்க. (34)

185. ஐயீற் றுடைக்குற் றுகரமு முளவே.

எ - ன், இதுவும் மேலைநிலைமொழிக்கு எய்தாததெய்துவித் தலும் எய்தியதன்மேற் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஐகாரச்சாரியையை இறுதியிலே பெற்றுவரும் மென் றொடர்க் குற்றுகரமொழிகளும் சில வுள எ - று.

மேலைச்சூத்திரத்தைத் சாரவைத்தமையான், இதுவும் மென் றொடரென்பது பெற்றும். வருமொழி வரையாமையின் நாற்கணமுங் கொள்க.

(வ - று.) பண்டைக்காலம் [3]இற்றைநாள் எ - ம், [4]அற்றைக் கூலி, இற்றைநலம் எ - ம் வரும். பிறவுமன்ன.

மேலைச் சூத்திரத்தைச் சார வைத்தாரேனும் ஐயீற்றுடைக் குற்றுகரமெனப் பொதுப்படக் கூறினமையின், நேற்றைப் பொழு தெனப் பிறதொடர்கள் ஐகாரம் பெறுதலும், ஐயீற்றுடைக் குற் றுகரமென உடைமையாக்கிக் கூறினமையின் வருமொழிப் புணர்ச்சியானன்றி [5] ஒற்றை, இரட்டை, வேட்டையென ஒரு மொழியாய்நின்று ஐகாரம்பெறுதலும், [6] ஈராட்டை, மூவாட்டை யெனத் தொடர்மொழியாய் நின்று ஐகாரம் பெறுதலும் கொள்க. (35)

186. திசையொடு திசையும் பிறவுஞ் சேரின்
நிலையீற் றுயிர்மெய் கவ்வொற்று நீங்கலும்
றகரம் னலவாத் திரிதலு மாம்பிற.

---

1. "எற்புடம் பறுக்கு மியற்கைத் தாகி" பெருங். 1. 46 : 88.

2. அற்புத்தளை - அன்பாகிய கட்டு: "அற்புத் தளைக்கிளவி பற்பல பயிற்றி" பெருங் 3. 24 : 9; நாலடி. 12.

3. இற்றைநாள் : "இற்றைநாளளவுமன்று" கம்ப. உருக்காட்டு. 35.

4. அற்றைக்கூலி - அன்றன்று பெறும் நாட்கூலி; இஃது அத்தைக் கூலியெனவழங்கும்.

5. ஒற்றை : " உடங்கொருவர் கைநிமிர்த்தாங் கொற்றைமே லூக்க" (சிலப். வாழ்த்துக்.) இரட்டை : "சாமரை யிரட்டையுந் தமனியக்குடை யும்" (பெருங். 1. 36 : 21.) வேட்டை: "வேட்டை யாடி வருவானை விருந்தாவனத்தே கண்டோமே" நாச்சியார். 14 : 9.

6. ஈராட்டை - இரண்டு வருடம். மூவாட்டை - மூன்று வருடம்.

எ - ன், குற்றுகரவீற்றுத் திசைப்பெயர்க்கு எய்தாத தெய்துவித்தல் நுதலிற்று.

(இ - ள்.) திசைச்சொல்லொடு திசைச்சொல்லும் பிறசொற்களும் புணருமிடத்து நிலைமொழியீற்றில் நின்ற உயிர்மெய்யும் அதன் மேனின்ற ககரவொற்றும் கெடுதலும் அங்ஙனம் நின்ற றகரவொற்று னகரவொற்ருயும் லகரவொற்ருயும் திரிதலுமாம் எ - று.

(வ - று.) வடகிழக்கு, வடமேற்கு, வடதிசை, [1]வடமலை, [2]வட வேங்கடம் ; தென்கிழக்கு, தென்மேற்கு, [3] தென்குமரி, தென்வீதி, [4]தென்மலை ; மேல்பால், மேனுடு ; [5] குடதிசை, குடநாடு ; [6]குண கடல், குணபால் எனவரும்.

பிறவென்ற மிகையானே மேற்றிசை, மேலத்திசை, கீழ்த் திசை, கீழத்திசை, [7] *கீழ்மேற்றென்வடல் எ - ம், கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு, வடக்கூர், [8]தெற்கூர், வடக்குமலை, தெற்குமலை யென இங்ஙனங் காட்டிய விகாரமின்றியும் வருமெனவும் இவ்விதி யெல்லாம் ஏற்றப்பெற்றி கோடல் வேண்டுமெனவும் கொள்க.

வடகிழக்கென்பது வடக்குங்கிழக்குமாயதொரு கோணமென உம்மைத் தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. வட திசை யென்பது வடக்காய திசை எனப் பண்புத் தொகை. வட மலையென்பது வடக்கின்கண் மலையென ஏழாம் வேற்றுமைத் தொகை. *கீழ்மேற்றென்வடல், கிழக்குமேற்குத் தெற்கு வடக்கு என்பன உம்மைத்தொகை. பிறவுமன்ன. (36)

187. தெங்குநீண் டீற்றுயிர் மெய்கெடுங் காய்வரின்.

எ - ன், தெங்கு என்னும் பெயர்க்கு எய்தாதெய்துவித்தல் நுதலிற்று.

---

(பி - ம்.) *' கிழமேற் '

1. வடமலை - இமயமலை ; வடமலைப் பிறந்த வான்கேழ் வட்டத்து" சிலப். 4 : 37.

2, 3. " வடவேங்கடந் தென்குமரி " தொல். பாயிரம்.

4. தென்மலை - பொதியின்மலை ; " தென்மலைப் பிறந்த சந்தன மறுக " சிலப். 4 : 38.

5. குடதிசை - மேற்றிசை ; குடதிசை மருங்கின் வெள்ளயிர் " சிலப். 4 : 35.

6. குணகடல் - கீழ்க்கடல் ; " குணகடல் குமரி " நன். சிறப்புப்.

7. கீழ்மேற்றென்வடல் - கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு ; கிரயசாசனங்களில் எல்லையைக் குறிக்குமிடத்து இத்தொடர் எழுதப்படுகின்றது.

8. இப்பெயருள்ள ஊர்கள் தமிழ்நாட்டிற் பல உள்ளன.

(இ - ள்.) காய் என்னுஞ் சொல் வருமாயின், தெங்கு என்னும் நிலைமொழி முதல் நீண்டு ஈற்றுயிர்மெய் கெடும் எ - று.

ஈறு கெடுமென்றமையான், முதல் நீளுமென்பது பெற்றாம்.

(வ - று.) தேங்காயென வரும். தெங்குநீண்டு ஈற்றுயிர் மெய் கெட்டே புணருமென இயல்பை விலக்காமையின் [1] தெங்கங் காயென வருமுடிபுங் கொள்க. (37)

## எண்ணுப்பெயர்கட்குச் சிறப்பு விதி

188. எண்ணிறை யளவும் பிறவு மெய்தின்
ஒன்று முதலெட் டரு மெண்ணுள்
முதலீ ரெண்முத னீளு மூன்ரு
றேழ்குறு கும்மா றேழல் லவற்றின்
ஈற்றுயிர் மெய்யு மேழ னுயிரும்
ஏகு மேற்புழி யென்மனர் புலவர்.

எ - ன், ஒன்றுமுதல் எட்டீரும் எண்ணுப்பெயர்க்கு உயிர் வரின் எய்தியதன்மேற் சிறப்புவிதியும் மெய்வரின் எய்தாத தெய்து வித்தலும் நுதலிற்று.

(இ - ள்.) எண்ணுப் பெயரும் நிறைப்பெயரும் அளவுப் பெயரும் பிறபெயரும் வரின் நிலைமொழியாக நின்ற ஒன்று முதல் எட்டீரும் எண்களுள் முதற்கண்ணவாய ஒன்றிரண்டென்னும் இரண்டென்னும் முதல் நீளும்; மூன்றும் ஆறும் ஏழும் முதல் குறுகும்; ஆறும் ஏழுமல்லாத ஆறெண்களின் ஈற்றுயிர்மெய்யும் ஏழென்னுமெண்ணின் ஈற்றுயிரும் கெடும், ஏற்குமிடங்களிலென்று சொல்லுவர் புலவர் எ - று.

இச்சூத்திரத்துட்கூறிய விகாரமும் இப்புணர்ச்சி முற்ற முடித்தற்குப் பின் ஐந்து சூத்திரத்தாற் கூறும் விகாரமும் உயிர் வரின் உகரம் மெய்விட்டோடுதலையும் ஒழிந்தகணங்கள்வரின் தன்னியல்பினிற்றலையும் விலக்கியவல்ல; இவ்விகாரமனைத்தும் ஒருங்குவேண்டுமென்னும் நியதியவல்ல; இவ்விகாரம் பண்புத் தொகைக்கே யுரிய வென்பார் ஏற்புழியென்றும், ஏழென்பதனை உயிரீற்று மொழியாகக் கொள்வார் சிலர், [2]ஒற்றீற்றுமொழியாகக்

1. "தெங்கங்காய்போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்" நன். சூ. 418, மேற்.

2. தொல்காப்பியர் ஒற்றீற்று மொழியாகக்கொண்டனர்; புள்ளி. 93.

கொள்வார் சிலர், யாம் ஒருதலை துணிந்தாமென்பார் என்மனுர் புலவரென்றும், ஒற்றீறும் விலக்கப்படுவதன்றென்பார் உடம்படு புணர்த்தி ஒற்றீருக ஏழ் குறுகுமென்றும் கூறினுர்.

ஏழென்பது முற்றுகரவீற்றதேனும் ஒன்றினமுடித்த றன்னின முடித்த லென்னு முத்தியான் ஈண்டுக் கூறப்பட்டதென்க.

(வ - று.) அறுபது, எழுபது: [1] கழஞ்சு, நாழி, மீன் எ - ம், ஏழ்கடல் எ - ம் வரும். ஏனையவற்றிற்கு உதாரணம் பின்னர்க் காட்டுதும்; இரண்டாயிரம், ஏழாயிரமென உயிர்வரிற் குற்றுகரமும் முற்றுகரமும் கெட்டுப்புணர்ந்தன. இரண்டு கழஞ்சு, மூன்றுபடி, நான்கு பொருள், [2]ஏழு கடலெனத் தன்னியல்பினின்று புணர்ந்தன. பிறவுமன்ன. (38)

189. ஒன்றன் புள்ளி ரகர மாக
இரண்ட னொற்றுயி ரேகஉவ் வருமே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மேற்கூறிய நால்வகைப் பெயரும் வருமிடத்து ஈற்றுயிர்மெய் ஏகுமென்றமையான் இறுதியுயிர்மெய் கெட நின்ற ஒன்றென்னும் எண்ணினது னகரவொற்று ரகரவொற்ருக இரண்டென்னும் எண்ணினது னகரவொற்றும் ரகரத்தை ஊர்ந்துநின்ற அகரவுயிரும் கெட அவ்விரண்டு ரகரத்தின்மேலும் உகரம் வரும் எ - று.

(வ - று.) [3]ஓராயிரம், இராயிரம், ஒருபது, இருபது, ஒரு கழஞ்சு, இருகழஞ்சு, ஒருநாழி, இருநாழி, ஒருவகை, இருவகை எனவரும். ஓராயிரம், இராயிரமென்புழி உகரக்கேடு, "முற்றுமற் றொரோவழி" (164) என்பதனுற் கொள்க. பிறவுமன்ன. (39)

190. மூன்றனுறுப் பழிவும் வந்தது மாகும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) நால்வகைப் பெயரும் வருமிடத்து இறுதியுயிர் மெய் கெடநின்ற மூன்றென்னும் எண்ணினது னகரவொற்றுக் கெடுதலும் வருமொற்ருகத் திரிதலுமாம் எ - று.

---

1. கழஞ்சு: இஃது இருபது மஞ்சாடி எடை கொண்டது.

2. "ஏழு கடற்கு மப்புறத்த தாகா திருந்த திழிபன்ரே" கம்ப. உருக்காட்டு. 110.

3. ஓராயிரம்: "உண்ணிறை யுடைய வல்ல வொராயிர மனத்த வாகும்" சீவக. 1597.

(வ - று.) மூவொன்று, [1]மூவெடை, மூவுழக்கு, மூவுலகு (சிலப். ஆய்ச்சியர்.) எ - ம், முப்பது, முக்கழஞ்சு, முந்நாழி, மும்மொழி எ - ம், வரும். (40)

191. நான்கன் மெய்யே லறவா கும்மே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) நால்வகைப் பெயரும் வருமிடத்து இறுதியுயிர் மெய்கெட நின்ற நான்கென்னும் எண்ணினது னகரவொற்று லகர வொற்றாயும் றகரவொற்றாயும் திரியும் எ - று.

(வ - று.) நாலொன்று, நாலெடை, [2]நானாழி, [3]நான்மணி எ - ம், நாற்பது, நாற்கழஞ்சு, நாற்கலம், [4]நாற்கவி எ - ம் வரும். (41)

192. ஐந்தனொற் றடைவது மினமுங் கேடும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) நால்வகைப் பெயரும் வருமிடத்து இறுதியுயிர் மெய்கெடநின்ற ஐந்தென்னும் எண்ணினது நகரவொற்று வருமொற்றாகியும் அதற்கு இனமாகியும் கெட்டும் முடிவதாம் எ - று.

(வ - று.) ஐம்மூன்று, [5]ஐம்மஞ்சாடி, ஐவ்வட்டி, * [6]ஐவ்வண்ணம் எ - ம், ஐம்பது, †ஐங்கழஞ்சு, ஐங்கலம், [7]ஐம்பொறி எ - ம், ஐயொன்று, ஐயெடை, ஐயாழாக்கு, [8]ஐயம்பு எ - ம் வரும்.

---

(பி - ம்.) *'ஐவ்வனம்' †'ஐங்கழஞ்சி'.

1. எடை - எடுத்தலளவைப்பெயர்; இஃது இடையெனவும் இலக்கியங்களில் வழங்கும்; "இடைதான் குறைந்தது மச்சமுங் காட்டுவதில்லை யென்றால், மடவீ ருமது தனத்தையெவ் வாறு மதிப்பதுவே" இரகுநாத. ஒருதுறைக். 185.

2. நானாழி; "நாழி முகவாது நானாழி" மூதுரை. 19

3. நான்மணி - பதுமராகம், நீலகந்தி, குருவிந்தம், கோவாங்கு என்னும் நால்வகை மாணிக்கங்கள்; சிலப். 14 : 186-7, உரை.

4. நாற்கவி : ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரமென்பன; "நாற் கவிக்குப் படிச்சந்தம்" சடகோபரந்தாதி, 9.

5. மஞ்சாடி - பெருங்குன்றிமணிமரம்; இதன் முத்து இரண்டு குன்றி மணியின் எடையுள்ளது. இம்மரத்தின் பெயர் திலகம் என்பது.

6. ஐவ்வண்ணம் - வெண்மை, செம்மை, கருமை, பசுமை, பொன்மை என்னும் ஐந்து நிறங்கள்; நன். சூ. 455, உரை.

7. ஐம்பொறி - மெய் வாய் கண் மூக்குச் செவி; "ஒருமைம்பொறியு மோம்பி" சீவக. 377.

8. ஐயம்பு - மன்மதனுக்குரிய ஐந்து பாணங்கள்; "செஞ்சிலை வேள், ஐயம்புகும்பொழுது" (கோடீச். 381); அவை தாமரை, மா, அசோகு, முல்லை, நீலோற்பலம் என்பன.

அடைவதும் இனமும் என்றமையின் அருத்தாபத்தியான் ஐந்நூறு, [1]ஐந்தூணி என்புழி ஒற்றுத் தன்னியல்பின் நிற்றலுங் கொள்க. (42)

193. எட்ட னுடம்பு ணவ்வாகு மென்ப.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) நால்வகைப் பெயரும் வருமிடத்து இறுதியுயிர் மெய்கெட நின்ற எட்டென்னும் எண்ணினது டகரவொற்று ணகர வொற்றாகு மென்று சொல்லுவர் புலவர் எ - று.

(வ - று.) எண்பது, எண்கழஞ்சு, எண்கலம், [2]எண்குணம் என வரும்.

" எண்ணிறை யளவும் " (188) என்னுஞ் சூத்திரத்துக் கூறிய புணர்ச்சிக்கு வேண்டும் விகாரம் இதுகாறுமென்பது தோன்ற அச் சூத்திரத்துட் கூறிய புலவரென்னும் எழுவாயைச் சுட்டி அதன் பய னிலையாக இச்சூத்திரத்திறுதிக்கண் ' என்ப ' என்றார். (43)

194. ஒன்பா னொடுபத்து நூறு மொன்றின்
முன்னதி னேனைய முரணி ஒவ்வொடு
தகர நிறீஇப் பஃ தகற்றி னவ்வை
நிரலே ணளவாத் திரிப்பது நெறியே.

எ - ன், ஒன்பதென்னும் எண்ணுப்பெயர்க்கு எய்தாதது எய்து வித்தலும் அதனொடு புணரும் பத்து நூறென்னும் வருமொழிகட்கு எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) [3]ஒன்பஃதுடனே பத்தென்பதும் நூறென்பதும் வந்து புணருமாயின், நிலைமொழியாய எட்டின்மேலொன்று ஒன் பஃதெனப் பஃதென்னும் இறுதியதாய்த் திரிந்துநின்றாற்போல வரு மொழியாய எண்பதின்மேற் பத்தை நூறெனவும் எண்ணூற்றின் மேல் நூற்றை ஆயிரமெனவும் திரித்து நிலைமொழிக்கு முதற்கண் ஒகரவுயிரோடு தகரமெய்யை அதற்கு ஆதாரமாக நிறுத்தி அந்நிலை

---

1. தூணி - நான்கு மரக்காலளவு.

2. எண்குணம் - இறைவனுக்குரிய எட்டுக் குணங்கள் ; அவை தன் வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவி லாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என்பன ; " எண்குணத்தான் றாளை " குறள், 9.

3. சிவஞானமுனிவர், இச்சூத்திர உரைப்பகுதிகள் சிலவற்றை மாற்றியுள்ளார்.

மொழி யிறுதிக்கட் பஃதைக் கெடுத்து அம்மொழிமுதற்கு அயல் நின்ற னகரவொற்றை நிரனிறைவகையானே பத்தின் திரிபாகிய நூற்றின்புணர்ச்சிக்கு ணகரவொற்றாயும் நூற்றின் திரிபாகிய ஆயிரத்தின்புணர்ச்சிக்கு ளகரவொற்றாயும் திரிப்பது முறைமையாம் எ - று.

(வ - று.) தொண்ணூறு எ - ம், தொள்ளாயிரம் எ - ம் வரும் ; தொளாயிரமென இக்காலத்து மரீஇயிற்று.

ஒன்பஃது நின்றுபுணரினும் ஒன்பது நின்றுபுணரினும் இம்முடிபேயாமென்பார் பஃதகற்றியென்பதனோடு பொருந்த ஒன்பஃதொடென்னாது ஒன்பானொடென்றும், இங்ஙனமாயிற் சொன்முழுவதூஉம் விகாரப்படுமென்பார் ஒன்றினென்றும், ஒன்பஃதென்பது இறுதிக்கட் பஃதென்னுமொலி தோன்ற வருஞ்சூத்திரத்துட் கூறும் பத்தின்விகாரம்போல் முரணிற்றென்பார் அதனை உவமையாக்கி முன்னதினென்றும், ஒன்று பத்தானாற்போலப் பத்தை நூறாகவும் நூற்றை ஆயிரமாகவும் சிற்றெண்ணைப் பேரெண்ணாகத் திரிக்கவென்பார் முரணி யென்றும், தகரவொற்றை ஒகரவுயிர்க்கு உடம்பாக நிறுத்துக வென்பார் ஒவ்வொடென்றும், நிலைமொழி முரணியது இஃதெனப் புலப்படுப்பார் பஃதகற்றியென்றும், இப் புணர்மொழிகள் ஒகரவுயிரொன்றொழிய விகாரப்பட்டுக் கிடந்தமையிற் குறிப்பின்றிமுடியு மரூஉமுடிபென்று கொள்ளற்கவென்பார் திரிவதென்னாது திரிப்பதென்றும், இவற்றை இலக்கண முடிபாகத் தொல்லாசிரியர் முடித்தவாறே முடித்தாமென்பார் நெறியே யென்றும் கூறினார்.

இச்சூத்திரத்து, ' முன்னதி னேனைய முரணி ' என்பதற்கு இவ்வாறு பொருள்கொள்ளாது ஒன்பஃதினானே பத்தையும் நூற்றையும் பெருக்கியெனப் [1]பொருள்கொள்வாரு முளர். முரணி யென்னுஞ் சொற்கு அது பொருளன்றாதலானும் அது பொருளாமேனும் அதனால் வருமொழி இவ்வாறு திரிந்தவெனத் தோன்றாமையானும் தோன்றின் *நிலைமொழிக்கும் விகாரங்கூற வேண்டாமையானும் அது பொருந்தாதென்க. (44)

195. முதலிரு நான்கா மெண்முனர்ப் பத்தின்
இடையொற் றேக லாய்த மாகல்
எனவிரு விதியு மேற்கு மென்ப.

---

(பி - ம்.) *' வருமொழிக்கும் '

1. பொருள் கொள்பவர் மயிலைநாதர் ; அவர் ' ஒன்றானமான பத்து ஒன்பது ; அஃது அக்காலத்துச் சொல் ' என்பர்.

எ - ன், ஒன்று முதல் எட்டெண்ணின் முன்வரும் பத்தென்னு மெண்ணிற்கு எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) ஒன்றுமுதலாகிய எட்டெண்களின் முன்னும் வரும் பத்தென்னு மெண்ணிடை நின்ற தகரஒற்று ஒருகாற் கெடுதலும், ஒருகால் இடையே தகரம் நின்ற நிலைக்களத்து அதுகெட ஆய்தம் வருதலுமென்னும் இவ்விரண்டு விதியையும் ஏற்குமென்று சொல் லுவர் புலவர் எ - று.

இடை யென்பதனைப் பின்னுங் கூட்டுக; இடையே ஆய்த மாகல் என்றமையின் அவ்வழித் தகரக்கேடு கூருதே அமையு மென்க.

(வ - று.) ஒருபது, இருபது, முப்பது, நாற்பது, ஐம்பது, அறுபது, எழுபது, எண்பது எ - ம், ஒருபஃது, இருபஃது, முப் பஃது, நாற்பஃது, ஐம்பஃது, அறுபஃது, எழுபஃது, எண்பஃது எ - ம் வரும். (45)

196. ஒருபஃ தாதிமுன் ஒென்றுமுத லொன்பான்
எண்ணு மவையூர் பிறவு மெய்தின்
ஆய்த மழியவாண் டாகுந் தவ்வே.

எ - ன், மேலைச்சூத்திரத்தான் எய்திய ஒருபஃதாதியாய நிலை மொழிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியும் எய்தாதது எய்துவித் தலும் நுதலிற்று.

(இ - ள்.) ஒருபஃதாதியாய எட்டெண்களின் முன்னும் ஒன் ருதி ஒன்பதெண்ணும் அவையூர்ந்த பிறவும் வந்துபுணருமாயின், ஆய்தங் கெட அந்நிலைக்களத்து இயல்பாய தகரம் வரும் எ - று.

ஐயமறுத்தற்கு அவையூர் பிறவு மென்ருர்.

(வ - று.) ஒருபத்தொன்று, இருபத்தொன்றேகாலே யரைக் கால், முப்பத்தொரு கழஞ்சு, எழுபத்தொன்பதின் கலனே தூணி, எண்பத்தொன்பதியாண்டு என வரும். பிறவுமன்ன.

'ஆய்த மழியவாண் டாகுந் தவ்வே' என்றமையான், ஆய்த மழிந்தவற்றிற்கும் ஒருபது முதலிய முற்றுகரவீற்றெண்ணுப் பெயர்கட்கும் வேற்றுமையின்மையின், அருத்தாபத்தியான் அவற் ருேடு இவ்வருமொழிகள் புணரினும் ஆண்டாகுந் தவ்வே யென்று ராயிற்று. இவற்றிற்குங் காட்டு அவையேயாமென்க. (46)

197. ஒன்றுமுத லீரைந் தாயிரங் கோடி
எண்ணிறை யளவும் பிறவரிற் பத்தின்
ஈற்றுயிர் மெய்கெடுத் தின்னு மிற்றும்
ஏற்ப தேற்கு மொன்பது மினைத்தே.

எ - ன், பத்தென்னும் நிலைமொழிக்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதியும் எய்தாதது எய்துவித்தலும் ஒன்பதென்னும் நிலைமொழிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியும் எய்தாதது எய்துவித்தலும் நுதலிற்று.

(இ - ள்.) ஒன்றுமுதலாகிய பத்தும் ஆயிரமும் கோடியுமென்னு மெண்ணுப்பெயரும் நிறைப்பெயரும் அளவுப்பெயரும் பிறபெயரும் வந்து புணருமாயின் நிலைமொழியாய பத்தென்னுமெண்ணினது ஈற்றுயிர்மெய்யைக் கெடுத்து அந்நிலைக்களத்து இன்சாரியையேனும் இற்றுச்சாரியையேனும் ஆண்டைக்கேற்பது ஏற்று நிற்கும்; ஒன்பதென்னும் நிலைமொழியும் இங்ஙனம் விதந்த எண்ணுதிப்பெயர்வந்து புணருமாயின் இன்னேனும் இற்றேனும் ஆண்டைக்கேற்பது ஏற்று நிற்கப்பெறும் எ - று.

(வ - று.) பதினொன்று, பதின்மூன்று, பதினாயிரம், பதின்கழஞ்சு, பதின்கலம், பதின்மடங்கு எ - ம், பதிற்றொன்று, பதிற்றிரண்டு, பதிற்றுமூன்று, பதிற்றுக்கோடி, பதிற்றுத்தூணி எ - ம், ஒன்பதினாயிரம், ஒன்பதின்கழஞ்சு, ஒன்பதின்கலம், ஒன்பதின்மடங்கு எ - ம், ஒன்பதிற்றொன்று, ஒன்பதிற்றிரண்டு, ஒன்பதிற்றுக்குறுணி எ - ம் வரும். பிறவுமன்ன.

பதினொன்றென்பது உம்மைத்தொகை. பதிற்றொன்றென்பது பண்புத்தொகை. பிறவுங் கண்டுகொள்க.

பத்துக் கோடி, ஒன்பது கோடியென இந்நிலைமொழிகள் தம்மியல்பினிற்றலேயன்றி வழக்கின்கண்ணும் சான்றோர் செய்யுட்கண்ணும் இவ்வாறு அமைந்து கிடந்தனவுங் கொள்கவென்பார் ஏற்பதேற்குமென்றும், ஒன்பதன் ஈற்றுயிர்மெய்யைக் கெடாது குற்றுகரவீற்றுப் பொதுவிதியான் உயிரொன்றுமே கெட இன்னுமிற்றும் ஏற்பதேற்று நிற்றலின் ஒன்பது மிற்றேயெனத் தன்மையணியாக்காது, உவமையணியாக்கி இனைத்தே யென்றும் கூறினார். ஒன்பதென்பதன் இறுதி பத்தென்பது போல முரணி நிற்றலின் அதனோடு இது மாட்டெறியப்பட்டதென்க. (47)

198. இரண்டு முன்வரிற் பத்தினீற் றுயிர்மெய்
கரந்திட வொற்று னவ்வாகு மென்ப.

எ - ன், இதுவும் பத்தென்னும் நிலைமொழிக்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) இரண்டென்பது வரிற் பத்தென்னு நிலைமொழியினது ஈற்றுயிர்மெய் கெடத் தகரவொற்று னகரவொற்றாகத் திரியுமென்று சொல்லுவர் புலவர் எ - று.

(வ - று.) பன்னிரண்டு என வரும்.

உம்மைத்தொகைக் கண்ணும் பண்புத்தொகைக் கண்ணும் இரண்டென்னுமெண் வருமொழியாய் வருமேனும் முன்வரினென வருதலைச் சிறப்பித்தமையான், ஒரு சொன்னீர்மையாய்ச் சிறந்த உம்மைத்தொகைக்கு இவ்விதி கூறினரென்க. (48)

199. ஒன்ப தொழித்தவெண் ணொன்பது மிரட்டின்
முன்னதின் முன்னல வோட வுயிர்வரின்
வவ்வு மெய்வரின் வந்தது மிகனெறி.

எ - ன், ஒன்பதொழித்த ஒன்பதெண்களாய நிலைமொழி களுள் மூன்றுறேழற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியும், எல்லாவற் றிற்கும் உயிர்வரின் எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதியும், மெய்வரின் எய்தாததெய்துவித்தலும் நுதலிற்று.

(இ - ள்.) ஒன்பதென்னும் எண்ணொன்றனையும் ஒழித்து நின்ற ஒன்றுதி பத்தீறுன எண் ஒன்பதனையும் இரட்டித்துக் கூறின் நிலைமொழி முதலெழுத்தொன்றும் நிற்க அல்லன வெல்லாங்கெட, உயிர்முதலான எண்வரின் வகரவொற்றும் மெய்முதலான எண் வரின் வந்தவொற்றும் மிகுதல் முறைமையாம் எ - று.

(வ - று.) ஒவ்வொன்று, இவ்விரண்டு, மும்மூன்று, நந்நான்கு ஐவைந்து, அவ்வாறு, எவ்வேழு, எவ்வெட்டு, பப்பத்து எனவரும்.

நெறியே என்றமையானே நான்கிற்குக் குறுக்கமும், ஐவைந் தென்புழி ஐகாரக்குறுக்கத்தின்முன் ஒற்றிரட்டாமையும், ஒரோ வொன்று, ஒன்ரென்று, கழக்கழஞ்சு, கலக்கலமென இரட்டித்து வருவனவும், குற்றுகரப்புணர்ச்சிவிதியுட் கூறுதொழிந்து நெறிப் பட வருவனவுளவேல் அவையுங்கொள்க.

ஒவ்வொன்று கொடுவென்றல் இம்முறையே பலவற்றையுங் கொடுவெனப் பொருள்தந்து நிற்றலின் இஃது அடுக்கன்று; வேற்றுமையல்லன வெல்லாம் அல்வழியாதலின் தழாஅத்தொட ராய அல்வழியுள் ஒன்றுமென்க. (49)

## ஊகாரவீற்றுச் சிறப்புவிதி

200. பூப்பெயர் முன்னின மென்மையுந் *தோன்றும்.

எ - ன், ஊகாரவீற்றுப் பூவென்னும் பலபொருளொரு சொன் முன் வரும் வல்லினத்திற்கு எய்தியன்மேற் சிறப்பு விதி உணர்த் துதல் நுதலிற்று.

(இ - ள்.) பூவென்னும் பலபொருட்பெயர்ச்சொன்முன் வல்லி

(பி - ம்) * 'புணரும்'

னம்வரிற் பொதுவிதி (165) யாற் கசதப மிகுதலேயன்றி அவற் றிற்கு இனமாய மெல்லொற்றுக்களும் மிகும் எ - று.

இப்பொருட்டாய பூப்பெயரென விதவாமையிற் பலபொரு ளொருசொல் என்பதுபெற்றும்.

(வ - று.) பூங்கொடி, பூஞ்சோலை, பூந்தடம், பூம்பணை என வரும்; இவற்றுட் பூவென்பது மலரேல் இரண்டாம்வேற்றுமை உருபும்பயனுமுடன்றொக்கதொகையாகவும், பொலிவேற் பண்புத் தொகையாகவும் பூங்கணையென்பது மலரென்னு மொருபொருட் டாய் மூன்றும் வேற்றுமை உருபும் பயனும் உடன்றொக்க தொகை யாகவும், பண்புத்தொகையாகவும், பூங்கரும்பென்பது பொலி வென்னும் ஒரு பொருட்டாய்ப் பண்புத் தொகையாகவும், வருவன காண்க.

உறழ்ந்துவருமென உறுதி கூறுது பூக்கொடியென வல்லின மிகுதலை உம்மையால் தழீஇக்கொண்டமையின் இவ்விருவகைத் தோன்றலும் ஏற்றபெற்றி கொள்க. (50)

## ஏகார ஓகாரவீற்றுச் சிறப்புவிதி

201. இடைச்சொல் ஏஓ முன்வரி னியல்பே.

எ - ன், ஏகார ஓகார இடைச்சொற்கள்முன் வரும் வல்லினத் திற்கு எய்தியது விலக்கல் நுதலிற்று.

(இ - ள்.) இடைச்சொல்லாய [1]ஆறேகாரத்தின் முன்னும் [2]எட்டோகாரத்தின் முன்னும் வல்லினம் வருமாயிற் பொது விதி யான் மிகாது இயல்பாம். எ - று.

(வ - று.) அவனே கொண்டானென்பது பிரிநிலையும் வினவும் ஈற்றசையும் தேற்றமுமாம். அறமே பொருளே காமமே துறவே என்பன எண்;

"ஏனதனை யென்றோ ரிருடி வினவ"

என்பது இசைநிறை. அவனோ கொண்டானென்பது ஒழியிசை முதலியவெட்டுமாம். இவற்றுள் வல்லினம் இயல்பாதல் காண்க. இவ்விடைச்சொற்கள் பலபொருள் தருமாறு இடைச்சொல்லியலுட் காட்டுதும். (51)

## ஐகாரவீற்றுச் சிறப்புவிதி

202. வேற்றுமை யாயின் ஐகா னிறுமொழி
ஈற்றழி வோடும் மேற்பவு முளவே.

எ - ன், ஐகாரவீற்று நிலைமொழிக்கு எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

1. சூ. 422. 2. சூ. 423.

(இ - ள்.) ஐகாரவீற்றுச்சொல் வேற்றுமைக்கண் வருமாயின் இறுதி ஐகாரங்கெடாது அம்முச்சாரியை பெற்று முடிவனவும், ஐகாரங் கெட்டு அம்முச்சாரியை பெற்று முடிவனவும் சில உளவாம் எ - று.

உம்மைகளிரண்டில் முன்னையது எதிர்மறைக்கண்ணும், பின்னையது எதிர்மறையோடு இழிவுசிறப்பின்கண்ணும் வந்தன.

(வ - று.) "புன்னையங்கானல்" (அகநா. 80), "கொல்லையஞ் சாரல்" (சிலப். ஆய்ச்சியர்.), "கொன்றையந்தீங்குழல்" (சிலப். ஆய்ச்சியர்.), "முல்லையம்புறவம்" (அகநா. 384), எ - ம் [1]வழு துணங்காய், ஆவிரம்பூ, வேர் எ - ம் வரும்.

தகுதியாக்காது ஏற்பன என்றமையான் முல்லைப்புறவமென வரினுங் கொள்க. அம்முமென்றுமையின் உம்மையான் வல்லினந் தழீஇயதன்றென்க. வருமொழி வரையாமையின் நாற்கணத்துள் ஏற்பன கொள்க. (52)

203. பனைமுன் கொடிவரின் மிகலும் வலிவரின்
ஐபோ யம்முந் திரள்வரி னுறழ்வும்
அட்டுறின் ஐகெட்டந் நீள்வுமாம் வேற்றுமை.

எ - ன், பனையென்னு நிலைமொழிக்கும் அதனோடு புணரும் சில வருமொழிகட்கும் எய்தியவற்றை இகந்துபடாமற் காத்தலும் அவற்றை விலக்கிப் பிறிதுவிதி வகுத்தலும் நுதலிற்று.

(இ - ள்.) பனையென்னும் பெயர்முன் கொடியென்னும் பெயர் வருமாயின் வந்தது மிகுதலும் க ச த பக்கள் வரின் நிலைமொழி யீற்று ஐகாரங் கெட்டு அம்முப்பெறுதலும் திரளென்னும் பெயர் வருமாயின் வந்ததுமிகுந்தும் ஐபோய் அம்முப்பெற்றும் தம்முள் உறழ்தலும் அட்டென்னும்பெயர் வருமாயின் ஐகாரங்கெட வருமொழி அகரம் ஆகாரமாதலுமாம், வேற்றுமைக்கண் எ - று.

கெட்டென்பது செயவெனெச்சம் திரிந்துநின்றது.

(வ - று.) [2]பனைக்கொடி எ - ம், பனங்காய், [3]*செறும்பு, தூண், பழம் எ - ம், பனைத்திரள், பனந்திரள் எ - ம், பனாட்டு எ - ம் வரும்.

பனைக்கொடியென்பது பனையை எழுதிய கொடி. பனாட்டென்பது பனையினது தீங்கட்டி. (53)

3. உயிரீற்றுப் புணரியல் முற்றிற்று.

---

(பி - ம்.) *'செதும்பு' 1. வழுதுணங்காய் - கத்தரிக்காய்; "வழு துணங்காய் வாட்டும்" தனிப்பாடல், ஔவையார். 2. பனைக்கொடி: "அடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடி யோனும்" புறநா. 56. 3. பனஞ் செறும்பு: "பனஞ்செறும் பன்ன பன்மயிர் முன்கை" (பெருங். 2. 8: 107); "பெண்ணைவன் செறும்பு" (கம்ப. கங்கைப். 33); செறும்பு சிலாம்பென வழங்கும்.

நான்காவது

# மெய்யீற்றுப் புணரியல்

---

## மெய்யீற்றின் முன் உயிர்

(பொது விதி)

204. உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே.

எ - ன், மெய்யீற்றுப்பதம் புணரும் சிறப்புப்புணர்ச்சி இவ்வியலாற் கூறப்படுதலின் மெய்யீற்றின்முன் உயிர்முதல் வந்து புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நிலைமொழியீற்றில் நின்ற மெய்யின்மேல் வருமொழிமுதலுயிர் வந்து ஒன்றுபட்டு இணங்கிநிற்பது இயல்பு புணர்ச்சியேயாம் எ - று.

(வ - று.) தோன்றலழகன், உரிஞுழகிது, புகழுழகிது எ - ம், வேலெறிந்தானெனவும் இருவழியுங் காண்க. பிறவுமன்ன.

இவ்வாறு மெய்யும் உயிருங்கூடி உயிர்மெய்யாய் மெய்யினது புள்ளியும் உயிர்வடிவுங் கெட்டு நிற்றலின் விகாரமா மென்பாரை விலக்கிச் சிறந்த ஒலிவடிவின் யாக்கையும் உயிரும்போல் மெய்யினது மாத்திரை உள்ளடங்க ஒன்றுபட்டு இரட்டையிலைபோல் ஒற்றொலிமுன்னும் உயிரொலிபின்னுமாய் இணங்கி நிற்றலானும் ஒன்றாத தனிக்குறின்முன் ஒற்றுமுதலியன விகாரப்படுதலானும் ஒன்றுவது இயல்பேயென்றார்.

ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. (1)

## சிறப்பு விதி

205. தனிக்குறின் முன்னொற் றுயிர்வரி னிரட்டும்.

எ - ன், எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தனிக்குறின்முன் ஒற்று உயிர்வரின் இரட்டித்து நிற்கும் எ - று.

(வ - று.) மண்ணரிது, பொன்னரிது எ - ம், [1]மண்ணகம், பொன்னொளி எ - ம் வரும். பிறவுமன்ன. (2)

## மெய்யீற்றின்முன் மெய்

206. தன்னொழி மெய்ம்முன் யவ்வரின் இகரம்
துன்னு மென்று துணிநரு முளரே.

---

1. மண்ணகம்: "மண்ணக மடந்தை மயக்கொழிப் பனள்போல்" சிலப். 16 : 40.

எ - ன், யகரமொழிந்த பத்துமெய்முன்னும் வரும் யகரத்திற்கு 'எண்மூவெழுத்தீற்றெ'ன்னுஞ் (158) சூத்திரத்தான் எய்தியதன் மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) யகரம், தன்னையொழிந்த ஞ ண ந ம ன ர ல வ ழ ள வென்னும் பத்துமெய்முன் வந்தால் தன்முன் இகரச் சாரியையைப் பொருந்துமென்று அரிதிற்கொள்வாரும் சிலருளர் எ - று.

(வ - று.) வேளியாவன், மண்ணியாது எ - ம், வேளியானை, மண்ணியானை எ - ம் வரும். பிறவுமன்ன.

எதிர்மறையாய இழிவுசிறப்பும்மையான் இகரந்துன்றுது பொதுச் சூத்திரத்தான் (158) இயல்பாமென்பார் பெரும்பாலரென்க. (3)

207. ஞணநம லவளன வொற்றிறு தொழிற்பெயர்
ஏவல் வினைநனி யவ்வன் மெய்வரின்
உவ்வுறு மேவ லுறுசில சில்வழி.

எ - ன், முதனிலைத் தொழிற்பெயர்க்கும் ஏவல்வினைக்கும் பொதுவாய சில நிலைமொழிகட்கு எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

(இ - ள்.) ய ர ழுக்களையொழிந்த எட்டொற்றும் இறுதியாகும் முதனிலைத் தொழிற்பெயரும் ஏவல்வினையும் மேல்விதந்த யகரமொழிந்த மெய்வருமாயிற் பெரும்பாலும் உகரச்சாரியை இறுதிக்கட் பொருந்தும்; சில ஏவல்வினை அவ்வுகரச்சாரியையைப் பொருந்தா, சிலவிடங்களில் எ - று.

ஏவல்வினையோடு எண்ணினமையின், முதனிலைத் தொழிற் பெயரென்பது பெற்றும்.

(வ - று.) உரிஞுக்கடிது, உண்ணுக்கடிது, பொருநுக்கடிது, திருமுக்கடிது, தின்னுக்கடிது, நீண்டது, வலிது எ - ம், கடுமை, நீட்சி, வன்மை எ - ம் தொழிற் பெயர்கள் இருவழியும் உகரம் பெற்றன. பிறவுமன்ன.

உரிஞுகொற்ரு, உண்ணுகொற்ரு, பொருநுகொற்ரு, திருமுகொற்ரு, தின்னுகொற்ரு, நாகா வளவா என ஏவல்வினை உகரம் பெற்றன. பிறவுமன்ன.

உரிஞு, உண்ணு என வருமொழியின்றி உகரம் பெறுதலும், [1]மணலைவாரு, சருகைவாரு எனச் சிறுபான்மை விலக்கிய ஈறு

1. தொடர்மொழியாக இங்கே உதாரணங்காட்டியது பொருள் விளங்குதற்பொருட்டு.

உகரம்பெறுதலுமுளவென்பார் நனியென்றும், யகரம் வருமொழிக்கு இகரம் விதித்தலின் அதனோடுபுணரும் இந்நிலைமொழியிறுதி உகரம் பெறாதென்பார் யவ்வன் மெய்யென்றும், உண்ணுகொற்றா உண்கொற்றாவென உகரம்பெற்றும் பெறாதும் வருவனவும், உரிஞுகொற்றாவென உகரம்பெற்றே வருவனவுமுளவென்பார், சிலவேவலுறா சில்வழியென்றுங் கூறினார்.

ஏவலுறாவென்றது ஏவற்குறாவெனப் [1]பாடமோதுவாரு முளராலோவெனின், உறுமென்னும் வினைக்குத் தொழிற்பெயர் களையும் ஏவல்வினைகளையும் வினைமுதலாக்கிக் கூறுதலானும் அதனை மறுத்த உறாவென்னும் பன்மைவினைக்கு ஒருமை உகரம் வினைமுதலாகாமையானும் அது பாடமன்றென்க. (4)

208. நவ்விறு தொழிற்பெயர்க் கவ்வுமாம் வேற்றுமை.

எ - ன், நகரவீற்றுத்தொழிற்பெயர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நகரம் இறுதியாகும் முதனிலைத் தொழிற்பெயர்க்கு உகரச்சாரியையேயன்றி அகரச்சாரியையுமாம், வேற்றுமைக்கண் எ - று.

(வ - று.) பொருநக்கடுமை, நன்மை, வன்மை என வரும். பிறவுமன்ன.

பொருநுதல் ஒருவர் மற்றொருவர்போல வேடங்கொள்ளும் பொருநரது தொழிலாதலின் ஒத்தலென்னும் பொருட்டு. (5)

### ணகரனகர வீறு

209. ணனவல் லினம்வரட் டறவும் பிறவரின்
இயல்பு மாகும் வேற்றுமைக் கல்வழிக்
கனைத்துமெய் வரினு மியல்பா கும்மே.

எ - ன், மேலைச்சூத்திரங்காறும் மெய்யீற்றுப் பொதுப் புணர்ச்சி கூறி, அவற்றிற்கேயுரிய ஞகரநகரங்களை யொழித்து ஏனையவற்றிற்கு முறையே தனித்தனி சிறப்புவிதி கூறுவான் தொடங்கி ணகரனகரவீறு புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ணகாரனகாரங்கள் வேற்றுமைக்கண் வல்லினம் வந்தால் முறையே டகாரமும் றகாரமுமாம்; மெல்லினமும் இடையினமும் வந்தால் இயல்பாம்; அல்வழிக்கண் மூவினமும் வந்தாலும் இயல்பேயாம் எ - று.

(வ - று.) சிறுகட்களிறு, "பேரமர்க்கட்பேதை" (இ. வி. சூ. 314, மேற்.) எ - ம், பொற்றட்டு, பொற்றகடு எ - ம் வேற்றுமைக்

1. இவ்வாறு பாடம் ஓதுபவர் மயிலைநாதர்.

கண் வல்லினம்வரத் திரிந்தன. மண், பொன் : ஞாற்சி, நீட்சி, மாட்சி, யாப்பு, வன்மை என வேற்றுமைக்கண் மெல்லினமும், இடையினமும்வர இயல்பாயின. மண், பொன் : கடிது சிறிது தீது பெரிது ; ஞான்றது நீண்டது மாண்டது ; யாது, வலிது எ - ம், உண்டான் கொற்றன் ஞெள்ளன் வளவன் எ - ம் அல்வழிக்கண் மூவினமும் வர இயல்பாயின. பிறவுமன்ன.

ஒப்பின்முடித்தலால் னகரமும் உடன்கூறினர். இவ்வாறு பின்வருவனவுமன்ன. (6)

210. குறிலணை வில்லா ணனக்கள் வந்த
நகரந் திரிந்துழி நண்ணுங் கேடே.

எ - ன், ணகரனகரவீற்றுள் ஒரு சாரனவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதிவகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) தனிக்குறிலொன்றனையு மொழிந்து ஒருமொழி தொடர்மொழிகளைச்சார்ந்த ணகார னகாரங்கள் வருமொழிக்கு முதலாக வந்த நகரம் மயக்கவிதியின்மையிற் றிரிந்தவிடத்து இயல் பாகாது கெடுதலைப் பொருந்தும் எ - று.

(வ - று.) பாணன்று, தூணன்று, பசுமணன்று எ - ம், நன்மை எ - ம், அரசனல்லன், செம்பொனன்று எ - ம், நன்மை எ - ம் இரு வழியுங் கெட்டன. (7)

## சிறப்பு விதி

211. சாதி குழூஉப்பரண் கவண்பெய ரிறுதி
இயல்பாம் வேற்றுமைக் குணவெண் சாண்பிற
டவ்வா கலுமா மல்வழி யும்மே.

எ - ன், ணகரவீற்றுட் சிலவற்றிற்கு எய்தியது விலக்கலும் சிலவற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி வகுத்தலும் நுதலிற்று.

(இ - ள்.) சாதிபற்றியும் திரள்பற்றியும் வரும்பெயர்களும், பரண் கவணென்னும் பெயர்களுமானவற்றின் இறுதி ணகரம் வேற்றுமைக்கண்ணும் வல்லினம்வந்தால் இயல்பாம் ; எண்ணை லளவையன்றி உணவுக்குரிய எள்ளின் திரிசொல்லாய எண் ணென்னும் பெயரும் சாணென்னும் நீட்டலளவைப்பெயரும் வல் லெழுத்துக்கள்வரின் திரிந்து டகரமாதலும் பொருந்தும், அல் வழிக்கண்ணும் எ - று.

அல்வழிக்கண் இறந்தததழீஇய எச்சவும்மையை வேற் றுமைக்கண்ணும் கூட்டுக.

(வ - று.) பாண், உமண் : குடி, சேரி, தோட்டம், பாடி எ - ம்; அமண்குடி, சேரி, தோட்டம், பாடி எ - ம்; பரண்கால், [1] கவண் கால் எ - ம் வேற்றுமைக்கண்ணும் இயல்பாயின. எட்கடிது, சிறிது, தீது, பெரிது எ - ம், சாட்கோலெனவும் அல்வழிக்கண் ணுந் திரிந்தன. டவ்வாகலுமாமென்னும் இறந்தது தழீஇய எச்ச இழிவுசிறப்பும்மையான் எண்கடிது, சாண்கோலென இயல்பாதலே வலியுடைத்தென்க.

பிறவென்ற மிகையானே வேற்றுமைக்கண், பாணக்குடி யென அகரச்சாரியை பெறுதலும், "அட்டூண் டுழனி" என்னும் இயல்பும், மண்குடம் மட்குடமென்னும் உறழ்வும் இருவழிக் கண்ணும் இன்னும் ணகரவீற்றுள் அமையாதன உளவேல் அவையுங் கொள்க.

சாதியும் குழுவும் ஆகுபெயராய் அவற்றையுடையராய உயர் திணைப்பொருளை உணர்த்திநின்றனவேனும் தெய்வமென்றாற் போலச் சொல்லான் அஃறிணையாதலின்,

" பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க ளீற்றுமெய்
வலிவரி னியல்பாம் " (159)

என்பதனுன் அமையாவாயின ; மேல்வரும் னஃகான்கிளைப் பெயருமது. (8)

212. னஃகான் கிளைப்பெய ரியல்பும் அஃகான்
அடைவு மாகும் வேற்றுமைப் பொருட்கே.

எ - ன், னகரவீற்றுச் சாதிப்பெயர்க்கு எய்தியது விலக்கலும் பிறிதுவிதி வகுத்தலும் நுதலிற்று.

(இ - ள்.) னகரவீற்றுச்சாதிப்பெயர், வல்லினம் வர ஈறு திரியாது இயல்பாதலும் அகரச்சாரியை பெறுதலுமாம், வேற் றுமைப் பொருட்புணர்ச்சிக்கண் எ - று.

(வ - று.) எயின்குடி, எயினக்குடி, சேரி, தோட்டம், பாடி எனவரும்.

பொருட்கேயென்ற மிகையானே எயினமரபு, எயினவாழ்வு, எயினவணியென ஏனைக்கணம்வரின் அகரச்சாரியைபெறுதலும், எயினக்கன்னி, எயினப்பிள்ளை, எயினமன்னன் என அல்வழிக் கண் அகரச்சாரியை பெறுதலும் கொள்க.

கிளையென்னும் பலபொருளொருசொல் ஈண்டுச் சாதிமேல் நின்றது. (9)

213. மீன்றவ் வொடுபொரூஉம் வேற்றுமை வழியே.

1. கவண்கால் - கவணினது இரண்டுபக்கத்துக் கயிறு.

எ - ன், மீனென்னுஞ் சொற்கு எய்தியது ஒருவாற்ருன் விலக்கல் நுதலிற்று.

(இ - ள்.) மீனென்னும் மொழியிறுதி னகரம் வேற்றுமைக் கண் வல்லெழுத்துவரின் றகரத்தோடு உறழ்ந்துவரும் எ - று.

(வ - று.) மீன்கண், மீற்கண், செவி, தலை, புறம் எனவரும்.

றகரமாதல் இக்காலத்துப் பயின்றுவாராதேனும் தொன் னெறியாதலின் ஆணைவழிநிற்கவென்பார் வழியேயென்ருர். (10)

214. தேன்மொழி மெய்வரி னியல்பு மென்மை
மேவி னிறுதி யழிவும் வலிவரின்
ஈறுபோய் வலிமெலி மிகலுமா மிருவழி.

எ - ன், தேனென்னுஞ் சொற்கு எய்தியது விலக்கலும் எய்தியது இகந்துபடாமற் காத்தலும் எய்தியதன்மேற் சிறப்பு விதியும் வரும்வல்லினத்திற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தேனென்னுஞ்சொல் மூவினமெய்யும் வரின் இறுதி னகரம் இயல்பாதலும், மெல்லினம் வரின் அவ்விறுதி இயல்பாதலே யன்றிக் கெடுதலும், வல்லினம்வரின் இறுதி இயல்பாதலேயன்றிக் கெட வந்தவல்லினமாதல் அதற்கினமாதல் மிகுதலுமாம், இருவழிக் கண்ணும் எ - று.

" குறிலணை வில்லா னனக்கள் வந்த
நகரந் திரிந்துழி நண்ணுங் கேடே " (210)

என்றமையின், இயல்பிற்கு நகரம் ஒழிந்த எட்டுமெய்யும் வருவித்துக் காண்க.

(வ - று.) தேன்கடிது, தேன்ஞான்றது, தேன்யாது எ - ம், தேன்மொழி, தேமொழி எ - ம், தேன்குழம்பு, தேக்குழம்பு, தேங்குழம்பு எ - ம் அல்வழிக்கண் வந்தன. தேன்கடுமை, தேன்மலிவு, தேன்யாப்பு எ - ம், தேன்மலர், தேமலர் எ - ம், தேன்குடம், தேக்குடம், தேங்குடம் எ - ம் வேற்றுமைக்கண் வந்தன. பிறவுமன்ன.

தேனென்பது பலபொருளொருசொல்லாதலின், மணங்கமழ் சோலை யென்னும் பொருட்டாய்த் [1]தேங்கமழ்சோலையென இவ் விகாரங்கள் ஏற்று வருவனவுங்கொள்க. (11)

215. மரமல் லெகின்மொழி யியல்பும் அகரம்
மருவ வலிமெலி மிகலு மாகும்.

1. தேங்கமழ்சோலை : " தேங்கமழ் சோலை தோறுஞ் சிறைவிரித்தாடு மாதோ " நைடத. நாடு. 16.

எ - ன், எகினென்னுஞ் சொற்கு எய்தியது விலக்கலும் எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வகுத்தலும் வரும் வல்லினத்திற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மரமன்றிப் பறவையாய அன்னத்தை உணர்த்தும் எகினென்னுஞ்சொல் வேற்றுமைக் கண்ணும் வல்லினம்வர இறுதி இயல்பாதலும், இருவழியும் அகரச்சாரியையைப் பொருந்தவரும் வல்லெழுத்தாதல் அவற்றிற்கு இனமாதல் மிகுதலுமாம் எ - று.

(வ - று) எகின்கால், சிறை, தலை, புறம் என வேற்றுமைக் கண்ணும் இயல்பாயிற்று. எகினப்புள், எகினம்புள் எ - ம்; எகினக்கால், எகினங்கால் எ - ம் இருவழியும் அகரமருவ வலிமெலி மிகுந்தன ; அகரமருவுதற்கு வருமொழிவரையாமையின் நாற்கணமுங்கொள்க. எகினமாட்சி, எகினவாழ்க்கை, எகினவழுகு என வரும். பிறவுமன்ன. (12)

216. குயினூன் வேற்றுமைக் கண்ணு மியல்பே.

எ - ன், குயின் ஊனென்னுஞ் சொற்கட்கு எய்தியது விலக்கல் நுதலிற்று.

(இ - ள்.) குயினென்னும் பெயரும் ஊனென்னும் பெயரும் வல்லினம்வரின் அல்வழிக்கண் இயல்பாதலேயன்றி வேற்றுமைக் கண்ணும் இயல்பாம் எ - று.

(வ - று.) குயின்கடுமை, ஊன்கடுமை, சிறுமை, தீமை, பெருமை என வரும்.

குயின் - மேகம். (13)

217. மின்பின் பன்கன் றொழிற்பெய ரனைய
கன்அவ் வேற்று மென்மையோ டுறழும்.

எ - ன், மின் பின் பன் கன் என்னும் நான்குசொற்கும் எய்தியது விலக்கிப் பிறிதுவிதிவகுத்தலும் ஈண்டு அகரச்சாரியை முன்வரும் வல்லினத்திற்கு எய்தியதன்மேற் சிறப்பு விதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இந்நான்குசொல்லும் தொழிற்பெயர்போல யவ்வல் மெய்வரின் உகரச்சாரியையைப் பொருந்தும் ; இவற்றுட் கன் என்னுஞ் சொல் உகரச்சாரியையே யன்றி அகரச்சாரியையும் பெற்று வல்லினம் வந்தால் வருமெழுத்தாதல் அதற்கு இனமாதல் மிகப்பெறும் எ - று.

அவ்வுமென்னும் உம்மையும் பெறுமென்னு முற்றும் விகாரத்தாற்றொக்கன.

(வ - று.) மின்னுக்கடிது, பின்னுக்கடிது, [1]பன்னுக்கடிது, கன்னுக்கடிது, நன்று, வலிது எ - ம்; கடுமை, நன்மை, வலிமை எ - ம்; கன்னத்தட்டு, கன்னந்தட்டு எ - ம்; கன்னத்தூக்கு, கன்னந்தூக்கு எ - ம் அல்வழி வேற்றுமைக்கண் முறையே வந்தன. பிறவுமன்ன.

கன்னென்பது - சிறுதராசுத் தட்டு; முன்னென்னுஞ் சொல்லை முன்னமென்றாற்போல இதனைக் கன்னமென்றும் கூறுப. (14)

218. தன்னென் னென்பவற் றீற்றுனவ் வன்மையோ
டுறழு நின்னீ றியல்பா முறவே.

எ - ன், தன்னென்றும் என்னென்றும் வரும் விகார மொழி கட்கு எய்தியது ஒருவாற்றான் விலக்கலும், நின்னென்றுவரும் விகாரமொழிக்கு எய்தியதுவிலக்கலும் நுதலிற்று.

(இ - ள்.) தானென்பது தன்னென்றும், யானென்பது என்னென்றும் வரும் விகாரமொழிகளின் ஈற்று னகரம் வல்லினம் வரிற் பொதுவிதியானே றகரமாய்த் திரிதலும் அவ்விதி ஏலாது இயல்பாதலுமாம்; நீயென்பது நின்னென நின்ற விகாரமொழி யீற்று னகரம் வல்லினம் வரிற்றிரியாது இயல்பேயாம் எ - று.

வன்மையென்றது னகரத்திற்கு இனமாய றகரத்தை.

(வ - று.) தன்பகை தற்பகை, என்பகை எற்பகை எ - ம், நின்பகை எ - ம் வரும்.

உறவே யென்றமிகையானே மின் பின் முதலியன மின் கடிது, மின்கடுமை என இருவழியும் சாரியைப்பேறும் திரிபு மின்றி வருதலும், [2]மான்குளம்பு [3]அழன்கை என வேற்றுமைக் கண் விதவாதன இயல்பாதலும், வரிற்கொள்ளுமெனச் செயி னென்னும் வாய்பாட்டுவினையெச்சம் பொதுச்சூத்திரத்தான் (209) இயல்பாகாது திரிதலும், இன்னும் னகரவீற்றுள் அமையா தனவுளவேல் அவையுங் கொள்க.

நின்னென்பது விகாரமொழியாதலின், "பொதுப்பெயருயர் திணைப் பெயர்க ளீற்றுமெய், வலிவரி னியல்பாம்" (159) என்பத னுள் அடங்காதாயிற்று. (15)

## மகரவீறு

219. மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்
வன்மைக் கினமாத் திரிபவு மாகும்.

---

1. பன் - பருத்தி.

2. மான்குளம்பு : "சொல்லத்தகுமான் குளம்பென்றே" (உவமான சங்கிரகம், 6.) 3. அழன்கை - பிணத்தின்கை.

எ - ன், மகரவீறு புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மகரவீற்றுச்சொற்கள் இறுதிமகரங்கெட விதி யுயிரீருய்நின்று இயல்புயிரீறுபோல உயிர்வரின் உடம்படுமெய் தோன்றவும், வல்லினம்வரின் அவை மிகவும், மெல்லினமும் இடை யினமும்வரின் இயல்பாகவும் புணர்வனவும், வல்லினம்வரிற் கெடாது அவற்றிற்கு இனமாகத் திரிவனவுமாம் எ - று.

(வ - று.) வட்டவாழி, கடல், [1] நேமி, வாரி எ - ம்; [2] மர வடி, மரக்கால், நார், வேர் எ - ம்; நாங்கடியம், அடுங்களிறு எ - ம்; நங்கை எ - ம் முறையே இருவழியும் வந்தன. பிறவு மன்ன.

வன்மைக் கினமாத் திரியுமென்றமையின் அருத்தாபத்தி யான், நாம்பெரியமெனப் பகரம் வரும்வழித் திரியாதென்பது பெற்றும். (16)

## மகரவீற்றுச் சிறப்பு விதி

220. வேற்றுமை மப்போய் வலிமெலி யுறழ்வும்
அல்வழி யுயிரிடை வரினியல் பும்முள.

எ - ன், சில மகரவீற்றிற்கு எய்தியது இகந்துபடாமற் காத்தலும் விலக்கலும் வரும்வல்லினத்திற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வேற்றுமைக்கண் மகரவிறுதிகெட அவற்றின் முன்வரும் வல்லினமாதல் அவற்றிற்கு இனமாதல் மிகுதலும் அல்வழிக்கண் உயிரும் இடையினமும் வரிற் கெடாது இயல் பாதலுமுளவாம் எ - று.

(வ - று.) குளக்கரை குளங்கரை எ - ம்; குளமழகிது குளம்யாது எ - ம்; அருளுமரசன் கொல்லும்யானை எ - ம் வரும். பிறவுமன்ன. (17)

221. நும்தம்,
எம்நம் மீறு மவ்வரு ஞநவே.

எ - ன், சில பொதுப்பெயர்க்கு எய்தியதுவிலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) இந்நான்கு விகாரமொழிகளின் ஈற்றுமகரம் மேல் வரும் ஞநக்களாகத்திரியும் எ - று.

---

1. வட்டநேமி : " வட்டநேமி வலவா " திருவரங்கத். 60.
2. மரவடி - பாதுகை; " மரவடியைத் தம்பிக்கு வான்பணயம் வைத்துப்போய் வானேர்வாழ " (பெரியாழ்வார். 4. 9 : 1); மரத்தினடி யையும் ' மரவடி ' என்று வழங்குவர்.

(வ - று.) நுஞ்[1]ஞாண், நுந்நூல்; தஞ்ஞாண், தந்நூல்; எஞ்ஞாண், எந்நூல்; நஞ்ஞாண், நந்நூல் எனவரும்.

ஞநவரின் அவையாத்திரியுமெனவே ஒழிந்த மகரம்வரின் நும்மணியென இயல்பாமென்பது பெற்றும். (18)

222. அகமுனர்ச் செவிகை வரினிடை யனகெடும்.

எ - ன், அகமென்னுஞ் சொற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்தல் நுதலிற்று.

(இ - ள்.) அகமென்னும் இடப்பெயர்முன்னர்ச் செவி, கை யென்னும் சினைப்பெயர்கள் வரின் நிலைமொழியிறுதிமகரம் வன்மைக்கு இனமாகத் திரிதலேயன்றி அதனிடை நின்ற ககரவொற்றும் அதனையூர்ந்த அகரவுயிரும் கெடும் எ - று.

(வ - று.) "அஞ்செவி நிறைய மந்திர மோதி," "அங்கையு ணெல்லி யதன்பயம்" (பு. வெ. 34) எனவரும்.

செவியெனச் சகரத்தைமுற்கூறினர், "அஞ்சிறைத்தும்பி" (குறுந். 2) எனவும் வருதலினென்க.

இடையன கெட்டேவருமென நியதிகூறுமையின் அகஞ்செவி, [2] அகங்கை, அகஞ்சிறை யெனவருதல் விலக்கப்பட்டன வல்ல வென்க.

நகர்ப்புறமென்பதனைப் புறநகரென்றாற்போலச் செவியகம், கையகமென்னும் இடவுறுப்புத் தற்கிழமைப்பெயரோடு முடிந்த ஆறும்வேற்றுமைத் தொகைச்சொல்லை முன்பின்னாக வழங்கலின் இவ்விரண்டும் இலக்கணப்போலியாய்த் தழாத்தொடராய அல்வழி யுள் ஒன்றுமென்க.

அகஞ்சிறையென்பது ஏனையவற்றின்சிறைபோலப் புறத்தின் கண்ணவன்றி அகத்தின் கண்ணவாகலின் ஏழாம்வேற்றுமைத் தொகை. (19)

223. ஈமும்,
கம்மு முருமுந் தொழிற்பெயர் மானும்
முதலன வேற்றுமைக் கவ்வும் பெறுமே.

எ - ன், இம்மூன்று சொற்கும் எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வருத்தல் நுதலிற்று.

---

1. ஞாண் - கயிறு; "பின்னுறு பொன்ஞாண்" பெருங் 1. 46 : 177.
2. "அகங்கை யொட்டியும் புறங்கையிற் புகுத்தியும்" பெருங். 4. 12 : 83.

(இ - ள்.) இம்மூன்றுசொல்லும் இருவழியும் முதனிலைத் தொழிற்பெயர்போல யவ்வல் மெய்வரின் உகரச்சாரியை பெற்று முடியும். இவற்றுள் முதற்கண்நின்ற ஈமும் கம்மும் வேற்றுமைக் கண் உகரச்சாரியையன்றி அகரச்சாரியையும் பெறும் எ - று.

இவற்றுட் கம்மென்பது பலபொருளொருசொல்லாதலின், எப் பொருளையுணர்த்தி நிற்பினும் இவ்விதி கொள்க.

(வ - று.) ஈமுக்கடிது, கம்முக்கடிது, உருமுக்கடிது, நீண்டது, வலிது எ - ம்; கடுமை, நீட்சி, வன்மை எ - ம்; ஈமக்குடம், கம்மக் குடம் எ - ம் முறையே காண்க. பிறவுமன்ன.

கம்மென்பது கம்மியரது தொழில்; அத்தொழிலாற் சமைந்த குடமென்க. இது முதனிலைத்தொழிலன்றாதலின் மாறுமென்றார்.(20)

### யரழவீறு

224. யரழ முன்னர்க் கசதப வல்வழி
இயல்பு மிகலு மாகும் வேற்றுமை
மிகலு மினத்தோ டுறழ்தலும் விதிமேல்.

எ - ன், யரழமெய்யீற்றுமுன் கசதபக்கள் புணருமாறு உணர்த் துதல் நுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்றீற்றின் முன்னும் கசதபக்கள் வரின், அல் வழிக்கண் இயல்பாதலும், மிகுதலும், வேற்றுமைக்கண் மிகுதலும் வல்லினமாதல் மெல்லினமாதல் மிகுதலும் விதியாம் எ - று.

(வ - று.) வேய்கடிது வேர்கடிது வீழ்கடிது எ - ம்; [1]மெய்க் கீர்த்தி போய்க்கொண்டான் கார்ப்பருவம் பூழ்ப்பறவை எ - ம்; நாய்க்கால் (நாலடி. 218) தேர்க்கால் [2]பூழ்க்கால் எ - ம்; வேய்க் குழல் வேய்ங்குழல் ஆர்க்கோடு ஆர்ங்கோடு எ - ம் முறையே வந்தன. பிறவுமன்ன.

---

1. மெய்க்கீர்த்தி: தமிழ்ப் பிரபந்தங்களு ளொன்று; ஒரு தலைவ னுடைய மெய்ப்புகழை அளவடிமுதலியவற்றாற் கூறுதல் முதலியவை அமைந்திருக்கப்பெறுவது; "சீர்நான் காதி யிரண்டடித் தொடையாய், வேந்தன் மெய்ப்புக ழெல்லாஞ் சொல்லியும், அந்தத் தவன்வரலாறு சொல்லியும், அவளுடன் வாழ்கெனச் சொல்லியு மற்றவன், இயற்பெயர்ப் பின்னர்ச் சிறக்க யாண்டெனத், திறப்பட வுரைப்பது சீர்மெய்க் கீர்த்தி" (பன்னிரு. 311); "தொழிலார்ந்த மெய்க்கீர்த்தி சொற்சீரடியால், எழி லரசர் செய்தி யிசைப்பர்" (வச்சணந்தி. செய்யுளியல், 34); இதனைச் சிலாசாசனங்களிற் பரக்கக் காணலாகும்.

2. பூழ் - குறும்பூழ்.

மேலென்ற மிகையானே, "வாய்புகுவ தனினுங் கால்பெரிது கெடுக்கும்" (புறநா. 184) என வேற்றுமைக்கண் இயல்பாதலும், பாழ்க்கிணறு [1]பாழ்ங்கிணறு எனப் பண்புத்தொகைக்கண் உறழ்தலும், இன்னும் அமையாதன உளவேல் அவையும் கொள்க. (21)

## ழகரவீற்றுச் சிறப்புவிதி

225. தமிழவ் வுறவும் பெறும்வேற் றுமைக்கே
தாழுங் கோல்வந் துறுமே லற்றே.

எ - ன், இவ்விரு சொற்கும் எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

(இ - ள்.) தமிழென்னும் சொல் நாற்கணமும் வரின் வேற்றுமைக்கண் அகரச்சாரியையைப் பொருந்தவும் பெறும்; தாழென்னுஞ்சொல்லும் கோலென்னுஞ் சொல்வந்து பொருந்துமாயின் அவ்வகரச்சாரியையைப் பெறும் எ - று.

தமிழிற்கு வருமொழி வரையாமையின் நாற்கணமுமென்றும்.

(வ - று.) தமிழப்பல்லவதரையர் தமிழநாகன் தமிழவளவன் தமிழவரசன் எ - ம்; தாழக்கோல் எ - ம் வரும். பிறவுமன்ன.

அவ்வுறவுமென்னும் எதிரதுதழீஇய எச்சவும்மையானே தமிழின் சுவையென இன்சாரியை பெறுதலுங்கொள்க.

தமிழையுடைய பல்லவதரையர், தாழைத்திறக்குங் கோலென விரியும். தாழக்கோலெனினும் திறவுகோலெனினும் அமையும்; தாழாய கோலென ஒரு பொருட்கு இருபெயரொட்டாக்கலுமொன்று. (22)

226. கீழின்முன் வன்மை விகற்பமு மாகும்.

எ - ன், கீழென்னுஞ் சொன்முன் வரும் வல்லினத்திற்கு எய்தியது பெரும்பாலும் விலக்கல் நுதலிற்று.

(இ - ள்.) கீழென்னுஞ் சொன்முன் வரும் வல்லினம் ஒருகால் இயல்பாயும் ஒருகால் மிக்கும் வரும் விகற்பத்தையும் பொருந்தும் எ - று.

(வ - று.) கீழ்குலம், கீழ்க்குலம்; கீழ்சாதி, கீழ்ச்சாதி என வரும். பிறவுமன்ன.

இழிவுசிறப்பும்மையான் இவற்றுள் இயல்பே சிறப்புடைத்தென்க.

---

1. "வனப்பாழ்ங் கிணற்றுள்" திருவரங்கத்தந்தாதி, 93.

கீழ்மையென்னும் பண்பொடு புணர்தல் பதவியலுள் (சூ. 135) முடித்துப் போந்தமையின், "கீழிருந்துங், கீழல்லார் கீழல்லவர்" (குறள், 973) என்றாற்போலக் கீழென்பது பண்பாகுபெயராய், இத் தொடர் இருபெயரொட்டுப் பண்புத்தொகையாமென்க. (23)

### லகரளகர வீறு
(பொது விதி)

227. ளவேற் றுமையிற் றடவு மல்வழி
அவற்றோ டுறழ்வும் வலிவரி னாமெலி
மேவி னணவு மிடைவரி னியல்பும்
ஆகு மிருவழி யானு மென்ப.

எ - ன், ளவீறு புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) லகார ளகாரமான இரண்டீறும் வல்லினம் வரின் வேற்றுமைக்கண் முறையே றகார டகாரங்களாம்; அல்வழிக் கண்ணே றகார டகாரங்களுடனே உறழ்வனவாம்; இருவழிக் கண்ணும் மெல்லினம் வரின் னகார ணகாரங்களாம்; இடையினம் வரின் இயல்பாமென்று சொல்லுவர் புலவர் எ - று.

(வ - று.) கற்குறை முட்குறை எ - ம்; கல்குறிது கற்குறிது, முள்குறிது முட்குறிது எ - ம்; கன்ஞெரிந்தது முண்ஞெரிந்தது எ - ம்; கன்ஞெரி முண்ஞெரி எ - ம்; கல்யாது முள்யாது எ - ம்; கல்யாப்பு முள்யாப்பு எ - ம் முறையே வந்தன. பிறவுமன்ன.

அல்வழியவற்றோடுறழ்வு மென்றாரேனும் இவற்றொடு மயங்கா தென விலக்கிய தகரம் வரின், ஏற்புழிக்கோடலான் உறழ்ச்சியுள் இயல்பொழித்துத் திரிபொன்றுமே பெறுதல் கொள்க; கற்றீது, முட்டீது எனவரும். (24)

### சிறப்பு விதி

228. [1]குறில்வழி லளத்தவ் வணையி னாய்தம்
ஆகவும் பெறூஉ மல்வழி யானே.

எ - ன், இவ்விரண்டீற்றிற்கும் எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தனிக்குறிலின்பின் நின்ற லகர ளகரங்கள் அல் வழிக்கண்ணே தகரம் வருமாயின் றகர டகரங்களாகத் திரிதலே யன்றி ஆய்தமாகத் திரிதலையும் பொருந்தும் எ - று.

(வ - று.) கஃறீது, முஃடீது எனவரும். (25)

---

1. இதன் பொருளையும் 237-ஆம் சூத்திரத்தின் பொருளையும், "குறில் வழி லகரம்" (பிரபு. அக்கமா. 28) என்னும் செய்யுளில் உவமை யாக எடுத்துக் கூறியிருத்தல் அறிந்து இன்புறற்குரியது.

229. குறில்செறி யாலள வல்வழி வந்த
தகரந் திரிந்தபிற் கேடுமீ ரிடத்தும்
வருநத் திரிந்தபின் மாய்வும் வலிவரின்
இயல்புந் *திரிபு மாவன வுளபிற.

எ - ன், எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) தனிக்குறிலொன்றனையுஞ் சாராதுவரும் லகார ளகாரங்கள் அல்வழிக்கண் வந்த தகரம் திரியுமிடத்துக் கெடுதலும், இருவழிக்கண்ணும் வந்த நகரம் திரியுமிடத்துக் கெடுதலும், வல்லினம்வரின் அல்வழிக்கண் உறழாது இயல்பாதலும் திரிதலும், வேற்றுமைக்கண் திரியாது இயல்பாதலும் பொருந்துவனவுள எ - று.

திரியுமுற் கெடுவனவற்றைத் திரிந்தபிற் கேடும் மாய்வுமென்றது [1]காலவழுவமைதி.

(வ - று.) தோன்றறீயன் வேடீயன் எ - ம், தோன்றனல்லன் வேணல்லன் எ - ம், தோன்றனன்மை வேணன்மை எ - ம், கால் கடிது மரங்கள்கடிய எ - ம், வேற்படைக்குமரன், வாட்படைக் கையன் எ - ம், "கால்குதித் தோடிக் கடல்புக மண்டி" (திருவா. கீர்த்தி. 135, பி - ம்), "வாள்போழ்ந் திட்ட நீள்கழன் மறவர்" எ - ம் முறையே காண்க.

பிறவென்ற மிகையானே தோன்றறீமை, வேடீமையென வேற்றுமைக்கண்ணும் தகரம் திரியுமிடத்துக் கெடுதலும், காற்றுணை [2]தாட்டுணையெனக் கெடாமையும், [3]விற்படையென உறழாது திரிதலும், கொல்களிறு கொள்பொருளென வினைத்தொகை இயல்பாதலும், இன்னுமிவ்விரண்டீற்றுள் அமையாதன பிறவும் கொள்க. இங்ஙனம் உயர்திணைச் சொல்லின்கட் காட்டிய விகாரங்கள் மயக்க விதியின்மையிற்படுவனவாகலின், "சில விகாரமாமுயர்திணை" (139) என்பதனுள் அடங்காவென்க. (26)

230. லளவிறு தொழிற்பெய ரீரிடத்தும் உவ்வுறு
வலிவரி னல்வழி யியல்புமா வனவுள.

---

(பி - ம்.) * 'திரிவும்' 1. சூ. 384.

2. தாட்டுணை : "தாட்டுணைக் குடையும்" கம்ப. நாட்டு. 27.

3. விற்படை : "விற்படை பெரிதென் கோயான் வேற்படை மிகுமென் கோயான்" கம்ப. ஊர்தேடு. 41.

எ - ன், விகுதிபெற்ற தொழிற்பெயர்க்கும் முதனிலை திரிந்த தொழிற் பெயர்க்கும் வருவதோர் ஐயமறுத்தலும், ஒருவாறு எய்தியதுவிலக்கலும் நுதலிற்று.

(இ - ள்.) லகரத்தை இறுதியாகவுடைய விகுதிபெற்ற தொழிற் பெயரும் ளகரத்தை இறுதியாகவுடைய முதனிலை திரிந்த தொழிற் பெயரும் முதனிலைத் தொழிற்பெயர்போல யவ்வல் மெய்வரின் உகரம்பெறுமோ பெறுவோவென்று ஐயுறற்க ; இருவழியும் உகரம் பெறுவாம் ; வல்லினம்வரின் அல்வழிக்கண் உறழாது இயல்பாவன வும் சிலவுள எ - று.

(வ - று.) ஆடல்சிறந்தது ஆடற்சிறந்தது ஆடனன்று ஆடல் வலிது எ - ம், ஆடற்சிறப்பு ஆடனன்மை ஆடல்வலிமை எ - ம், கோள்கடிது கோட்கடிது கோணன்று கோள்வலிது எ - ம், கோட் கடுமை கோணன்மை கோள்வலிமை எ - ம், இருவழியும் உகரம் பெறாது பொதுவிதியான் முடிந்தன. நடத்தல்கடிது, நடப்பித்தல் கடிதெனச் சில உறழாது அல்வழிக்கண் இயல்பாயின.

இறந்ததுதழீஇய வெச்ச இழிவுசிறப்பும்மையானே பின்னல் கடிது, பின்னற்கடிது, உன்னல்கடிது, உன்னற்கடிதெனப் பொது விதியான் உறழ்தலே பெரும்பாலவென்க. (27)

231. வல்லே தொழிற்பெய ரற்றிரு வழியும்
பலகைநாய் வரினும் வேற்றுமைக் கவ்வுமாம்.

எ - ன், எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) வல்லென்னுஞ் சூதாடுகருவிப்பெயர், யவ்வல் மெய் வரிற் றொழிற்பெயரேபோல இருவழியும் உகரச்சாரியை பெறும் ; பலகை நாயென்னும் இருபெயர்வரினும் பிறபெயர்வரினும் வேற்றுமைக்கண் அகரச்சாரியையும் உகரச்சாரியையும் பெறும் எ - று.

வரினுமென்னும் எதிரதுதழீஇயவெச்சவும்மையாற் பிறபெய ரென்பதூஉம், அவ்வுமென்னும் இறந்ததுதழீஇயவெச்சவும்மையான் உகரச்சாரியை யென்பதூஉம் பெற்றும்.

வல்லுக்கடிது நன்று வலிது எ - ம், வல்லுக்கடுமை நன்மை வன்மை எ - ம், வல்லப்பலகை வல்லநாய் வல்லப்புலி வல்லக் குதிரை எ - ம், வல்லுப்பலகை வல்லுநாய் வல்லுப்புலி வல்லுக் குதிரை எ - ம் முறையே காண்க. வல்லினது அறை வரைந்த பலகை, வல்லினுள் நாயென விரியும். வேற்றுமையென்றமையின், வல்லாயநாயென இருபெயரொட்டாயவழி அகரச்சாரியை பெறா தென்க. (28)

232. நெல்லுஞ் செல்லுங் கொல்லுஞ் சொல்லும்
அல்வழி யானும் றகர மாகும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இந்நான்கு சொல்லும் வல்லினம்வரிற் பொதுவிதி யான் உறழாது அல்வழிக்கண்ணும் வேற்றுமைபோல் றகரமாகத் திரிந்துமுடியும் எ - று.

(வ - று.) நெற்கடிது, செற்கடிது, கொற்கடிது, சொற்கடிது, தீது, பெரிது எனவரும்.

செல்லென்பது மேகம்; கொல்லென்பது, "சூருயிர் குடித்த" என்றாற்போலக் கொல்லனென்னும் உயர்திணைப் பொருளை யுணர்த்திநின்றதோர் அஃறிணைச்சொல். (29)

233. இல்லெ னின்மைச் சொற்கை யடைய
வன்மை விகற்பமும் ஆகா ரத்தொடு
வன்மை யாகலு மியல்பு மாகும்.

எ - ன், இல்லென்னும் பண்புச்சொற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தலும் அவற்றின்முன்வரும் வல்லினத்திற்கு எய்தியது இகந்துபடாமற் காத்தலும் நுதலிற்று.

(இ - ள்.) இல்லிடத்தையுணர்த்தாது இன்மைப்பண்பை உணர்த்திநிற்கும் இல்லென்னுஞ்சொற்கு ஐகாரச்சாரியை பொருந்த அவ்வழிவரும் வல்லினம் விகற்பித்தலும், ஆகாரச்சாரியை பொருந்த அவ்வழிவரும் வல்லினம் மிகுதலும் இவ்விருவிதியும் பெறாது இயல்பாதலும் பொருந்தும் எ - று.

சாரியைப்பேற்றிற்கு வருமொழி வரையாமையின், நாற்கணமுங் கொள்க.

(வ - று.) இல்லைப்பொருள், இல்லைபொருள்; இல்லாப் பொருள், இல்பொருள், ஞானம், வன்மை, அணி எனவரும்.

இல்லென்னும் பண்படி நின்று வருமொழியோடு புணர்வழி வருஞ் சாரியையாதலின், இவ்விருசாரியை தோன்றியவழியும் இல்பொருளென்னும் இயல்பு புணர்ச்சிபோற் பண்புத்தொகை யேயாமென்க.

இது மெய்யீற்றுப்புணரியலாதலானும், லகரவீற்றிற்குப் பொதுவிதிகூறிச் சிறப்புவிதிகூறும்வழி இன்மைப்பொருளைத் தரும் இல்லெனுஞ்சொற்கென விதந்தமையானும், விகுதியடைதல் பதவியலுளன்றி ஈண்டுக்கூறவேண்டாமையானும், ஆகாரத்தொடு வன்மையாகலுமென வல்லினப்பேற்றோடு ஆகாரத்தையும் உடனிகழ்த்திக்கூறுதலானும், இயல்புமாகுமென்றமையானும், மறைப்

பொருளை இல்லென்னும் பகுதியன்றி ஆகாரந்தரவேண்டாமை யானும், தருமேல் இன்மைக்கு மறையாய உண்மைப் பொருளைத் தரவேண்டுமாதலானும், ஆகாரமறைவிகுதி தெரிநிலைக்கன்றிக் குறிப்பிற்கு வாராமையானும் ஈண்டுப் பெறும் ஐகார ஆகாரங்கள் சாரியையேயன்றிக் குறிப்புமுற்று விகுதியும் எச்சத்தின்கண்வந்த மறைவிகுதியும் அல்லவென்க.

இல்லைபொருள், இல்லைப்பொருளென்பன இங்ஙனங்கூறிய வாறே பண்புத்தொகையாகவும் ஐகாரவீற்றுக் குறிப்புமுற்றுப் பயனிலையோடுமுடிந்த தொகாநிலையாகவுங் கொள்ளப்படுமாதலின் தம்முள் வேற்றுமை யாதோவெனின்: தொகைநிலை ஒரு மொழி போல் நடத்தலும் தொகாநிலை விட்டிசைத்து நடத்தலும் தம்முள் வேற்றுமையென்க. இல்லாப்பொருளென்பது இங்ஙனம் கூறிய வாறே பண்புத்தொகையாகவும் இல்லாதவென்னும் பெயரெச்சக் குறிப்பினது இறுதி கெட்டுப் பயனிலையொடு முடிந்த தொகா நிலையாகவும் கொள்ளப்படும். இவற்றிற்கும் தம்முள் வேற்றுமை அதுவாமென்க.

இவ்வாறே ஆசிரியர் தொல்காப்பியரும், "இல்லென்கிளவி யின்மை செப்பின், வல்லெழுத்து மிகுதலு மையிடை வருதலு, மியற்கை யாதலு மாகாரம் வருதலும், கொளத்தகு மரபி னாகிட னுடைத்தே" (புள்ளி. சூ. 77) என்றார். (30)

234. புள்ளும் வள்ளுந் தொழிற்பெயரு மானும்.

எ - ன், எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுத லிற்று.

(இ - ள்.) இவ்விருசொற்களும் இருவழியும் யவ்வல்மெய்வரிற் பொதுவிதியான் முடிதலேயன்றித் தொழிற்பெயர்போல உகரச் சாரியை பெற்றும்புணரும் எ - று.

(வ - று.) புள்ளுக்கடிது [1]வள்ளுக்கடிது நன்று வலிது எ - ம், கடுமை நன்மை வன்மை எ - ம் வரும். (31)

## வகர வீறு

235. சுட்டு வகரமூ வினமுற முறையே
ஆய்தமு மென்மையு மியல்பு மாகும்.

எ - ன், வகரவீற்றுச்சுட்டுப்பெயர் மூவினத்தோடும் புணரு மாறு உணர்த்துதல் நுதலிற்று.

1. வள் - வார்.

(இ - ள்.) அவ், இவ், உவ்வென்னும் அஃறிணைப்பன்மைச் சுட்டுப்பெயரீற்றுவகரம் வல்லினமும் மெல்லினமும் இடையினமும் வர முறையானே ஆய்தமும் வரு மெல்லினமும் இயல்புமாம் எ - று.

(வ - று.) அஃகடிய இஃகடிய உஃகடிய எ - ம், அஞ்ஞானம் இஞ்ஞானம் உஞ்ஞானம் எ - ம், அவ்யாவை, இவ்யாவை, உவ் யாவை எ - ம் வரும்.

வேற்றுமைப்புணர்ச்சிக்கு அற்றுச்சாரியை பெறுமென மேல் (250) விதித்தலின் இவ்விதி அல்வழிக்கென்க. (32)

236. தெவ்வென் மொழியே தொழிற்பெய ரற்றே
மவ்வரின் வஃகான் மவ்வு மாகும்.

எ - ன், தெவ்வென்னுஞ்சொல் யவ்வல்மெய்யோடு புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தெவ்வென்னுஞ்சொல் யவ்வல்மெய்யோடு புணருமிடத்துத் தொழிற்பெயர்போல உகரச்சாரியைபெற்று முடியும்; இவற்றுள், மகரம் வருங்கால் உகரச்சாரியை பெறுதலேயன்றி ஒரோவழி ஈற்றுவகரம் மகரமாகத் திரியவும் பெறும் எ - று.

(வ - று.) தெவ்வுக்கடிது தெவ்வுமாண்டது தெவ்வுவந்தது எ - ம், தெவ்வுக்கடுமை தெவ்வுமாட்சி தெவ்வுவலிமை எ - ம், தெவ்வுமன்னர் தெம்மன்னர் எ - ம், தெவ்வுமுனை தெம்முனை (பு. வெ. 244) எ - ம் இருவழியும் முறையேகாண்க. இப்பகையென்னும் பண்புப்பெயர் பண்பியாய்ப் பகைப்பொருளை உணர்த்தி ஆகுபெயராய்நின்றவழியும் இவையே காட்டென்க. (33)

## வருமொழித் தகரநகரத்திரிபு

237. னலமுன் றனவும் ணளமுன் டணவும்
ஆகுந் தநக்க ளாயுங் காலே.

எ - ன், முன்னர்ப்புணர்த்திய வருமொழிக்கு முதலாய மெய்களுள் திரிதற்பாலன இவையென விதந்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) னகர லகரங்கள் முன்னர் வரும் தகரம் றகரமாம்; அவற்றின்முன்னர் வரும் நகரம் னகரமாம்; ணகர ளகரங்கள் முன்னர் வரும் தகரம் டகரமாம்; அவற்றின்முன்னர் வரும் நகரம் ணகரமாம், ஆராயுங்காலத்து எ - று.

(வ - று.) பொன்றீது, கற்றீது; பொன்னன்று, கன்னன்று; மண்டீது, முட்டீது; மண்ணன்று, முண்ணன்று எனவரும்; தீமை, நன்மையென வருவித்து வேற்றுமைக்கண்ணும் திரியுமாறு காண்க.

ஆயுங்காலே யென்றதனுன் அல்வழிவேற்றுமைப்பொரு ளுேக்கத்தானன்றி மயக்கவிதியின்மையின், இங்ஙனம்புணரும் முதலீறிரண்டனுள் ஒன்றேனும் இரண்டுமேனும் விகாரப்பட்டு மயங்குதற்குரியனவாகிநின்று புணருமென்பதூஉம், மயக்கவிதி உள்ளனவற்றிற்குவரும் விகாரம் அல்வழிவேற்றுமைப்பொரு ளுேக்கத்தான் வருமென்பதூஉம் பெற்ரும். (34)

### வேற்றுமைப்பொருட்புணர்ச்சிக்குச் சிறப்புவிதி

238. உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்.

எ - ன், உயிரீற்றுப்புணரியற்கண்ணும் இவ்வியற்கண்ணும் முடிந்த வேற்றுமைப்பொருட்புணர்ச்சிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல் உருபுபுணர்ச்சிக்கண் முடியும் முடிபுகள் அப்பொருட்புணர்ச்சிக்கண்ணுமொக்கும் எ - று.

(வ - று.) [1]எல்லாவற்றதும், எல்லாவற்றுக் கோடுமென அஃறிணைக்கண் அற்றும் உருபின்மேல் உம்மும் பெற்ருற்போலப் பொருட்புணர்ச்சிக்கும் பெற்றன. [2]எல்லா நமதும், எல்லா நங்கையுமென உயர்திணைக்கண் நம்மும் உருபின்மேல் உம்மும் பெற்ருற்போலப் பொருட்புணர்ச்சிக்கும் பெற்றன. [3]எல்லார் தமதும், எல்லார் தங்கையும் ; எல்லீர்நுமதும், எல்லீர்நுங்கையும் ; [4] தனது, தன்கை ; தமது, தங்கை ; நமது, நங்கை ; எனது, என்கை ; எமது, எங்கை ; நினது, நின்கை ; நுமது, நுங்கை என உருபு புணர்ச்சிபோற் பொருட்புணர்ச்சியும் முடிந்தவாறு காண்க. (35)

### புணரியல்களுக்குப் புறனடை

239. இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்
போலியு *மரூஉவும் பொருந்திய வாற்றிற்
கியையப் புணர்த்தல் யாவர்க்கு நெறியே.

எ - ன், இப்புணரியல்கட்கு ஆவதொரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இடைச்சொல்லினும் உரிச்சொல்லினும் வட சொல்லினும் உயிரீறும் ஒற்றீறுமான புணரியலில் தோன்றல் திரிதல் கெடுதல் இயல்பெனவோதிய புணர்ச்சியிலக்கணங்கள் பொருந்தாது வேறுபட்டு வருவனவும் இலக்கணப்போலி மொழி களும் மரூஉமொழிகளும் இருவகைவழக்கினும் நடக்கும் முறைமை

(பி - ம்) *'மருவும்', 'மரூவும்'
1, 2, சூ. 245. 3. சூ. 246. 4. சூ. 247.

யறிந்து அதற்குப்பொருந்துமாறு புணர்க்கை அறிவுடையோ ரெல்லார்க்கும் முறைமை எ - று.

(வ - று.) ஆன்கன்று, வண்டின்காலென வேற்றுமைப் புணர்ச்சிக்கட் சாரியையிடைச்சொல் திரியாது இயல்பாயின. மழ களிறு (புறநா. 38) [1]தடந்தோளென அகரவீற்று உரிச்சொன்முன் வல்லெழுத்துமிகாது இயல்பாயும் மெல்லெழுத்துமிக்கும் வந்தன. "அளிகுலம்" (சிற். 45 கொளு), தனதடம் (கலிங்க. 26) என இயல்பீறும் விதியீறுமான உயிரீற்று வடசொன்முன் வல்லெழுத்து மிகாது இயல்பாயின. [2]இல்முன் முன்றில், பொதிஇல் [3]பொதியில் என இலக்கணப் போலிமொழிகளும், அருமருந்தன்னபிள்ளை அருமந்தபிள்ளை, குணக்குள்ளது [4]குணாது, தெற்குள்ளது தெனாது, வடக்குள்ளது வடாது, சோழனாடு [5]சோணாடு, பாண்டியனாடு பாண்டிநாடு, மலையமானாடு [6]மலாடு, [7]தஞ்சாவூர் தஞ்சை, ஆற் றூர் ஆறை, ஆதன்றந்தை [8]ஆந்தை, பூதன்றந்தை பூந்தை வடு கன்றந்தை வடுகந்தையென மரூஉமொழிகளும் நிலைமொழி வரு மொழிகளுள் ஏற்குஞ் செய்கையறிந்து முடிக்க. பிறவுமன்ன. (36)

4. மெய்யீற்றுப் புணரியல் முற்றிற்று.

---

1. தடந்தோள்: "தடந்தோள் வீசித் தகைமாண் வீதியுள்" பெருங். 4. 15; 133.

2. இல்முன் - முன்றில்; இதன் விதியை, தொல். புள்ளிமயங்கு. 60-ஆம் சூத்திரத்தால் அறியலாகும்; முன்றில்: "கொன்றை வேய்ங் குழற் கோவலர் முன்றிலில்" கம்ப. நாடு. 34.

3. புறநா. 52; பொதியில்: "தென்னன்பொதியிற் செழுஞ்சந்தனக் குழம்பின்" (பெரியதிருமடல், 40); "தென்வரைப் பொதியி லாரம்" சீவக. 2187.

4. குணாது, தெனாது, வடாது: "வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும், தெனாஅ துருகெழு குமரியின் றெற்கும், குணாஅது கரை பொரு தொடுகடற் குணக்கும்" புறநா. 6.

5. சோணாடு: "துறக்கமுற்றார் மனமென்னத் துறைகெழுநீர்ச் சோணாடு கடந்தால்" கம்ப. நாடவிட்ட. 30.

6. மலாடு: பெரிய. மெய்ப்பொருள். 1.

7. தஞ்சாவூர்: திருவிசைப்பாப்பெற்ற தஞ்சாவூரை (இராச இராச புரம்) அன்றிச் சோழநாட்டில், 'மருகல் நாடு' என்னும் உள்நாட்டினும் தஞ்சாவூர் என்று ஓர் ஊருள்ளது; அதுவும் தஞ்சை யென்று வழங்கப்படு கின்றது; "தஞ்சை மன்னவனும் செருத்துணைதன் னடியார்க்கு மடியேன்" (திருத்தொண்டத்தொகை, 9); "மருகல் நாட்டுத் தஞ்சாவூர்" பெரிய. செருத்துணை. 1.

8. ஆந்தை, பூந்தை: இம்மரூஉமொழிகளின் முடிபை, "இயற் பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்", "ஆதனும் பூதனும்" (தொல். புள்ளி. சூ. 52, 53) என்பவற்றால் உணர்க.

ஐந்தாவது

# உருபு புணரியல்

---

## உருபுகள்

240. ஒருவ னொருத்தி பலரொன்று பலவென
வருபெய ரைந்தொடு பெயர்முத லிருநான்
குருபு முறழ்தர நாற்பதா முருபே.

எ - ன், வேற்றுமையுருபுகள் நிலைமொழியோடும் வருமொழி யோடும் புணருமாறு இவ்வியலாற் கூறுவான் தொடங்கி அவ்வெட் டுருபுகளும் சாரும் இடவகையான் இத்துணையன வென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இப்பாற்பொருளினவென்று கருதவரும் ஐந்து பெயரோடும் எழுவாய்வேற்றுமையான பெயர்முதலாக விளியீருக நின்ற எட்டுருபினையும் உறழ வேற்றுமையுருபுகள் நாற்பதாம் எ - று.

சொன்மேல் வைத்து ஓதின் இப்பெயர்களோடன்றிப் பொதுப் பெயர்களோடு உருபு வாராவெனப் பொருள்படுமாதலின் எல்லாப் பெயரும் அடங்குதற்குப் பொருள்மேல்வைத்து எனவருபெய ரென்றார்.

(வ - று.) நம்பி சாத்தி மக்கள் மரம் மரங்களென்னுமிவற்றுள், நம்பி நம்பியை நம்பியால் நம்பிக்கு நம்பியின் நம்பியது நம்பிகண் நம்பீ என ஒருவனென்னும் வாய்பாட்டு உயர்திணை ஆண்பாற் பெயரோடு எட்டுருபுகளும் வந்தன. ஏனை நான்கு பெயரோடும் இவ்வாறே ஒட்டுக. (1)

241. பெயர்வழித் தம்பொரு டரவரு முருபே.

எ - ன், வேற்றுமையுருபுகள் வருவதற்குக் காரணமும் வரும் இடமும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வேற்றுமையுருபுகள் ´தம் பொருளைத்தரப் பெயர்க் குப்பின் வரும் எ - று.

(வ - று.) நம்பிபெற்றான், நம்பியைப்பெற்றான், நம்பியாற் பெற்றானெனவரும். பிறவுமன்ன.

தம்பொருள்தரவருவன எழுவாய் முதலிய எட்டுருபும், வழி வருவன பெயர்முழுவதூஉம் உருபாய எழுவாயொழிந்த ஏழுருபு மெனக் கொள்க. (2)

## உருபுகளின் புணர்ச்சி

**242.** ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியின்
ஒக்குமன் அப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே.

எ - ன், ஐமுதலிய ஆறுருபும் நிலைமொழி வருமொழியோடு புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தொகா நிலையாய வேற்றுமைப் புணர்ச்சிக்கண் இடையே நின்று நிலைமொழியோடும் வருமொழியோடும் புணரும் ஒற்றுயிர்களை முதலும் ஈறுமாகவுடைய ஐ முதலிய வேற்றுமை யுருபாறும் இடைச்சொல்லேனும் [1]இயல்பொடு விகாரத்தியையும் புணர்ச்சி வகையாற் பெரும்பாலும் ஒக்கும், போன இரண்டியலுள்ளும் வேற்றுமைப் புணர்ச்சிக்கண் இயல்பொடு விகாரத்தியைந்த ஒற்றுயிர் முதலீற்றுப் பெயர்களை எ - று.

மன்னென்ற மிகையாற் சிறுபான்மை ஒவ்வாவென்பதாம்.

(வ - று.) நம்பிகண்வாழ்வென்புழி, " ஆவி யரமுன் வன்மை மிகா " (159) என்றும், " ணனவல் லினம்வரட் டறவும் பிறவரின், இயல்புமாகும் வேற்றுமைக்கு " (209) என்றும் கூறியவாறே கண் ணுருபின் முதலுமீறும் இயல்பாயின. உறிக்கட்டயிரென்புழி, " இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன், கசதப மிகும் " (165), " ணனவல் லினம்வரட் டறவும் " என்றுங் கூறியவாறே கண்ணுரு பின் முதலுமீறும் விகாரமாயின. பழிக்கஞ்சி என்புழி, " இயல்பி னும் விதியினு நின்ற வுயிர்முன், கசதப மிகும் " என்றும், "முற்று மற்றொரோவழி" (164) என்றுங் கூறியவாறே குவ்வுருபின் முதலும் ஈறும் விகாரமாயின. நம்பிக்குப்பிள்ளை என்புழி, " ஆவியரமுன் வன்மைமிகா " (159) என்ற விதியொவ்வாது குவ்வுருபின் முதல் வல்லொற்று மிக்கது. பிறவுமன்ன. இவ்வுருபு சாத்திக்கு, கிளிக்கு எனப் பொதுப்பெயர் அஃறிணைப் பெயர்க் கண்ணும் மிகுதலின், " சிலவிகாரமாமுயர்திணை (159) என்னும் விதியன்று.

' ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் ' என்றமையின், நாற்பதா முருபேயெனத் தொகைகொடுத்துக் கொணர்ந்தவற்றுள் எழுவாயும் விளியுமொழித்துத் தமக்கென உருபு முதலீறுமுடைய ஐ முதலிய ஆறுருபிற்கும் இவ்விதி கூறுகின்றாரென்பதூஉம், இவ்வுருபுகளின் முதலீறுகட்கு மாட்டேற்றான் இவ்விதி கூறவே உருபின் இருமருங் கும் புணரும் நிலைமொழியீறும் வருமொழி முதலும் படும் பாகு பாட்டிற்கு விதி போன இரண்டியலுள்ளும் வேற்றுமைப் புணர்ச்

1. சூ. 151.

சிக்கென விதித்தவற்றுள் அடங்குமாதலின் அவையும் இம்மாட்டேற்றான் அமைத்தாரல்லரென்பதூஉம், அங்ஙனமடங்குதற்கு, "மூன்று றுருபெண்" (179) என்னும் சூத்திரமே கரியென்பதூஉம், "தான்று நாமுதல் குறுகும்" (247) என்றற் றொடக்கத்து உருபொடு புணரும் நிலைமொழிகளின் விகாரங்கள் தொகைநிலைக்கண்ணும் நாற்கணத்தின் முன்னும் வருதலின் அவ்விகாரம் எழுத்துப் புணர்ச்சியான் வந்தனவல்ல, வேற்றுமைப் பொருளொக்கத்தானே வந்தன, அதனால் இவ்வியலுட்கூறப்படுமென்பதூஉம், 'ஒக்குமன் அப்பெயர்' என்றமையின், வினையிறுதி வேற்றுமைப்புணர்ச்சிக்கு வாராமையின் அதனையொழித்துப் பெயரை உவமித்தாரென்பதூஉம், வேற்றுமைப் புணர்ப்பே யென்றமையின் வேற்றுமையுருபின் புணர்ச்சியாதலின் அதற்கு அல்வழிப் புணர்ச்சி ஒவ்வாதென்பதூஉம் பெற்றாம். (3)

## சாரியைப் புணர்ச்சி

243. பதமுன் விகுதியும் பதமு முருபும்
புணர்வழி யொன்றும் பலவுஞ் சாரியை
வருதலுந் தவிர்தலும் விகற்பமு மாகும்.

எ - ன், உருபு புணர்ச்சிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியாகச் சாரியை மேல் விதிப்பான் தொடங்கி அவை வருமாறு இவ்வாறென உணர்த்தும்வழி ஒப்பின்முடித்தலான் விகுதிப் புணர்ச்சிக்கும் பதப்புணர்ச்சிக்கும் உடனுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பதத்தின்முன் விகுதியேனும் பதமேனும் உருபேனும் புணருமிடத்துச் சாரியை ஒன்றேனும் பலவேனும் வருதலும் வாராதொழிதலும் இவ்விரண்டுமாகிய விகற்பமுமாம் எ - று.

புணர்ந்தவழி புணரும்வழியென்றாது, புணர்வழியெனப் பொதுமையிற் கூறவே, இம் [1]மூவகைப் புணர்ச்சியுட் சாரியை விதித்தனவற்றுள்ளும் விதிப்பனவற்றுள்ளும் ஒழிந்தனவற்றுள்ளும் அவை வருமாறு இவ்வாறென உய்த்துணர்க வென்றாராயிற்று.

(வ - று.) நடந்தனன் எ - ம், நடந்தான் எ - ம், நடந்தன நடந்த எ - ம் விகுதிப்புணர்ச்சியுட் சாரியை வேண்டியும் வேண்டாதும் விகற்பித்தும் வந்தன. புளியமரம் புளியங்காய் உரினுக் கடிது உரினுக்கடுமை எ - ம், புளிக்கறி எ - ம், நெல்லின்குப்பை நெற்குப்பை எ - ம், பதப்புணர்ச்சியுட் சாரியை அவ்வாறாயின.

1. (1) விகுதிப்புணர்ச்சி, (2) பதப்புணர்ச்சி, (3) உருபுபுணர்ச்சி.

அவற்றை அவற்றினை மரத்தை மரத்தினை எ - ம், தன்னை என்னை எ - ம், ஆனை [1]ஆவை எ - ம் உருபு புணர்ச்சியுட் சாரியை அவ் வாறுயின. பிறவுமன்ன.

மாடத்துக்கு, [2]மாடக்கு என்றற்றொடக்கத்தன வேண்டிய வழி சாரியையின்மையின் செய்யுள் விகாரமாமென்க. (4)

## சாரியைகள்

244. அன்ஆன் இன்அல் அற்றிற் றத்தம்
தம்நம் நும்ஏ அஉ ஐகுன
இன்ன பிறவும் பொதுச்சா ரியையே.

எ - ன், மேற் சாரியையென்றுர் அவை இவை யென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அன்னும் ஆனும் இன்னும் அல்லும் அற்றும் இற்றும் அத்தும் அம்மும் தம்மும் நம்மும் நும்மும் ஏயும் அவ்வும் உவ்வும் ஐயும் குவ்வும் னவ்வும், இவைபோல்வன பிறவும் விகுதி பதம் உருபென்னும் மூன்று புணர்ச்சிக்கண்ணும் தனிமொழிக் கண்ணும் வருதலிற் பொதுச்சாரியை யென்னும் பெயரவாம் எ - று.

(வ - று.) ஒன்றன்கூட்டம் (சூ. 300), ஒருபாற்கு, வண்டின் கால் [3]தொடையல், பலவற்றை, [4]பதிற்றுப்பத்து, மரத்திலே, [5]மன்றம், எல்லார்தம்மையும், எல்லார்நம்மையும், எல்லீர் நும்மையும், கலனேதூணி, நடந்தது, சாத்தனுக்கு, "கேழ லட்ட பேழ்வா யேற்றை" (அகநா. 8 : 6), "துறுகன் மறையினு முய்குவை போலாய்" (புறநா. 300 : 2), ஆனென முறையே காண்க.

இன்னபிறவுமென்றதனுனே அவன்றனை என்புழித் தன்னென் னுஞ்சாரியையும், அவன்றான் அவர்தாம் என்புழித் தான் தாமென் னுஞ்சாரியையும், புற்றுஞ்சோறு என்புழி ஆஞ்சாரியையும்,

---

1. ஆவை - பசுவை; "தெய்வப் பதவியந் தணரை யாவை" (கம்ப. கிட்கிந்தை. 62.) 2. "மாடக்குச் சித்திரமும்" சூ. 55.

3. தொடையல்: "தொடையலங்கோதை" சீவக. 464.

4. பதிற்றுப்பத்து - எட்டுத் தொகை நூல்களுள் நான்காவது, நூறென்னுமெண்ணுமாகும்; "பதிற்றுப்பத்தொடு விதிப்பட வெண் ணிய" பெருங். 1. 50 : 60.

5. மன்றம் - ஊருக்கு நடுவாய் எல்லாரும் இருக்கும் மரத்தினடி; "மன்றமும் பொதியிலும்" முருகு. 226.

இல்லாப் பொருளென்னும் பண்புத்தொகைக்கண் ஆகாரச் சாரியையும் வந்தன. இன்னும் வருவனவுங் காண்க. (5)

## உருபுபுணர்ச்சிக்குச் சிறப்புவிதி

245. எல்லா மென்ப திழிதிணை யாயின்
அற்றோ டுருபின் மேலும் முறுமே
அன்றே னம்மிடை யடைந்தற் றுரும்.

எ - ன், ஒருசார் நிலைமொழியோடு உருபு புணர்தற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எல்லாமென்னும் பொதுப்பெயர் அஃறிணைக் கண் ஆனகாலை அதனோடு ஆறுருபும் புணரின் இடையே அற்றுச்சாரியையும் உருபின்மேல் முற்றும்மையும் பெறும்; உயர்திணைக்கண் ஆனகாலை இடையே நம்முச்சாரியையும் உருபின்மேல் முற்றும்மையும் பெறும் எ - று.

(வ - று.) எல்லாவற்றையும் எல்லாவற்றாலும் எ - ம், எல்லா நம்மையும் எல்லாநம்மாலும் எ - ம் வரும்.

இனி இரட்டுறமொழிதலான், 'எல்லா மென்ப திழிதிணையாய்' எனவும், 'இன்அற்றோடு'' எனவும் பிரித்து அஃறிணைக் கண்ணாகி இன்சாரியை அற்றுச்சாரியையோடெனப் பொருள் தந்து எல்லா வற்றினையுமென வருதலுங்கொள்க. ஏனையவற்றோடும் இவ்வாறே யொட்டுக. இச்சொற்கு இருதிணைக்கண்ணும் அற்றுச்சாரியையும் நம்முச்சாரியையும் உருபு புணர்ச்சிக் கண், "பதமுன் விகுதியும்" (243) என்னுஞ் சூத்திரத்திற் கூறியவாறே வேண்டியே வருதல் தோன்ற இன்றியமையா முற்றும்மையோடு உடனிகழ்ச்சிப்பொருளவாய் அற்றோடென்றும் அடைந்தற்றுரு மென்றும் கூறினர்.

தாம் நாம் நீரென்னு மூவிடப்பெயர் வேற்றுமைப் புணர்ச்சிக் கண் வந்தமையானே தம் நம் நும்மென விகாரப்பட்டுத் தமக்கினமான மூவிடப்பெயர்களை முறையே சார்ந்து சிறப்புப் பொருள் தாராமையின், ஒருபொருட் பன்மொழியல்லவாய் வருதலின், இம் மூன்றும் சாரியையிடைச்சொல்லெனப்படுமாதலின் தம் என்பதைப் படர்க்கைப் பெயர்க்கும் நும் என்பதனை முன்னிலைப்பெயர்க்கும் வருஞ்சூத்திரத்து அமைத்தாற்போல நம் என்பதனை ஈண்டுத் தன்மைப்பெயர்க்கு அமைத்தாரென்பதூஉம், தன்மையாயினும் திணைப்பொதுமையின் நில்லாது பாணரேமென்றாற்போல எல்லா

நம்மையுமென்ற துணையானே உயர்திணைத் தன்மையை உணர்த்து மென்பதூஉம் பெற்றும். (6)

246. எல்லாரு மெல்லீரு மென்பவற் றும்மை
தள்ளி நிரலே தம்நும் சாரப்
புல்லு முருபின் பின்னர் உம்மே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) எல்லாருமென்னும் உயர்திணைப்படர்க்கைப் பெயரோடும் எல்லீருமென்னும் முன்னிலைப்பொதுப் பெயரோடும் ஆறுருபும் புணருமிடத்து அவ்விருபெயரின் இறுதிகளில் நின்ற முற்றும்மைகளைத் தள்ளி அந்நிலைக்களங்களிற் படர்க்கைப் பெயர்க்குத் தம்முச்சாரியையும், முன்னிலைப் பெயர்க்கு நும்முச்சாரியையும் பொருந்த அவற்றால் தள்ளுபட்ட முற்றும்மைகள் உருபின்பின்னே வந்து பொருந்தும் எ - று.

(வ - று.) எல்லார்தம்மையும் எல்லாரையும் எ - ம், எல்லீர் நும்மையும் எல்லீரையும் எ - ம் விகற்பித்து வந்தன. ஏனையவற்றோடும் இவ்வாறே ஒட்டுக.

நந்தம்மை, நுந்தம்மையெனப் படர்க்கைக்குரிய தம்முச் சாரியை தன்மை முன்னிலைகளில் வருதல், " ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே " (380) என்னும் வழுவமைதியென்க. (7)

247. தான்தாம் நாம்முதல் குறுகும் யான்யாம்
நீநீர் என்எம் நின்நு மாம்பிற
குவ்வின் அவ்வரு நான்கா றிரட்டல.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இங்ஙனங்கூறிய இருதிணைப்பொது வாய மூவிடப் பெயரேழோடும் ஆறுருபும் புணருமிடத்துத் தான், தாம், நாமென்னு மூன்றுபெயரும் நெடுமுதல்குறுகி முறையே தன்னை, தம்மை, நம்மை எனவரும் ; யான், யாம், நீ, நீரென்னும் நான்கு பெயரும் முறையே என்னை, எம்மை, நின்னை, நும்மை என வரும். இவ் வேழுபெயரோடும் குவ்வுருபு புணருமிடத்து இடையே தனக்கு என அகரச்சாரியை வரும். குவ்வுருபின் அகரச்சாரியை வரினும் ஆறுமுருபுயிர்கள் வரினும் இவ்வேழு விகாரமொழிகளின் இறுதியவாய தனிக்குறின்முன் ஒற்றுக்கள் இரட்டாவாம் எ - று.

ஒழிந்த உருபுகளோடும் இவ்வாறே ஒட்டுக.

பிறவென்றமையானே நீயென்பது உன்னையென்றும், நீரென்பது உம்மையென்றும் வருதல் கொள்க. முன்னும் பின்னுஞ் சாரியைப்பேறு கூறுவார் சாரியைபெருது விகாரப்படு மொழிகளை இச்சூத்திரத்தாற்றேன்ற இடையே கூறியது, இப்பொதுப் பெயர்களே இங்ஙனம் தம் நம் நும்மெனச் சாரியை யிடைச் சொல்லும் ஆயின வென உய்த்துணர்தற்கென்க.

இச்சூத்திரத்து 'நான்கா றிரட்டல' என்ற ஒன்றும் எய்தியது விலக்கல். (8)

248. ஆமா கோனவ் வணையவும் பெறுமே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) ஆவென்னும் பெயரும் மாவென்னும் விலங்கின் பொதுப்பெயரும் கோவென்னும் இறைவனை உணர்த்தி நிற்கும் பெயரும் உருபுகள் புணருமிடத்து னகரச் சாரியை பொருந்தவும் பெறும் எ - று.

(வ - று.) ஆனை ஆவை, மானை மாவை, கோனை கோவை என விகற்பித்து வருதல் காண்க. பிறவற்றேடும் இவ்வாறே யொட்டுக.

எதிரதுதழீஇய எச்சவும்மையானே குவ்வுருபிற்கு னகரச் சாரியையொன்றுமே அமையாது ஆனுக்கு, மானுக்கு, கோனுக்கு என உகரச்சாரியை உடன்பெறுதலும், [1]ஆவுக்கு, மாவுக்கு, கோவுக்கென உகரச்சாரியை ஒன்றுமே பெறுதலும், ஆவினுக்கு மாவினுக்கு கோவினுக்கென இன்சாரியையும் உகரச்சாரியையும் உடன்பெறுதலும், ஆவினை மாவினை கோவினை என இன்னென வரூஉம் வேற்றுமை யுருபு ஒழிந்தவற்றிற்கு இன்சாரியை பெறுதலும் கொள்க.

இனி இரட்டுறமொழிதலான், ஆமாவென ஒரு சொல்லாய்க் காட்டாவினை உணர்த்திநின்று இவ்விதிகள் பெறுதலும், அணையவு மென்றெழியாது பெறுமேயென்றமிகையானே ஆன் மான் கோன் ஆமானென னகரச்சாரியை தனிமொழிக்கண்ணும் வருதலும் கொள்க.

ஆவென்பதனேடு கோவென்பதனைச் [2]சாரவையாது மாவென்பதனைச் சாரவைத்தமையானே கோவென்பது இறைவனை உணர்த்தியதென்பதூஉம் மாவென்பது விலங்குமாவென்பதூஉம் பெற்றும். (9)

---

1. ஆவுக்கு : "ஆவுக் காயினு மந்தணர்க் காயினும்" கம்ப. அகத்தியப். 21.

2. இங்ஙனம் சாரவைத்தல் நெடுங்கணக்கில் 'கோ' என்பதன்பின் 'மா' வரும் முறையை மேற்கொண்டதாகும்.

249. ஒன்று முதலெட் டீரு மெண்ணூர்
பத்தின்முன் ஆன்வரிற் பவ்வொற் றொழியமேல்
எல்லா மோடு மொன்பது மிற்றே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) ஒன்றுமுதல் எட்டீருமெண்களோடு புணர்ந்த பத்தென்னும் எண்முன்னர் உருபுகள் புணருமிடத்து இடையே ஆன்சாரியை வரின் அப்பத்தென்னும் எண்ணினது பகரவொற்று ஒன்றுமே நிற்க மேல்நின்ற எல்லாவெழுத்தும் கெடும்; ஒன்பதென்னும் எண்முன்னரும் உருபுகள் புணருமிடத்து ஆன்சாரியை வரின் அதன் பகரவொற்று நிற்க மேல்நின்ற எல்லாவெழுத்தும் கெடும் எ - று.

(வ - று.) ஒருபானை ஒருபதை ஒருபஃதை, இருபானை இருபதை இருபஃதை எ - ம், ஒன்பானை ஒன்பதை ஒன்பஃதை எ - ம் விகற்பித்தும் வரும். பிறவற்றோடும் இவ்வாறே ஒட்டுக.

ஒருபது ஒருபஃதென விகாரப்பட்டுவரும் பத்தென்பார் எண்ணூர்பத்தென்றார்.

வரினென்றமையான் வருதற்கும் இதுவே விதியென்பதூஉம், இவ்வாறு ஆன்வருதலைப் பராமுகமாகக் கூறினமையின் உகரச் சாரியை இன்சாரியைகளும் வேண்டுழி வருமென்பதூஉம் கொள்க. (10)

## வகரவீற்றுச்சுட்டுப் பெயர்க்குச் சிறப்புவிதி

250. வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அஃறிணைப் பன்மையவாய வகரவீற்று மூன்று சுட்டுப்பெயர்க்கும் உருபுகள் புணருமிடத்து அற்றுச்சாரியை பொருந்தல் முறைமையாம் எ - று.

(வ - று.) அவற்றை, இவற்றை, உவற்றை என அற்றுச் சாரியை வேண்டியேவருதல் காண்க.

வழியேயென்ற மிகையானே அவற்றினை இவற்றினை உவற்றினை என இன்சாரியை வருதலும் தனிக்குறின்முன்னொற்று உயிர்வரின் இரட்டாமையும் கொள்க. பிறவற்றோடும் இவ்வாறே ஒட்டுக. (11)

251. சுட்டின்முன் ஞய்த மன்வரிற் கெடுமே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அஃது, இஃது, உஃது என வரும் மூன்று சுட்டுப் பெயர்களோடு உருபுகள் புணருமிடத்து இடையே அன்சாரியை வரின் மொழிமுதற் சுட்டெழுத்துக்கள் மூன்றின் முன் நின்ற ஆய்தம் கெடும் எ - று.

(வ - று.) அதனை அஃதை, இதனை இஃதை, உதனை உஃதை எனச் சாரியை விகற்பித்துவருதலும் வந்தவழி ஆய்தங்கெடுதலும் காண்க.

அன்சாரியை வருதனோக்கி ஆய்தங்கெட்டவழி அது, இது, உது என ஆய்தமில்லாச் சுட்டுப்பெயர்களாய்ப் பின்னர் அன் சாரியை பெறுதலின் அவற்றிற்கும் இதுவே விதியெனக்கொள்க.

(வ - று.) அதனை அதை, இதனை இதை, உதனை உதை என விகற்பித்து வருதல் காண்க.

அன்வருதலைப் பராமுகமாகக் கூறினமையின், குவ்வுருபு புணர்வழி அதற்கென அன்சாரியை தனித்துவருதலேயன்றி அதனுக்கு என உகரச்சாரியை உடன்வருதலுங்கொள்க. (12)

252. அத்தி னகரம் அகரமுனை யில்லை.

எ - ன். அத்துச்சாரியைக்கு எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) அத்துச்சாரியையின் அகரவுயிர் இயல்பினும் விதியினும் நின்ற அகரவுயிரீற்றின்முன் வரின் வகரவுடம்படு மெய் பெருது கெடும் எ - று.

(வ - று.) [1]மகத்துக்கை, மரத்துக்குறையென இரண்டு அகர வீற்றின் முன்னும் கெட்டது. (13)

## புறனடை

253. இதற்கிது சாரியை யெனினள வின்மையின்
விகுதியும் பதமு முருபும் பகுத்திடை
நின்ற வெழுத்தும் பதமு மியற்கையும்
ஒன்ற *வுணர்த்த லுரவோர் நெறியே.

எ - ன், சாரியைக்கு ஆவதொரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) விகுதிமுதலிய புணர்ச்சிக்கண் இதற்கு இது சாரியை யென்று வரையறுத்து விதித்தனவற்றுள்ளும் ஒழிந்தனவற் றுள்ளும் தனித்தனி சொல்லப்புகின், வரையறைப்படாமையின்

(பி - ம்.) *'உணர்த்துதல்' 1. மகத்துக்கை - குழந்தையின்கை.

விகுதிப்புணர்ச்சியினையும் பதப்புணர்ச்சியினையும் உருபு புணர்ச்சியினையுங் கண்டுழிப் பகுத்து இடையே நின்ற ஏகாரம் அகரம் முதலிய எழுத்துச்சாரியையினையும், அன்ஆன் முதலிய பதச்சாரியையினையும், இவ்விரண்டு சாரியையும் தோன்ரு இயல்பினையும் தெரிய அறிவித்தல் பெரியோரது நெறியாம் எ - று.

(வ - று.) "ஆனமணி யியம்புங் கானத் தான" எ - ம், "ஆனநெய் தெளித்து நான நீவி" எ - ம் விதித்த பொருட்புணர்ச்சிக்கண், "உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்" (238) என்ற மாட்டேற்ருன் அமைந்த [1]னகரச் சாரியையன்றி அகரச் சாரியையும் உடன் வந்தன.

இனி விதியாதொழிந்தனவற்றின்கண், "பாட்டின்பொருள்" எனக் குற்றியலுகரத்துக்கு இன்சாரியையும், மரத்திலையென மஃகான்புள்ளிக்கு அத்துச்சாரியையும் வந்தன. தன்கை, என்கை எனச் சாரியையின்றி இயல்பாய் வந்தன. இவ்வாறே மூவகைப் புணர்ச்சியும் பகுத்துணர்ந்துகொள்க.

எல்லாச்சாரியையும் இடைப்பதமெனினும், எழுத்துச்சாரியை பதச்சாரியையெனப் பகுத்தல் வேறு அறிதற்கென்றிட்ட [2]இலச்சினையாமென்க. (14)

254. விகுதி பதஞ்சா ரியையுரு பனைத்தினும்
உரைத்த *விதியிஞேர்ந் தொப்பன கொளலே.

எ - ன். இங்ஙனம் கூறிய நான்கின்புணர்ச்சிக்கும் ஆவதொரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) விகுதியே பதமே சாரியையே உருபே என்னும் நான்கின் புணர்ச்சிக்கண்ணும் விதிகள் பொதுப்படக்கூறப் பட்டனவேனும் அவ்விதிகளுள் இவ்விதி இதற்குப் பொருந்தும் இதற்குப் பொருந்தாதென உய்த்துணர்ந்து எவ்விதி எதற்குப் பொருந்துமோ அவ்விதியை அதற்குக் கொள்க எ - று.

(வ - று.) விகுதிப்புணர்ச்சியுள், "றவ்வொ டுகரவும் மைநிகழ் பல்லவும்" (145) எனப் பொதுப்பட விதித்தாரேனும் விதியுள தென்றுகருதி இவ்விகுதிவந்துழியெல்லாம் இவ்விருகாலமும் பொருந்துமென்று கொள்ளற்க; 'சென்று' என்புழி இறந்தகாலமும், 'சேறு' என்புழி எதிர்காலமும் பொருந்துமென்று கொள்க.

பதப்புணர்ச்சியுள், "அல்வழி இஐம் முன்ன ராயின், இயல்பு மிகலும் விகற்பமு மாகும்" (176) எனப் பொதுப்பட விதித்தா

(பி - ம்.) *'விதியுளோர்ந்து'

1. சூ. 248. 2. இலச்சினை - அடையாளம்.

ரேனும் விதியுளதென்றுகருதி 'ஆடி திங்கள்' என இயல்பா மென்றும், 'பருத்திக்குறிது' என மிகுமென்றுங் கொள்ளற்க; 'பருத்திகுறிது' என எழுவாய்க்கண் இயல்பாமெனவும், "ஆடித் திங்கள்" (சிலப். 23 : 133) எனப் பண்புத்தொகைக்கண் மிகு மெனவும் கொள்க.

சாரியைப்புணர்ச்சியுள், "பதமுன் விகுதியும் பதமு முருபும், புணர்வழி யொன்றும் பலவுஞ் சாரியை, வருதலுந் தவிர்தலும் விகற்பமு மாகும்" (243) எனப் பொதுப்பட விதித்தாரேனும் விதியுளதென்றுகருதி, நாட்டினினீங்கினனென இன்னென வரூஉம் வேற்றுமையுருபிற்கு இன்சாரியை வருமென்றும் நாட்டுக் கண்ணிருந்தானெனக் கண்ணுருபிற்கு இன்சாரியை வாரா தென்றுங் கொள்ளற்க. நாட்டின்கணிருந்தானெனக் கண் ணுருபிற்கு இன்சாரியை வருமென்றும், நாட்டினீங்கினனென இன்னுருபிற்கு இன்சாரியை வாராதென்றுங் கொள்க.

உருபுபுணர்ச்சியுள், "ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சி யின், ஒக்குமன் அப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே" (242) எனப் பொதுப்படவிதித்தாரேனும் விதியுளதென்று கருதி நம்பி கு என உயிரீற்று உயர்திணைப்பெயர்முன்வந்த குவ்வுருபு மிகாதென்றும், நம்பிக்கண்ணென 'மன்' என்றமையாற் கண்ணுருபு மிகு மென்றுங் கொள்ளற்க; நம்பிகண் எனக் கண்ணுருபு மிகா தென்றும், நம்பிக்கு எனக் குவ்வுருபு 'மன்' என்றமையான் மிகு மென்றுங் கொள்க. பிறவுமன்ன.

சாரியைப்புணர்ச்சி ஏனை மூவகைப்புணர்ச்சியினையுஞ் சார்ந்து இடையே தோன்றல்விகாரமாய்வந்து புணர்தலின், விகுதி பதஞ் சாரியையுருபென உருபிற்கு முற்கூறினர்.

இச்சூத்திரத்திற்கு இவ்வாறு பொருள்கொள்ளாது இந் நால்வகைப்புணர்ச்சியுள் ஒன்றற்குச்சொன்னவிதி மற்றொன்றற் குங் கொள்கவெனப் [1]பொருள் கொள்வாருமுளர். அப்பொருட்கு அமைந்தசொல் இச்சூத்திரத்து இன்மையானும், "சாரியை, சந்தி விகார மாறினு மேற்பவை, முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்" (133) என்றும், "ஈறுபோதல்" (136) என்னுஞ் சூத்திரத்து அவ்விகாரம் விகுதிப் புணர்ச்சிக் கண்ணன்றிப் பதப் புணர்ச்சிக்கண்ணும் வருமென்பதுதோன்ற, 'பண்பிற்கியல்பே' என்றும், புணரியல்விதி பெயர்வினையிடையுரி நான்கிற்கும் பொருந்துமென்பதுதோன்ற, "மெய்யுயிர் முதலீ ருமிரு பதங்

1. பொருள்கொள்பவர் மயிலைநாதர்.

களும்" (151) என்றும் விதந்துரைத்த சிறப்புவிதிகளுள், "உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்" (238) என்றும், "ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியின், ஒக்குமன் அப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே" (242) என்றுங் கூறியவாற்றான் அப் பொருள் அமைந்துகிடத்தலானும் அது பொருந்தாதென்க. (15)

## இரண்டாம் வேற்றுமைப் புணர்ச்சிக்குச் சிறப்புவிதி

255. இயல்பின் விகாரமும் விகாரத் தியல்பும்
உயர்திணை யிடத்து விரிந்துந் தொக்கும்
விரவுப் பெயரின் விரிந்து நின்றும்
அன்ன பிறவு மாகுமை யுருபே.

எ - ன், வேற்றுமைப்புணர்ச்சிக்கு ஆவதொரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வேற்றுமைப்புணர்ச்சிக்கு விதித்த பொதுவிதியோடு தானும் ஒருங்குமுடிதலேயன்றி அங்ஙனம் விதித்த இயல்பின்கண் விகாரமாயும், விகாரத்தின்கண் இயல்பாயும், உயர்திணைக்கண் விரிந்தும் தொக்கும், [1]விரவுப் பெயர்க்கண் விரிந்தும் விரிதலொழிந் தும் இவைபோல்வன பிற வேறுபாடாயும் வரும், இரண்டாம் வேற் றுமைப் புணர்ச்சி எ - று.

உயிரே ஒற்றே சாரியையேயென்றிவை தோன்றல் திரிதல் கெடு தல் உழற்சிவிகற்பங்களையெல்லாம் உள்ளடக்கி 'இயல்பின் விகார மும் விகாரத் தியல்பும்' என்றும், எல்லா வேற்றுமையும் விரிந்தும் தொக்கும் வருதல்போலாது இவ்வேற்றுமை உயர்திணைப்பெயர்க் கண்ணும் விரவுப்பெயர்க்கண்ணும் விரிதலே தகுதியாய்த் தொகு தலே தகுதியாயும் வலிந்துகோடலாயும் வருமென்பது தோன்ற விரிந்தும் தொக்கும் விரிந்தும் விரிதல் நின்றுமென்றும், நெருநலள வும் வருத்தியபிணி இன்று நின்றதென்பதுபோல ஒழிதற்பொருள் தோன்ற நின்றென்றும் கூறினர்.

மேலைச்சூத்திரத்து 'ஒப்பனகொளலே' என்றமையான், இவ் விதிகளை இரண்டாம் வேற்றுமைப்புணர்ச்சி வந்துழியெல்லாம் கூட் டாது வேற்றுமைப் பொதுப்புணர்ச்சியோடு ஒருங்கொத்து முடி வன இவை, இப்புறனடைச் சிறப்புவிதியான் முடிவன இவையென உய்த்துணர்ந்து ஏற்பனவற்றோடு கூட்டுக.

1. விரவுப்பெயர் - இங்கே திணைப்பொதுப்பெயர்; "பலவயி னானு மெண்ணுத்திணை விரவுப் பெயர்" தொல். கிளவி. சூ. 51.

(வ - று.) [1]" வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப " என இயல்பின் விகாரமாயிற்று. மண்கொணர்ந்தானென விகாரத்து இயல்பாயிற்று. நம்பியைக்கொணர்ந்தானென உயர்திணைக்கண் விரிந்தது. [2]ஆடூஉவறிசொல், மகடூஉவறிசொல், பல்லோரறியுஞ்சொல், " நான்முகற்றொழுது " (56) என அதன்கண் தொக்கது. கொற்றனைக்கொணர்ந்தானென விரவுப்பெயர்க்கண் விரிந்தது. ஆண்பெற்றாள், பெண்பெற்றாள், " தற்கொண்டான், வளத்தக்காள் வாழ்க்கைத் துணை " (குறள், 51), " வழிபடு தெய்வ நிற்புறங்காப்ப " என அதன்கண் தொக்கது. இவ்விரண்டிடத்தொகையுட் சில தகுதியாயும் சில வலிந்துகோடலாயும் வருதல் காண்க. அன்ன பிறவுமென்றமையானே, " தற்கொண்டான் ", " எற்பணியாளாய் " (இருபாவிருபஃது 18 : 11) என உறழப்படுவன திரிந்தே வருதலும் இன்னும் வருவன உளவேல் அவையும் கொள்க.

இங்ஙனம் எண்ணின்கண் நின்ற இறந்ததுதழீஇய இழிவு சிறப்பும்மைகளானே வேற்றுமைக்கென விதித்த பொதுவிதியோடு ஒருங்கொத்து வரகுகட்டினனென இயல்பின்கண் இயல்பாயும், விளக்குறைத்தான் பலாக்குறைத்தான் கடுக்குறைத்தானென விகாரத்தின்கண் விகாரமாயும் வருதலே பெரும்பாலனவென்க.

இனி விரவுப்பெயர்க்கண் விரிந்துநின்றுமென்பதற்கு இவ்வாறன்றி எழுந்திருந்தென்பதற்கு இருந்தென்பதனை அசைநிலையாக்கி எழுந்தென ஒருபொருள் கோடல்போல நின்றென்பதனை அசைநிலையாக்கி விரிந்தென ஒருபொருள் [3]கொள்ளின் வழக்கின் கண்ணும் செய்யுட்கண்ணுந் தொக்குவரும் இலக்கியங்கட்கு இலக்கணம் இன்றுமென்க. (16)

## மூன்றும் வேற்றுமைப் புணர்ச்சிக்குச் சிறப்புவிதி

256. புள்ளியு முயிரு மாயிறு சொன்முன்
தம்மி னாகிய தொழின்மொழி வரினே
வல்லினம் விகற்பமு மியல்பு மாகும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மூன்றும் வேற்றுமைப்புணர்ச்சியுள், ஒற்றும் உயிரும் இறுதியாய்நின்றசொன்முன்னர், " கருவி கருத்தா வுடனிகழ் வதன்பொருள் " (297) என்பவற்றுட் கருத்தாவாகிய நிலைமொழிப்

1. தொல். செய். சூ. 110; பு. வெ. 226. 2. தொல். களவி. சூ. 2. 3. இங்ஙனம் பொருள்கொள்பவர் மயிலைநாதர்.

பொருள் தம்மாலாகிய தொழிற்சொல்வரின், அங்ஙனம் வரும் வல்லினம் வேற்றுமைப்பொதுமுடிபு ஏலாது விகற்பமும் இயல்புமாம் எ -று.

இவ்விதியும் ஒப்பன கொள்க.

(வ - று.) [1]பேய்கோட்பட்டான் பேய்க்கோட்பட்டான், சூர் கோட்பட்டான் சூர்க்கோட்பட்டான், புலிகோட்பட்டான் புலிக் கோட்பட்டான் எ - ம், பேய்பிடிக்கப்பட்டான் புலிகடிக்கப்பட்டான் எ - ம் வரும். உம்மையாற் சுருப்பாயப்பட்டான், அராத்தீண்டப் பட்டானென வேற்றுமைப் பொதுவிதியான் (165) மிக்குமுடி வனவே பெரும்பாலவென்க. இவற்றுள், தம்மினுகிய தொழில் பட்டானென்பதாம்; கோளென்பது முதலியவாய் இடைப்பிறவரு வன தந்தொழிலாம். இங்ஙனமாயினும் இவ்விரண்டினையும் ஒரு சொல்லாக்கித் தம்மினுகிய தொழின்மொழியென்ருர், பட்டானென் புழி இதுபட்டானென்னும் பொருள்தோன்றக் கோளென்பது முதலி யன அதனை விசேடித்து நிற்கும் ஒற்றுமைநயங்கருதியென்க; வேற்றுமை நயங்கருதின் கோட்பட்டானென்பதொழிந்தன எழு வாய்ப் பயனிலையாகிய வினையெச்சம் முற்றுவினைகொண்டதாம். எழுவாய்க்கண்ணும் மூன்றும் வேற்றுமைக்கண்ணும் கருத்தா உள வாகலின், தம் தொழிலையே ஈண்டுத் தம்மினுகிய தொழிலென்று ரெனின், பேய்பிடித்ததென்னும் எழுவாய்க்கட் பேயாற்பிடித்ததென மூன்றும் உருபும் விரித்தற்கு அமையும்; அங்ஙனம் விரித்தல் கூடாமையின் தந்தொழிலும் தம்மினுகிய தொழிலும் எழுவாய்க்கட் கருத்தாவும் மூன்றும் வேற்றுமைக்கட் கருத்தாவும் தம்முள் வேறு பாடுடையவாம்; [2]அவ்வேறுபாடு அவ்விலக்கணங் கூறும் வழிக் காட்டுதும். (17)

## புறனடை

257. இதற்கிது முடிபென் றெஞ்சா தியாவும்
விதிப்பள வின்மையின் விதித்தவற் றியலான்
வகுத்துரை யாதவும் வகுத்தனர் கொளலே.

எ - ன், இவ்வதிகாரத்திற்கு ஆவதொரு புறனடை உணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) இதற்கு இது முடிபென்று இவ்வதிகாரத்துள் விதிக் கத்தகுவனவற்றையெல்லாம் தனித்தனி வரையறுத்து விதிக்கப் புகின் அதற்கு ஒரு வரையறையின்மையின், வகுத்து விதித்தவற் றின் இலக்கணங்களை ஏதுவாகக்கொண்டு வகுத்து விதியுரை

1. பேயாற் கொள்ளப்பட்டான். 2. சூ. 297, உரை

யாதனவற்றையும் [1]கருதலளவையான் வகுத்து விதியுரைத்துக் கொள்க எ - று.

(வ - று.) எழுத்தியலுள், "மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி, எழுத்து" (58) என உரைத்தமையானே,

"கட்புல னில்லாக் கடவுளைக் காட்டும்
[2]சட்டகம் போலச் செவிப்புல வொலியை
உட்கொளற் கிடுமுரு பாம்வடி வெழுத்தே"

எனப் பிறர் கூறியவாறு இவ்வொலிவடிவைக் காட்டுதற்கு ஒரு கருவியாக வரைந்துகொள்ளப்பட்டது வரிவடிவெழுத்தெனவும்; பதவியலுள், "அன்ஆன் அள்ஆள்" (140) என்னுஞ் சூத்திரத்து முறையே அன் ஆன்விகுதி ஆண்பாற்கென உரைத்தமையானே பெருமாளென்னும் பதம் பெருமையையுடையானென்னும் பொருள் தோன்ற நின்ற பெருமானென்னும் பதத்தினது இறுதி ஆன்விகுதி ஆள்விகுதியாய் ஒரோவிடங்களில் திரிந்து ஆண்பாலையே உணர்த்தி நின்றதெனவும்; உயிரீற்றுப்புணரியலுள், "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன், கசதப மிகும்" (165) என உரைத்தமையானே, "ணனவல் லினம்வரட் டறவும்" (209) என்புழி டகரமும் வல்லினமாதலின் மிகுந்ததெனவும்; மெய்யீற்றுப்புணரியலுள், "நுந்தம், எம்நம் மீறு மவ்வரு ஞநவே" (221) என உரைத்தமையானே, அம்மென்னுஞ்சொல்லிறுதி மகரமும் குற்றொற்றாதலின் தன்னொடு மயங்காத மெல்லினம் வரின் அதுவாய்த் திரிந்து அந் நலமென அழகினது நலமென்னும் பொருட்டாய் வருமெனவும்; உருபுபுணரியலுள், "வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே" (250) என உரைத்தமையானே, அதுபோலும் விறுவும் எவற்றை யென அற்றுச்சாரியை பெறுமெனவும்; இரண்டாம் வேற்றுமைக்கும் மூன்றும்வேற்றுமைக்கும் புறனடையுரைத்தமையானே ஏழாம் வேற்றுமையும்,

"மண்புகுந்தும் விண்பறந்து மாலுமயனுங்காணு வொருபொருள்"

என வேற்றுமைப்பொதுவிதி யேலாது சிறுபான்மை வருமெனவும் கொள்க.

இன்னும் இவ்வைந்தியலுள்ளும் வகுத்துரையாதனவற்றை யெல்லாம் இடர்ப்படாது இதுவே [3]நிலனாக வகுத்துரைத்துக் கொள்க. (18)

ஐந்தாவது உருபுபுணரியல் முற்றிற்று

முதலாவது எழுத்ததிகாரம் முற்றிற்று

1. கருதலளவை - அனுமானப்ரத்தி.
2. சட்டகம் - சரீரம்; இங்கே விக்கிரகம்.
3. நிலன் - இடம்.

## இரண்டாவது

# சொல்லதிகாரம்

---

## முதலாவது

# பெயரியல்

258. முச்சக நிழற்று முழுமதி [1]முக்குடை
அச்சுத னடிதொழு தறைகுவன் சொல்லே.

எ - ன், கடவுள்வணக்கமும் அதிகாரமும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மூன்றுலகத்துக்கும் நிழலைச்செய்யும் நிறைந்த மதி போலும் மூன்றுகுடையையுடைய அழியாதவன் அடிகளை வணங்கிச் சொல்லுவன், மேலையதிகாரத்துக் கூறிய எழுத்தினுடைய சொல்லிலக்கணத்தை எ - று.

[2]தோன்றி அழியும் மாலையவென்பார் சகமென்றும், உலகமே உருவமாயினான் உயிர் இன்புறுவதே தானின்புறுவதென்பார் [3]அக்கடவுண்முடிமேல் நிழற்றுங்குடையை முச்சகத்திற்கும் நிழற்றுமென்றும், நிறைந்த தண்ணளியை உடையனென்பார் அதனை உவமைமுகத்தாற் குடைமேல்வைத்து முழுமதிமுக்குடையென்றும், சுதந்திரமின்றித் தோன்றியழியும் உயிரும் பிறவுமாகிய சகத்திற்கு அவ்வாறு தோன்றியழியான் தலைவனாக வேண்டுமென்பார் அச்சுதனென்றும், நம்செயலன்றென்பார் அடிதொழு

1. முக்குடை : சந்திராதித்யம், நித்யவிநோதம், சகலபாசனமென்பன ; இவை அருகனுக்குரியன ; "திங்கண்மூன் றடுக்கிய திருமுக்குடைக் கீழ்" சிலப். 11 : 1.

2. சகமென்னும் தொடர்மொழியிலுள்ள நிலைமொழி வருமொழிகளுக்குப் பொருள் முறையே தோன்றுதல் ஒடுங்குதலென்று கூறுவர் வடமொழிப்புலவர் ; இத்தொடர்மொழிக் கருத்தை மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள், "தகவுதித் தொடுங்கும் வெய்யோன் சகமெனும் புணர்மொ ழிக்கண், நிகர்நிலை வருமொ ழிக்கு நிகழ்பொருள் காட்ட" (தியாகராசலீலை, நைமிசப். 16) என அமைத்துள்ளார்கள்.

3. "கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை, வெயின் மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய, குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ" (புறநா. 35), "வெயிலழல் கவியாது வியலக வரைப்பின், உயிரழல் கவிக்கு முயர்ச்சித் தாகிப், பூந்தா ரணிந்த வேந்தல் வெண்குடை" (பெருங். 1. 42 : 44-6) என்பவற்றின் கருத்து இப்பதசாரத்தோடு ஒப்பிடற்குரியது.

தறைகுவனென்றும், வரையறைப்படாத பெருமை யுடையதென்பார் அவ்வாற்றல் தோன்றச் சொல்லென்றும் கூறினர்.

ஈண்டுக் காப்பதுகருதி அச்சுதனென்றது மேலே அதிகாரத்துப் படைப்பது கருதி [1]நான்முகனென்றதுபோலும்.

சொல்லென்பது ஆகுபெயர். ஏகாரம் ஈற்றசை. (1)

## சொல்லின் பொதுவிலக்கணம்

259. ஒருமொழி தொடர்மொழி பொதுமொழி யென்று
இருதிணை யைம்பாற் பொருளையுந் தன்னையும்
மூவகை யிடத்தும் வழக்கொடு செய்யுளின்
வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே.

எ - ன், மேற் சொல்லென்றது இஃதென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருமொழியும் தொடர்மொழியும் பொதுமொழியு மென மூன்று கூற்றினதாய் இருதிணையாகிய ஐம்பாற் பொருளினை யும் அப்பொருளையன்றித் தன்னையும் மூன்றிடத்தினும் வழக்கின் கண்ணும் செய்யுட்கண்ணும் வெளிப்படையானும் குறிப்பினானும் விளக்குவது சொல்லாம் எ - று.

எனவே, எல்லாச்சொல்லும் பொருளும் ஒருமொழி தொடர் மொழி பொதுமொழியென்னும் மூன்றுயும் இருதிணை ஐம்பாலா யும் அடங்குமென்பதூஉம், இருதிணை முதலிய காரணத்தான் உயர்திணைச்சொல், அஃறிணைச்சொல், ஆண்பாற்சொல், பெண் பாற்சொல், பலர்பாற்சொல், ஒன்றறிசொல், பலவறிசொல், தன்மைச்சொல், முன்னிலைச்சொல், படர்க்கைச்சொல், வழக்குச் சொல், செய்யுட்சொல், வெளிப்படைச்சொல், குறிப்புச்சொல், எ - ம், உயர்திணைப்பொருள், அஃறிணைப்பொருள், ஆண்பாற் பொருள், பெண்பாற்பொருள், பலர்பாற்பொருள், ஒருபொருள், பலபொருள், தன்மைப்பொருள், முன்னிலைப்பொருள், படர்க்கைப் பொருள், வழக்குப்பொருள், செய்யுட்பொருள், வெளிப்படைப் பொருள், குறிப்புப்பொருள், எ - ம், வழங்கப்படுமென்பதூஉம், உயிர்க்கு அறிவு கருவியாய் நின்று தன்னையும் பொருளையும் உணர்த்துமாறுபோல ஒருவற்குச் சொற்கருவியாய்நின்று தன்னை யும், உள்பொருள், இல்பொருள், மெய்ப்பொருள், பொய்ப்பொருள், சித்துப்பொருள், சடப்பொருள், நித்தியப்பொருள், அநித்தியப் பொருள், உருவப்பொருள், அருவப்பொருள், காட்சிப்பொருள்,

1. சூ. 56.

கருத்துப்பொருள், இயற்கைப்பொருள், செயற்கைப்பொருள், முதற்பொருள், சினைப்பொருள், இயங்கியற்பொருள், நிலையியற் பொருளெனப் பலவாற்ருனும் பகுத்துக்கூறப்படும் இருதிணையும் பாற்பொருளையும் உணர்த்துமென்பதூஉம் பெற்ரும். (2)

## மூவகை மொழி

260. ஒருமொழி யொருபொரு ளனவாந் தொடர்மொழி
பலபொரு ளனபொது விருமையு மேற்பன.

எ - ன், மேலைச்சூத்திரத்து நிறுத்தமுறையானே மூவகை மொழிகளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருமொழிகளாவன பகாப்பதமேனும் பகுபதமேனும் ஒன்று நின்று தத்தம் ஒருபொருளைத் தருவனவாம்; தொடர்மொழிகளாவன அவ்விருவகைப்பதங்களும் தன்ெனுடும் பிறிதொடும் அல்வழிவேற்றுமைப் பொருளுேக்கத்தான் இரண்டு முதலியவாகத் தொடர்ந்துநின்று இரண்டுமுதலிய பல பொருளைத் தருவனவாம்; பொதுமொழிகளாவன ஒன்ருய் நின்று ஒருபொருள் தந்தும் அதுவே தொடர்ந்துநின்று பலபொருள் தந்தும் இவ் விரண்டற்கும் பொதுவாய் நிற்பனவாம் எ - று.

(வ - று.) நிலம் நிலத்தன், நட நடந்தான், தில் மன், தவ நனி என்றற்ெருடக்கத்தன ஒருமொழி. நிலம்வலிது. அதுகொல், சாலப்பகை, நிலங்கடந்தான், நிலத்தைக்கடந்தான், நிலங்கடந்த நெடுமால் என்றற்ெருடக்கத்தன தொடர்மொழி. எட்டு, [1]கொட்டு, [2]தாமரை, வேங்கை, எழுந்திருந்தான், வாராநின்ருன், உரைத் திட்டான் என்றற்ெருடக்கத்தன பொதுமொழி. இவை ஒரு மொழிகளாய் ஒருபொருள்தருவதன்றி, [3]எள்ளைத் து, கொள்ளைத் து, தாவுகின்ற மரை, வேகின்ற கை, எழுந்து பின் இருந்தான், வந்துநின்ருன், உரைத்துப்பின், இட்டானெனத் தொடர்மொழி களாய்ப் பலபொருள் தருதலும் காண்க.

மொழிகள் தொடராது யாங்கணுந் தனித்துநில்லாவேனும் இப்பொருட்கு இச்சொல்லென இறைவனுனும் அறிவுடையோ ரானும் படைக்கும் படைப்புக்காலத்தும் தொடர்மொழிக்கண்

1. கொட்டு : இதற்கு மண்வெட்டியென்றும் பொருளுண்டு; " கொட் டினைக் கழலப் பார்ப்பர் " திருவிளை. 61 : 37.

2. தாமரை - ஒரு நீர்ப்பூக்கொடி. தாவுகின்ற மரையென இருபொரு ளுண்டு. இதனைத் திருவரங்கத் தந்தாதி, 16-ஆம் செய்யுளாலறிக.

3. எள்ளைத் து - எள்ளை உண்பாய்.

நின்ற இரண்டுமுதலிய சொற்களுள் ஒன்றுநின்று மற்றைய எஞ்சியவழியும் தனித்துநிற்றலின் ஒருமொழியென்றார். எஞ்சிய வழித் தனித்துநிற்றல்வருமாறு: ஒருவனுழை ஒருவன்வந்துழி வாவென்றல் உலகியல்; அவ்வழி வருதற்கு வினைமுதலாகிய நீயென்னும் சொல் எஞ்சி வாவென்னுஞ்சொல் தனித்து ஒரு மொழியாய் நின்றது. இத்தொடக்கத்தனவெல்லாங் கொள்க.

சேனை, குழாம் என்றற்றொடக்கத்தன ஒருமொழி பல பொருள் தந்ததென்னையெனின், ஈண்டுத் தொடர்மொழி பல பொருளன வென்றது, பல சொல்லிற் பலபொருளையன்றி இப்பொருளை அன்றென்க. இப்பொருளைப் பலபொருளான் இயைந்த ஒரு பொருளென ஆசிரியர் அகத்தியனார்,

“ பலவி னியைந்தவு மொன்றெனப் படுமே
அடிசில் [1]பொத்தகஞ் சேனை யமைந்த
கதவ மாலை கம்பல மனைய ”

எனக் கூறுமாறு காண்க. (3)

## இருதிணை

261. மக்க டேவர் நரக ருயர்திணை
மற்றுயி ருள்ளவு மில்லவு மஃறிணை.

எ - ன், நிறுத்தமுறையானே இருதிணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மக்களும் தேவரும் நரகரும் உயர்திணையாம்; அவரையொழிந்த விலங்குமுதலிய உயிருள்ளனவும் நிலம் நீர் முதலிய உயிரில்லனவும் அஃறிணையாம் எ - று.

மக்கள்தேவர் நரகரெனப்படுதல் அவ்வவ்யாக்கையும் உயிருங் கூடிநின்றவழியாதலின் அவை பிரிந்தவழியும் வேறுகருதிய வழியும் அவருயிரையும் உடம்பையும் உயிரில்லனவாகிய அஃறிணை யாகக் கொள்ளப்படுமென்க. விலங்கு முதலியவற்றின் உயிருடம்புகளும் அன்ன. மக்களாகப் பிறந்து புண்ணிய பாவம் இயற்றி அப்புண்ணியமிகுதியான் தேவராயும் அப்பாவமிகுதியான் நரகராயும் பிறத்தலின், மக்கடேவர்நரகரெனச் [2]சாதன சாத்திய முறையே வைத்தாரென்க.

1. பொத்தகம் - புத்தகம்; உகரத்துக்கு ஒகரம் போலியாக வந்தது; “ நிறைநூற் பொத்தக நெடுமனை யேற்றி ” (பெருங். 1. 34 : 26); நன். மயிலை. 155, 296-ம் பக்கங்களிற் காண்க.

2. சாதனம் - கருவி; சாத்தியம் - பேறு.

"திணைநிலங் குலனொழுக்கம்" (சூடாமணி நிகண்டு, 11-ணகர. 5) என்பவாகலின், திணையென்னும் பலபொருளொருசொல் ஈண்டுக் குலத்தினை உணர்த்திநின்றது. உயர்திணையல்லாத திணை அஃறிணை யெனப்பட்டது. இவ்விரண்டும் பண்புத்தொகை. உயர்வாய குலம், அஃதன்மையாயகுலமெனை விரியும். அடையடுத்த இவ்விரண்டு சாதிப்பண்புகளும் ஆகுபெயராய்ப் பண்பிகளை உணர்த்தி நின்றன. [1] திணையென்பது ஒழுக்கம்; அஃது ஆகுபெயராய் ஒழுக்கத்தையுடைய பொருள்களை உணர்த்திநின்றதெனவும் [2]உயர்திணையென்பது வினைத்தொகையெனவும் கூறுவாருமுளர். சாதி வேற்றுமை கருதி உலகப் பொருள்களையெல்லாம் உயர்திணை அஃறிணையென இரண்டு சாதியாக வகுத்து அவ்வேற்றுமை கருதி அவற்றை ஐம்பாலாகப் பகுத்தலே எல்லாவாசிரியர்க்கும் கருத்தாவதன்றி ஈண்டு ஒழுக்கங் கருதவேண்டுவதின்மையானும் அவ்வொழுக்கமும் உயிரில்லனவற்றிற்குப் பொருந்தாமையானும் ஈண்டுத் திணையென்பதற்கு அது பொருளன்றெனவும், உயர்திணையை உயர்ந்ததிணையென இறந்தகாலவினைத்தொகையாக விரிக்கின், மரம் நாடோறும் உயர்ந்தமை கருதி உயர்மரமெனவும், கல்வியறிவு நாடோறும் உயர்ந்தமைகருதி அதனை உடையார் மேலேற்றி உயர்மக்களெனவுங் கூறும் வினைத்தொகைபோல உயர்திணை யென்பதற்கு உயரும்புடைபெயர்ச்சிவினை காட்சிவகையானும் கருத்துவகையானும் இன்மையின் அது வினைத்தொகையன்றெனவும் கொள்க. (4)

## பால்

262. ஆண்பெண் பலரென முப்பாற் றுயர்திணை.

எ - ன், நிறுத்தமுறையானே ஐம்பாலுட் சிலபாலும் அவற்றிற்குரிய திணையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஆண் பெண் பலரென்னும் இம்மூன்றுபாலினையுமுடைத்து உயர்திணை எ - று.

ஆடவரென்றற்றொடக்கத்து ஆண்பன்மையும், பெண்டிரென்றற்றொடக்கத்துப் பெண்பன்மையும், மக்களென்றற்றொடக்கத்து இருவர்பன்மையும் பலரெனப்பட்டதென்க. மேற்பலவென்பதும் அது. (5)

---

1. இங்ஙனம் கூறுபவர் நச்சினார்க்கினியர்; தொல். கிளவி. சூ. 1.
2. உயர்திணையை வினைத்தொகை யென்பவர்கள் இளம்பூரணர், நச்சினார்க்கினியர், மயிலைநாதர்.

263. ஒன்றே பலவென் றிருபாற் றஃறிணை.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) ஒன்றும் பலவுமென்னும் இரண்டுபாலினையுடைத்து அஃறிணை எ - று.

அஃறிணைக்கண்ணும் சேவலென்றற்றொடக்கத்து ஆண் பாலும், பெடையென்றற்றொடக்கத்துப் பெண்பாலுமுளவேனும் அவ்வாண்பாலும் பெண்பாலும் உயிருள்ளனவற்றுட் சிலவற் றிற்கும் உயிரில்லனவற்றிற்கும் இன்மையின் அப்பகுப்பொழித்து எல்லாவற்றிற்கும் பொருந்த ஒன்றெனப்பட்டதென்க. (6)

## திணைபால்களுக்குப் புறனடை

264. பெண்மைவிட் டாணவா வுவபே டாண்பால்
ஆண்மைவிட் டல்ல தவாவுவ பெண்பால்
இருமையு மஃறிணை யன்னவு மாகும்.

எ - ன், திணைபால்கட்கு ஆவதொரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பெண்தன்மையினைவிட்டு ஆண்தன்மையினை அவா வுவனவாகிய [1]பேடுகள் உயர்திணையாண்பாலாம்; ஆண்தன்மை யினைவிட்டுப் பெண்தன்மையினை அவாவுவனவாகிய பேடுகள் உயர்திணைப்பெண்பாலாம்; இவ்விருவகைப் பேடுகளும் உயர் திணையாமன்றி அஃறிணையையொப்பனவுமாம் எ - று.

ஆணிலக்கணமும் பெண்ணிலக்கணமும் விரவி ஒருவகை யேனும் நிரம்பாதுநிற்கும் பேட்டினைப் பாற்பொதுமையின் நீக்கி உயர்திணையாண்பாலோடும் பெண்பாலோடுஞ் சேர்த்தமையின், அவ்விலக்கணங்களுள் விட்டவிலக்கணமும் அவாவுமிலக்கணமும், சிறந்தனவென்பதூஉம், விடாதவிலக்கணமும் அவாவாத இலக் கணமும் உள, அவை அத்துணைச் சிறப்பினவல்ல வென்பதூஉம், விடுதலும் அவாவுதலும் இலக்கணையென்பதூஉம், பேட்டிலக் கணங்களுட் சிறந்ததொன்றையே கருதாது சிறவாதனவற்றையும் உடன்கருதியவழி இருவகைப்பேடும் ஆண்பெண்ணென்னுமிரண் டனுள் ஒன்றன்பாற்படுதல் கூடாமையின் அப்பாலினவாம் உயர் திணையுமன்றி அஃறிணையிலக்கணமின்மையின் அஃறிணையுமன்றி உயிருள்ளனவற்றுள் ஆண்பெண் என்னும் பகுப்பிலவாகிநின்ற அஃறிணையையொக்குமென்பதூஉம் பெற்றும். பேடு, [2]அழிதூஉ,

1. பேடு : "பேடு நீக்கிப் பிறத்த லரிதே" தனிப்பாடல்; ஔவையார்.
2. "அழிதூஉ வகையு மவற்றின்பாலே" :நன். மயிலை. சூ. 263. மேற்.

அலி, மகண்மா என்பன ஒரு பொருட் கிளவி. அலி, மகண்மா என்பனவற்றை வேறு கூறுவாருமுளர்.

"பெண்ணவா யாணிழந்த பேடி யணியாளோ" (நாலடி. 251) எனப் பெண்ணிலக்கணஞ் சிறந்தமையிற் பெண்பாற்பட்டது; ஆண்பாற்பட்டதற்கும் அஃறிணையொத்து நின்றதற்கும் இலக்கியம் வந்தவழிக் காண்க. (7)

265. படர்க்கை வினைமுற்று நாமங் குறிப்பிற்
பெறப்படுந் திணைபா லனைத்து மேனை
இடத்தவற் றொருமை பன்மைப் பாலே.

எ - ன், நிறுத்தமுறையானே மூன்றிடத்தும் சொல் தன்னையும் பொருளையும் உணர்த்துமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வெளிப்படைச் சொல்லாயும் குறிப்புச் சொல்லாயும் வழக்கின் கண்ணும் செய்யுட்கண்ணும் நிற்கும் படர்க்கை வினை முற்றுச் சொல்லையும், படர்க்கைப் பெயர்ச்சொல்லையும் முன்குறித்தாற் பின் அவ்விருவகைச் சொல்லுங் கருவியாக இருதிணையும் ஐம்பாலும் பெறப்படும்; ஒழிந்த தன்மை முன்னிலை வினைமுற்றுச் சொல்லையும் தன்மை முன்னிலைப் பெயர்ச்சொல்லையும் முன்னே குறித்தாற் பின்பு அந்நால் வகைச் சொல்லும் கருவியாக இருதிணையைம்பாலுள் ஒருமைப்பாலும் பன்மைப்பாலும் பெறப்படும் எ - று.

வினைமுற்று நாமமென்பனவற்றையும் குறிப்பினென்னும் வினையெச்சத்தையும் பெறப்படுமென்பதனையும் ஏனையிடத்தும் கூட்டுக.

(வ - று.) நடந்தான் நடந்தாள் நடந்தார் நடந்தது நடந்தன எ - ம், அவன் அவள் அவர் அது அவை எ - ம், படர்க்கை வினை முற்றுச்சொல்லும் படர்க்கைப் பெயர்ச்சொல்லும் முன்பு தம்மை உணர்த்திப் பின்பு இருதிணையும் ஐம்பாலுமாகிய பொருள்களை உணர்த்தின. நடந்தேன் நடந்தேம் எ - ம், யான் யாம் எ - ம், நடந்தாய் நடந்தீர் எ - ம், நீ நீர் எ - ம், தன்மை வினைமுற்றுச் சொல்லும் முன்னிலை வினைமுற்றுச் சொல்லும் இருதிணையைம் பாலுள் ஒருமைப்பாலும் பன்மைப்பாலும் உணர்த்தின. பிறவு மன்ன.

வினைமுற்றை முற்கூறினமையான் அவை,

"இருதிணை மருங்கின் ஐம்பா லறிய
ஈற்றினின் றிசைக்கும்" (தொல். கிளவி. சூ. 10)

விகுதிகளோடு பயின்று வருதலின் இருதிணை ஐம்பாற் பொருள் களை உணர்த்தும் நெறியிற் பெயர்களிற் சிறந்தனவென்பதூஉம், குறிப்பினென்றமையாற் சொல் தன்னையுணர்த்துமென்பதூஉம், தன்னை முன்னுணர்த்திப் பொருளைப் பின்னுணர்த்து மென்பதூ உம் ஒலியெழுத்தை உணர்தற்கு வரிவடிவு ஒரு குறியாய் நின்றாற் போலப் பொருளை உணர்தற்குச் சொல் ஒரு குறியாய் நின்றதென் பதூஉம், அக்குறியினைக் குறித்தாலன்றி இருதிணை ஐம்பாலாகிய பொருட்பேறின்றென்பதூஉம், பெறப்படு மென்றமையாற் செவிப் புலனாகிய சொல்லை யொழிந்து கட்பொறி மாத்திரையின் இருதிணை யைம்பாற் பொருள்களை ஒருவன் உணரும் உணர்ச்சி விலங் குணர்ச்சிபோலுமன்றி அது பொருட்பேறாகாதென்பதூஉம், ஒருமை பன்மைப்பாலே யென்றமையால் தன்மை முன்னிலைகளின் ஆண் பெண் ஒன்று பலர் பலவென்னும் பால் விகற்பத்தோடு இரு திணையும் தோன்றாவென்பதூஉம், மூவிடங்களின் ஒன்றற்குரிய வினைமுற்றும் பெயரும் தம்மையும் பொருளையும் உணர்த்துமாறு இவ்வாறெனவே இவ்விடங்கட்குப் பொதுவாகிய வினைமுற்றுக் களும் பெயர்களும் பொதுமை நீங்கி ஓரிடத்திற்குரியவாகி இவ் வாறு தம்மையும் பொருளையும் உணர்த்துமென்பதூஉம், பெயரெச் சமும் வினையெச்சமும் வினைத்தொகையும் பண்புத் தொகையும் குறைச்சொல்லாதலிற் பயனிலையாகிய வருமொழியோடு புணர்ந்து பொருள் முற்றி இம்மூவிட வினைமுற்றுள்ளும் பெயருள்ளும் அடங் குதலின் இவ்வாறு தம்மையும் பொருளையும் உணர்த்துமென் பதூஉம், இடைச்சொல்லும் உரிச்சொல்லும் [1]பெயர்வினையுள் அடங்குதலின் அவ்வாறு தம்மையும் பொருளையும் உணர்த்துமென் பதூஉம், இவ்வாறே எல்லாச்சொல்லையும் வினைமுற்றுள்ளும் பெய ருள்ளும் அடக்கி மூவகையிடத்து நின்ற சொல் இருதிணையைம் பாற் பொருளையும் தன்னையும் உணர்த்துஞ் சிறப்புவிதி கூறினா ரென்பதூஉம் பெற்றாம்.

"வயிர வூசியு மயன்வினை யிரும்பும்
செயிரறு பொன்னைச் செம்மைசெய் யாணியும்
தமக்கமை கருவியுந் தாமா மவைபோல்
உரைத்திற முணர்த்தலு முரையது தொழிலே"

என்றார் ஆசிரியர் அகத்தியனாருமென்க.

இனி, இச்சூத்திரத்திற்கு இவ்வாறன்றி இருதிணையைம் பாலைப் பொருளகத்தறிவித்ததன்றிச் சொல்லகத்தறியுமாறு கூறினா ரெனப் பொருள் கூறின்,

1. நன். சூ. 270 உரை.

" இருதிணை மருங்கி னைம்பா லறிய
ஈற்றினின் றிசைக்கும் பதினே ரெழுத்தும்
தோற்றந் தாமே வினையொடு வருமே " (கிளவி. 10)

என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியவாறே படர்க்கை வினை முற்றென்றுமே கூறின் அமையும்; படர்க்கை நாமமென்றல் மிகை படக் கூறலாம். ஏனையிடத்து அவற்றொருமை பன்மைப்பாலே என்றல் தன்மை முன்னிலைகள் ஒருமை பன்மை மாத்திரையன்றி. இருதிணையைம்பாலை விளக்காமையின் மற்றொன்று விரித்தலாம். இவ்வாறன்றி மூவிடங்களில் ஒவ்வொன்றற்குரிய முற்றும் பெயருமே இருதிணையைம்பாற் பொருளினை விளக்கும்; ஒழிந்தன விளக்காவெனப் பொருள் கூறின், எல்லாச் சொல்லும் மூவகை யிடத்துநின்று இருதிணையைம்பாற் பொருளை விளக்குமெனக் கூறிய ஒருமொழி தொடர்மொழியென்னும் (259) பொதுச்சூத்தி ரத்தொடு மாறுகொளக் கூறலாம்.

இச்சூத்திரத்துட் குறிப்பினென்னுஞ் சொல்லை வினையெச்ச மாக்காது [1]குறிப்பினாலும் இருதிணையைம்பாலும் விளங்குமெனப் பொருள் கூறின் வெளிப்படையும் குறிப்புமாஞ்சொற்கள் இரு திணையைம்பாற் பொருள்களை விளக்கும் நெறியன்றி மூவிடச் சொற்போலக் குறிப்புச்சொல்லென வேறொன்றின்மையானும் ஒருவர் அறிவுதந்தாரென்றால்,

" நுண்ணுணர் வுடையோர் நூலொடு பழகினும்
பெண்ணறி வென்பது பெரும்பே தைமைத்தே " (பழம்பாடல்)

என்பவாகலின், [2]அறிவு பெண்பாலாற் பெறுதல் கூடாமையின் அதனையொழித்து ஒருவரென்னும் படர்க்கைப் பெயரும் அதன் பயனிலையாகிய தந்தாரென்னும் படர்க்கை முற்றும் உயர்திணை யினையும் ஆண்பாலையுங் குறிப்பான் விளக்குதலின் இப்பெயர் வினைகளையொழித்துப் படர்க்கை வினைமுற்று நாமமென்றாரல்ல ராதலானும், சொற்கள் வெளிப்படையானுங் குறிப்பினானும் இரு திணையைம்பாற் பொருள்களை விளக்குதல் நிறுத்த முறையே,

" ஒன்றொழி பொதுச்சொல் " (269) என்னுஞ் சூத்திரத் தாற் பிற்கூறுதலானும், ஈண்டுங் கூறுதல் கூறியது கூறலாமாத லானும் அது பொருளன்றென்க. (8)

---

1. இங்ஙனம் பொருள் கூறுபவர் மயிலைநாதர்.

2. 'அறிவறிந்த வென்றதனால், மக்களென்னும் பெயர் பெண்ணொ ழித்து நின்றது', 'தானாக அறியாமையிற் கேட்டதாயெனவுங் கூறினார்' (குறள், 61, 69) என்ற பரிமேலழகர் கொள்கை இங்கே நினைவுக்கு வருகின்றது.

## மூவிடம்

266. தன்மை முன்னிலை படர்க்கைமூ விடனே.

எ - ன், நிறுத்தமுறையானே மூவிடமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மூவிடமாவன : தன்மையும் முன்னிலையும் படர்க்கையுமாம் எ - று.

(வ - று.) யான் நீ அவன் எ - ம், வந்தேன் வந்தாய் வந்தான் எ - ம் வரும்.

சொல்வானும் கேட்பானுமாகிய இருவர் கூட்டத்துப் பிறந்த சொல் அவ்விருவரிடத்து நில்லாது அயலானிடத்துப் படர்தலிற் படர்க்கையெனப்பட்டது. (9)

## வழக்கு

267. இலக்கண முடைய திலக்கணப் போலி
மரூஉவென் றுகு மூவகை யியல்பும்
இடக்க ரடக்கன் மங்கலங் குழூஉக்குறி
எனுமுத் தகுதியோ டாறும் வழக்கியல்.

எ - ன், நிறுத்தமுறையானே வழக்காமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) இலக்கணமுடையதென்றும் இலக்கணப் போலியென்றும் மரூஉவென்றும் வழங்கும் மூவகை இயல்புவழக்கும், இடக்கரடக்கலென்றும் மங்கலமென்றும் குழூஉக்குறி யென்றும் வழங்கும் மூன்று தகுதிவழக்குடனே கூட அறுவகைப்படும் வழக்கிலக்கணம் எ - று.

(வ - று.) நிலம், நீர், தீ, காற்று, ஆகாசம், நன்னிலம், தண்ணீர் என்றற்றொடக்கத்தன இலக்கணமுடையன. இல்முன் என்பதனை முன்றிலென்றும், நகர்ப்புறமென்பதனைப் புறநகரென்றும், புறவுலா என்பதனை [1]உலாப்புறமென்றும், கண்மீ என்பதனை மீகண் என்றும், கோவிலென்பதனைக் கோயிலென்றும், பொதுவிலென்பதனைப் பொதியிலென்றும் வழங்கும் இத்தொடக்கத்தன இலக்கணப்போலி. அருமருந்தன்னபிள்ளை என்பதனை அருமந்தபிள்ளை யென்றும் மலையமானாடு என்பதனை மலா

1. உலாப்புறம் : இஃது ஒருவகைப் பிரபந்தம்; தலைமகன் புறத்தே உலாவி வருவதைக் கூறுவது; உலாவெனவும் வழங்கும். இவ்விலக்கணம் பாட்டியலிற் காணப்படும்.

டென்றும், சோழனுடென்பதனைச் சோணுடென்றும், பாண்டிய னுடென்பதனைப் பாண்டி நாடென்றும், இந்நாடென்பதனை இந்த நாடென்றும், ஆதன்றந்தையென்பதனை ஆந்தை யென்றும், பூதன் றந்தை யென்பதனைப் பூந்தையென்றும், [1]மரவடி யென்பதனை மராடி என்றும், குளவாம்பலென்பதனைக் குளாம்பலென்றும், யாவரென்னும் பெயரை யாரென்றும் ஆரென்றும், யாரென்னும் குறிப்புவினையை ஆரென்றும், எவனென்னுங் குறிப்பு வினையை என்னென்றும் என்ன என்றும், [2]ஆற்றூரென்பதனை ஆறை யென்றும் வழங்கும் இத்தொடக்கத்தன மரூஉ. கண்கழீஇ வருதும், கால்கழீஇவருதும், வாய்பூசிவருதும், ஆமுன் பகரவீ, பவ்வீ, "புலிநின் றிறந்த நீரல் லீரத்து", "கருமுக மந்தி செம்பி னேற்றை" என்றற்றொடக்கத்தன இடக்கரடக்கல். செத்தாரைத் துஞ்சினுரென்றும், ஓலையைத் திருமுகமென்றும், காராட்டை வெள்ளாடென்றும், இடுகாட்டை நன்காடென்றும் வழங்கும் இத் தொடக்கத்தன மங்கலம். [3]பொற்கொல்லர் பொன்னைப் பறி யென்றும், யானைப்பாகர் ஆடையைக் காரை யென்றும், வேடர் கள்ளைச் சொல்விளம்பியென்றும் வழங்கும் இத்தொடக்கத்தன குழூஉக்குறி.

இலக்கண நெறியால் வருவதனை இலக்கணமுடையதென்றும், இலக்கணமுடையவன்றிப் படைப்புக்காலத்து இலக்கண முடைய தோடு ஒருங்குபடைக்கப்பட்டதுபோல வருவதனை இலக்கணப் போலியென்றும், தொன்று தொட்டதன்றி இடையே இலக்கணஞ் சிதைந்து மரீஇயதனை மரூஉவென்றும், இம்மூன்றுந் தகுதிவழக் குப்போலாது எப்பொருட்கு எச்சொல் அமைந்ததோ அப் பொருளை அச்சொல்லாற் கூறுதலின் இயல்பு வழக்கென்றும், இடக்கர் என்பது மறைத்துமொழி கிளவி (தொல். எச்ச. சூ. 46-7) என்பவாகலின் இடக்கர் தோன்ருது அதனைமறைத்ததை இடக்கர டக்கலென்றும், இடக்கர்போற் கூறத்தகாததன்றேனும் மங்கல மில்லதை யொழித்து மங்கலமாகக் கூறுவதை மங்கலமென்றும், ஒவ்வொரு குழுவினுள்ளோர் யாதானும் ஒரு காரணத்தான் ஒரு பொருளினது சொற்குறியை யொழித்து வேறொரு சொற்குறியாற் கூறுவதைக் குழூஉக்குறியென்றும், இம்மூன்றும் இப்பொருளையறி

1. மரவடி : 142-ஆம் பக்கத்து அடிக்குறிப்பைப் பார்க்க.

2. ஆற்றூர் : இப்பெயர் கொண்ட ஊர்கள்பல சோழநாடு முதலிய வற்றிலுள்ளன.

3. பொற்கொல்லர் - தட்டார்; "நங்கைக்குப் பொற்கொல்ல ராயிர வரை" சிலப். உரைபெறுகட்டுரை.

தற்கு அமைந்துகிடந்த இச்சொல்லாற் கூறுதல் தகுதியன்று, வேறொரு சொல்லாற்கூறுதல் தகுதியெனக் கருதிக் கூறுதலின் தகுதிவழக்கென்றும் பெயர் பெற்றன. இலக்கணப்போலியினையும் மரூஉவினையும் வேறறிதற்குச் சான்றோராட்சியே காரணமென்க. அன்றி நிலைமொழி வருமொழிகள் முன்பின்னாக மாறிநிற்பன இலக்கணப்போலி; ஒழிந்த சிதைவெல்லாம் மரூஉவென்று கோடலுமொன்று. இவ்வறுவகை வழக்கும் திரிசொற்கண்ணும் வருதலின் இயற்சொல்லாகிய உலக வழக்கையும் திரிசொல் திசைச் சொல் வட சொல்லாகிய செய்யுள் வழக்கையும் தொகுத்து இச் சூத்திரத்தான் வழக்கெனப்பட்டதென்க. அங்ஙனமாயிற் செய்யு ளென வேறு கூறுவது யாது கருதியெனின் இவ்வுலகவழக்கும் செய்யுள் வழக்கும் வழக்காய் நில்லாது தொடைப்பட்டமை கருதி யென்க. வழக்கென்பது சொன்னடை. (10)

## செய்யுள்

268. பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போற்பல
சொல்லாற் பொருட்கிட னாக வுணர்வினின்
வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள்.

எ - ன், நிறுத்தமுறையானே செய்யுளாமாறு உணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்.) தோல் இரத்தம் இறைச்சி மேதை எலும்பு மச்சை சுவேதநீர் என்னும் எழுவகைத் தாதுக்களினால் உயிர்க்கு இடனாக இயற்றப்பட்ட உடம்புபோல் இயற்சொல் திரிசொல் திசைச் சொல் வடசொலென்னும் நால்வகைச் சொற்களாற் பொருட்கு இடனாகக் கல்வியறிவினாற் செய்யுளியற்றவல்லோர் அலங்காரம் பெற இயற்றுவன செய்யுளாம் எ- று.

ஈண்டுப் பொருளென்றது [1]அகமும் புறமுமாகிய பொருள்களை.

இங்ஙனங் கூறவே, எழுத்தான் இயன்றது சொல்லாதலின் எழுத்துச்சொற்பொருளணியென்னும் நான்கினும் நடப்பது யாப் பென்பதாயிற்று.

(வ - று.)

" வருங்குன்ற மொன்றுரித் தோன்றில்லை யம்பல வன்மலையத்
திருங்குன்ற வாண ரிளங்கொடி யேயிட ரெய்தலெம்மூர்ப்
பருங்குன்ற மாளிகை நுண்கள பத்தொளி பாயநும்மூர்க்
கருங்குன்றம் வெண்ணிறக் கஞ்சுக மேய்க்குங் கனங்குழையே "
(சிற். 15.)

1. சிற். 20, பேர்.

இக்கட்டளைக் கலித்துறை இடமணித்தென்னும் பொருட்கு இட ஞகித் தன்மை உவமை உருவகவணிகளும் பிறவும் உடைத்தாய் வருதல் காண்க. பிறவுமன்ன. (11)

## வெளிப்படை குறிப்பு

269. ஒன்ருெழி பொதுச்சொல் விகாரந் தகுதி
ஆகு பெயரன் மொழிவினைக் குறிப்பே
முதருெகை குறிப்போ டின்ன பிறவும்
குறிப்பிற் றருமொழி யல்லன வெளிப்படை.

எ - ன், நிறுத்தமுறையானே வெளிப்படையும் குறிப்புமா மாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இறுதியிணையாண்பெண்ணுள் ஒன்றனை ஒழிக்கும் பொதுச்சொல்லும் வலித்தல் முதலிய ஒன்பது விகாரச்சொல்லும் மூவகைத் தகுதிவழக்குச்சொல்லும் ஆகுபெயர்ச்சொல்லும் அன் மொழித்தொகைச்சொல்லும் வினைக்குறிப்புச்சொல்லும் முதற் குறிப்புச்சொல்லும் தொகைக் குறிப்புச்சொல்லும் இம் முதல் தொகையல்லாத பலவாற்ருனும்வரும் குறிப்புச்சொல்லும் இவை போல்வன பிறவும் குறிப்பினுன் இருதிணையைம்பாற் பொருளைத் தருஞ்சொற்களாம்; இவையல்லனவெல்லாம் வெளிப்படையான் அப்பொருள்களைத்தருஞ் சொற்களாம் எ - று.

வெளிப்படையல்லனவெல்லாம் குறிப்புச்சொல்லாயினும் அக் குறிப்புச்சொல்லுள்ளும் வேற்றுமைதோன்றற்கு ஏகாரம் இடை யிட்டுக் கூறிஞரென்க.

(வ - று.) ஆயிரம்மக்கள்பொருதார், பெருந்தேவி பொறை யுயிர்த்த கட்டிற்கீழ் நால்வர்மக்க ளிருந்தாரென்புழி மக்களென் னும் பொதுப்பெயரும் பொருதார் இருந்தாரென்னும் பொதுவினை யும் உயர்திணையாண்பால் பெண்பாலுள் ஒன்றனை ஒழித்து ஒன் றனைக் குறிப்பான் உணர்த்தின. இப்[1]பெற்றம் உழவொழிந்தன, இப்பெற்றம் அறத்திற்கே கறக்குமென்புழிப் பெற்றமென்னும் பொதுப்பெயரும், ஒழிந்தன கறக்குமென்னும் பொதுவினைகளும் அஃறிணை ஆண்பால் பெண்பாலுள் ஒன்றனையொழித்து ஒன் றனைக் குறிப்பான் உணர்த்தின. இவற்றுட் பொருதார், கறக்கு மென்னும் வினைகள் விகுதிமாத்திரையிற் பொதுவினையாயின. "குறுத்தாட்பூதம்", "மரைமலர்", "குலிகமொ டிகலிய வங்கை"

1. பெற்றம்: "பெற்றமேய்த் துண்ணுங் குலத்திற்பிறந்து" திருப் பாவை, 29.

என்புழி இவ்விகாரச்சொற்கள் குறுந்தாள், தாமரை, இங்குலிக மென்பவற்றைக் குறிப்பான் உணர்த்தின. கால்கழீஇ வருதும், நன்காடு, பறி என்புழி இத்தகுதிகள் தத்தம்பொருளைக் குறிப்பான் உணர்த்தின. புளித் தின்றான், கடுத்தின்றானென்புழி இவ் வாகுபெயர்கள் அவற்றின் பழத்தினைக் குறிப்பான் உணர்த்தின.

" பொற்றொடி தந்த புனைமடல் "

" அறற்கூந்தற் கில்லை யருள் "

என்புழி இவ்வன்மொழித்தொகை அவற்றையுடைய மகளிரைக் குறிப்பான் உணர்த்தின.

" சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை
இகல்வெல்லல் யார்க்கு மரிது " (குறள், 647)

என்புழி வல்லன் இலனென்னும் சொற்கள் பெயர்ப்பொருளை ஒழித்து வினைக்குறிப்புப்பொருளைக் குறிப்பான் உணர்த்தின.

" அறத்தா றிதுவென வெள்ளைக் கிழிபு " (யா. கா. 15)

என்புழி அடிமுதற்குறிப்புச்சொற்கள்,

" அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை " (குறள், 37)

என்னும் பாட்டைக் குறிப்பான் உணர்த்தின.

" அலங்குளைப் புரவி யைவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட " (புறநா. 2)

என்புழி ஐவரென்னும் தொகைக்குறிப்புச்சொல் பாண்டவரைக் குறிப்பான் உணர்த்திற்று.

" ஒன்றி லிரண்டாய்ந்து மூன்றடக்கி நான்கினால்
வென்று களங்கொண்ட வேல்வேந்தே - சென்றுலாம்
ஆழ்கடல்சூழ் வையகத்து ளைந்துவென் றாறடக்கி
ஏழ்கடிந் தின்புற்றிரு " (பு. வெ. 225)

என்பதும் அது.

இனிப் பலவாற்றானும் வரும் குறிப்புச்சொற்கள் பொருள்களைக் குறிப்பான் உணர்த்துமாறு :—கற்கறித்து நன்கட்டாய், நீயிர்பெரிதுமறிதிர், பறவாக்குளவி, பாயாவேங்கை,

[1] " உவர்க்கட லன்ன செல்வரு முளரே
கிணற்றூற் றன்ன நீயுமா ருளையே

1. இச்செய்யுள் தஞ்சாவூர் அரண்மனைப் புத்தகசாலையிலுள்ள ஓரேட்டுச் சுவடியிலிருப்பதாக ஸேது ஸமஸ்தான மஹாவித்வான் பாஷா கவிசேகர ரா. இராகவையங்காரவர்கள் எனக்கு அன்புடன்தெரிவித் தார்கள். முன்பு இது பல பகுதியாக எண்ணப்பட்டிருந்தது.

செல்வர் பொருந்திரு வுறுக பல்பகல்
நீவா ழியரோ நெடிதே யியாச்
சிறுவிலைக் காலத் தாயினும்
உறுபொரு டந்தெஞ் சொற்கொள் வோயே":
"பல்சான் றீரே பல்சான் றீரே
கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட்
பயனின் மூப்பிற் பல்சான் றீரே" (புறநா. 195);
"அறனோ மற்றிது விறன்மாண் குடுமி
இன்னா வாகப் பிறர்மண்கொண்
டினிய செய்திநின் னார்வலர் முகத்தே" (புறநா. 12);
"நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப்
போதர விட்ட நுமருந் தவறிலர்
நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்
பறையறைந் தல்லது செல்லற்க வென்னா
இறையே தவறுடை யான்" (கலி. 56);
"மையார் தடங்கண் மயிலன்னாய் தீத்தீண்டு
கையார் பிரிவித்தல் காண்" (திணைமாலை. 5);

(தீத்தீண்டுகையார் - வேங்கைமரம்)

"சோலையை யோரெழுத்தா லென்சொல்லுந் தொக்கதன்மேல்
நீலப்பே ரெவ்வெழுத்தி னானிரம்பும் - மாலைக்
குடைவேந்தன் சென்னி குலநதியின் பேரைக்
கடைசேர்ந்த வோரெழுத்தாற் காண்"

(கா, காவி, காவிரி என்பது பொருள்.); இஃது [1]எழுத்துப் பெருக்கம்.

"ஆற்றின்பே ரீற்றி னெழுத்தொழிய வின்பஞ்சேர்
நாற்கால தாமீற் றுயிர்நடப்ப - ஏற்புடைய
உண்பயனா மாங்கதனி னீறெழிந்தா லோதுநருக்
கின்பஞ்சேர் செய்யுளா மின்று"

(பாலாறு, பாலா, பால், பா என்பது பொருள்.) இஃது எழுத்துச் சுருக்கம்.

"வாம மணிமே கலையார் மயிர்குறுகின்
ஆமவர் பெய்யு மணிகுழை - ஏம
மயிர்நிறுவி மற்றதற்கோர் புள்ளி கொடுப்பின்
செயிர்தீர் மரமாகுஞ் சென்று"

---

1. எழுத்துப்பெருக்கம்: இஃது ஒருவகைச் சொல்லணி; எழுத்து வருத்தனமென்றும் வழங்கப்படும்; தண்டி. சொல்லணி. சூ. 7, உரை; யா. வி. சூ. 96, உரை.

(கூழை, குழை, ஓதி ஓதி யென்பது பொருள்); இது மாத்திரைச் சுருக்கம்.

" பூமேலா ளாரென்பார் பூம்போர்வை யென்செய்யும்
தீமேற் படிற்கொடுத்தாற் கொள்வதெவன் - ஆமே
நலந்திகழுஞ் செங்கை நயதீர னெங்கோன்
சிலம்பன் றிருவேங் கடன் " ;

இது வினாவுத்தரம்.

[1] " நீத்தொழிந்த வாறைந் தடக்கிபின் னிச்சயமே
வாய்த்தமைந்த வாயில்பெண் ணீனையும் - கூத்தற்கு
வாளேறே டோசை விளைநில மிவ்வல்லாற்
கேளா யுடன்வருவ தில் " ;

(நிலையாமை கடைப்பிடி, சிவ புண்ணியஞ்செய் என்பது பொருள்.) இத்தொடக்கத்தனவெல்லாம் குறிப்பினால் தம் பொருள்களை உணர்த்தின.

இன்னபிறவுமென்றமையானே, தெரிநிலைவினை குறிப்பு வினையாலணையும் பெயரும் வினைமுற்றும் குறிப்புமுற்றும் வருமெச்சங்களும், செய்யுமென்னும் முற்றும் அன்று இன்று என்னும் வினையெச்சக் குறிப்பும், கேட்குநபோலவும் கிளக்குந போலவும் இயங்குநபோலவும் இயற்றுநபோலவும் அஃறிணை மருங்கினும் அறையப்படுதல் (சூ. 409) முதலிய இலக்கணங்களும் இவை போல்வன பிறவுங்கொள்க.

இவ்வாறன்றி நிலம் நீர் தீ காற்று ஆகாயமென்றற்றொடக் கத்தனவெல்லாம் வெளிப்படையிற் பொருளுணர்த்தின.

வடநூலார் சொற்பொருளை வாச்சியம், வெங்கியம், இலக் கணையென மூன்றெனவும் இலக்கணையை வெங்கியத்துள் அடக்கி இரண்டெனவுங் கூறுப. இவற்றுள், வாச்சியம் என்பது வெளிப் படை ; வெங்கியம் என்பது குறிப்பு ; இலக்கணை என்பது ஒரு பொருளினது இலக்கணத்தை மற்றொரு பொருட்குத் தந்துரைப் பது ; அது விட்டவிலக்கணை, விடாதவிலக்கணை, விட்டும்விடாத விலக்கணையென மூவகைப்படும். அவை வருமாறு :—

1. " நீத்தொழிந்த " என்னும் வெண்பாவிற் பின்னிரண்டடியாற் போந்த பொருள் புண்ணியஞ் செய்யென்பதென்று மயிலைநாதரும், தனிச் சொல்லையுங் கூட்டி அவற்றாற் போந்த பொருள் சிவபுண்ணியஞ் செய்யென்பதென்று இவ்வுரையாசிரியரும் எழுதியிருத்தல் ஆராய்தற் பாலது ; கூத்தனென்பதற்குச் சைனர் ஆன்மாவென்று பொருள் கூறுவர் : " கூத்தன் புறப்பட்டக் கால் " நாலடி. 26.

“ சென்றதுகொல் போந்ததுகொல் செவ்வி பெறுந்துணையும்
நின்றதுகொ னேர்மருங்கிற் கையூன்றி - முன்றில்
முழங்குங் கடாயானை மொய்ம்மலர்த்தார் மாறற்
குழந்துபின் சென்றவென் னெஞ்சு ”

என்புழி மருங்கும் கையும் ஊன்றுதலும் முதலிய இலக்கணங்கள் நெஞ்சிற்கு இன்மையின் விட்டவிலக்கணை. கங்கையின் கண் இடைச்சேரி, புளித்தின்றானென்புழி, இடைச்சேரி கங்கைக் கரைக்கண் இருத்தலும், புளியினது பழத்தைத் தின்றலுமுண் மையின் விடாதவிலக்கணை.

“ ...பாயிருள் பருகிப்
பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பருதி ” (பெரும்பாண். 1–2)

என்புழி, இருளைப்பருகுதலும் பகலைக் காலுதலும் பருதிக்கு இன்மையானும் இருளைப்போக்குதலும் பகலைத்தருதலும் அதற்கு உண்மையானும் விட்டும் விடாத இலக்கணை. இவையும் குறிப்பினுள் அடங்குமாதலின், வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே (259) யெனத் தொகுத்தும் இவ்வாறு வகுத்துங் கூறினாரென்க. (12)

## சொற்பாகுபாடு

270. அதுவே,
இயற்சொற் றிரிசொ லியல்பிற் பெயர்வினை
எனவிரண் டாகு மிடையுரி யடுத்து
நான்குமாந் திசைவட சொல்லணு காவழி.

எ - ன், மேலைச்சூத்திரங்காறும் சொல்லாவது இஃதெனக் காட்டக்கண்ட சொல் இத்துணையாமென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற்காட்டியசொல் இயற்சொல், திரிசொல் என்னும் இயல்பினையுடைய பெயர்ச்சொல்லும் வினைச் சொல்லுமென இரண்டாம்; இவற்றுடன் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் அடுத்து நான்குமாம், இவற்றுடன் திசைச் சொல்லும் வடசொல்லும் அணுகாவிடத்து எ - று.

“ செய்யுட்குரியன உரிச்சொல் ” (442) எனக் கூறுதலானும், வருஞ் சூத்திரம், “ செந்தமிழாகி ” எனக்கூறுதலானும், இயற் சொல் என்றதைப் பெயர்வினையிடையினும் திரிசொல்லென்றதை எல்லாவற்றினும் பிரித்துரைத்துக்கொள்க. எனவே, அதுவே எனச் சுட்டியசொல் பெயரியற்சொல், பெயர்த்திரிசொல், வினையி யற்சொல், வினைத்திரிசொல், இடையியற்சொல், இடைத்திரிசொல்,

உரித்திரிசொல் என எழுவகைப்படுமென்பதூஉம், திசைச்சொல்லும் வடசொல்லும் அணுகியவழி ஒன்பதுவகைப்படு மென்பதூஉம் பெற்றாம். [1] உரியியற்சொல் இன்றாகவும் உரித்திரி சொல்லென்றது, இயற்சொல் திரிசொல்லென்னும் பொதுவிலக் கணம் நோக்கியென்க.

இச்சொற்களை ஒருங்கோதாது முறைதெரித்து ஓதியது என்னையெனின், ஒருவன் ஒருத்தி என்றமாத்திரையின் அவர் கை கால் முதலிய அகத்துறுப்பும் ஆடை அணி முதலிய புறத்துறுப்பும் அடங்குதல்போலப் பெயர்வினையென்றமாத்திரையின் அவற்றின் அகத்துறுப்பாகிய விகுதியுருபுமுதலிய இடைச்சொற்களும் புறத் துறுப்பாகிய வேற்றுமையுருபு முதலிய இடைச்சொற்களும் அடங்குதலானும், உரிச்சொல், "பல்வகைப் பண்பும் பகர்பெய ராகி" (442) என்பவாகலிற் பெயருள் அடங்குதலானும், திசைச் சொல்லும் வடசொல்லும் இவற்றுள் யாதானும் ஒன்றாயடங்குத லானும், இவற்றை அடக்கிநின்ற தலைமையும் சிறப்புந்தோன்றப் பெயர் வினையென இரண்டாகுமென வரையறுத்தும், பெயர் வினையுள் அடங்கிநின்றவற்றையே வேறுபாடறிதற்கு வேறு படுத்துத் தொகைகோடலின் இடை உரிக்கு அத்தலைமையும் சிறப்பும் இன்றென்பது தோன்ற அடுத்த நான்குமாமென்றும், கொடுந்தமிழ்முதலிய சொல் செந்தமிழொடு விராயவழி அவற்றைத் திசைச்சொல்லென்றும், [2] ஆரியச்சொல் தமிழ் நடைபெற்றுச் செந்தமிழொடு விராயவழி அதனை வடசொல்லென்றும், தமிழொடு தழுவப்படுமாயினும் செந்தமிழ்ச்சொல்லொடு தொகைகோடல் ஒரு தலையன்றென்பது தோன்ற அணுகா வழியென்றும் முறைதெரித் தோதினாரென்க.

வடக்கும் ஒருதிசையன்றோ? திசைச்சொல்லன்றி வடசொல் லென வேறு கூறுவதென்னையெனின் :—தமிழ்நாட்டிற்கு வட திசைக்கட் [3] பதினெண்மொழிகளுள் ஆரியமுதலிய பல மொழியும் உளவேனும் தென்றமிழ்க்கு எதிரியது [4] கடவுட்சொல்லாகிய ஆரியமொன்றுமேயென்பது தோன்ற அவற்றுள் தமிழ் நடை பெற்றதை வடசொல்லென்றும் ஏனையவற்றுள் தமிழ் நடை

1. மயிலைநாதர் உரியியற்சொல்லும் உண்டென்பர்.
2. 'ஆரியமொழி திரிந்து வடமொழியாமாறு': சூ. 146, உரை.
3. "மூவறுமொழி" (சிறப்புப். 7) என்பதன் குறிப்பைப் பார்க்க.
4. கடவுட்சொல் - தேவபாஷை; "தேவ பாடையி னிக்கதை செய்பிய" கம்ப. அவை. 7

பெற்றதைத் திசைச்சொல்லென்றும் சான்றோரால் நியமிக்கப் பட்டனவென்க.

இச்சொற்களைப் பெயர்முதலியவாக வைத்தது என்னையெனின், பெயர்ச்சொல் பொருளை விளக்குதலானும், வினைச்சொல் பொருளது தொழிலை விளக்குதலானும், இடைச்சொல் இவையன்றி வேற்றுமையுருபுமுதலிய வேறொரு சொல்லாய் நிற்பினும் இவற்றிற்கு உறுப்பாவதன்றித் தனித்தியலாமையானும், [1] உரிச் சொல் பண்புப்பெயருட் சிலவற்றையே ஒருவாற்றான் வேறுவகுக்கப் பட்டதாதலானும், திசைச்சொல் கொடுந்தமிழ் மொழியாயும் அன்னிய மொழியாயும் வருதலானும், வடசொல் அன்னியமொழியே யாய் வருதலானும் இம்முறையே வைக்கப்பட்டனவென்க.

" சொல்லெனப் படுப பெயரே வினையென்
றாயிரண் டென்ப வறிந்திசி னோரே " (பெயர். 4),
" இடைச்சொற் கிளவியு முரிச்சொற் கிளவியும்
அவற்றுவழி மருங்கிற் றோன்று மென்ப " (பெயர். 5)

என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாருமென்க. (13)

## இயற்சொல்

271. செந்தமி ழாகித் திரியா தியார்க்கும்
தம்பொருள் விளக்குந் தன்மைய வியற்சொல்.

எ - ன், மேலைச்சூத்திரத்து நிறுத்தமுறையானே இயற் சொல்லாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செந்தமிழ்நிலத்து மொழியாகி அந்நிலத்து மொழி யுள் மேற்கூறப்படும் திரிசொற்போலாது கற்றோர்க்கும் கல்லா தோர்க்கும் ஒப்பத் தம்பொருளை விளக்குந் தன்மையினையுடைய உலகவழக்கு இயற்சொல்லாம் எ - று.

யார்க்குமென்பதனால் உலகவழக்கென்பது பெற்றாம்.

(வ - று.) மண், பொன் என்றற்றொடக்கத்தன பெயரியற் சொல். நடந்தான், வந்தான் என்றற்றொடக்கத்தன வினையியற் சொல். அவனை, அவனால் என்றற்றொடக்கத்துவரும் வேற்றுமை யுருபு முதலியன இடையியற்சொல்.

செந்தமிழ் நிலமாவது யாதெனின் :—

" சந்தனப் பொதியச் செந்தமிழ் முனியும்
சவுந்தர பாண்டிய னெனுந்தமிழ் நாடனும்
சங்கப் புலவருந் தழைத்தினி திருக்கும்
மங்கலப் பாண்டி வளநா டென்ப."

1. சூ. 442, பார்க்க.

இவ்வாறன்றிச் [1] செந்தமிழ்நிலம் வையையாற்றின் வடக்கெனக் கூறுவாருமுளர்; கொடுந்தமிழ்நிலத்துப் புனலுடெனப் படுவது சோணுடாதலானும், பாண்டியனையே தமிழ்நாடனெனச் சான்றோர் கூறுதலானும் அஃதுரையன்றென்க. (14)

## திரிசொல்

272. ஒருபொருள் குறித்த பலசொல் லாகியும்
பலபொருள் குறித்த வொருசொல் லாகியும்
அரிதுணர் பொருளன திரிசொல் லாகும்.

எ - ன், நிறுத்தமுறையானே திரிசொல்லாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருபொருளைக் கருதிய பலசொல்லாகியும், பல பொருளைக் கருதிய ஒருசொல்லாகியும் கற்றுல் உணரும் பொருள வாய்வருவன திரிசொல்லாம் எ - று.

அரிதுணர் பொருளன வென்றமையான், ஒருபொருள் குறித்த பலசொல்லுள்ளும், பலபொருள்குறித்த ஒருசொல்லுள்ளும் வரும் இயற்சொல்லொழியக் கொள்க.

(வ - று.) கிள்ளை சுகம் தத்தை என்றற்றொடக்கத்தன ஒரு பொருள்குறித்த பலபெயர்த்திரிசொல்.

" யானையும் கோழியுஞ் சங்கும் வாரணம் " (திவாகரம்)

என்றற்றொடக்கத்தன பலபொருள் குறித்த ஒருபெயர்த்திரிசொல். படர்ந்தான் சென்றான் என்றற்றொடக்கத்தன ஒரு பொருள் குறித்த பலவினைத்திரிசொல். வரைந்தான் ஆர்த்தான் என்றற்றொடக்கத்தன பலபொருள் குறித்த ஒருவினைத் திரிசொல். சேறும் வருதும் என்றற்றொடக்கத்துவிகுதிகள் ஒருபொருள் குறித்த பல இடைத்திரிசொல்.

" கொல்லே யைய மசைநிலைக் கூற்றே " (435)

என்றற்றொடக்கத்தன பலபொருள்குறித்த ஓரிடைத்திரிசொல்.

" சால வுறுதவ நனிகூர் கழிமிகல் " (456)

என்றற்றொடக்கத்தன ஒருபொருள்குறித்த பலவுரித்திரிசொல்.

" கடியென் கிளவி காப்பே கூர்மை " (457)

1. செந்தமிழ்நிலம் வையையாற்றின் வடக்கெனக் கூறுபவர் மயிலைநாதர்; தொல். எச்ச. 2-ஆம் சூத்திரவுரையில் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் என்பவர்களும், யாப்பருங்கலக்காரிகை உரையாசிரியரும், இங்ஙனமே எழுதியுள்ளார்.

என்றற்றொடக்கத்தன பலபொருள்குறித்த ஒருரித்திரிசொல். திசைச்சொல்லும் வடசொல்லும் ஒருபொருள் பலபொருளென்னும் விகற்பத்தான் வந்தனவேற் காண்க.

ஈண்டு இயற்சொற்றிரிசொல்லென்றது அவற்றின் எழுத்துக்கள் திரியாமையும் [1]திரிந்தமையும் கருதியன்று; வானரத்தின் முகம் தன் இயல்பாயிருந்ததேனும் நரர்முகச்செவ்விக்கு மறுதலைப் பட்டமைகருதி [2]வலிமுகமெனப்பட்டதுபோலக் கல்வி யேதுவானன்றி இயல்பாகத் தம்பொருளை உணரநிற்றலின், இயற்சொல்லென்றும் அவ்வியல்பிற்கு மறுதலைப்பட்டுக் கல்வி யேதுவால் தம்பொருளை உணரநிற்றலின் திரிசொல்லென்றுங் கூறப்பட்டன வென்க. (15)

## திசைச்சொல்

273. செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்
ஒன்பதிற் றிரண்டினிற் றமிழொழி நிலத்தினும்
தங்குறிப் பினவே திசைச்சொ லென்ப.

எ - ன், நிறுத்தமுறையானே இயற்சொல் திரிசொல் என்றவற்றின் பின்னின்ற அவ்வியல்பினவாய பெயர் வினை இடையுரிகளை இவ்வியலுள் இடுகுறிகாரணமென்னும் (275) சூத்திரந்தொட்டு இவ்வதிகாரத்து ஐந்தியலானும் உணர்த்த நிறீஇ ஒழிந்த திசைவடசொற்களுள் திசைச்சொல்லாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செந்தமிழ்நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு கொடுந்தமிழ்நிலத்தின்கண்ணும் பதினெண்மொழியுள் தமிழும் மேற்கூறும் வடசொற்குக் காரணமாகிய ஆரியமும் ஒழிந்த பதினறுமொழியும் வழங்கும் பதினறுநிலத்தின்கண்ணுமுள்ளோர் தம்குறிப்பினவாய்ச் செந்தமிழோர் குறிப்பினவன்றி அத்திசைகளினின்றும் செந்தமிழ் நிலத்து வந்து வழங்குவன திசைச்சொல்லென்று கூறுவர் புலவர் எ - று.

செந்தமிழென்றமையாற் கொடுந்தமிழென்பதூஉம், ஆரியத்தின் காரியமாய வடசொல்லை வேறுகூறுதலின், [3]தமிழொழிநிலம் பதினறென்பதூஉம், கற்றோரையும் மற்றோரையுந் தழீஇத்தங்குறிப்

1. இக்கொள்கையையுடையவர்கள் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியரென்பவர்கள்.

2. வலிமுகம் - மாறுபட்டமுகம்; "இவ்வாவியி லிவைசெங்குவளைகளேயிவை யிவைநின், மைவார்திரு நயனங்களின் வலிபட்டன மிகவே" தக்க. 317, விசேடக்குறிப்பு.

3. மயிலைநாதர் தமிழொழிநிலம் பதினேழென்பர்.

பினவெனப் பொதுமையிற்கூறினமையின் இத்திசைச்சொற்கள் அந்நிலத்தோர்க்கு இயற்சொல்லாய்ச் செந்தமிழோர்க்கு அவ்வாறு குறிக்கப்படாத திரிசொல்லாய் நிற்குமென்பதூஉம் பெற்றும்.

கொடுந்தமிழ்நிலம் பன்னிரண்டாவன :—

" தென்பாண்டி குட்டங் குடங்கற்கா வேண்பூழி
பன்றி யருவா வதன்வடக்கு - நன்றாய
சீத மலாடு புனனாடு செந்தமிழ்சேர்
ஏதமில் *பன்னிருநாட் டெண் "

என்பனவாம். இவற்றுள் செந்தமிழ்ப்பாண்டிநாட்டின் தென்றிசைக்கண்ணதாகிய தென்பாண்டிநாட்டார் ஆவினைப் பெற்றமென்றும் சோற்றைச் சொன்றியென்றும், குட்டநாட்டார் தாயைத் தள்ளையென்றும், குடநாட்டார் தந்தையை [1]அச்சனென்றும், கற்கா நாட்டார் வஞ்சரைக் [2]கையரென்றும், வேணாட்டார் தோட்டத்தைக் கிழாரென்றும், [3]பூழிநாட்டார் சிறுகுளத்தைப் பாழியென்றும், [4]பன்றி [5]அருவாநாட்டார் செறுவைச் செய்யென்றும் சிறுகுளத்தைக் கேணியென்றும், அருவாவடதலையார் புளியை எகினென்றும், சீதநாட்டார் தோழனை எலுவனென்றும் தோழியை இகுளையென்றும் வழங்குவர்; இவை முதலியனவும் தமிழொழிந்த பதினேழு நிலத்து மொழிகளுள் ஏற்பனவும் செந்தமிழொடு விரவிவருதல் காண்க. (16)

## வடசொல்

274. பொதுவெழுத் தானுஞ் சிறப்பெழுத் தானும்
ஈரெழுத் தானு மியைவன வடசொல்.

எ - ன், வடசொல்லாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

*பி - ம். ' பன்னிருநாடென் '

1. அச்சன் : அத்தனென்பதன் சிதைவு; மலையாளமொழியில் இச் சொல் வழங்கிவருகின்றது.

2. கையரென்பது மலைநாட்டுச் சொல்லென்பர் தக்கயாகப்பரணி உரையாசிரியர்; தாழிசை, 212.

3. கொங்குநாட்டினர் மலைமேலுள்ள சுனையைப் பாழியென்பர்.

4. பன்றிநாட்டாரும் அருவாநாட்டாருமெனக் கொள்க.

5. அருவாநாட்டார் : அருவாளர், ' வடுகரருவாளர் ' (தொல். கிளவி. சூ. 51, இளம். மேற்.) என்று ஒரு நாட்டாரின் பெயர் காணப்படுதலால் இப்பெயர் அருவாள் நாட்டாரென்று இருத்தல்வேண்டுமோ வென்று ஊகிக்கப்படுகின்றது.

(இ - ள்.) ஆரியத்திற்கும் தமிழிற்கும் பொதுவெழுத்தானும் ஆரியத்திற்கேயுரிய சிறப்பெழுத்துத்திரிந்தவெழுத்தானும் இவ் விரண்டினானும் செந்தமிழ்ச்சொல்லை ஒப்பனவாகி வடதிசைக்க ணின்றும் செந்தமிழ்நிலத்துவந்து வழங்குவனவடசொல்லாம் எ-று.

பதவியலுள், "பொதுவெழுத் தொழிந்த நாலேழுந் திரியும்" (146) எனக்கூறினமையிற் சிறப்பெழுத்துத் திரிந்தவெழுத்தானு மென்பது பெற்றாம்.

அவ்வடசொற்கு ஆரியச்சிறப்பெழுத்துத் திரிந்த எழுத்து ஆதிகாரணமாயும் அச்சிறப்பெழுத்து அநாதிகாரணமாயும் நிற்ற லிற் சிறப்பெழுத்தானுமென்றார். அது பருத்தியானியன்றபடாம் என்றாற்போலும்.

ஆரியச்சொற்சிதைந்து வடசொல்லாதலின் இவை சொல்லாற் செந்தமிழ்ச்சொல்லை ஒவ்வாமைகருதி எழுத்தானெக்கு மென்பார் எழுத்தான் இயைவனவென்றார்.

(வ - று.) அமலம், உருவம், கமலம், காரணம், காரியமென்றற் றொடக்கத்தன பொதுவெழுத்தான் இயைந்தன. சுகி, போகி, சுத்தி என்றற்றொடக்கத்தன சிறப்பெழுத்தான் இயைந்தன. அரன், அரி, கடினம், சலம் என்றற்றொடக்கத்தன ஈரெழுத்தானும் இயைந்தன.

அரனென்புழித் தமிழின் சிறப்பாகிய னகரவீறு பதவியலுள், "உவ்வுமாம்பிற" (149) என்றமையால் அமைந்தமையின், ஈண்டு விதந்துகூறாராயினர். பிறவுமன்ன.

"வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே" (எச்ச. 5)
"சிதைந்தன வரினு மியைந்தன வரையார்" (எச்ச. 6)

என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாருமென்க. (17)

## பெயர்ச்சொல்

275. இடுகுறி காரண மரபோ டாக்கம்
தொடர்ந்து தொழிலல காலந் தோற்றா
வேற்றுமைக் கிடனாய்த் திணைபா லிடத்தொன்
றேற்பவும் பொதுவு மாவன பெயரே.

எ - ன், இவ்வதிகாரத்து ஐந்தியலாலும் உணர்த்த நிறீஇய பெயர் வினை இடை உரி யென்னும் நான்கனுட் பெயரிலக்கணம் உணர்த்துவான்றொடங்கி அதன் பொதுவிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இடுகுறியும் காரணக்குறியும் மரபினையும் ஆக்கப் பாட்டினையுந் தொடர்ந்து வினையாலணையும் காரணக்குறி யொன்றும் காலந்தோற்ற அல்லன காலந்தோற்றுவாய் எட்டு வேற்றுமையும் சார்தற்கிடமாய் இருதிணை ஐம்பால் மூவிடத்து ஒன்றனை ஏற்பவும் பலவற்றினை ஏற்பவுமாய்வருவன, பெயர்களாம் எ - று.

(வ - று.) ஆண், பெண், மரம், தெங்கு, கமுகு என்றற்றொடக்கத்தன இடுகுறி மரபு தொடர்ந்துவந்தன. அவன், அவள், காளை, [1]காரிகை, விலங்கு, பறவை என்றற்றொடக்கத்தன காரணக்குறி மரபுதொடர்ந்து வந்தன.

“ மானவேன் முட்டைக்கு மாறாய தெவ்வர்போம்
கானவேன் முட்டைக்குங் காடு ” (தமிழ் நாவலர் சரிதை, 60)

என்னும் பொய்யாமொழிப் புலவர் பாடலில், வேட்டுக்குமரன்றன் பெயர் முட்டையென்றற்றொடக்கத்தன இடுகுறிஆக்கந் தொடர்ந்தன. பொன்னன், பூணன்,

“ மலைமகண் மகனே மாற்றோர் கூற்றே ” (முருகு. 257)

என்றற்றொடக்கத்தன காரணக்குறி ஆக்கந் தொடர்ந்தன. நடந்தவனை, நடந்தானை என்றற்றொடக்கத்தன வினையாலணையுங் காரணக்குறி காலங் காட்டின. ஏனை இலக்கணங்கள் முன்னும் பின்னும் பெறப்படுதலின் ஈண்டுக் காட்டிற்றிலம்.

ஆண் பெண் முதலிய இடுகுறிப்பெயரும், அவன் அவள் முதலிய காரணப்பெயரும் இடையே ஒருவரான் ஆக்கப்பட்டனவன்றி அவ்விலக்கணங்களோடு தோன்றிய பொருள்கட் கெல்லாம் தோன்றுதொட்டு மரபுபற்றி வருதலானும் முட்டையென்றற்றொடக்கத்து இடுகுறிப்பெயரும் பொன்னனென்றற்றொடக்கத்துக் காரணப்பெயரும் மரபுபோலத் தோன்றுதொட்டனவன்றி அப்பொருள்கட்கு இடையே ஒருவரான் ஆக்கப்பட்டு வருதலானும் இடுகுறி காரணமிரண்டும் மரபையும் ஆக்கத்தையுந் தொடர்ந்தென்றார். [2]இதற்கு இவ்வாறன்றி இடுகுறிப்பெயர், காரணப்பெயரிரண்டும் ஒழிய மரபுப்பெயர் தெங்கு, கடுவென்னும் ஆகுபெயரெனப் பொருள்கொள்வாருமுளர். எல்லாப் பெயரும் இடுகுறிப்பெயர் காரணப்பெயரென்னும் இரண்டாய் அடங்குவதன்றி வேறின்மையானும்,

“ இடுகுறி காரணப் பெயர்பொதுச் சிறப்பின ” (62)

என வரையறைகூறிப் போந்தமையானும் அது பொருந்தாதென்க. (18)

---

1. காரிகை - அழகினையுடையாள். 2. மரபும் ஆக்கமும் இடுகுறிப் பெயர் காரணப்பெயர்களைச் சார்ந்தன வல்ல, வேறு என்பர் மயிலைநாதர்.

## ஆண்பாற் பெயர்

276. அவற்றுள்,
கிளையெண் குழூஉமுதற் பல்பொரு டிணைதேம்
ஊர்வா னகம்புற முதல நிலன்யாண்
டிருது மதிநா ளாதிக் காலம்
தோள்குழன் மார்புகண் காது முதலுறுப்
பளவறி வொப்பு வடிவு நிறங்கதி
சாதி குடிசிறப் பாதிப் பல்குணம்
ஓத லீத லாதிப் பல்வினை
இவையடை சுட்டு வினாப்பிற மற்றோ
டுற்றனவ் வீறு நம்பி யாடூஉ
விடலை கோவேள் *குரிசி லேறன்றல்
இன்னன வாண்பெய ராகு மென்ப.

எ - ன், மேல் திணைபாலிடத்து ஒன்று ஏற்பவுமென்றவற்றுள் உயர்திணை ஆண்பாற்குரிய பெயர்கள் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற் பெயரேயென்றவற்றுள் இங்ஙனம் பகுத்துக் கூறிய பொருளாதியாறிேனாடும் இவற்றையடையும் சுட்டினோடும் வினாவினோடும் பிறவென்பதனோடும் மற்றென்பதனோடும் பொருந்திய னகரவீற்றுப் பெயர்களும் நம்பி முதலாக எடுத்தோதிய பெயர்களும் இவைபோல்வன பிறவும் உயர்திணை யாண்பாற் பெயர்களாமென்று சொல்லுவர் புலவர் எ - று.

"தநநு எம்முதன் மகர மிடையிட்டு
னளரவா மீற்றன சுற்றப் பெயரே" (சூ. 275, மயிலை. மேற்.)

என்பவாகலிற் கிளைப்பெயரறிக.

சுட்டு முதலிய நான்கிடைச் சொற்கும் தமக்கென ஒரு பொருளின்றிப் பொருளாதியாறனுள் யாதானுமொன்றைக் கூறுவான் குறிப்பின் வழியடைந்து உணர்த்தலின், இவை யடைசுட்டு வினாப் பிறமற்றென்றார்; "வினாச்சுட்டுடனும் வேறுமாம் பொருளாதி" (279) என்பதும் அது.

(வ - று.) தமன், நமன், நுமன், எமன் என்பன கிளையான்வரு பெயர்; ஒருவனென்பது எண்ணான் வருபெயர்; அவையத்தான் அத்திகோசத்தானென்பன குழூஉவான் வருபெயர்; பொருளான்,

---

(*பி - ம்.) 'குருசில்'

பொன்னன், முடியனென்றற்றொடக்கத்தன முதலென்பவற்றான் வருபெயர்; இவை பொருளான் வருபெயர்.

வெற்பன் பொருப்பன் சிலம்பன் எ-ம், மறவன் எயினன் எ-ம், இடையன் ஆயன் எ-ம், ஊரன் மகிழ்நன் எ-ம், சேர்ப்பன் துறைவன் எ-ம் வருவன குறிஞ்சி முதலிய ஐந்திணையானும் வருபெயர்; சோழியன், கொங்கனென்பன தேயத்தான்வருபெயர்; கருவூரான் மருவூரானென்பன ஊரான் வருபெயர்; வானத்தான், அகத்தான், புறத்தானென்பன வான் முதலிய மூன்றானும் வருபெயர்; மண்ணகத்தான், பாதலத்தான் என்றற்றொடக்கத்தன முதலவென்பவற்றான் வருபெயர்; இவை இடத்தான்வருபெயர்.

மூவாட்டையான், வேனிலான், தையான், [1]ஆதிரையானென்பன யாண்டுமுதலிய நான்கானும் வருபெயர்; நெருநலான், காலையான், மாலையானென்றற் றொடக்கத்தன ஆதியென்பவற்றான் வருபெயர்; இவை காலத்தான்வருபெயர்.

திணிதோளன், செங்குஞ்சியன், வரைமார்பன், செங்கண்ணன், குழைக்காதனென்பன தோள்முதலிய ஐந்தானும் வருபெயர்; குறுந்தாளன், நெடுங்கையனென்றற்றொடக்கத்தன முதலென்பவற்றான் வருபெயர்; இவை சினையான்வருபெயர்.

பெரியன், புலவன், பொன்னொப்பான், கூனன், கரியன் மானிடவன், பார்ப்பான், சேரன், ஆசிரியனென்பன அளவு முதலிய ஒன்பதானும் வருபெயர்; நல்லன் தீயனென்றற்றொடக்கத்தன ஆதியென்றவற்றான்வருபெயர்; இவை குணத்தான்வருபெயர்.

ஓதுவான், ஈவானென்பன [2]அவ்விரண்டானும் வருபெயர்; கணக்கன், *பிணக்கனென்றற்றொடக்கத்தன ஆதியென்றவற்றான் வருபெயர்; இவை தொழிலான்வருபெயர்.

அவன், எவன், யாவன், ஏவன், பிறன், மற்றையனென்பன சுட்டு முதலிய நான்கானும் வருபெயர். நம்பிமுதலிய பெயர்களேழும் உரைக்கிடையிற் காண்க.

இன்னனவென்றமையான், வில்லி, வாளி, [3]சென்னி, கிள்ளி என்றற்றொடக்கத்து உயர்திணை ஆண்பாற்பொருள் குறித்து வருவனவெல்லாம் கொள்க.

---

(பி-ம்.) *'மணக்கன்'

1. ஆதிரையான்-சிவபெருமான்; ஆதிரை-திருவாதிரை.

2. அவ்விரண்டென்றது சூத்திரத்திலுள்ள ஓதல் ஈதலென்பனவற்றை.

3. சென்னி, கிள்ளி - சோழன்.

'இவையடை சுட்டு விஞுப்பிறமற்ருே, டுற்ற னவ்வீறு' என்பவற்றிற்கு அப்பொருளன், இப்பொருளன், உப்பொருளன், எப்பொருளன், பிறபொருளன், மற்றப்பொருளனென [1]உதாரணங்காட்டுவாருமுளர். சுட்டு முதலிய நான்கிஞேடும் னகரவீறு உறுதலின்மையான் அவற்றிற்கு அவை காட்டாகாவென்க. (19)

## பெண்பாற் பெயர்

277. கிளைமுத லாகக் கிளந்த பொருள்களுள்
ளவ்வொற் றிகரக் கேற்ற வீற்றவும்
தோழி செவிலி மகடூஉ நங்கை
தையலோ டின்னன பெண்பாற் பெயரே.

எ - ன், உயர்திணைப் பெண்பாற்குரிய பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேலைச்சூத்திரத்துக் கிளைமுதலாகப் பகுத்துக் கூறிய அறுவகைப் பொருள்களுள் ளகரவொற்றும் இகரவுயிரும் உறுதற்கேற்ற அவ்விரண்டீற்றவாய்வரும் பெயர்களும், தோழி முதலாக எடுத்தோதிய பெயர்களும், இவற்றுடனே இவைபோல்வன பிறவும் உயர்திணைப் பெண்பாற் பெயர்களாம் எ - று.

(வ - று.) தமள் நமள் நுமள் எமள் அவையத்தாள் அத்திகோசத்தாள் பொருளாள் பொன்னுள் எ - ம், ஒருத்தி அவையத்தி அத்திகோசத்தி பொன்னி எ - ம் பொருளாதி ஆறனுள்ளும் ளகரவொற்றிற்கும் இகரவுயிர்க்கும் ஏற்பன அறிந்து ஒட்டிக் கொள்க.

ஏற்றவீற்றவென்றமையாற் கிளைப்பெயர் இகரவீறு ஏலாமையும் எண்ணுப்பெயர் ளகரவொற்றீறு ஏலாமையும் காண்க. பிறவுமன்ன. தோழி முதலிய ஐந்து பெயரும் உரைக்கிடையிற் காண்க.

இன்னனவென்றமையான் [2]இகுளை, மாது, அங்கனை என்றற்றொடக்கத்து உயர்திணைப்பெண்பால் குறித்து வருவன வெல்லாம் கொள்க. (20)

---

1. மயிலைநாதர் இக்கருத்துப் புலப்பட உதாரணங்காட்டுவர் : நன். சூ. 275, உரையைப் பார்க்க; இளம்பூரணரும், சேஞுவரையரும் நச்சினுர்க்கினியரும் இக்கொள்கையை உடையவர்களென்று தெரிகின்றது ; தொல். பெயர். சூ. 9, முதலியவற்றின் உரைகளைப் பார்க்க.

2. இகுளை - தோழி.

## பலர்பாற் பெயர்

278. கிளந்த கிளைமுத லுற்றரவ் வீற்றவும்
கள்ளொ னீற்றி னேற்பவும் பிறவும்
பல்லோர் பெயரின் பகுதி யாகும்.

எ - ன், பலர்பாற்குரிய பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற் கூறப்பட்ட கிளைமுதலிய அறுவகைப் பொருளையும் பொருந்திய ரகரவொற்றீற்றுப் பெயர்களும் கள் என்னும் விகுதியை ஈறாகவுடைய பெயர்களுள் ஈண்டைக்குப் பொருந்திவருவனவும் இவைபோல்வன பிறவும் பலர்பாலின் பெயர்களாம் எ - று.

கள்ளீறு பகுதிப்பொருள்விகுதியாயும் விகுதிமேல் விகுதி யாயும் வருதலின் உம்மை இடையிட்டு வேறோதினர்.

கள்ளொனீற்றினேற்பவுமென்றார், அஃறிணைக்கண்ணும் கள்ளீற்றுப்பெயர் வருதலின்.

பல்லோர்பகுதியின் பெயராகுமெனக்கூட்டுக. பகுதியென்பது பால் ; தொகுப்பு தொகுதியென நின்றாற்போலப் பகுப்பு பகுதியென நின்றது; பகுப்பு பல்லோர் பெயரின் பகுப்பாகு மெனினும் அமையும்.

(வ - று.) தமர், நமர், நுமர், எமர், இருவர், மூவரெனப் பொருளாதி ஆறனோடும் ஒட்டுக. கோக்கள், மனுக்கள் என்றற் றொடக்கத்தன பகுதிப்பொருள் விகுதியீற்றுப் பெயர்கள், தமர்கள், நமர்கள், அரசர்கள், அரசிகள், மறவர்கள், மறத்திகள் என்றற்றொடக்கத்தன விகுதிமேல் விகுதியீற்றுப் பெயர்கள். இவ் விகுதிமேல்விகுதி இடைச்சொல்லாதலின்,

"ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழாஅ" (398)

என்னுஞ் சூத்திரத்தாற் கூறும் வழுவமைதியாய்வந்தன.

பிறவுமென்றமையான் மாந்தர், மக்கள் என்றற்றொடக்கத் துப் பலர்பால் குறித்துவருவனவெல்லாங் கொள்க. (21)

## ஒன்றன்பாற் பெயர்

279. வினைச்சுட் டுடனும் வேறு மாம்பொருள்
ஆதி யுறுதுச் சுட்டணை யாய்தம்
ஒன்றனெண் ணின்னன வொன்றன் பெயரே.

எ - ன், அஃறிணை யொருமைப்பாற்குரிய பெயர் உணர்த் துதல் நுதலிற்று.

(இ - ள்.) வினாவின்கண்ணும் சுட்டின்கண்ணும் கரந்து அவற்றினுடனாயும் வினாவவும் சுட்டவும்படாது வேறாயும் வரும் பொருளாதியாறினையும் பொருந்திய துவ்விகுதியீற்றுப் பெயரும், சுட்டொடுகூடிய ஆய்தத்தைப் பொருந்திய துவ்விகுதியீற்றுப் பெயரும், ஒன்றென்னும் எண்ணுகுபெயரும், இவைபோல்வன பிறவும் அஃறிணையொருமைப் பெயராம் எ - று.

(வ - று.) எது யாது ஏது எ - ம், அது இது உது எ - ம், குழையது நிலத்தது மூலத்தது கோட்டது குறியது ஆடலது எ - ம், அஃது இஃது உஃது எ - ம், ஒன்று எ - ம் வரும்.

இன்னனவென்றமையால் பிறிது, மற்றையது என்றற்றொடக்கத்து அஃறிணையொருமைப்பொருள் குறித்துவருவனவெல்லாங் கொள்க.

சுட்டணையாய்தம், இப்பகுதிவிகுதிப்புணர்ச்சிக்கட் சந்திவகையான் வந்தது அன்மையின் இச்சுட்டுப்பெயர்கள் வேறோதப்பட்டன வென்பதூஉம், இவைபோல் எடுத்தோதாமையின் ஆய்தம் அணையாச் சுட்டுப்பெயர்களே வினாச்சுட்டுடனுமென்றவற்றுள் அமைந்து கிடந்தனவென்பதூஉம், வினாச்சுட்டுடனுமென்பதற்கு எக்குழையது, அக்குழையது என [1]உதாரணங்காட்டுவது பொருந்தா தென்பதூஉம் பெற்றாம். (22)

## பலவின்பாற் பெயர்

280. முன்ன ரவ்வொடு வருவை அவ்வும்
சுட்டிறு வவ்வுங் கள்ளிறு மொழியும்
ஒன்ற லெண்ணு முள்ள வில்ல
பல்ல சில்ல வுளவில பலசில
இன்னவும் பலவின் பெயரா கும்மே.

எ - ன், அஃறிணைப்பன்மைப்பாற்குரிய பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முன்னர்க்கூறிய வினாச்சுட்டுடனும் வேறுமாம் பொருளாதியாறனோடும் ஏற்றபெற்றிவரும் வகர ஐகார வீற்றுப் பெயர்களும் அகர வீற்றுப் பெயர்களும் வகரவொற்றீற்றுச் சுட்டுப் பெயர்களும் கள்ளென்னும் பகுதிப்பொருள் விகுதியிறுதியாகிய பெயர்களும் ஒன்றல்லாத இரண்டுமுதலிய எண்ணுகு பெயர்களும் உள்ளவென்பதுமுதலிய குறிப்புவினையாலணைந்த எட்டுப்பெயர் களும் இவைபோல்வன பிறவும் அஃறிணைப்பன்மைப் பெயர்களாம் எ - று.

1. இக்கருத்துத் தோன்ற உதாரணங்காட்டுவர் மயிலைநாதர்.

மேலைச்சூத்திரங்களுட் கூறியவாறே உறுதிகூருது வருவை யென்றதனால் ஏற்றபெற்றியென்பதூஉம், உள்ள இல்லமுதலிய பண்பொடுவரும் அகரவீற்றுப்பெயர்கள், 'முன்ன ரவ்வொடு வருவையவ்வும்' என்பவற்றுள் அடங்குதலிற் பின்னர்க்கூறிய உள்ள இல்லமுதலிய எட்டும் குறிப்புவினையாலணையும் பெய ரென்பதூஉம் பெற்றும்.

(வ - று.) எவை யாவை எ - ம், அவை இவை உவை எ - ம், நெடியவை கரியவை நல்லவை தீயவை உள்ளவை இல்லவை எ - ம், பொருள பொருளன அகத்த அகத்தன மூலத்த மூலத்தன கோட்ட கோட்டன கரிய கரியன உள்ள உள்ளன இல்ல இல்லன ஓதுவ ஓதுவன ஈவ ஈவன எ - ம், அவ் இவ் உவ் எ - ம், யானைகள் குதிரை கள் எ - ம், இரண்டு மூன்று பத்து நூறு ஆயிரம் எ - ம் வரும். உள்ள முதலிய எட்டும் உரைக்கிடையிற் காண்க.

இன்னவுமென்றமையான் யா, பிற, மற்றைய என்றற்றொடக் கத்து அஃறிணைப்பன்மைப்பொருள்குறித்து வருவனவெல்லாங் கொள்க. (23)

## பால்பகாவஃறிணைப் பெயர்

281. பால்பகா வஃறிணைப் பெயர்கள்பாற் பொதுமைய.

எ - ன், மேல் 'பொதுவுமாவனபெயரே' (275) என்றார், அவற் றுள் அஃறிணையிருபாற்குமுரிய பொதுப்பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அஃறிணைப்பெயர்களுள் இங்ஙனம் பால் பகுத்தலை ஒழிந்துநின்ற பெயர்களனைத்தும் அத்திணை இருபாற்குமுரிய பொதுப்பெயராம் எ - று.

(வ - று.) யானை வந்தது, யானை வந்தன ; குதிரை வந்தது, குதிரை வந்தன ; மரம் வளர்ந்தது, மரம் வளர்ந்தன ; கண் சிவந் தது, கண் சிவந்தன எனவரும்.

இச்சூத்திரம் திணைப்பொதுப்பெயரின்பிற்கூருது ஈண்டுக் கூறியது என்னையெனின், விளங்குதற்பொருட்டு ஒன்றின முடித்தல் தன்னினமுடித்தலென்னும் உத்தியாற் கூறப்பட்ட தென்க. (24)

## இருதிணைப் பொதுப்பெயர்

282. முதற்பெயர் நான்குஞ் சினைப்பெயர் நான்கும்
சினைமுதற் பெயரொரு நான்கு முறையிரண்டும்
தன்மை நான்கு முன்னிலை யைந்தும்
எல்லாந் தாந்தா னின்னன பொதுப்பெயர்.

எ - ன், இருதிணைக்கும் உரிய பொதுப்பெயர்களைத் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முதற்பெயர்முதலான ஒன்பதுகூற்றுப் பெயர்களும், இவைபோல்வனபிறவும் இருதிணைக்குமுரிய பொதுப் பெயர்களாம் எ - று.

பெயரென்பதனை முறைமுதலியவற்றிஞேடுங் கூட்டுக.

எல்லாமென்பதுமுதல் இன்னனவென்பதீருகநின்ற செவ்வெண்ணின் இறுதிக்கண் நான்கென்னுந்தொகையோடு உம்மை தொக்கன.

எல்லாம், தாம், தானென விதந்த மூன்றுபெயருமொழிய இன்னனவென்றமையால், சூரியனுதித்தான் சூரியனுதித்ததென ஒருபொருளையே உயர்திணைப்பொருளாக்கியும் அஃறிணைப்பொருளாக்கியும் கூறப்படும் பொதுப்பெயர் முதலியனவும், ஊமை வந்தான் ஊமைவந்தாளென உயர்திணையிருபாலையும் உணர்த்தும் பொதுப்பெயர் முதலியனவும், தன்மைமுன்னிலை வினையாலணையும் பெயரும் பிறவுங்கொள்க. முதற்பெயர் முதலாக முன்னிலைப்பெயரீருகக்கூறிய அறுவகைப்பெயர்கட்கும் உதாரணம் பின்வரும் தத்தம் வகைச்சூத்திரங்களுட் (283, 285, 287) காண்க.

உயர்திணைக்குச் சிறந்தபெயர் அஃறிணைக்கண் விரவியும் அஃறிணைக்குச் சிறந்தபெயர் உயர்திணைக்கண் விரவியும் வருதலின் இவற்றை விரவுப்பெயரென்றுங் கூறுப. அங்ஙனம் வருதல் காட்டும் உதாரணங்களுட் காண்க. (25)

283. ஆண்மை பெண்மை யொருமை பன்மையின்
ஆமந் நான்மைக ளாண்பெண் முறைப்பெயர்.

எ - ன், மேல் தொகுத்து உணர்த்தியவற்றுள் முதற்பெயர் முதல் முறைப்பெயரீருகக்கிடந்தவற்றை வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஆண்மை முதலிய இந்நான்குபாலுங் காரணமாக முற்கூறிய முதற்பெயர் சினைப்பெயர் சினைமுதற்பெயரென்னும் மூன்றும் ஒவ்வொன்றும் நந்நான்காம் ; ஆண்மை பெண்மையென்னும் இருபாலும் காரணமாக முறைப்பெயர் இரண்டாம் எ - று.

மேலைச்சூத்திரத்து (282) இரண்டென்பதனையும் இச்சூத்திரத்து ஆமென்பதனையுங்கூட்டி முறைப்பெயர் இரண்டாமென உரைத்துக் கொள்க.

உயர்திணைக்கேயுரிய பலர்பாலையும் அஃறிணைக்கேயுரிய ஒன்று பலவென்னும் இருபாலையுமொழித்து இருதிணைக்கும் பொதுவாகிய

ஆண்மை பெண்மை ஒருமை பன்மையென்னும் நான்குபாலினையும் இவற்றுள் முறைகூறுதற்குரிய ஆண்மை பெண்மை என்னும் இரு பாலினையும் காரணமாக இச்சூத்திரத்துட் கூறினர், இவற்றின் காரியங்களை இனத்தென்றறி பொருளாக மேலைச்சூத்திரத்துட் கூறியவாறு உய்த்துணர்தற்கென்க. எனவே ஆண்மைமுதற்பெயர் பெண்மைமுதற்பெயர் ஒருமைமுதற்பெயர் பன்மைமுதற்பெயர் எ - ம், ஆண்மைச்சினைப்பெயர் பெண்மைச்சினைப்பெயர் ஒருமைச் சினைப்பெயர் பன்மைச்சினைப்பெயர் எ - ம் ஆண்மைச் சினைமுதற் பெயர் பெண்மைச் சினைமுதற்பெயர் ஒருமைச் சினைமுதற்பெயர் பன்மைச் சினைமுதற்பெயர் எ - ம், ஆண்மைமுறைப்பெயர் பெண்மைமுறைப்பெயர் எ - ம் பெயர் பெறுமென்பதாயிற்று.

(வ - று.) சாத்தன், சாத்தி, கோதை, கோதைகள் : இவை முதற்பெயர் நான்கு. முடவன், முடத்தி, செவியிலி, செவியிலிகள் : இவை சினைப்பெயர் நான்கு. முடக்கொற்றன், முடக்கொற்றி, கொடும்புறமருதி, கொடும்புறமருதிகள் : இவை சினைமுதற் பெயர் நான்கு. தந்தை, தாய் : இவை முறைப்பெயரிரண்டு. கள் விகுதி அஃறிணைப்பன்மைக்குச் சிறந்ததாய் உயர்திணைப் பன்மைக் கண்ணும் விரவிவருதலின் ஒருமைப்பொதுப்பெயரோடு கள்விகுதி புணர்ந்ததுணையானே அவை பன்மைப் பொதுப் பெயராயின. (26)

284. அவற்றுள்,
ஒன்றே யிருதிணைத் தன்பா லேற்கும்.

எ - ன், திணைப்பொதுவாய் நின்ற பெயர்கள் பாற்பொதுவாய் நிற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முதற்பெயர்நான்கு முதலாகக் கூறப்படும் இருபத் தாறும் பிறவுமாகிய பொதுப்பெயர்களுள் ஒவ்வொன்று இருதிணைக் கண்ணும் தன்தன் பால்களை ஏற்கும் எ - று.

எனவே, ஆண்மைப்பொதுப்பெயர் உயர்திணையாண்பாலினை யும் அஃறிணையாண்பாலினையும், பெண்மைப்பொதுப்பெயர் உயர் திணைப் பெண்பாலினையும் அஃறிணைப்பெண்பாலினையும், ஒருமைப் பொதுப்பெயர் உயர்திணை ஆணொருமை பெண்ணொருமையினையும் அஃறிணையொருமையினையும், பன்மைப் பொதுப்பெயர் உயர் திணைப்பன்மையினையும் அஃறிணைப் பன்மையினையும் ஏற்கு மென்பதாயிற்று.

(வ - று.) சாத்தன் இவன் சாத்தன் இவ்வெருது எ - ம், சாத்தி இவள் சாத்தி இப்பசு எ - ம், கோதை இவன் கோதை

இவள் கோதை இது எ - ம், கோதைகள் இவர் கோதைகள் இவை எ - ம், தந்தை இவன் தந்தை இவ்வெருது தாய் இவள் தாய் இப்பசு எ - ம், யான் நம்பி யான் நங்கை யான்பூதம் எ - ம், யாம் மக்கள் யாம் பூதங்கள் எ - ம், நீ நம்பி நீ நங்கை நீ பூதம் எ - ம், நீயிர் மக்கள் நீயிர்பூதங்கள் எ - ம், அவரெல்லாம் அவையெல் லாம் எ - ம், அவர்தாம் அவைதாம் எ - ம், அவன்றன் அவள்தான் அதுதான் எ - ம் வரும். இவற்றுட் காட்டா தொழிந்தனவும் பிறவும் இவ்வாறே ஒட்டிக்காண்க.

ஆண்மைப்பொதுப்பெயர் பெண்மைப் பொதுப்பெயர்கட்கு ஆண்மக்கள் ஆண்விலங்கு, பெண்மக்கள் பெண்விலங்கு, காளை வந்தான் காளைவந்தது, மான்வந்தாள் மான் வந்தது என இக் காலத்துப் பயின்றுவருவன காட்டலுமொன்று. பிறவுமன்ன.

இனி, ஆசிரியர் தொல்காப்பியர்,

"பன்மை சுட்டிய வெல்லாப் பெயரும்
ஒன்றே பலவே யொருவ ரென்னும்
என்றிப் பாற்கு மோரன் னவ்வே" (பெயர். 28)

எனப் பன்மைப்பொதுப்பெயர்கள் ஐம்பாலுள் உயர்திணைப் பன் மைப்பாலொழிய ஏனை நாற்பாலினையும் ஏற்குமென்றராலோ வெனின், செஞ்ஞாயிறு என்றற்போலத் தன்னோடு இயைபின்மை நீக்கிய *விசேடணத்தான் விசேடிக்கப்பட்டனவன்றிச் செந்தாமரை யென்றற்போலப் பிறிதோடு இயைபுநீக்கிய விசேடணத்தான் விசே டிக்கப்பட்டனவாகி ஆண்மைப்பொதுப்பெயர் பெண்மைப்பொதுப் பெயரென்றும், ஒருமைப்பொதுப்பெயர் பன்மைப் பொதுப்பெய ரென்றும் இனச்சுட்டுளவாய் வருதலின் இவற்றுட் பன்மைப் பொதுப்பெயர் பன்மையை யொழிதலும் ஒருமையையேற்றலும் பொருந்தாவென்பது கருதி, மறுத்தலென்னும் மதம்படத் தன் பாலேற்குமென இவ்வாசிரியர் கூறினர்போலும். பன்மைப் பொதுப்பெயருட் பன்மையென்பது பிறிதோடியைபுநீக்கிய விசேட ணமன்றெனத் தோன்றியவாறே விசேடணவிலக்கணஞ்சிதைத்து [1]இடர்ப்பட்டு உரை கூறுவாருமுளர்; அதனைத் தோன்றக்கூறிற் பெருகும். அவ்வாசிரியர் கூறியவாறே பன்மைப் பொதுப் பெயர்க்கு யானை வந்தது, யானை வந்தன, யானை வந்தான், யானை வந்தாளென [2]உதாரணங் காட்டினருளராலோவெனின், யானை

(பி - ம்.) *'விசேடத்தான்'

1. இடர்ப்பட்டு உரைகூறுபவர் சேனவரையரும், நச்சினர்க்கினி யரும். 2. உதாரணங்காட்டியவர் மயிலைநாதர்; இளம்பூரணரும், சேனவரையரும், நச்சினர்க்கினியரும் இவ்வாறே காட்டினர்; தொல்.

யென்னும் பால்பகாவஃறிணைப் பெயர்க்குக் கள்விகுதியின்மையின் அஃறிணை ஒருமைக்கே சிறந்ததாய் அதன் பன்மைக்கண்ணும் விரவி ஆகுபெயராய் உயர்திணை ஆணொருமை பெண்ணொருமை யினும் விரவுமாதலின் முதற்பெயர் (282) என்னுஞ் சூத்திரத்து இன்னன வென்றமையான் அமைந்ததன்றிப் பன்மைப்பொதுப் பெயராகாவென்று உணர்க. (27)

## தன்மை முன்னிலை படர்க்கைப் பெயர்கள்

285. தன்மை யான்நான் யாம்நாம் முன்னிலை
எல்லீர் நீயிர் நீவிர் நீர்நீ
அல்லன படர்க்கை யெல்லா மெனல்பொது.

எ - ன், தன்மை நான்கு முன்னிலையைந் தென்றூர் (282), அவையிவை யென்பதூஉம், இடத்து ஒன்றேற்பவும் பொதுவுமென் றூர் (275) அவையிவை யென்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தன்மைப்பெயர் நான்காவன : யான், நான், யாம் நாமென்பனவாம் ; முன்னிலைப் பெயரைந்தாவன : [1]எல்லீர், நீயிர், நீவிர், நீர், நீ என்பனவாம் ; திணைபாலுள் ஒன்றற்கு ஏற்பவும் பொதுவுமாகிய பெயர்களுள் இவ்விரண்டிடத்து ஒன்பது பெயரு மல்லாத பெயர்களனைத்தும் படர்க்கையிடத்துக்கு உரியவாம் : அவற்றுள், எல்லாமென்னும் பெயரொன்றும் மூவிடத்திற்கும் உரித் தாம் எ - று.

எல்லாமென்னும் பெயர் மூவிடத்தும் வருமாறு : யாமெல்லாம் நீயிரெல்லாம், அவரெல்லாம், அவையெல்லாம் என வரும்.

இத்தன்மை முன்னிலைப் பெயர்களை உரைத்தலும் கேட்டலு மில்லா அஃறிணைக்கண் இவ்வொன்பது பெயரும் விரவிப் பொதுப் பெயராமாறு என்னையெனின்,

“ கேட்குந போலவுங் கிளக்குந போலவும்
இயங்குந போலவு மியற்றுந போலவும்
அஃறிணை மருங்கினு மறையப் படுமே ” (409)

என்பது [2]விதியாகலானும் பேய் பூதங்கள் இவற்றையுரைத்தலும் கேட்டலுமுள்ளவாதலானும் தன்மை முன்னிலை இருகூற்று ஒன்

---

பெயர். சூ. 28, உரை. இவ்வுதாரணங்கள் பொருந்தாவென்று இராமா நுசகவிராயர் விளக்கியுள்ளார்.

1. “ எல்லீரு முறங்குதிரோ யானழைத்தல் கேளீரோ ” கம்ப. சூர்ப்பநகைப். 113

2. புனைந்துரை வகையால் வழுவமைதி யென்பர் சிவஞான முனிவர்.

பது பெயரும் பொதுப் பெயரெனப்பட்டனவென்க. மேல்வரும் தன்மை முன்னிலை வினைகளும் வினையாலணையும் பெயர்களும் அன்ன. (28)

286. வினையின் பெயரே படர்க்கை வினையா
லணையும் பெயரே யாண்டு மாகும்.

எ - ன், சில வினையின் பெயர்க்கு அல்லன படர்க்கை (285) யென்பதனுன் எய்திய இடம் யாண்டுமாகு மென்பதனுன் இகந்து படாமற் படர்க்கை யென்பதனுற் காத்தலும், வினையாலணையும் பெயர்க்கு அதனை விலக்கி இடம் வகுத்தலும் நுதலிற்று.

(இ - ள்.) யானுணல், நீயுணல், அவனுணலென மூவிடத்து வினையாயினும் இவ்வுணலென்றற்றொடக்கத்து வினையின் பெயர் படர்க்கைக்கே உரியவாம். வினையாலணையும் பெயர் வினையின் பெயர்போற் படர்க்கைக்கே யுரியவாகாது உண்டேனை, உண்டாயை, உண்டானை எனத் தனித்தனி மூவிடத்திற்கும் உரியவாம் எ - று.

யானுண்டேன், நீயுண்டாய், அவனுண்டானென இடத்தான் ஒன்றுபடநின்ற நிலைமொழி வருமொழிபோல் அம்மூவிடமுற்றின் கண் தொழில் பயனிலையாகி யானுணல், நீயுணல், அவனுணலென ஒன்றுபட நிற்பனவற்றிற்கன்றி எனதுணல், நினதுணல் அவனதுணலென்றும், உணலென்றும் வேறுபட்டு நிற்கும் வினையின் பெயர்கட்கு எய்திய இடம் இகந்துபடுதல் இன்றெனவுணர்க.

இவ்வாறன்றி வினையின் பெயரே படர்க்கை யென்பதற்கு வினையின் பெயரனைத்தும் படர்க்கையெனப் [1]பொருள்கொள்ளிற் கூறியது கூறலாம்; அது பொருந்தாதென்க. (29)

287. தான்யான் நான்நீ யொருமை பன்மைதாம்
யாம்நாம் எலாமெலீர் நீயிர்நீர் நீவிர்.

எ - ன், இப்பன்னிரண்டு பொதுப் பெயர்களும் இருதிணைக் கும் பொதுவாகிய ஆண்மை பெண்மை ஒருமை பன்மையென்னும் நான்கு பொதுப்பால்களுள் இப்பாலுள் அமைந்து கிடந்தனவென் பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தான் யான் நான் நீ என்னும் நான்கும் [2]இருதிணை முக்கூற்று ஒருமைப் பெயராம்; தாம் யாம் நாம் எல்லாம் எல்லீர்

---

1. பொருள் கொள்பவர் மயிலைநாதர்; இ - வி. உரையாசிரியர் கொள்கையுமிதுவே; சூ. 188, உரை.

2. இருதிணைமுக்கூற்று ஒருமை - உயர்திணை ஆண்பால் பெண் பாலும் அஃறிணை ஒன்றன்பாலும்.

நீயிர் நீர் நீவிர் என்னுமெட்டும் [1]இருதிணை இருகூற்றுப் பன்மைப் பெயராம் எ - று.

இதனை,

"அவற்றுள், ஒன்றே யிருதிணைத் தன்பா லேற்கும்" (284)

என்னுஞ் சூத்திரத்தின்முற் கூறுது ஈண்டுக் கூறியது என்னை யெனின், தன்மை முன்னிலைப்பெயர்களின் வகையுணர்ந்தன்றி ஒருமைபன்மை தோன்றுமையின் ஈண்டுக்கூறி, அவற்றின்பின் நின்றனவாகலின் எல்லாம் தாம் தான் என்பனவற்றிற்கும் ஈண்டு ஒருமை பன்மை உடன் கூறினுரென்க. (30)

288. ஒருவ னொருத்திப் பெயர்மே லெண்ணில.

எ - ன், எண்ணுன்வரும் உயர்திணைப்பெயர்க்கு ஆவதொரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எண்ணுன் உயர்திணையாண்பாற் பெயரும் பெண் பாற்பெயரும் வருங்காலத்து ஒன்றென்னுமெண்ணுனே ஒருவன் ஒருத்தியென வருவனவன்றி இவற்றின்மேல் இரண்டு முதலிய எண்களான் இப்பெயர்கள் வருவன இலவாம் எ - று.

இருவன், இருத்தி என்றற்றொடக்கத்தனவாகிவரிற் பன்மைப் பகுதியோடு ஒருமைவிகுதி புணர்ந்து பால்வழுவாமாதலின், எண் ணிலவென்றுர். (31)

289. ஒருவ ரென்ப துயரிரு பாற்றாய்ப்
பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) ஒருவரெனவழங்குஞ்சொல் உயர்திணையாண்பால் பெண்பாலிரண்டற்கும் பொதுவாய் அத்திணைப்பன்மை வாய் பாட்டு வினையைக்கொண்டு முடியும் பாங்கினையுடைத்தென்று சொல்லுவர் புலவர் எ - று.

ஆடவருள் ஒருவர் அறத்தின்வழி நிற்பார், ஒருவர் நில்லார்; பெண்டிருள் ஒருவர் கொழுநன்வழி நிற்பார், ஒருவர் நில்லார் எ - ம்,

"யாஅ ரொருவ ருலகத்தோர் சொல்லில்லார்" (நாலடி. 119, பி - ம்.) எனவும் வரும்.

இவ்வொருவரென்னுஞ்சொல், பொதுவியலுட் (379, உரை) கூறும்உவப்பு உயர்வு முதலியவற்றுன்வரும் ஒருவரென்னுஞ்சொல்

1. இருதிணை இருகூற்று - உயர்திணையில் வரும் பலர்பாலும் அஃறி ணையில் வரும் பலவின்பாலும்.

லன்றித் தன்னியல்பாய் வந்ததாகலின் ஈண்டுக் கூறப்பட்டதென் றுணர்க. இச்சொல்லின்கட் பகுதிக்கேற்ப இருபாற்கு‍ுயென்றும், விகுதிக்கேற்பப் பன்மைவினைகொளுமென்றும், உயர்திணை முப் பாலுட் பன்மையைப் பின்விதத்தலின் ஆண்பெண்ணென விதவாது உயரிருபாற்குயென்றும், உயரென முன்விதத்தலின் உயர் திணைப்பன்மையென விதவாது பன்மை யென்றும், ஒருவர் வந்தார் ஒருவரவரென வினையும் பெயருங்கொள வருவது உவப்பு உயர்வு முதலியவற்றான் வருவதாம், இங்ஙனம் தன்னியல்பாய்வரும் ஒருவ ரென்பது வினையும் வினைக்குறிப்புமே கொள்ளுமென்பார் பெயரை யொழித்து வினைகொளுமென்றும், இச்சொல் ஒருமைப் பகுதியொடு பன்மைவிகுதி மயங்கிப் பால்வழுவாய் நின்றதேனும் தன்னியல் பாய் மயங்கி நின்றமையின் வழாநிலை போலு மென்பதூஉம் பன்மைவினையென்றது சொன்மாத்திரையிற் பன்மை வினையன்றிப் பொருண் மாத்திரையின் ஒருமைவினையாமாதலின் இப்பய னிலையைப் ஒருவரென்னுஞ் சொற்கொள்ளுதல் வழுவன்றென் பதூஉந் தோன்றப் பாங்கிற்றென்றும், இங்ஙனமாதல் சான்றோர்க்கு ஒப்பமுடிந்ததென்பார் என்பவென்றும் கூறினர். (32)

## ஆகுபெயர்

290. பொருண்முதலாறோ டளவைசொற் றானி
கருவி காரியங் கருத்த னாதியுள்
ஒன்றன் பெயரா னதற்கியை பிறிதைத்
தொன்முறை யுரைப்பன வாகு பெயரே.

எ - ன், மேற்கூறிய [1]ஒன்றற்கேற்பவும் பொதுவுமாகிய பெயர்க்கண் வருங் காரணப்பெயர்களுள் ஆகுபெயராமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொருளே இடமே காலமே சினையே குணமே தொழிலே யென்னும் ஆறுடனே இவற்றின் பகுதியவாகிய நால் வகையளவையே சொல்லே தானியே கருவியே காரியமே கருத்தாவே யென்னும் ஆறும் ஆதியாகவரும் பொருள்களுள் ஒரு பொருளின் இயற்பெயரானே அப்பொருளினுக்கு இயைந்த பிறிதொரு பொரு ளைத் தொன்றுதொட்டு வருமுறையே கூறிவருவன ஆகுபெயர் களாம் எ - று.

பொருளாதியாறன்றி வேறுபொருளின்றேனும் அவற்றுட் பயின்றுவருவனவற்றைப் பிரித்து அளவைமுதலாக விதந்தமை

1. சூ. 275.

யிற் பொருண்முதலாறென்பன இவையொழிந்தனவற்றையென் பதூஉம், அதற்கியைபிறிதையென்றமையான் இயையாதனவற் றிற்குவருவன பலபொருளொருசொல்லன்றி ஆகுபெயராகா வென் பதூஉம், தொன்முறையுரைப்பன வென்றமையான் ஆகுபெயர் மேல் ஆகுபெயராயும் அடையடுத்தும் இருபெயரொட்டாயும் வழக் கின் கண்ணும் செய்யுட்கண்ணும் பயின்று பலபொருளொரு சொற் போல வருவனவன்றி இடையே தோன்றியவாறு ஆக்கப்படுவன வல்ல வென்பதூஉம் பெற்றும்.

(வ - று.) " தாமரை புரையுங் காமர் சேவடி ", (குறுந். கடவுள்.)
" ஆம்ப னுறுந் தேம்பொதி* துவர்வாய் " (குறுந். 300)

என முதற்பொருளின்பெயர் சினைப்பொருளுக்கு ஆயின

" அகனமர்ந்து செய்யா ளுறையும் " (குறள், 84),
" புறங்கொடை யறியா மறந்திகழ் வேலோன் "

என இடப்பெயர் சித்தத்திற்கும் முதுகிற்குமாயின. காரறுத்தது, கார்த்திகை பூத்தது எனக் காலப்பெயர் பைங்கூழிற்கும் தோன் றிக்குமாயின ; இவற்றுட் காரென்பது நிறத்திற்காய் நிறத்தின் பெயர் மேகத்திற்காய் மேகத்தின்பெயர் பருவத்திற்காய்ப் பருவத் தின்பெயர் பைங்கூழிற்கானமையின் மும்மடியாகு பெயர். [1]" அறு பதமுரலும் ", மருக்கொழுந்துநட்டான், வெற்றிலை நட்டான், புளி முளைத்தது என அடையடுத்தும் தனித்தும் வந்த சினைப்பெயர் முதலுக்காயின ; இவற்றுட் புளியென்பது சுவைப்பெயர் பழத்திற் காய்ப் பழத்தின் பெயர் மரத்திற்கானமையின் இருமடியாகு பெயர்.

" நெறிநீ ரிருங்கழி நீலமுஞ் சூடாள் " (தொல். களவு, சூ. 23, ந. மேற்.)
" கார்நிகர் வண்கை " (நன். சிறப்பு.),

புளித்தின்றானென நிறமும் சுவையுமாகிய குணப்பெயர்கள் குவளைக்கும் மேகத்திற்கும் பழத்திற்குமாயின.

" எழுத்தறியத் தீரு மிழி தகைமை " (குறள், 392, பரி. மேற்.)
" பாட்டின் பொருளைப் பரவிப் பலகால் "

எனத் தொழிற்பெயர் அக்கரத்திற்கும் சொற்றொடைக்கு மாயின. ஒன்று, இரண்டு, அரை, காலென எண்ணலளவைப் பெயர் அஃ றிணையொருமைக்குப் பன்மைக்கும் யாக்கையின் கண் உறுப்பிற்கு

(பி - ம்.) * ' கிளவி '

1. " அறுபதமுரலும் வேணுபுரம் விரும்பினே " தே. திருவெழுகூற் றிருக்கை.

மாயின. துலாக்கோல், [1]துலாபாரந்தூக்கினான், துலாவிறைத்தானென எடுத்தலளவைப்பெயர் நிறைகோலிற்கும் தராசிற்கும் கிணற்று இறைவைமரத்திற்குமாயிற்று; இவற்றுள் துலாக்கோலென்பது இருபெயரொட்டுமுன்மொழி யாகுபெயர். நாழி, உழக்கு, ஆழாக்கு என முகத்தலளவைப் பெயர் அவ்வளவுகருவிகட்கு ஆயின. *கீழைத்தடி மேலைத்தடி யெனத் தடியென்னும் நீட்டலளவைப்பெயர் விளைநிலத்திற்காயிற்று. அவன் மொழியுணர்ந்தான் இந்நூற்குரை செய்தானென மொழி உரையென்னுஞ் சொல்லின் பெயர் அதன் பொருட்கு ஆயின. விளக்கு முரிந்தது, நெஞ்சு நொந்தது என விளக்கொளியையுடைய பிழம்பும் உணர்வுமாகிய [2]தானிகளின் பெயர்கள் அவற்றிற்குத்தானமாகிய விளக்குத் தண்டினுக்கும் மார்பினுக்குமாயின. திருவாசகம், திருவாய்மொழியென அடையடுத்த வாசகம், மொழியென்னும் முதற்கருவியின் பெயர் அவற்றின் காரியமாகிய யாப்பிற்காயின. இந்நூல் அலங்காரம், இந்நூல் பாட்டியலென இவ்விலக்கணங்களாகிய காரியத்தின் பெயர் இவற்றைத் தருதற்குக் கருவியாகிய நூல்கட்காயின. இந்நூல் திருவள்ளுவரெனக் கருத்தாவின் பெயர் (நன். உரைச். 2) காரியத்திற்காயிற்று.

ஆதியென்றமையானே காளைவந்தானென்றற்றொடக்கத்து உவமையான் வருவனவும் தேவர் முதலியோர் பெயரை மக்கட்கிட்டு வழங்குவனவுங் கொள்க. [3]அறுபதமுதலியனவற்றைப் பொற்றொடி முதலியன போல அன்மொழித்தொகைப்பெயரென்றுலென்னையெனின், அன்மொழித்தொகைப்பெயர் செய்யுள் இயற்றுவோன் ஒருவரை வியப்புமுதலியவற்றால் தன் கூற்றும் பிறர் கூற்றும் உரைப்புழி ஆங்காங்கு வருவதன்றி இதுபோல நியதிப் பெயராய் வருவதன்றென்க.

[4]இப்பட்டுச் சீனம், இப்பொன் கழஞ்சு, இந்நெல் நாழி,

---

(பி - ம்.) * 'கீழத்தடி, மேலத்தடி'

1. துலாபாரந்தூக்கல் : தானவகையுள் ஒன்று; ஒருதலைவன் தன் நிறையளவாகிய பொன்னைத் தக்காளொரு மறையோனுக்குக் கொடுப்பது : "பெருமகன் மறையோற்பேணி.........தன்னிறை, மாடல மறையோன் கொள்கென் றளித்தாங்கு" (சிலப். 27 : 173-6.)

2. தானிகள் – இடத்திலுள்ள பொருள்கள்.

3. அறுபதம் - வண்டு.

4. 'இப்பட்டுச்சீனம்' என்பது முதலியவற்றை ஆகுபெயரென்பவர் மயிலைநாதர்.

இம்மனை ஐங்கோல், இப்புண் ஓரம்பு, இந்நெல் அவல், இவ்வாடை கோலிகன் என வருவனவற்றுள் சீனம், கழஞ்சு, நாழி, கோல், அம்பு, அவல், கோலிகனென்பனவற்றை [1]ஆகுபெயரெனவும், எழுத்துச் சொற்பொருள் யாப்பு அலங்காரமென ஐந்து அதிகாரங் கட்கும் வரும் காரியவாகுபெயரைச் சொல்லாகுபெயரெனவும், அகத்தியம் தொல்காப்பியமென்பனவற்றை [2]ஆகுபெயர்த்திரிபென வும் கூறுவாருமுளர். இப்பட்டுச் சீனத்துள்ள தென்பார் இசை யெச்சமாக்கி இப்பட்டுச் சீனமெனக் குறைத்துக் கூறுதலான் இப் பட்டென்னுமெழுவாய்க்கு உள்ளதென்பது பயனிலையன்றிச் சீன மென்பது பயனிலையன்றுதலானும் சுட்டிக்கூறுது சீனமெனவாளா கூறின் அது பல பொருளொரு சொற்போல அவ்விடத்தினையும் பட்டினையும் உணர்த்தாமையானும், இத்தொடக்கத்தனவாகிய இசையெச்சங்களை ஆகுபெயரென்பார்க்கு.

" திருவளர் தாமரை சீர்வளர் காவிக ளீசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள்கொண் டோங்குதெய்வ
மருவளர் மாலை " (சிற். 1)

எனவரும் உருவகங்களையும் ஆகுபெயரெனக் கூறவேண்டுமாத லானும், இவையெல்லாம் ஆகுபெயரிலக்கணத்தான் வந்தனவல்ல வெனவும், சொல்லாகுபெயர்க்கு அவர் காட்டியவற்றுட் சொல்லினது பெயர் அவற்றிற்கு ஆனதின்மையின் அவை சொல்லாகு பெயராகா வெனவும், வெளிப்படைச்சொல் குறிப்புச்சொல்லென்னும் இரண்ட னுள் ஆகுபெயர் குறிப்புச்சொல்லாதலானும் அகத்தியம் தொல் காப்பியமென்பன கருத்தாவோ காரியமோவென ஐயமுற்று ஒன் றனைக்குறிப்பான் உணரவேண்டாது காரியமாகிய நூல்களை வெளிப் படையான் உணர்த்தலானும் கருத்தாவின்மேற் செல்லாமையானும், விகுதிச் சூத்திரத்துப் (140) பிறவென்பதனான் வரும் அவ்விகுதி யோடு பகுதிபுணர்ந்து இந்திரனுற் செய்யப்பட்ட நூலுக்கு ஐந்திர மெனவந்த ஆரியச்சொற்போல வந்தனவன்றி ஈறுதிரிந்தனவல்ல வெனவும் உணர்க. (33)

---

1. ஆகுபெயர்க்குதாரணமாக, 'இவ்வாடை கோலிகன்,' என்பதைச் சேனுவரையரும், நச்சினுர்க்கினியரும் காட்டியுள்ளார்; தொல். வேற்றுமை மயங்கு. சூ. 31, உரை. சீனம் முதலியவற்றை ஆகுபெயரென வும் காரியவாகுபெயரைச் சொல்லாகுபெயரெனவும் கூறுபவர் மயிலைநாதர்.

2. அகத்தியம், தொல்காப்பியம் என்பவற்றை ஆகுபெயர்த் திரி பெனக் கூறுபவர் இளம்பூரணரும், நச்சினுர்க்கினியரும்; தொல். பாயிர விருத்தியைப் பார்க்க.

## வேற்றுமை

291. ஏற்கு மெவ்வகைப் பெயர்க்குமீ றுய்ப்பொருள்
வேற்றுமை செய்வன வெட்டே வேற்றுமை.

எ - ன், மேல் வேற்றுமைக்கிடனுய் (275) என்றுர், அவ்வேற்றுமை இனையவெனவும் இத்துணையெனவும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தம்மை ஏற்றுக்கோடற்குரிய எவ்வகைப்பட்ட பெயர்கட்கும் இறுதியாய் அப்பெயர்ப் பொருளை வேற்றுமைப் படுத்துவனவான வேற்றுமைகள் எட்டேயாம். எ - று.

வேற்றுமை செய்வன வேற்றுமை எட்டேயெனக் கூட்டுக.

எல்லாப்பெயரும் எல்லாவேற்றுமையும் ஏலாவென்பார் ஏற்கு மென்றும், வினைச்சொல் இடைச்சொல் உரிச்சொற்களுட் பெயர்ப் பட்டு நின்றனவுந் தழீஇக்கோடற்கு எவ்வகையென்றும், வினை முதலிய [1]மூன்றும் வேற்றுமைகொள்ளாவென்பார் பெயரென்றும் ஏற்குமெவ்வகைப்பெயர்க்கு மீறுயென எய்தியதனை விலக்கி, 'எழுவாயுருபு திரிபில் பெயரே' (295) எனப் பிறிதுவிதி வகுத்தலிற் பெயர் முழுவதூஉமாம் எழுவாயுருபினை ஒழித்து விளியுருபிற்குப் பெயரிறுதியாகிய அகப்பாட்டெல்லையினையும் ஏனை ஆறுருபிற்கும் அதன் இறுதியாகிய புறப்பாட்டெல்லையினையும் தழீஇக் கோடற்குப் பொதுமையின் ஈறுயென்றும், பொருளையே யன்றிச் சொல்லையும் ஒரோவழி வேறுபடுப்பது ஐ முதலிய ஏழுருபிற்குமே யன்றி எழுவாய்க்கு ஒவ்வாமையானும் பொருளொன்றனையும் வேறுபடுத்தல் எட்டுருபிற்கும் ஒப்ப முடிந்தமையானும் சொல்லையும் உடன்கூறுது பொருளென்றும், வேற்றுமையென்னுங் காரியத்தைச் செய்யும் கருத்தாவாகிய எட்டு வேற்றுமையுருபிற்கும் வேற்றுமை யெனப் பெயர்போந்தது காரியவாகு பெயராகிய காரணக்குறி யென்பார் வேற்றுமை செய்வன வேற்றுமை யென்றும்,

" ஏழியன் முறைய தெதிர்முக வேற்றுமை
வேறெனு விளம்பான் பெயரது விகாரமென்
ருேதிய புலவனு முளனெரு வகையான்
இந்திர னெட்டாம் வேற்றுமை யென்றனன் "

என ஆசிரியர் அகத்தியனுர் கூறுபவாகலின் விளியுருபு படர்க் கைச் சொல்லையும் பொருளையும் முன்னிலைச் சொல்லும் பொருளு

1. வினை, இடை, உரியென்பன.

மாக வேற்றுமை செய்தலின் அதனை [1]எழுவாயுள் அடக்காது வேறு கோடலே தம்துணிபென்பார் எட்டேயென்றும் கூறினர். வேற்றுமையென்னும் பண்புப்பெயர் பண்பிக்காகாமையின் அது பண்பாகுபெயரன்றாயிற்று.

இனி, இரட்டுற மொழிதலான் வேற்றுமைசெய்வன வேற்றுமையெட்டேயெனக் கொண்டுகூட்டாது ஆற்றொழுக்காக நிறீஇ ஏகாரத்தைத் தேற்றமாக்காது பிரிநிலையாக்கி இங்ஙனம் வருவனவாகிய எட்டுருபும் வேற்றுமை; அவையன்றி [2]ஒரு சாரார் கூறும் உருபடைந்த பெயரும் உருபின் பயனிலையும் வேற்றுமையல்லவெனவும் பொருளுரைத்துக் கொள்க. (34)

## வேற்றுமையின் பெயரும் முறையும்

292. பெயரே ஐஆல் குஇன் அதுகண்
விளியென் றாகு மவற்றின் பெயர்முறை.

எ - ன், வேற்றுமைகள் தம்பெயரும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல் 'எட்டே வேற்றுமை' (291) என்பவற்றின் பெயரென்னை கிடக்கை முறையென்னையெனின், பெயர்முதலாக விளியீறாக இங்ஙனங் கூறிய பெயரும் முறையுமாம் எ - று.

ஏகாரம் எண். மேல் 'எட்டே' என்ற தொகைக்கு வகை தோன்றப் பெயர் கூறினரன்றி அவ்வேற்றுமைகளின் பெயர் விகற்பமெல்லாம் கூறப்புகுந்தாரல்லராதலின் அவையெல்லாம் வருஞ்சிறப்புச் சூத்திரங்களான் உணர்க. இவை இம்முறை நிற்றற்கு அக்காரணமும் அங்ஙனங் காட்டுதும். (35)

293. ஆற[3]னுருபு மேற்குமவ் வுருபே.

எ - ன், எய்தாததெய்துவித்தல் நுதலிற்று.

(இ - ள்.) [4]பெயரேயன்றி ஆறனுருபும் அவ்வுருபுகளை யேற்கும் எ - று.

---

1. விளியை எழுவாயுள் அடக்குபவர் பாணினிமுனிவர்: பிரயோக சூ. 1, உரை.

2. உருபையும் உருபேற்ற பெயரையும் வேற்றுமையென்பது பிரயோகவிவேக நூலுடையார் கொள்கை (காரக. 8, உரை); உருபை யேற்ற பெயரையும் உருபை முடிக்கவந்த சொல்லையும் வேற்றுமையென்பது இலக்கணக் கொத்துடையார் கொள்கை; வேற்றுமை. 8-ஆம் சூத்திரத்தையும் அதன் உரையையும் பார்க்க.

3. உருபு - ரூபமென்பதன் திரிபென்பர்.

4. 'எழுவாய் வேற்றுமையாவது பெயர் மாத்திரையாய்த் தோன்றி

(வ - று.) சாத்தனது, சாத்தனதை, சாத்தனதால், சாத்தனதற்கு, சாத்தனதனின், சாத்தனதனது, சாத்தனதன்கண், சாத்தனதே எனவரும்.

இறந்ததுதழீஇய இழிவு சிறப்பாய் நின்ற உம்மையாற் பெயர்கள் உருபேற்று வருவனபோல் இவ்வுருபேற்பது பயின்று வருவதன்றென்பது பெற்றும். இங்ஙனமாயின் எழுவாயுருபே இரண்டாவது முதலிய ஏழுருபினையும் ஏற்றதென்றுலென்னை யெனின், ஆறனுருபு அவ்வுருபுகளை யேற்றவழித் தன் இருகிழமைப்பொருளும் ஏற்ற உருபின் பொருளும் தோன்ற நின்றாற் போலச் சாத்தனை, சாத்தனுலென வருவழி ஐ முதலிய உருபின் பொருளேயன்றி எழுவாயுருபின் பொருள் இன்மையின் எழுவாயுருபாகாமல் தன்னிலையில் நின்ற பெயரே எட்டுருபுமேற்ற தென்க. (36)

### உருபேலாப் பெயர்கள்

294. நீயிர் நீவிர்நா னெழுவா யலபெறா.

எ - ன், மேல் 'ஏற்கு மெவ்வகைப் பெயர்க்கும்' (291) என்றமையின், ஏலாப்பெயரும் உளவென்றாராதலின், அவற்றுள் இரண்டாவது முதலிய ஏழுருபும் ஏலாதன இவையென உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்று பெயரும் எழுவாய் வேற்றுமையினையன்றி ஏனை ஏழு வேற்றுமையினையும் ஏலா எ - று.

எனவே [1]நீரென்னும் ஈரெழுத்தொருமொழி அதுபோல ஈரெழுத்தொரு மொழியாகிய நும்மெனவும் யானென்னும் யகரமுதன்மொழி யகரத்தோடு பிறப்பொத்த எகர முதன்மொழியாகிய என்னெனவும் திரிந்து ஐமுதலிய ஆறுருபும் ஏற்றாற்போல நீயிர் நீவிர் நானென்னு மூன்றும் அங்ஙனம் வாராமையின், நும் என் எனத் திரிதலும் அவ்வுருபுகளை ஏற்றலும் இலவென்பதாயிற்று. (37)

### முதல் வேற்றுமை

295. அவற்றுள்,
எழுவா யுருபு திரிபில் பெயரே
வினைபெயர் வினாக்கொள லதன்பய னிலையே.

---

நிற்கும் நிலையென்பவாகலின் அவ்வெழுவாயாய் நின்ற உருபே ஐம் முதலிய ஆறு வேற்றுமைகளின் உருபும் ஏற்கும்' எனப் பொருள்கூறி இங்கே கூறப்படும் உரையைக் காரணங்காட்டி மறுப்பர் சிவஞான முனிவர்.

1. சூ. 247, பார்க்க.

எ - ன், நிறுத்த முறையானே பெயர் வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற்குறிப்போந்த எட்டு வேற்றுமையுள் முதல் வேற்றுமையின் உருபாவது திரிபில்லாத பெயரேயாம்; வினையையும் பெயரையும் வினாவையும் கொள்ளுதல் அதன் [1]பயனிலையாம். எ - று.

[2]திரிபில் பெயரென்றமையான் ஐமுதலாக விளியீருகக் கிடந்த ஏழுருபும் ஏற்புழித் திரியுஞ்சொல் திரிபில்லனவென்பதூஉம், பெயரேயென்றமையான் இதற்கென வேறுருபின்றென்பதூஉம், வினையெனப் பொதுப்படக் கூறினமையின் வினையும் வினைக்குறிப்புமாகிய விகற்பமெல்லாங் கொள்ளுமென்பதூஉம், வினையை முற்கூறினமையிற் பெயர் வேற்றுமைக்கு வினைப்பயனிலை சிறந்ததென்பதூஉம் பெற்றும்.

(வ - று.) சாத்தன் வந்தான், வந்த, வந்து, வாழ்க, இல்லை, இல்லா, இன்றி என வினையும் வினைக்குறிப்புங் கொண்டது. சாத்தன் அவனெனப் பெயர்கொண்டது. சாத்தன் யாவன், யாரென வினாப் பெயரும் வினாவினைக்குறிப்புங் கொண்டது. யாவன், யார் என்றற்றொடக்கத்தன பெயர் வினைகளுள் அடங்காவோ, வினாவென வேறோதியதென்னையெனின், பயனிலையாவது மேலொன்றனையும் வேண்டாது பொருள் முற்றி நிற்கும் நிலையன்றே; சாத்தன் யாவன், யார் என வினாவந்தவழி, அவன், அனையன் என விடை வந்தல்லது பொருள் முற்றுமையின் வினாப் பெயர் வினைகள் ஏனைப் பெயர் வினைகள் போற் பயனிலையாகா வென்பதூஉம், மேல் விடை வேண்டிநிற்பினும் வினாப் பொருள் முற்றி நிற்றலின் ஒருவாற்றாற் பயனிலையாமென்பதூஉங் கருதி வினாவெனவேறு விதந்தும், இவ்விழிவுதோன்ற இறுதி கட்டந்துங் கூறினாரென்க.

“ வினைநிலை யுரைத்தலும் வினாவிற் கேற்றலும்
பெயர்கொள வருதலும் பெயர்ப்பய னிலையே ”

என ஆசிரியர் அகத்தியனாரும்,

“ பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்
வினைநிலை யுரைத்தல் வினாவிற்கேற்றல்
பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்
றன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே ” (வேற்றுமையியல், 5)

1. பொருணிலை யென்பர் சிவஞானமுனிவர்.

2. ‘திரிபில்லாமையாவது, உருபும் விளியும் ஏலாது முடிக்குஞ் சொல்லும் நோக்காது ஆ என்றாற்போலத் தன்னிலையில் நிற்றலாம்’ (புத்தம்புத்துரை.)

என்னும் ஆசிரியர் தொல்காப்பியனாரும் ஏனைப் பயனிலைபோற் கூறாது இதனிழிவுதோன்ற விளிவிற்கேற்றலெனக் கூறியவாறும் பொருண்மைசுட்டல் முதலியவாகக் கூறியவாறும் இம் மூன்றுள் அடங்குமாறுங் காண்க.

இனி, வினாக்கொளலென்பதற்குச் சாத்தனோ என [1]வினா விடைச் சொற்களைக் கொள்ளுமெனக்காட்டின், தெரிநிலை தேற்ற முதலிய பொருள்தரும் இடைச்சொற்களையும் கொள்ளும் எனக் கூறவேண்டுமாதலானும், இஃது இடைச்சொற்சந்தி யன்றி எழுவாய்ச்சந்தியன்றாதலானும் அது பொருந்தாதென்க.

"எல்லை யின்னு மதுவும் பெயர்கொளும்" (319) என்னுஞ் சூத்திரத்து இதன் பயனிலையும் உடன்கூறாது ஈண்டே கூறிய தென்னையெனின், [2]அவிகாரியாய் நின்றபெயர் இப்பயனிலைகளை அவாவியகாலத்தன்றி அவிகாரியினின்றும் விகாரியாகத் தன்னைத் தானே வேற்றுமைசெய்தல் தோன்றாமையினென்க. தன்னைத் தானே வேற்றுமைசெய்தல்,

> " நன்னிலைக்கட் டன்னை *நிலைப்பானுந் தன்னை
> நிலைகலக்கிக் கீழிடு வானும் - நிலையினும்
> மேன்மே லுயர்த்தி நிறுப்பானுந் தன்னைத்
> தலையாகச் செய்வானுந் தான் " (நாலடி. 248)

என்பதனானும் உணர்க.

இரண்டாவது முதலிய வேற்றுமைகட்கு உருபும் பொருளும் கூறிப்போந்து பயனிலையும் கூறினர் இதற்கு உருபும் பயனிலை யுங்கூறிப் பொருள்கூறாதது என்னையெனின், 'எழுவா யுருபு திரிபில் பெயரே' என்றதுணையானே அதன் பொருளும் திரிபில் பெயர்ப்பொருளேயென்பது தானே போதருமென்க. அஃதாவது அவிகாரியாய் நின்ற தன்னைத்தானே விகாரியாக வேற்றுமை செய்தல்.

இதனை முதல்வேற்றுமையென்றதென்னையெனின் பெயரே யாய் நிற்றலானும் வினைமுதலாய் நடத்தலானுமென்க. (38)

## இரண்டாம் வேற்றுமை

296. இரண்டா வதனுரு பையே யதன்பொருள்
ஆக்க லழித்த லடைத னீத்தல்
ஒத்த லுடைமை யாதி யாகும்.

---

(பி - ம்.) * 'நிறுப்பானும்' 1. இங்ஙனம் காட்டுபவர் மயிலைநாதர்.
2. அவிகாரி - விகாரமில்லாதது; " புன்றுரும்பு போன்றலைந்தார் போற்றுமவி காரிமுனம், சென்று வருசொற் றிரிதல்போல் - மென்றளிராம், மேனி திரிந்தார் " (திருவெங்கையுலா, 393-4.)

எ - ன், இரண்டாம் வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இரண்டாம் வேற்றுமையினதுருபு மேற்கூறிய ஐயுருபொன்றுமே; அதன் பொருள்களாவன தன்னையேற்ற பெயர்ப்பொருளை ஆக்கப்படுபொருளாகவும் அழிக்கப்படு பொருளாகவும் அடையப்படுபொருளாகவும் துறக்கப்படுபொருளாகவும் ஒக்கப்படுபொருளாகவும் உடைமைப்பொருளாகவும் இவைபோல்வன பிறவாகவும் வேற்றுமை செய்தலாம் எ - று.

ஈண்டுத் தந்துரைத்தனவெல்லாம் மேற்போந்த 'ஏற்கு மெவ்வகை' (291) என்னுஞ் சூத்திரத்திற்கு இயையவந்த [1]இசையெச்சம். மேல்வருவனவு மன்ன.

(வ - று.) குடத்தை வனைந்தான், உடைத்தான், அடைந்தான், துறந்தான், ஒத்தான், உடையான் எனவரும். குடத்தை யொத்தா னென்புழிச் சுதந்தரமின்றி ஒழுகினனென்பது பொருள்.

ஆதியென்றமையான் இவ்வாறு செயப்படுபொருளாக வேற்றுமைசெய்தலெல்லாம் கொள்க.

ஒருவன் ஒருவினை செய்ய அதனாற்றோன்றிய பொருள் யாது அது செயப்படுபொருளென்பதாம்; ஒருவன் ஒருவினை செய்ய அத்தொழிற்படுபொருள் யாது அது செயப்படுபொருளெனினும் அமையும். செயப்படுபொருள், செய்பொருள், கருமம், காரிய மென்பன ஒருபொருட்கிளவி. அழித்தல் முதலிய வினை செய்த வழித் தோன்றிய காரியங்களென்னையெனின், அழிபொருளாதல் முதலியவும் குறிப்புவினையுள் ஒன்றையுடையனாகிய காலத்து அஃதுடைமையாதலுமாம். பிறவுமன்ன[2].

இவ்வேற்றுமை தன்பெயர்ப்பொருளை மேற்போந்த கருத்தனாலாகிய காரியமாக்குதலின் இரண்டாவதெனப்பட்டது. (39)

## மூன்றும் வேற்றுமை

297. மூன்ற வதனுரு பாலா னோடு
கருவி கருத்தா வுடனிகழ் வதன்பொருள்.

எ - ன், மூன்றும்வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

---

1. இசையெச்சத்தின் இலக்கணம், 360-ஆம் சூத்திரத்தாலும் அதன் உரையாலும் விளங்கும்.

2. இதன்பின்னர், சிவஞானமுனிவர் செயப்படுபொருளின் வகைகளை இலக்கணக்கொத்தைப் பின்பற்றி விரித்துரைப்பர்.

(இ - ள்.) மூன்றும்வேற்றுமையின் உருபு மேற்கூறிய ஆலே யன்றி ஆனும் ஓடும் ஒடுவுமாம்; அவற்றின் பொருள்களாவன தம்மையேற்ற பெயர்ப்பொருளைக் கருவியாகவும் ஏதுப்பொருட் டாகிய கருத்தாவாகவும் உடனிகழ்வதாகவும் வேற்றுமை செய்த லாம் எ - று.

மூன்றும்வேற்றுமைப் பொருளாதலின் ஏதுப்பொருட்டாகிய கருத்தாவென்றும், அதன்பொருளென்பது தொகுதி யொருமை யாதலின் அவற்றின் பொருளென்றும் பொருள் கூறினும்.

கருவி, காரணம், ஏது, நிமித்தமென்பன வேறுபொருட் கிளவியாயும் ஒருபொருட்கிளவியாயும் வருதலிற் காரணமூன்ற னுள் முதற்காரணம் துணைக்காரணமென்னும் இரண்டனையும் கருவியென்றும், ஏவற்கருத்தாவும் இயற்றுதற்கருத்தாவுமாகிய நிமித்தகாரணம் இரண்டனையும் கருத்தாவென்றுங்கூறினர்.

வனைந்தானென்புழிக் குடமாகியகாரியத்திற்கு அதுவது வாகிய மண் முதற்காரணம்; குலாலனது அறிவும் அந்தக்கரணம் முதலிய ஞாபகக்கருவியும் தண்டசக்கரம் முதலிய காரகக்கருவி யும் அம்முதற்காரணத்திற்குத் துணையாய்நின்று காரியத்தைத் தருதலின் துணைக்காரணம். குலாலன் நிமித்தமாக அக்காரியம் தோன்றுதலின் அவன் நிமித்தகாரணம். ஞாபகக்கருவியென்பது அறிதற்கருவி. காரகக்கருவியென்பது செய்தற்கருவி. நடந்தா னென்புழிக் குடம்போல்வதொரு காரியமின்றேனும் நடத்தலைச் செய்தானென்பது பொருளாதலின் நடத்தல் காரியம்; அவயவத் தாற் பலவேறுவகைப்பட்ட குடம்முதலிய கலன்களிற் பொதுமை யின் நிற்கும் மண்போலப் பலவேறுவகைப்பட்ட வினைகளிற் பொதுமையின் நிற்குந்தொழில் நடத்தற்கு முதற்காரணம். அறிவும் காலும் முதலியன துணைக்காரணம். வினைமுதல் நிமித்த காரணம். பிறவுமன்ன.

(வ - று.) அறிவாலாக்கிய காட்சி, அறிவாலாகிய காட்சி என்புழி ஆலுருபு பெயர்ப்பொருளை ஞாபகமுதற்கருவியாக வேற்றுமைசெய்தது. கண்ணாலாக்கியகாட்சி, கண்ணாலாகிய காட்சி என்புழி ஞாபகத்துணைக்கருவியாகப் பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தது. காட்சியென்றது காட்சியுணர்வை. மண்ணாலாக்கிய குடம், மண்ணாலாகியகுடம் என்புழிக் காரகமுதற்கருவியாக வேற்றுமைசெய்தது. [1]திரிகையாலாக்கியகுடம், திரிகையாலாகிய குடம் என்புழிக் காரகத்துணைக் கருவியாக வேற்றுமைசெய்தது.

1. திரிகை - சக்கரம்.

இங்ஙனம் ஆக்குதற்கு வினைமுதல் அறிவனும் குலாலனுமாம். ஆதற்கு வினைமுதல் காட்சியுணர்வும் குடமுமாம். இக்காட்சி யுணர்வும் குடமும் வினைமுதலாயகாலத்து இக்கருவிகள் ஏதுப் பொருளவாய் நின்றன. அரசனாலாகிய [1]தேவகுலம், தச்சனா லாகிய தேவகுலம் என்புழி முறையே ஏதுப்பொருளவாகிய ஏவற் கருத்தாவாகவும் இயற்றுதற்கருத்தாவாகவும் வேற்றுமைசெய் தது; ஆக்கிய தேவகுலமென வரின், மூன்றாமுருபு ஏலாவாய் அரசனும் தச்சனும் எழுவாயாம். இஃது எழுவாய்க்கண் வரும் கருத்தாவிற்கும் இவ்வேற்றுமைக்கண் வரும் கருத்தாவிற்கும் தம்முள்வேற்றுமையென்க.

" தூங்குகையா லோங்குநடைய
உறழ்மணியா லுயர்மருப்பின " (புறநா. 22),
" பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு " (குறள் 1083)

என்புழி ஆலுருபு உடன் நிகழ்வதாக வேற்றுமை செய்தது. ஆனுருபையும் இவ்வாறே ஒட்டிக்காண்க.

" நாவீற் றிருந்த கலைமா மகளோடு நன்பொற்
பூவீற் றிருந்த திருமா மகள்புல்ல நாளும் " (சீவக. 30) எ - ம்,
" மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை " (குறள் 295) எ - ம்

முறையே ஒடும் ஒடுவும் உடனிகழ்வதாக்கின. ஏற்புழிக் கோட லான் இவ்விரண்டுருபிற்கும் உடனிகழ்ச்சிப் பொருளொன்றுமே கொள்க.

இங்ஙனம் வரும் கருத்தா ஏதுப்பொருட்டாய் வருதலின் விதந்து கூறாது கருவியின்பாற் படுத்தினும் அமையுமென்பது தோன்ற இவ்வுருபிற்குச் சிறந்த கருவிப்பொருளை முற்கூறினர்.

இரண்டாம் வேற்றுமைப் பொருளாகிய காரியத்திற்கு வேண்டும் கருவிப் பொருளைத் தருதலின் இது மூன்றாம் வேற் றுமை எனப்பட்டது.

" ஆலும் ஆனும் ஒடும் ஒடுவும்
சாலு மூன்றும் வேற்றுமைத் தனுவே
செய்வோன் காரணஞ் செயத்தகு கருவி
எய்திய தொழின்முத லியைபுட னதன்பொருள் "

என்றார் ஆசிரியர் அகத்தியனாருமென்க. முதற்காரணத்தைக் காரணமென்றும் ஏவற்கருத்தாவைத் தொழின்முதலென்றும் விதந்து கூறினாராதலின், இங்ஙனம் பொருள் ஐந்தாயின. (40)

1. தேவகுலம் - கோயில்.

## நான்காம் வேற்றுமை

298. நான்கா வதற்குரு பாகுங் குவ்வே
கொடைபகை நேர்ச்சி தகவது வாதல்
பொருட்டுமுறை யாதியி னிதற்கிதெனல் பொருளே.

எ - ன், நான்காம் வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நான்காம் வேற்றுமைக்குருபு மேற்கூறிய குவ் வொன்றுமேயாம் ; அதன் பொருளாவன கொடையும் பகையும் நேர்ச்சியும் தகவும் அதுவாதலும் பொருட்டும் முறையும் முதலான பொருள் தோன்றப் புணரும் புணர்ச்சிக்கண் இதற்கு இதென அங்ஙனம் வருதற்குரிய எப்பொருளினையும் ஏற்றுக்கொள்ளும் பொருளாகத் தன்னை ஏற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலாம் எ - று.

'இதற்கிது' என்றமையான் ஏற்றுக்கொள்ளும்பொருளென் பது பெற்றும்.

(வ - று.) "இரப்பார்க் கொன், றீவார்மே னிற்கும் புகழ்" (குறள் 232) என்பது கொடை. "பிணிக்கு மருந்து" (குறள் 1102) என்பது பகை. விளக்கிற்கெண்ணெயென்பது நேர்ச்சி; நட்பென்பதுமிது. "அருங்கல முலகின் மிக்க வரசர்க்கே யுரிய" (சூளா. கல்யாணச். 189) என்பது தகுதி. ஆடைக்கு நூலென்பது அதுவாதல். கூழிற்குக் குற்றேவல் செய்யுமென்பது பொருட்டு. சாத்தற்கு மகனென்பது முறை.

'ஆதியென்றமையானே கைக்கு யாப்புடையது கடகமென்னும் யாப்புடைமை முதலியவாய் இதற்கிதென்பதுபட வருவன வெல்லாங் கொள்க. இவற்றுள் ஏற்றுக்கொள்ளும் பொருளாக வேற்றுமை செய்தல் காண்க.[1]

ஒருவன் ஒருகாரியத்தை ஒரு கருவியாற்செய்தல் அக்காரியம் தனக்கேனும் பிறர்க்கேனும் உதவுதற் பொருட்டன்றி வீண்காரியஞ் செய்யாறுதலின் இஃது இம்முறையானே நான்காம் வேற்றுமை யெனப்பட்டது. (41)

## ஐந்தாம் வேற்றுமை

299. ஐந்தா வதனுரு பில்லு மின்னும்
நீங்கலொப் பெல்லை யேதுப் பொருளே.

1. இதன்பின்னர் ஏற்றுக்கோடற்பொருளின் வகையை விரித் துரைப்பர் சிவஞானமுனிவர்.

எ - ன், ஐந்தாம்வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஐந்தாம் வேற்றுமையின் உருபாவன இல்லும் மேற்கூறிய இன்னுமாம்; அவற்றின்பொருளாவன நீங்கற் பொருளாகவும் உவமைப்பொருளாகவும் எல்லைப்பொருளாகவும் ஏதுப்பொருளாகவும் தம்மை ஏற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலாம் எ - று.

ஏதுப்பொருள் மூன்றும்வேற்றுமைக்கன்றி இதற்கு அத்துணைச் சிறப்பின்மையிற் பிற்கூறப்பட்டது.

(வ - று.) தமரிற்றீர்ந்தான் இவன், வரையின் வீழருவி,

"தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை" (குறள், 964) எ - ம்,

அரசரிற்பெரியரந்தணர், ஆவினிழிந்தது மேதி எ - ம் வருவழி இன்னுருபு நீங்குதற்பொருளாக வேற்றுமை செய்தது. பாலின் வெளிது கொக்கு, காக்கையிற்கரிது களம்பழம்,

"நாயிற் கடைப்பட்ட நம்மை" (திருவா. திருப்பூவல்லி, 3)

என்பனவும் ஒப்புமை கருதாது உயர்வும் தாழ்வுங் கருதியவழி [1]நீங்குதற் பொருளவாம்.

"திறல்வே லுதியிற் பூத்த கேணி" (சிறுபாண். 172),
"பொன்னிற் பிதிர்ந்த பொறிசுணங் கிளமுலை"

என்புழி உவமைப்பொருளாக வேற்றுமை செய்தது. கருவூரின் கிழக்கு [2]மருவூரின் மேற்குச்சோணாடு என்புழி எல்லைப்பொருளாக வேற்றுமை செய்தது.

"கோட்டிற் செய்த கொடுஞ்சி நெடுந்தேர்" (பொருந. 163),

அறிவிற்பெரியன் என்புழி ஏதுப்பொருளாக வேற்றுமைசெய்தது. இல்லுருபினையும் இவ்வாறே ஒட்டிக்காண்க.

இங்ஙனங் கூறவே எல்லாப்பொருளையும் [3]இதனின் இற்றிது என விகற்பித்துணர்தற்கு வருவன இவ்வுருபென்பதாயிற்று. ஆகவே நான்காம்வேற்றுமைப்பொருளாகிய கொள்வோனையும் கொடைப்பொருளினையும் இவ்வாறு விகற்பித்துணர்ந்தல்லது

1. 'இந்நீக்கப் பொருள் நிலத்திணை இயங்குதிணை பண்பாதியின் வருமெனவுங் கொள்க' (புத்தம்புத்துரை.)

2. மருவூர்: மாயூரத்தின் கிழக்கேயுள்ளது; காவிரிப்பூம்பட்டினத்தின் பகுதியாகிய மருவூர்ப்பாக்கமென்பதனுற் சுட்டப்படும் மருவூரென்பது இது போலும். செந்தமிழ் நாட்டின் கிழக்கெல்லையாகக் கூறப்படும்; தொல். எச்ச. சூ. 2, இளம். சே. ந. 3 தொல். வேற்றுமை. சூ. 16.

கொடுத்தல்கூடாமையின் இஃது ஐந்தாம் வேற்றுமையெனப் பட்டது. (42)

## ஆறும் வேற்றுமை

300. ஆற னொருமைக் கதுவு மாதுவும்
பன்மைக் கவ்வு முருபாம் பண்புறுப்
பொன்றன் கூட்டம் பலவி னீட்டம்
திரிபி னாக்க மாந்தற் கிழமையும்
பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே.

எ - ன், ஆறும்வேற்றுமையினது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஆறும்வேற்றுமையினது ஒருமைப்பொருண்மைக்கு மேற்கூறிய அதுவென்பதேயன்றி [1]ஆதுவென்பதும் பன்மைப் பொருண்மைக்கு அகரமும் உருபாம். அவற்றின் பொருளாவன: குணமுந் தொழிலுமாகிய பண்பும் சினையும் ஒரு பொருட் கூட்டமும் பலபொருட்கூட்டமும் ஒன்றுதிரிந்தொன்றானதுமாகிய ஐந்துதற்கிழமைப் பொருளினையும் பிறிதின்கிழமைப் பொருளினையுமுடையதாகத் தம்மையேற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலாம் எ - று.

கிழமையென்பது ஆகுபெயர்.

(வ - று.) சாத்தனதியல்பு சாத்தனது நன்மை சாத்தன திருக்கை சாத்தனதுநிலை கபிலரதுபாட்டு எ - ம், சாத்தனது கை சாத்தனதுகால் எ - ம், மாந்தரதுதொகுதி நெல்லது குப்பை எ - ம், படையதுதொகை விலங்கினது ஈட்டம் எ - ம், நெல்லினது பொரி [2]கோட்டதுநூறு எ - ம், ஐவகைத் தற்கிழமையும் முறையே வந்தன. ஒன்றன் கூட்டத்தற்கிழமை மாறிக் குப்பையது நெல்லென வரின் உறுப்புத்தற்கிழமை. பலவினீட்டம் மாறி நிற்பினும் அது. சாத்தனது ஆடை, சாத்தனது பிள்ளை எனப் பிறிதின்கிழமை வந்தன. பாட்டென்பது வரிவடிவை நோக்கிய காலத்துப் பிறிதின் கிழமையாம். எனதுகை, தனதுதாள், எனதுநிலம், தனதெயில் என ஆதுருபோடும், என கைகள், தன தாள்கள், என யானைகள், தன தானைகளென அகரவுருபோடும்

1. 'அது வென்பதன் விகாரம் ஆது' என்பர் நேமிநாத உரையாசிரியர்; சொல். சூ. 18, உரை.

2. கோட்டது நூறு - சங்கினது சுண்ணம்: சங்குச் சுண்ணும்பு.

ஒட்டுக. சாத்தனதாடை என்புழி, சாத்தனதுகை என்றாற்போலாது ஆடைக்குச் சாத்தன் பிறிதாதலின் அப்பிறிதினதுகிழமை பிறிதின்கிழமை யெனப்பட்டது.

அஃறிணை ஒருமை பன்மைகட்கு இயைந்த உருபு இங்ஙனம் கூறவே உயர்திணை யொருமை பன்மையாகிய கிழமைப் பொருட்கு இவ்வுருபுகள் ஏலாவென்பது பெற்றாம். அவை வருங்கால், அவனுடையவிறலி, அவனுடையவிறலியரென மூன்று சொல்லாய் இரண்டு சந்தியாய் முன்னது எழுவாய்ச் சந்தியும் பின்னது பெயரெச்சக் குறிப்புச் சந்தியுமாமென்க. அவன் விறலி என்புழி உடையவென்பது இசையெச்சம். சாத்தனுடைய இயல்பு, சாத்த னுடையகை என்றற்றொடக்கத்தனவும் அன்ன. இவற்றை ஆறாம் வேற்றுமைச் சந்தியென்றும், உடையவென்பதனைச் சொல்லுரு பென்றும் [1]கூறுவாருமுளர். ஆசிரியர் தொல்காப்பியனாரும் உயர்திணையொருமை பன்மைகட்கு இவ்வுருபுகளேலாவென்பது கருதி,

"அதுவென் வேற்றுமை யுயர்திணைத் தொகைவயின்
அதுவெ னுருபுகெடக் குகரம் வருமே" (வேற்றுமைமயங்கு. 11)

என்றார்.[2]

மேற்போந்த கொள்வோனையும் கொடைப் பொருளையும் 'இதனின் இற்று இது' என விகற்பித்து உணர்ந்து கொடுத்தல் இவ்விரு கிழமைப் பொருளுடையோர் செயலென்பது தோன்ற இஃது ஆறாம் வேற்றுமை யெனப்பட்டது.

"ஆற னுருபே யதுவா தவ்வும்
வேறொன் றுடையதைத் தனக்குரி யதையென
இருபாற் கிழமையின் மருவுற வருமே"

என்றார் ஆசிரியர் அகத்தியனாரு மென்க. (43)

## ஏழாம் வேற்றுமை

301. ஏழ னுருபுகண் ணாதி யாகும்
பொருண்முத லாறு மோரிரு கிழமையின்
இடனாய் நிற்ற லிதன்பொரு ளென்ப.

எ - ன், ஏழாம் வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

1. இங்ஙனம் கூறுபவர் இலக்கணக்கொத்துடையார்; சூ. 25, உரை.

2. இதன்பின், 'இவ்வாறும் வேற்றுமைப் பொருளாகிய குறைப் பொருள் ஒற்றுமை வேற்றுமையென உரைக்கப்படும்' என்று கூறி அவற்றை விரித்துரைப்பர் சிவஞான முனிவர்.

(இ - ள்.) ஏழாம் வேற்றுமையின் உருபு மேற்கூறிய கண்ணே யன்றி அஃதாதியாய பிறவுமாம்: இவற்றின் பொருளாவன தம்மை யேற்ற பெயர்ப் பொருளாகிய பொருளாதியாறும் மேற்போந்த [1]இருகிழமைப்பொருட்கும் இடமாகிநிற்க அவற்றினை வேற்றுமை செய்தலாமென்று சொல்லுவர் புலவர் எ - று.

இடப்பொருளேயன்றி ஏனை ஐந்து பொருளும் ஈண்டிடனாய் நிற்றலிற் பொருண்முதலாறுமென்றும், வினைவரினும் அவ்வினை முதல் இவ்விரு கிழமையின்பாற்படுமாதலிற் கிழமையினிடனென் றுங் கூறினர்.

ஈண்டு இதுவென்றதூஉம் தொகுதியொருமை.

(வ - று.) மணியின்கண்ஒளி மணியின்கண் இருந்தது ஒளி எ - ம், [2]பனையின்கண் அன்றில் பனையின்கண் இருந்தது அன்றில் எ - ம், இருகிழமைக்கும் பொருள் இடமாயிற்று. ஊரின்கண் இல்லம் ஊரின்கண் இருந்தது இல்லம் எ - ம், ஆகாயத்தின்கட்பருந்து ஆகாயத்தின்கட் பறந்தது பருந்து எ - ம் இடம் இடமாயிற்று. நாளின்கண் நாழிகை நாளின்கண் வந்தது நாழிகை எ - ம், வேனிற் கட்பாதிரி [3]வேனிற்கட்பூத்தது பாதிரி எ - ம் காலம் இடமாயிற்று. கையின்கண்விரல் கையின்கண் இருந்ததுவிரல் எ - ம், கையின்கட் கடகம் கையின்கட் கிடந்தது கடகம் எ - ம் சினை இடமாயிற்று. [4]கறுப்பின்கண் அழகு கறுப்பின்கண் இருந்ததழகு எ - ம், இளமை யின்கட் செல்வம் இளமையின்கண் இருந்தது செல்வம் எ - ம் குணம் இடமாயிற்று. ஆடற்கட் [5]சதி ஆடற்கண் நிகழ்ந்தது சதி எ - ம், ஆடற்கட்பாட்டு ஆடற்கட் பாடப்பட்டதுபாட்டு எ - ம் தொழில் இடமாயிற்று.

ஆதியென்றமையான் வரும் உருபுகள் வருஞ்சூத்திரத்தாற் கூறுபவாகலின் அவை அங்ஙனம் காட்டுதும்.

இது பெயர்ப்பொருளை மேற்போந்த இருகிழமைப் பொருள் கட்கும் இடமாக வேற்றுமைசெய்தலின் ஏழாம் வேற்றுமையெனப் பட்டது. (44)

1. தற்கிழமை பிறிதின்கிழமை யென்பன.

2. அன்றில் நெய்தற்றிணைக்குரியது; அது பனையின்கண் வாழும் தன்மையதென்பது சான்றோர் செய்யுட்களாற் புலப்படும்; "பெண்ணை மடல்சேர் வாழ்க்கை, யன்றில்" (குறுந். 177.)

3. பாதிரிமலர் வேனிலிற்பூப்பதென்று பழஞ்செய்யுட்களாற் புலப்படு கின்றது; "வேனிற் பாதிரிக் கூன்மலர்" (குறுந். 147.)

4. "கறுப்பி லழகனடி சிங்கி" (குற்றாலக் குறவஞ்சி)

5. சதி - தாளவொற்று.

## கண்முதலிய உருபுகள்

302. கண்கால் கடைஇடை தலைவாய் திசைவயின்
முன்சார் வலமிடம் மேல்கீழ் புடைமுதல்
பின்பா டளைதேம் உழைவழி உழிஉளி
உள்அகம் புறல்இல் இடப்பொருளுருபே.

எ - ன், மேற் கண்ணாதியாகுமென்றார், அவை இவை யென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனம் கண்முதலாக இல்லீறாக எண்ணப்பட்ட இருபத்தெட்டும் இடப்பொருளாக வேற்றுமை செய்யும் உருபுகளாம் எ - று.

தொடர்புதோன்றக் கண்ணுருபை ஈண்டும் அனுவதித்தார்.

"ஊர்க்கா னிவந்த பொதும்பருள்" (கலி. 56 : 1)
"வேலின், கடைமணிபோற் றிண்ணியான்" (திரிகடுகம், 33)
"நல்லாரி டைப்புக்கு" (நாலடி. 314),
"வலைத்தலை மானன்ன நோக்கியர்" (திருவா. நீத்தல். 40),
"குரைகடல்வா யமுதென்கோ" (திருவா. உயிருண்ணி, 8),
"தேர்த்திசை யிருந்தான்,"
"அவர்வயிற் *செல்வாய்,"
"கற்றார்முற் றோன்றா கழிவிரக்கம்" (நான்மணி. 8),
"காட்டுச்சா ரோடுங் குறுமுயால்,"
"காழ்வரை நில்லாக் † களிறவன் கைவலத்
தியாழ்வரை நின்றது" (பெருங்கதை),
"இல்லிடப்பரத்தை,"
"தன்மேற், கடுவரை நீரிற் கடுத்துவரக் கண்டும்" (பு. வெ. 11),
"பிண்டிக்கண் ணார்நிகழ்ற்கீ, ழெந்த மடிகள்" (யா. கா. கடவுள்.)
"கடைப்புடைக் கொள்ளியநீர்,"
"சுரன்முதல் வந்த வுரன்மாய் மாலை" (நற். 3 : 6),
"காதலி பின்சென்ற தம்ம" (நாலடி. 395),
"நம்பா டணையாத நாள்,"
"கல்லளைச் சுனைநீர் கையிலுண் டமையான்,"
"தோழிக்குரியவை கோடாய் தேஎத்து" (இறை. சூ. 14),
"அவனுழையிருந்த தண்டமிழ்ச் சாத்தன்" (சிலப். பதிகம், 10),
"நின்றதோர் நறுவேங்கை நிழல்வழி யசைந்தனன்,"
"உறைப்புழி யோலை போல" (புறநா. 290),
"குயில்சேர் குளிர்கா வுளிசேர் புறையும்,"
"மூலையங் குவட்டுள் வாழும்" (சீவக. 1232),

---

(பி - ம்.) *'சொல்லாய்' † 'களிறன்னான்'

" பயன்சாரப், பண்பில்சொற் பல்லா ரகத்து " (குறள், 194),

" செல்லுமென் னுயிர்ப்புறத் திறுத்தந்த மருண்மாலை " (கலி. 148:7) ஊரிலிருந்தார் என இவை பலதிறத்தனபோலுமேலும் அவை யாகாது ஒருதிறத்தவாய்க் கண்ணுருபின் பரியாயவுருபாய் வருதல் காண்க.

இனிக் கண்கால் முதலியன இடவிகற்பங்களை உணர்த்தின் ஒருதிறத்தவாகிய உருபாகாது பலதிறத்தவாகிய இடங்களை உணர்த்தும் பெயராகி, " கண்ணகன்ஞாலம் " (திரிகடுகம், காப்பு), [1]"கடை நாள்," [2]"இடைச்சுரம்," "தலையாயார்" (நாலடி. 216), [3]" தென்றிசை " என்றற்றொடக்கத்தனவாய் வருதல் காண்க.

மணியின்கண்ணொளி என்புழிக் கண்ணென்பது பெயராயின், மணியினதிடத்து ஒளியென்பது பொருளாய் மூன்று சொல்லாய் இரண்டு சந்தியாமென்க. ஏனையவுமன்ன. (45)

## எட்டாம் வேற்றுமை

303. எட்ட னுருபே யெய்துபெய ரீற்றின்
திரிபு குன்றன் மிகுத லியல்பயல்
திரிபுமாம் பொருள் படர்க்கை யோரைத்
தன்முக மாகத் தானழைப் பதுவே.

எ - ன், எட்டாம் வேற்றுமையினது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எட்டாம் வேற்றுமையாகிய விளிக்கு வேறுரு பின்று; அவ்விளியடைந்த பெயரீற்றின் திரிபும் கேடும் மிகுதலும் இயல்பும் ஈற்றயல்நின்றதன் திரிபுமே உருபாம். இவற்றின் பொருளாவன இவற்றினையேற்ற படர்க்கைப் பெயர்ப்பொருளை ஒருவன் தனக்கு எதிர்முகமாக அழைக்கப்படுவதாக வேற்றுமை செய்தலாம் எ - று.

எய்து பெயரீற்றினென்றமையான், வேறுருபின்றென்பது இசை யெச்சமாய் நின்றது.

இயல்பென்றமையான் இவ்வியல்பாய விளியுருபிற்கும் எழுவா யுருபிற்கும் சொல்லான் வேற்றுமையின்றேனும் பொருளான் வேற் றுமை உண்டென்பதூஉம், படர்க்கையோரை யெனவே "ஒரு

1. " காரிருு ணின்ற கடைநாட் கங்குல் " (சிலப். 10 : 3.)

2. " இடைச்சுரத்திற் றன்னை யிடையிருளி னீத்த " (நள. கலி நீங்கு 53.)

3. தென்றிசை யாஅய் குடியின் றுயின் " (புறநா. 132 : 8.)

மொழி யொழிதன் னினங்கொளற் குரித்து" (358) ஆகலிற் படர்க்கை ஐம்பாலும் விளியேற்குமென்பதூஉம், ஏனைத் தன்மை முன்னிலைகள் ஏலாவென்பதூஉம் பெற்றாம்.

தானென்பது அசை நிலை.

ஈறுதிரிதல் முதலிய ஐவகையுருபும் பொருளும் பின்வருஞ் சிறப்புச்சூத்திரங்களான் உணர்க.

இஃது எழுவாயினின்றும் ஒருவாற்றான் வேறுபட்டமையின் இறுதிக்கட்டந்து எட்டாம்வேற்றுமையெனப்பட்டது. (46)

## விளிக்கப்படு பெயர்கள்

304. இஉ ஊவோ டைஒ னளரல
யவ்வீற் றுயர்திணை ஓரவல் லிவற்றொடு
ணஃகான் ஆவீ றாகும் பொதுப் பெயர்
ஞநவொழி யனைத்தீற் றஃறிணை விளிப்பன.

எ - ன், பெயருள் விளிக்கட்படுவன இவையென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இ உ ஊ ஐ ஓ ன ள ர ல ய என்னும் பத்தீற்று உயர்திணைப் பெயரும், இவற்றுள் ஓகாரமும் ரகரமுமான இரண்டும் ஒழித்துநின்ற எட்டுடனே ணகரமும் ஆகாரமுமான இண்ரடுங் கூடிய பத்தீற்றுப் பொதுப்பெயரும், "நாலாறு மீறே" (107) என்ற இவற்றுள் ஞகரமும் நகரமும் இன்றோரன்ன இடங்களில் ஈருகாதென மேலையதிகாரத்து (108) விலக்கிய எகரமொழிந்த இருபத்தோரீற்று அஃறிணைப்பெயரும் விளிக்கப்படுவனவாம் எ - று.

இ உ ஊவோடென்புழிக் குற்றுகரமுற்றுகரமென உகரத்தை விதவாமையின் இரண்டுங்கொள்க.

பெயரென்பதனை இருதிணைக்கண்ணுங் கூட்டுக. விளிப்பன வென்பது வினைமுதல்வினை செயப்படுபொருண்மேல் ஏற்றப் பட்டது. இவ்வீற்றுப்பெயர்கள் விளிக்கப்படுமெனவே ஏனையீற்றுப் பெயர்கள் விளிக்கப்படாவென்பது பெற்றாம். (47)

## பொதுவாகிய விளியுருபு

305. இம்முப் பெயர்க்கண் ணியல்பும் ஏயும்
இகர நீட்சியு முருபா மன்னே.

எ - ன், மூவகைப்பெயர்க்கும் பொதுவாகிய விளியுருபு தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல் விளிக்கப்படுமென்ற மூவகைப்பெயர்க்கண்ணும் இயல்பாதலும் ஏகாரம் மிகுதலும் இகரவீறு ஈகாரவீறுய்த் திரிதலும் விளியுருபாம், பெரும்பாலும் எ - று.

(வ - று.) முனிகூறுய், வேந்துகூறுய், *ஆடூஉகூறுய், விடலைகூறுய், கோக்கூறுய், கோன்கூறுய், வேள்கூறுய், மாந்தர்கூறீர், தோன்றல்கூறுய், சேய்கூறுய்; முனியே, வேந்தே; நம்பீஎன உயர்திணைக்கண் மூன்றுருபும் வந்தன. † பிதாகூறுய், ஆண்கூறுய்; பிதாவே, ஆணே; சாத்தீ எனப் பொதுப்பெயர்க்கண் மூன்றுருபும் வந்தன. ‡ விளகொடியை, புருகொடியை, புல்வாய்கொடியை; விளவே, புருவே, புல்வாயே; மந்தீ என அஃறிணைக்கண் மூன்றுருபும் வந்தன. பிறவுமன்ன.

மன்னேயென்றமையான் இவ்வுருபுகள் சிலவற்றிற்கு ஏலாமையும் இப்பொதுவிதியினும் மேல்வரும் சிறப்புவிதியினும் அடங்காது வரும் உருபுகள் சில உளவேல் அவையுங்கொள்க. (48)

## சிறப்புவிதி

306. ஐயிறு பொதுப்பெயர்க் காயும் ஆவும்
உருபா மல்லவற் றுயு மாகும்.

எ - ன், ஐகாரவீற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஐகாரவீற்றுப் பொதுப்பெயர்க்கு இயல்பும் ஏகாரம் மிகுதலுமன்றி ஐகாரம் ஆயும் ஆவுமாய்த் திரிதலும் உயர்திணை அஃறிணைப்பெயர்க்கு அவ்வுருபுகளன்றி ஐகாரம் ஆயெனத் திரிதலும் உருபாம் எ - று.

(வ - று.) [1]அன்னுய் [2]தந்தாய் எ - ம்,

" ஆவன்ஞ வலந்தே னெழுந்திராய் "

எ - ம் விரவுப்பெயர்க்கண் இரண்டுருபும் வந்தன. விடலாய் மடந்தாய் எனவும்,

" சிறுமீன் கவுட்கொண்ட செந்தூவி நாராய் " (ஐந்திணையெழுபது, 68),

" கொன்றுய் குருந்தே கொடிமுல்லாய் " (திணைமா. நூற். 81)

எனவும் இருதிணைப்பெயர்க்கண்ணும் ஆயுருபு வந்தது. (49)

---

(பி - ம்.) * ஆடூஉக்கூறுய் † பிதாக்கூறுய் ‡ விளக்கொடியை

1. " அன்னுய் வாழிவேண் டன்னை " ஐங்குறு. 210.

2. " தந்தாய் தனியறத்தின் றுயே " கம்ப. கிளைகண்டு. 60.

307. ஒருசார் னவ்வீற் றுயர்திணைப் பெயர்க்கண்
அளபீ றழிவய னீட்சி யதனோ
டீறு போத லவற்றோ *டோவுறல்
ஈறழிந் தோவுற லிறுதியவ் வாதல்
அதனோ டயறிரிந் தேயுற லீறழிந்
தயல்ஏ யாதலும் விளியுரு பாகும்.

எ - ன், னகாரவீற்று உயர்திணைப்பெயர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொதுவிதியன்றி னகரவீற்றுயர்திணைப்பெயர்களுட் சில அளபெழுதலும், சில ஈறுகெடுதலும், சில ஈற்றயல் நீடலும், சில ஈற்றயல்நீண்டு ஈறுகெடுதலும், சில ஈற்றயல் நீண்டு ஈறு கெட்டு ஓகாரம் மிகுதலும், சில ஈறுகெட்டு ஓகாரம் மிகுதலும், சில இறுதினகரவொற்று யகரவொற்ருய்த்திரிதலும், சில இறுதி னகர வொற்று யகரவொற்ருய்த்திரிந்து அயலில் ஆகாரம் ஓகாரமாய் ஏகாரம் மிகுதலும், சில ஈறுகெட்டு அயலில் அகரம் ஏகாரமாதலும் விளியுருபாம் எ - று.

ஒருசாரென்பதனை விளியதிகாரம் அனைத்தினுங் கூட்டுக.

(வ-று.) அம்பர்கிழாஅன், வல்லங்கிழாஅன் என அளபாயின.

" எலுவ சிருஅ ரெம்முறு நண்ப, புலவர் தோழ " (குறுந். 169)

என ஈறழிந்தன நம்பான், [1]பெருமான் என அயல் நீண்டன. [2]இறைவா, [3]மன்ன என அயல்நீண்டு ஈறுகெட்டன. [4]†அய்யாவோ, அப்பாவோ என ஈறுகெட்டு அயல்நீண்டு ஓகாரம் மிக்கன. [5]" திரையவோ ", [6]ஐயவோ என ஈறழிந்து ஓகாரம் மிக்கன. வாயிலாய், ஆதிரையாய் என இறுதி யவ்வாயின.

" வாயி லோயே வாயி லோயே " (புறநா. 206 : 1)

என இறுதி யவ்வொற்ருய் ஈற்றயலாகாரம் ஓகாரமாய் ஏகாரம் மிக்கது.

---

(பி - ம்.) *'டோவரல்' (பி - ம்.) †'ஐயாவோ'

1. " பிறந்தே யெய்த்தொழிந்தேன் பெருமான்றிருமார்பா " பெரிய திரு. 6. 2 : 2.
2. " இறைவா தடவரைத் தோட்கென் கொலாம்புகுந் தெய்தியதே " [சிற். 20.
3. " மன்ன வுனக்கபயம் " நள. கலிநீங்கு. 3.
4. " ஐயா வோவென் றழுவோண் முன்னர் " மணி. 8 : 43.
5. " ஆழியிழைப்ப " (யா. கா. மேற்.) என்னும் பழம்பாட்டி [லுள்ளது.
6. ஐயவோ : " ஆற்லெற னையவோ " சீவக. 1511.

"ஐயே *யெமக்கீங் கருள்"
"மடவை மன்ற வாழிய முருகே" (நற். 34 : 11)

என ஈறழிந்து அயலில் அகரம் ஏகாரமாயின. (50)

308. ளஃகா னுயர்பெயர்க் களபீ றழிவயல்
நீட்சி யிறுதி யவ்வொற் றுதல்
அயலில் அகரம்ஏ யாதலும் விளித்[1]தனு.

எ - ன், ளகாரவீற்றுயர்திணைப்பெயர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ளகாரவீற்று உயர்திணைப்பெயர்க்குப் பொதுவிதி யன்றி அளபெழலும், ஈறுகெடலும், அயல் நீளலும், இறுதி ளகர வொற்று யகரவொற்றுதலும் ஈற்றயல் அகரம் ஏகாரமாதலும் விளியுருபாம் எ - று.

(வ - று.)

"மேவார்த் தொலேத்த விறன்மிகு வேளள்"

என அளபாயிற்று.

"துனிகொள்ள லெல்லாநீ" (கலி. 35 : 8)

என ஈறு கெட்டது. நமர்காள், எமர்காள் என ஈற்றயல் நீண்டன. குழையாய், வாயிலாய் என இறுதி ளகரவொற்று யகரவொற்றுயின.

"தலேமீது கொள்வெ மடிகேள்" (திருநூற். 63)

என ஈற்றயல் அகாரம் ஏகாரமாயிற்று.

எல்லாவென்பது தோழிமுன்னிலேப்பெயரன்றே? விளி யேலாதென விலக்கப்பட்ட அம்முன்னிலேப்பெயரை ஈண்டுக் காட்டியதென்னேயெனின்,

"முன்னிலே, எல்லீர் நீயிர் நீவிர் நீர்நீ
அல்லன படர்க்கை" (285)

என்று வரையறுக்கப்பட்டமையின், தோழனென்னும் பொருட் டாகிய ஏடன் என்னும் படர்க்கைப்பெயர் விளியேற்றமையின், [2]ஏடாவென்பது தோழன்முன்னிலேப்பெயரென்றும், தோழி

---

(பி - ம்.) *'யெமக்கருள்'

1. தனு - உருபு; "ஆலு மானு மோடு மொடுவும், சாலு மூன்றும் வேற்றுமைத் தனுவே" அகத்தியம்.

2. "ஏடா வழிய லெழுந்திது கொள்ளாய்" (மணி. 14 : 12); சேட னென்பது ஏடனென்றுகி விளியுருபேற்று நின்றதெனக் கொள்வர் சிலர்.

யென்னும்பொருட்டாகிய எல்லாள், [1]ஏடி என்னும் படர்க்கைப் பெயர்கள் விளியேற்றமையின் [2]எல்லாவும் ஏடியும் தோழி முன்னிலைப்பெயரென்றுங் கூறப்பட்டனவன்றி அவை இயல்பாய் நின்ற முன்னிலைப்பெயரல்லவென்க. (51)

309. ரவ்வீற் றுயர்பெயர்க் களபெழ லீற்றயல்
அகரம் இஈ யாத லாண்டைஆ
ஈயாத லதனோ டேயுற லீற்றே
மிக்கயல் யாக்கெட் டதனய னீடல்
ஈற்றின் ஈருற லிவையுமீண் டுருபே.

எ - ன், ரகாரவீற்று உயர்திணைப் பெயர்க்கு எய்தியன் மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொதுவிதி (305) யன்றி ரகாரவீற்று உயர்திணைப் பெயர்க்கு அளபெழலும், ஈற்றயலகரம் இகரமாதலும், ஈகாரமாதலும், அவ்விடத்து ஆகாரம் ஈகாரமாதலும், அதனோடு ஏகாரமேற்றலும், ஈற்றில் ஏகாரம் மிக்கு அயலில் யாக்கெட்டு அதனயல் இகரம் ஈகாரமாதலும், ஈற்றின் ஈராதலும் விளியுருபாம் எ - று.

(வ - று.) சிறுஅர், மகாஅர் என அளபாயின.

"என்னைமுன் னில்லன்மின் றெவ்விர்" (குறள், 771)

என அகரம் இகரமாயிற்று. வேந்தீர் [3]நாய்கீர் என அகரம் ஈகாரமாயின. சான்றீர், மடவீர் என ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாயின.

"பல்சான்றீரே பல்சான்றீரே" (புறநா. 195),

கணியீரே என ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாய் ஏகாரமேற்றன. நம்பீரே, தம்பீரே தோழீரே, தொழும்பீரே என ஈற்றில் ஏகாரம் மிக்கு அயல்யாக்கெட்டு அதனயல் இகரம் ஈகாரமாயின. எமரீர், தமரீர் என ஈரேற்றன.

ஈண்டென்றமிகையானே, கடலாரே கடலீரே, கழியாரே கழியீரே, சாத்தியாரே சாத்தியீரே, கொற்றியாரே கொற்றியீரே

1. "பேசுவதுந் திருவாயான் மறைபோலுங் காணேடி" (திருவா. திருச்சாழல், 1); "கானமருங் கல்லதர்போய்க் காடுறைந்தான் காணேடி" (பெரியதிரு. 11. 5 : 1.); இச்சொல்லைச் சேடியென்பதன் சிதைவென்பர்.

2. "எலாவு மேடியுந் தோழிமுன் னிலைப்பெயர்" திவாகரம், 2-ம் தொகுதி.

3. "ஏகீர் நாய்கீ ரென்செய்து மென்பார்" யா. கா. செய். 7, மேற்.

என அஃறிணைப்பெயர் விரவுப்பெயர்களைச் சிறப்பித்து ரகர வீற்று உயர்திணைப் பெயர்போலக் கூறியவழியும் இவ்வுருபேற்றல் கொள்க. (52)

310. லகாரவீற் றுயர்பெயர்க் களபய னீட்சியும்
யகார வீற்றிற் களபுமா முருபே.

எ - ன், லகார யகாரவீற்று உயர்திணைப்பெயர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொதுவிதியன்றி லகாரவீற்று உயர்திணைப் பெயர்க்கு அளபெழலும், ஈற்றயல் நீடலும், யகாரவீற்று உயர்திணைப்பெயர்க்கு அளபெழலும் உருபாம் எ - று.

உயர்பெயரென்பதனை யகாரவீற்றின்கண்ணும் உம்மையை அளபென்பதன்கண்ணும் கூட்டுக.

(வ - று.)

" வலம்புரித் தடக்கை மாஅ னின்னிறம் " (யா. வி. மேற்.) எ - ம்.

[1] " தோன்றல்", [2]"மடவரால்", "தாழ்குழால்" எ - ம், [3]" சேஎய் " எ - ம் வரும். (53)

311. னவ்வீற் றுயர்திணை யல்லிரு பெயர்க்கண்
இறுதி யழிவத னோடய னீட்சி.

எ - ன், னகரவீற்று அஃறிணைப்பெயர்க்கும் விரவுப்பெயர்க்கும் எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொதுவிதியன்றி னகரவீற்று அஃறிணைப் பெயர்க்கண்ணும் விரவுப் பெயர்க்கண்ணும் இறுதிகெடுதலும் அதனோடு ஈற்றயல் நீடலும் விளியுருபாம் எ - று.

இறந்ததுதழீஇய எச்சவும்மைகளும் விளியுருபாமென்பதூஉம் தொக்குநின்றன.

(வ - று.) [4]அலவ இகல கலுழ எ - ம், அலவா இகலா கலுழா எ - ம், சாத்த கொற்ற எ - ம், சாத்தா கொற்றா எ - ம் வரும். (54)

312. ளவீற் றஃறிணைப் பெயர்பொதுப் பெயர்க்கண்
ஈற்றய னீட்சியு முருபா கும்மே.

---

1. " தோன்றலென் கண்களிப்ப வின்னமுமென் றோன்றிலையே " நைடதம், பிரிவுறு. 13.

2. " கடலின் பெருமை கடவார் - மடவரால் " நன்னெறி, 26.

3. " அலந்தோர்க் களிக்கும் பொலம்பூட் சேஎய் " முருகு. 271.

4. " ஆங்கலவ வோடி, ஒளிக்கின்ற தென்னோ வுரை " நள. கலி நீங்கு. 21.

எ - ன், லகார ளகாரவீற்று அஃறிணைப்பெயர்க்கும் விரவுப் பெயர்க்கும் எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொதுவிதியன்றி லகார ளகாரவீற்று அஃறிணைப் பெயர்க்கண்ணும் விரவுப்பெயர்க்கண்ணும் ஈற்றயல் நீடலும் விளியுருபாம் எ - று.

"காட்டுச்சா ரோடுங் குறுமுயால்", [1]"கிளிகாள்" எ - ம். "தூங்காய்", [2]"மக்காள்" எனவும் வரும். (55)

## விளியுருபுக்குப் புறனடை

313. அண்மையி னியல்புமீ றழிவுஞ் சேய்மையின்
அளவும் புலம்பின் ஓவு மாகும்.

எ - ன், மேல்விதந்த விளியுருபுகட்கு ஆவதொரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற்போந்த விளியுருபுகளுள் இயல்புகளும் ஈறழிவு களும் அண்மைவிளிக்கண்ணும், அளபுகள் சேய்மை விளிக்கண் ணும், ஓகாரங்கள் புலம்பல்விளிக்கண்ணும் வரும் எ - று.

எனவே ஏனை விளியுருபுகள் அண்மை சேய்மை புலம்பென் னும் மூன்றிடத்தும் விராய்வருமென்பது பெற்றும். (56)

314. நுவ்வொடு வினாச்சுட் டுற்ற னளர
வைதுத் தாந்தான் இன்னன விளியா.

எ - ன், "இ உ ஊவோடு" (304) என்னுஞ் சூத்திரத்திற்கு ஆவதொரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல் விளிக்கப்படுமென்றவற்றுள் நுவ்வுடனே மூன்றுமுதல்வினாவையும் மூன்றுசுட்டையும் வரன்முறையே பொருந்திய ன ள ர என்னும் மூன்றீற்று உயர்திணைப்பெயர் களும், வை து என்னும் இரண்டீற்று அஃறிணைப்பெயர்களும், தானென்னும் பொதுப்பெயரும் விளிக்கப்படா எ - று.

இங்ஙனம் விதந்த கிளைப்பெயர், வினாப்பெயர், சுட்டுப் பெயர்களின் இடைநிற்குமெழுத்தையொழித்து முதலெழுத் தோடுற்றதாக இறுதி ன ள ரக்களைக் கூறினமையின் வரன்முறை யென்றும்.

நுவ்வொடு வை து என்னும் இரண்டும் பொருந்தாவென்பார் அதனை ஒடுக்கொடுத்துப் பிரித்தார்.

---

1. "யான்வளர்த்த கிளிகாள்" திருவாய். 6. 8 : 5.
2. "மக்காணீர், என்மக்கள் போல்கின்றீர்" நள. கலிநீங்கு. 57.

மகரவீற்றுப்பொதுப்பெயர் முன்னரே (304) விலக்கப்பட்டமையின், ஈண்டுத் தாமென்றது அசைநிலை.

(வ - று.) நுமன் நுமள் நுமர் எ - ம், எவன் எவள் எவர் எவை எது யாவன் யாவள் யாவர் யாவை யாது ஏவன் ஏவள் ஏவர் ஏவை ஏது எ - ம், அவன் அவள் அவர் அவை அது இவன் இவள் இவர் இவை இது உவன் உவள் உவர் உவை உது எ - ம், தான் எ - ம் வரும்.

இன்னன வென்றமையானே பிறன் மற்றையானென்றற்றொடக்கத்தனவும் கொள்க. (57)

## இரண்டாமுருபுக்குப் புறனடை

315. முதலை ஐயுறிற் சினையைக் கண்ணுறும்
அதுமுதற் காயிற் சினைக்கை யாகும்.

எ - ன், முதல்சினைத்தொடர்பின்கண் இரண்டாமுருபுவரின் முதல்சினையிரண்டன்பாலும் வாராது தடுமாறிவருதலே மரபெனப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முதலினை ஐயுருபு பொருந்திற் சினையினைக் கண்ணுருபு பொருந்தும்; அதுவுருபு முதலுக்கு வரிற் சினைக்கு ஐயுருபு வரும் எ - று.

" ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே " (358)

என்பதனான் ஆருவதன் பன்மையுருபும் கொள்க.

இதனை இரட்டுறமொழிதலென்னு முத்தியான், அதுவென்பதனைச் சுட்டாக்கிக் கண்ணுருபு முதற்காயிற் சினைக்கு ஐயாகு மெனவும் பொருளுரைத்துக்கொள்க.

(வ - று.) யானையைக் காலின்கண் வெட்டினான் யானையது காலை வெட்டினான் யானையின் கால்களை வெட்டினான் யானையின்கட் காலை வெட்டினான் எ - ம், கையினை விரலின்கட் பிடித்தான் கையது விரலைப் பிடித்தான் கையின் விரல்களைப் பிடித்தான் கையின்கண் விரலைப் பிடித்தான் எ - ம் வரும்.

இங்ஙனங் கூறவே யானையைக் காலை வெட்டினானென இரண்டன்பாலும் ஐயுருபு வாராதென்றாராயிற்று. வரின் செயப்படுபொருள் இரண்டாய் முதல் சினைகள் ஒருபொருட் பகுதியவல்லவாமாதலின், இங்ஙனஞ் செய்யப்பட்டது ஒருபொருளே, முதல் சினைகள் ஒருபொருட்பகுதியவே யென்பது தோன்றக் கண்ணுருபும் அதுவுருபும் வருமென்பதாயிற்று.

இவ்வாறன்றி ஒரோவழி முதல்சினைகளிரண்டன்பாலும் ஐயுருபு வரின், "யாத னுருபிற் கூறிற் றுயினும்" (317) என்னும் சூத்திரத்தான் முதலின்பால் ஐயுருபை அதுவுருபாயேனும் சினையின்பால் ஐயுருபைக் கண்ணுருபாயேனும் திரிக்கப்படுமென்க. (58)

316. முதலிவை சினையிவை யெனவே றுளவில
உரைப்போர் குறிப்பின வற்றே பிண்டமும்.

எ - ன், மேல் (315) முதல்சினையிரண்டன்பாலும் ஐயுருபு வாராதென அருத்தாபத்தியாற் கூறினர்; அங்ஙனம் வாராமைக்கு ஏதுவும் மேலைச்சூத்திரப்பொருளோடு இப்பொருளைப் பிண்டப் பொருளுக்கும் ஏற்பித்தலும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) கடங்களிவை படங்களிவை என்றுற்போல முதற் பொருள்கள் இவை சினைப்பொருள்கள் இவையென இரண்டாக வேறுள்ளனவிலவாம்; ஒரு பொருளையே இரண்டாகப் பகுத்துக் கூறுவார் குறிப்பின் மாத்திரையவேயாம்; பிண்டப் பொருளும் அத்தன்மைத்தாம் எ - று.

யானையைக்குறித்தவழி யானையுண்டாய்க் கால் கை கோடு முதலியன வேறில்லையாய், கால் கை கோடு முதலியவற்றைக் குறித்தவழி அவையுண்டாய் யானை வேறில்லையாய் நிற்கும் ஒரு பொருட்பகுதியவாதலின் இவ்வாறு கூறப்பட்டன.

வேறுளவிலவென்றமையான், யானையைக் காலை வெட்டினுன் என ஐயுருபு முதல்சினை இரண்டன்பாலும் வாராமைக்கு ஏதுக் கூறினுராயிற்று.

இனி, ஒருபொருட்கண் முதலைக் கருதிச் சினையெனவும் சினையைக்கருதி முதலெனவும் கூறுதற்போலப் பிண்டித்த பொருள் களைக் கருதியல்லது பிண்டமெனல் கூடாமையிற் பிண்டமும் அற்றே யென்றதுணையானே பிண்டித்த பொருள்களும் அனையவே யென்பது தாமே போதருமென்க. அவை வருமாறு: நெல்லைப் பொலியின்கண் வாரினுன், நெல்லினது பொலியை வாரினுனென வரும். நெல்லைப் பொலியை வாரினுனென இரண்டன்பாலும் ஐயுருபு வாராது. இப்பிண்டப் பொருளாகிய பொலிக்குப்பையும் பிண்டித்த பொருள்களாகிய நெல்லும் முதல்சினை யனையவாய் வேறுள இலவாமாதலினென்க.

இச்சூத்திரத்திற்கு இவ்வாறன்றி யானையது கோடு, கோட்டது நுனி என ஒன்றற்குச் சினை மற்றென்றற்கு முதலாயும் ஒன்றற்கு முதல் மற்றென்றற்குச் சினையாயும் நியதியின்றி வருதலின்

இவையே முதல் இவையே சினையென வேறறியக் கிடப்பனவில்லை; அவை சொல்லுவோர் குறிப்பினான் ஆங்காங்கு முதல் சினையென உணரப்படுவனவாம். நெல்லினது குப்பை, குப்பையினது நெல் எனப் பிண்டப்பொருளும் அத்தன்மைத்தாய்க் கிழமையாய் நின்றது கிழமைத்தாயும், கிழமைத்தாய் நின்றது கிழமையாயும் நியதியின்றிச் சொல்லுவோர் குறிப்பினான் அறிய வருமெனப் [1]பொருள் கூறுவாருமுளர். இப்பொருள் முதல்சினை இரண்டன் பாலும் ஐயுருபு வாராமைக்கு ஏதுவாகாமையானும், இவ்வாறு முதலுஞ்சினையும் வருதல் வெளிப்படையாதலின் இவற்றை உரைப் போர் குறிப்பினவெனக் கூறவேண்டாமையானும், ஆசிரியர் தொல்காப்பியனாரும் முதல்சினைகள் ஒரு பொருட் பகுதியவென் பது தோன்ற,

" முதலுஞ் சினையும் பொருள்வே றுபடா " (வேற்றுமைமயங். 6)

என்றமையானும் இப்பொருளும் இதனோடு மாட்டெறிந்த பொருளும் பொருந்தாவென்க. (59)

## உருபு மயக்கம்

317. யாத னுருபிற் கூறிற் றாயினும்
பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்.

எ - ன், வேற்றுமையுருபுகள் மயங்கி ஒன்று நிற்கும் நிலைக் களத்து மற்றொன்று வரினும் அமையுமெனப் புறனடை உணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) ஒரு வேற்றுமைப்பொருள் மற்றொரு வேற்றுமை யுருபாற் கூறப்பட்டதாயினும் அவ்வுருபு மயங்கி வந்தமையின் அவ்வுருபு சென்றவழியே பொருள் சாராது, பொருள் சென்ற வழியே அவ்வுருபு சாரும் எ - று.

எனவே அங்ஙனம் மயங்கிவந்த உருபைப் பொருளுக்கு இயைந்த உருபாகத் திரித்துப் பொருள்கொள்க வென்பதாயிற்று.

(வ - று.)

" நாகு வேயொடு நக்கு வீங்குதோள் "

என்புழி, நாகு வேய் உடனிகழ்ச்சிப் பொருளாகாது செயப்படு பொருளாய் நிற்றலின் ஒடுவுருபை ஐயுருபாகத் திரித்துக்கொள்க.

" கிளையரி நாணற் கிழங்கு மணற்கீன்ற
முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய் " (அகநா. 212 : 4-5)

1. பொருள் கூறுபவர் மயிலைநாதர்.

என்புழி மணல் ஏற்றுக்கோடற்பொருளாகாது இடப்பொருளாய் நிற்றலிற் குவ்வுருபைக் கண்ணுருபாகத் திரித்துக்கொள்க. பிறவுமன்ன.

வேற்றுமையுருபு மயங்கிவரிற் பொருளுணோக்கித் திரித்துக் கொள்ளவேண்டுமெனவே வேற்றுமைப் பொருள்கள் * மயங்கா என்பதும் பெற்றும்.[1] (60)

## உருபு திரிதல்

318. ஐயான்குச் செய்யுட் கவ்வு மாகும்
ஆகா வஃறிணைக் கானல் லாதன.

எ - ன், சிலவேற்றுமையுருபு செய்யுட்கண் திரிந்துவரினும் அமையுமெனப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஐ ஆன் கு என்னும் மூன்றுருபும் செய்யுளகத்து ஒரோவழி அகரமாகத் திரிந்துவரவும் பெறும்; அஃறிணைக் கண்ணெனின் ஆனென்றுமே திரியும்; ஐயும் குவ்வும் திரியா எ - று.

'ஆகா வஃறிணைக் கானல் லாதன' எனவே உயர்திணைக்கண் மூன்றுருபும் திரியுமென்பது பெற்றும்.

(வ - று.) "காவலோனைக் களிறஞ்சும்மே" என்பது "காவ லோனக் களிறஞ்சும்மே" என்றும், "புலவரான்" என்பது, "புலவரான" என்றும், "கடிநிலை யின்றே யாசிரி யற்கு" என்பது, "கடிநிலை யின்றே யாசிரி யற்க" (தொல். புள்ளி. சூ. 94) என்றும் உயர்திணைக் கண் மூன்றுருபும் திரிந்தன. "புள்ளி னான்" என்பது "புள்ளினை" என ஆனுருபொன்றும் அஃறிணைக்கண் திரிந்தது. அவ்வுமாகுமென்னும் இழிவு சிறப் பும்மையான் இங்ஙனந்திரிதல் ஒருதலையன்றென்க.

அகரமாகத்திரியுமென்றமையின், ஆனும் குவ்வுந்திரிந்துழி அவற்றின் முன்னின்ற ஆனும் குவ்வும் சாரியை யென்பது பெற்றும். அல்லது, அவ்வுமாகுமென்பதனை இரட்டுறமொழித லாக்கி ஐயுருபு அகரமாய்த் திரியவும்பெறும்; ஆனுருபும் குவ்வுரு பும் அகரத்தின் கண்ணுகவும் பெறுமெனப் பொருள் கோடலு மொன்று. (61)

(பி - ம்.) * 'மயங்கா வென்பதூஉம்'

1. இதன்பின்னர், 'தடுமாறுருபுகள்தாஞ் சிலவுளவெனவும் ஒரு பொருட்கே தத்தம் உருபுகள்போல வேறுருபுகள் வருவனவுள எனவும் கொள்க' எனக் கூறி அவற்றிற்கு உதாரணங்காட்டுவர் சிவஞான முனிவர்.

## முடிக்குஞ் சொல்

319. எல்லை இன்னும் அதுவும் பெயர்கொளும்
அல்ல வினைகொளு நான்கே ழிருமையும்
புல்லும் பெரும்பாலு மென்மனார் புலவர்.

எ - ன், [1]எழுவாய்க்குப் பயனிலை கூறிப் போந்தமையின் ஒழிந்த ஏழு வேற்றுமைக்கும் பயனிலை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) 'நீங்கலொப் பெல்லை யேதுப் பொருளே' (299) என்னும் நான்கு பொருள்களுள் எல்லைப்பொருட்டாகிய ஐந்தாம் வேற்றுமையும், ஆறும் வேற்றுமையும் பெயரைக் கொண்டு முடியும்; ஒழிந்த வேற்றுமைகளெல்லாம் வினையைக் கொண்டு முடியும்; அவற்றுள், நான்காம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் வினையினையேயன்றி வினையொடு பொருந்தும் பெயரையும் கொண்டு முடியும், பெரும்பாலுமென்று சொல்லுவர் புலவர் எ - று.

நான்கேழ் பெயரும் புல்லுமென்னாது இருமையும் புல்லு மென்றமையான், வினையொடு பொருந்தும் பெயரென்றும்.

(வ - று.) கருவூரின் கிழக்கு, சாத்தனது கை என எல்லை இன்னும் அதுவும் பெயர் கொண்டன. குடத்தை வனைந்தான் குடத்தையுடையன், வாளால் வெட்டினான் வாளால் வலியன், சாத்தனுக்குக் கொடுத்தான் சாத்தனுக்கு நல்லன், நோயினீங் கினான் நோயிற் கொடியன், அவையின்கணிருந்தான் அவையின் கட்பெரியன், கொற்றுகொள் கொற்று வலியை என அல்லன வினை கொண்டன. பிணிக்கு மருந்து (குறள், 1102), மணியின் கண் ணொளி என நான்காம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் வினையேயன்றிப் பெயருங் கொண்டன. இப்பெயர்கள் எல்லை இன்னும் அதுவுங் கொள்ளும் பெயர்கள் போலாது பிணிக்குக் கொடுக்கும் மருந்து, மணியின்கண் இருக்குமொளி என வினை வேண்டி நிற்றலின், வினையொடு பொருந்தும் பெயர்களாயின. இங்ஙனமாதலின் இவற்றிற்கும் வினைப்பயனிலையொன்றுமே சிறந்ததென்பதூஉம், இதுகருதி அல்ல வினைகொளுமென முடித் தோதினாரென்பதூஉம், பெற்றும்.

வினைகொளுமெனப் பொதுப்படக் கூறினமையிற் காட்டா தொழிந்த வினைவிகற்பங்களெல்லாம் வருவித்து முடித்துக்காண்க.

1. 'எழுவாய் முதலிய எட்டு வேற்றுமைக்கும் முடிக்குஞ் சொல் உணர்த்துதல் நுதலிற்று' என்பர் சிவஞான முனிவர்.

பெரும்பாலுமென்றமையானே, வினைகொளற்குரியன சிறு பான்மை தொழிற்பெயர் கோடலும் வினையாலணையும் பெயர் கோடலும் கொள்க; குடத்தை வனைதல், குடத்தை வனைந்தவன் என வரும். பிறவுமன்ன. இங்ஙனங் காட்டாதொழிந்த உருபுக ளோடும் இவ்வாறே யொட்டுக.

இனி, பெரும்பாலுமென்பதற்குச் சிறுபான்மை சாத்தனது வந்தது, சாத்தனது நன்று என ஆறுவது வினைகொள்ளும் எனப் [1]பொருள் கூறுவாருமுளர் ;

" ஆற னுருபு மேற்குமவ் வுருபே " (293)

என்பதனானே ஆறுமுருபு எழுவாயாய் நின்று வினைப்பயனிலை கொண்டதாம் ; அன்றி ஆறனுருபு வினையாலணையும் பெயர்ப் பயனிலை கொண்டதாம் ; ஆகலின் அது பொருந்தாதென்க.

பொருண் முற்றி நின்றனவெல்லாம் பயனிலை யெனப்படு மாயினும் எழுவாயின் பயனிலையே பயனிலையாவதன்றி ஒழிந்த உருபுகட்கென வேறொரு பயனிலையின்மையின்,

" வினைபெயர் வினாக்கொள லதன்பய னிலையே " (295)

என்றாற்போல ஈண்டும் பயனிலையென்னாது பெயர்கொளும், வினைகொளுமென வாளா கூறினாரென்க. அஃதென்னையெனின், குடத்தை வனைந்தானென்புழிக் குலாலன் குடத்தை வனைந்தா னென வனைந்தானென்னும் வினை குலாலனென்னும் எழுவா யினது பயனிலையாயும், கருவூரின் கிழக்கு என்புழிச் சோணாடு கருவூரின் கிழக்கு எனக் கிழக்கென்னும் பெயர் சோணாடென்னும் எழுவாயினது பயனிலையாயும், கொற்றுகொள் என்புழிக் கொற்று நீ கொள் எனக் கொள்ளென்னும் ஏவல்வினை நீ யென்னும் எழுவாயினது பயனிலையாயும் வருதலாம். ஒழிந்த உருபுகள் கொள்ளும் பெயர்வினைகளும் அன்ன. (62)

1. பெயரியல் முற்றிற்று.

---

1. பொருள் கூறுபவர் மயிலைநாதர்.

## இரண்டாவது
# வினையியல்

---

### தெரிநிலைவினையின் பொதுவிலக்கணம்

320. செய்பவன் கருவி நிலஞ்செயல் காலம்
செய்பொரு ளாறுந் தருவது வினையே.

எ - ன், "பெயர்வினை யெனவிரண் டாகும்" (270) என நிறுத்த முறையானே வினைச்சொல் இலக்கணம் உணர்த்துவான் தொடங்கி அவற்றுள் தெரிநிலைவினைச் சொல்லின் பொதுவிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

வருஞ்சூத்திரத்தான் வினைக்குறிப்பென்றமையின், இது தெரிநிலையென்பது பெற்றும்.

(இ - ள்.) கருத்தாவும் கருவியும் இடமும் செயலும் காலமும் செயப்படுபொருளுமாகிய அறுவகைப் பொருளையும் தருவது தெரிநிலைவினைச்சொல்லாம் எ - று.

வினையென்றது ஆகுபெயர். நட வா முதலியவெல்லாம் தழுவுதற்குச் செய்யென்றார்.

செய்பவனென ஒருபால்மேல் வைத்து ஓதினரேனும்,

"ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" (358)

என்பதனன் ஐம்பாலும் கொள்க.

செய்பவனென்றும் கருவியென்றும் பொதுப்படக்கூறினமையின் இயற்றுதற்கருத்தா ஏவுதற்கருத்தாவென்னும் இரண்டினையும், முதற்காரணம் துணைக்காரணமென்னும் இரண்டினையும் கொள்க.

செய்பவனென்பது செய்பவனாகிய பொருளென்னும் பயத்ததாய் நிற்றலின், ஆறுமென்னும் அஃறிணைத்தொகைச் சொல்லோடு முடிந்தது. அன்றித் திணை விரவி அஃறிணை முடிபின ஆயின வெனினும் அமையும்.

(வ - று.) வனைந்தானென்புழிக் குலாலனாகிய இயற்றுதற் கருத்தாவும், மண்ணாகிய முதற்காரணமும், தண்டசக்கர முதலிய துணைக்காரணங்களும், வனையும், இடமும், வனைதற்செயலும், இறந்தகாலமும், குடம் முதலிய செயப்படுபொருளும் தோன்றுதல் காண்க. அரசன் ஆலயஞ் செய்தானென்புழி அரசனென்பது ஏவுதற்கருத்தா; இஃது இயற்றினான்றெழிற்கு ஏவினானைக்

கருத்தாவாக்கிக் கூறுதலின் ஏவுதற்கருத்தாவெனப்படும். அரசன் ஆலயஞ்செய்வித்தானென்பது ஏவுதற்கருத்தா [1] என்பாருமுளர். செய்தற்றொழிலைத் தச்சன் இயற்றினாற்போலச் செய்வித்தற்றொழிலை அரசன் இயற்றுதலின் இத்தொழிற்கு அரசனும் இயற்றுதற் கருத்தாவேயாமென்க.

"முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்" (426) என் பதனால், ஆறுந்தருவது வினையென்பதற்கு இத்தொகையிற் சில குறைந்துவரவும் பெறுமெனப் பொருளுரைத்துக்கொள்க. அவை வருமாறு : கொடியாடிற்று, கொடிதுஞ்சுமென்புழி முன்னையது செய்யப்படுபொருளும், பின்னையது செய்யப்படு பொருளொடு கருவியும் குறைந்துவந்தன. கொடிதுஞ்சுமென்பதற்குக் காற்றினது அபாவத்தைக் கருவியாகக் கூறினும் அமையும்.

இன்னும் ஆறுமென்னும் முற்றும்மையை உயர்வுசிறப்பும்மை யாக்கி இழிந்தன சிலவுள, அவையும் வேண்டுமேற் கொள்க எனவும் பொருளுரைத்துக்கொள்க. அவை யாவையெனின், இன்னதற் கெனவும் இதுபயனெனவும் வருவனவாம். குடத்தைத் தனக்கு வனைந்தான் பிறர்க்கு வனைந்தானென்னும் இன்னதற்கென்ப தூஉம், அறமுதலிய பயன்கருதி வனைந்தானென்னும் இது பயனென்பதூஉம் ஏதுவின்பாற்பட்டுக் கருவியுள் அடங்கவும் பெறுமாதலின் இழிந்தனவாயின. இப்பொருளை, "முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்" (426) [2] என்பதன்பாற்படுத்து ஆறுந்தருவது வினையே எட்டுந்தருவது வினையேயென அமை யாதோவெனின், இவ்விரண்டுடன் எட்டாய் வருவதன்றி ஆறே வருவதொரு வினையின்மையின் அமையாதென்க.

முற்றுவினைகளுட் பகுதியாற் செயலும், விகுதியாற் கருத்தா வும், இடைநிலை முதலியவற்றாற் காலமும், பெயரெச்சவினையெச் சங்களில் இம்முறையே செயலும் காலமும் தோன்றின. அங்ஙன மாதலின், முற்றுச்சொல்லான் மூன்றும் எச்சச்சொல்லான் இரண்டுமென்னாது ஆறுந்தருவது வினைச்சொல்லென்றது என்னை யெனின், இவ்வாறுங் காரணமாகக் கூடுங்கூட்டத்து இவற்றுட் செயலென்னுமுதற்காரணத்தினின்றும் ஒருவினையாகிய காரியம் நிகழுமாதலின், இவ் வாறுகாரணத்தையுந் தரும் *காரியமாகிய வினையின்றொழிலை ஒற்றுமைநயங்கருதி அதன் சொன்மேல் ஏற்றப் பட்டது. காரணத்தைக் காரியந் தருமென்பது,

(பி - ம்.) * 'காரியமாக'

1. இங்ஙனம் கூறுபவர் மயிலைநாதர்.
2. இவ்விதியின்பாற்படுத்து இப்பொருளை அமைப்பர் மயிலைநாதர்.

"புகைதன் னுதியான வனல்காட்டலாகும்" சிவஞா. சுபக்கம். 10அளவை) என்றுற்போலும். இங்ஙனமாகவே செய்பவன் முதலிய ஆறனுள் முற்றின்கண் மூன்றும் எச்சத்தின் கண் இரண்டும் வெளிப்படையாயும் ஏனைய குறிப்பாயும் தோன்று மென்பதாயிற்று. இவ்வாறும் காரணமாகவே, இவற்றுட் செய லென்றது காரியமாகிய வினையடியையன்றென உணர்க.

"கால மறிதொழில் கருத்தனே டியையப்
பால்வகை தோறும் படுமொழி வேறே"

என ஆசிரியர் அவிநயனுர் கூறியவாறும்,

"வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்" (வினை. சூ. 1)

என ஆசிரியர் தொல்காப்பியனுர் கூறியவாறும் காண்க. (1)

## குறிப்புவினையின் பொதுவிலக்கணம்

321. பொருண்முத லாறினுந் தோற்றிமுன் னுறனுள்
வினைமுதன் மாத்திரை விளக்கல்வினைக் குறிப்பே.

எ - ன், குறிப்புவினைச்சொல்லின் பொதுவிலக்கணம் உணர்த் துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொருளாதி ஆறும் அடியாக அவற்றின்கட் டோன்றி மேற் கருத்தாமுதலாகச் சொன்ன ஆறனுட் கருத்தா வொன்றையுமே விளக்குதல் வினைக்குறிப்புச் சொல்லினது இலக்கணமாம் எ - று.

மேலையதிகாரத்துப் பகுபதவுறுப்புக் கூறியவழித் [1] தெரி நிலைவினைக்கு வினையடிகள் விளங்கிக்கிடந்தமைபோலக் குறிப்பு வினையடி அங்ஙனம் வகைப்பட விளங்காமையின் ஈண்டு விளங்கப் பொருண்முதலாறினும் தோற்றியென்றும், தெரிநிலை வினைபோல் இக்குறிப்புவினைக்கண்ணும் செய்பவன்முதலிய ஆறும் உளவென்பார் முன்னுறனுளென்றும், அவற்றுட் செய்பவனை இச்சொல்லினது விகுதிவிளக்கும், மற்றுள்ளனவற்றுள் ஒன்றேனும் விளக்குதற்குரிய உறுப்பு இதனகத்து இன்றென்பார் வினைமுதன் மாத்திரையென்றும், இது குறிப்புவினையாதலின் இதற்குக் கருத்தாவாக விகுதிப்பொருளைக் கோடலும் குறிப்பாமென்பார் தருவதென்னுது விளக்கலென்றும் கூறினுர்.

(வ - று.) குழையினன் குழையினள் குழையினர் குழையிற்று குழையின குழையினேன் குழையினேம் குழையினை குழையினீர்

1. சூ. 137, பார்க்க.

எ - ம், [1] அகத்தினன் புறத்தினன் எ - ம், [2] ஆதிரையான் [3] ஓணத்தான் எ - ம், குறுந்தாளன் செங்கண்ணன் எ - ம், கரியன் [4] நெடியன் நல்லன் [5] உளன் உடையன் எ - ம், கடுநடையன் [6] இன்சொல்லன் எ - ம்,

" மதிபாய் சடைமுடித்து மாசுணப்பைம் பூட்டுச்
சதிபாய் குறுந்தாட்டுத் தான - நதிபாய்
இருகவுட்டு முக்கட்டு நால்வாய்த்தென் னுள்ளம்
உருகவிட்டு நின்ற வொளி " (உரிச்சொல் நிகண்டு, காப்பு)

எ - ம் வரும். பிறவுமன்ன.

இவை பொருளாதியாறுன் ஒருபொருளை வழங்குதற்கு வரும் பெயராய் நில்லாது இவன் குழையையுடையனுயினனென ஆறும் வேற்றுமையினது உடைமைப்பொருட்கண்ணும், அகத்தின்கண் இருந்தனன் புறத்தின்கண் இருந்தனனென ஏழாம் வேற்றுமையது நிலப்பொருட்கண்ணும், ஆதிரைநாளிற் பிறந்தான் ஓணநாளில் உதித்தானென அவ்வேழாம்வேற்றுமையது காலப்பொருட்கண்ணும், குறுந்தாளையுடையான் செங்கண்ணையுடையானென அவ்வாறும் வேற்றுமையது உடைமைப்பொருட் கண்ணும், கருவண்ணமாயிருப்பன் நெடுவடிவாயிருப்பன் நற்குணமாயிருப்பன் உண்மைத்தன்மையன் உடைப்பொருள் சிறந்தானெனக் குணப்பண்பின்கண்ணும், கடுநடையாக நடப்பான் இன்சொல்லாகச் சொல்லுவானெனத் தொழிற்பண்பின் கண்ணும் வருதலின் வினைக்குறிப்புச் சொல்லாயின.

இவை முன்பு வினைக்குறிப்பாய்ப் பின்பு பொருள்களை வழங்குதற்கு வரும் பெயராய் வரின், அவை குறிப்புவினையாலணையும் பெயராம் ; இவை தம்முள் வேற்றுமையென்க [7].

1. " அளிவரு மருளினோ டகத்தினன் புறத்தின னமைந்தே " (திருவாய்மொழி, 1. 3 : 2.)

2. ஆதிரையான் - சிவபெருமான் ; " ஆதிரை யானை யடிபணிந் தேத்த " (மூதுரை, காப்பு) ; குறிப்புவினைமுற்ருக வரும்வழிக் காண்க ; இச்சொல் ஆர்திரையானெனவும் வழங்கும்.

3. ஓணத்தான் - திருமால் ; " ஓணத் தானுல காளுமென் பார்களே " (பெரியாழ்வார் திருமொழி, 1. 1 : 3.)

4. " நெடியன் தொடியணி தோளன் " (முருகு. 211.)

5. " உள்ளத்து ளெல்லா முளன் " (குறள், 294.)

6. " இன்சொல்லன் றாழ்நடைய னாயினும் " (நீதிநெறி. 11.)

7. இதன்பின்னர் 'குணமடியாகத் தோன்றிய வினைக்குறிப்புச் சொற்கள், குணவிகற்பம் பலவாதலின் பலவிகற்பப்பட்டு வரும்' என உரைத்து உதாரணங்காட்டுவர் சிவஞானமுனிவர்.

குழையினனென்புழிக் குழையையுடையான் வினைமுதல்; இது விகுதியான் விளங்கிற்று. குடத்தின்கண் மண்போல் இவ்வினையாகிய காரியத்தின்கண் முதற்காரணமாகிய செயலுண்டெனவும் காலம் இன்றேல் இது வினையன்றாமாதலானும் முக்காலங்களுள் ஒன்றன்பாற் சார்தற்குரிய இடைநிலை இதற்கு வேண்டாமையானும் முக்காலமும் உண்டெனவும், வினைமுதற்கு ஓர் ஆதாரம் வேண்டுதலின் இடன் உண்டெனவும், ஒன்றை வனைந்தான் ஒன்றால் வனைந்தான் என்றாற்போல இரண்டாவதற்கும் மூன்றாவதற்கும் இது பயனிலையாக ஒன்றைக் குழையினன் ஒன்றாற் குழையினனென இயையாமையின் இதன்கட் செயப்படு பொருளும் கருவியும் இலவெனவும் உய்த்துணர்க. ஒன்றாற் குழையினனென ஒரோ வழி இயையின் அங்ஙனம் கருவியுளதென்று கொள்க. உடையனென்னும் குறிப்புவினை ஒன்றையுடையன் ஒன்றினுலுடையனென வருதலின் இதன்கண் ஆறும் உண்டென்க. இவ்வாறே தெரிநிலை வினைபோலக் குறிப்புவினை பிறவற்றுள்ளும் செய்பவன் முதலிய ஆறும் வருதலும் சில குன்றிவருதலும் உய்த்துணர்க.

வினை, தெரிநிலை குறிப்பென இருகூற்றதாமென இவ்விரு சூத்திரத்தானும் கூறினார்; இவற்றுள் தெரிநிலையின்பாற்பாடும் செய்யானென்றற்றொடக்கத்து எதிர்மறைக்கண்ணும் குறிப்பின்பாற் படும் இலனென்றற் றொடக்கத்து எதிர்மறைக் கண்ணும் வினையில்லையாம். அங்ஙனமாகவும் இவற்றை வினையென்பதூஉம் இவை செய்பவன்முதலிய ஆறுந் தருமென்பதூஉமென்னையெனின், இவற்றை வினையென்பது [1] முயற்கோடு ஆகாயப்பூ என்றாற்போல இன்மையை உண்மைபோல வைத்துக் கூறுவதோர் இலக்கணை. இவை செய்பவன் முதலிய ஆறுந் தருமென்பது, "சீதமின்மை பனியின்மை காட்டல்" (சிவ. சித். சுப. அளவை. 10) போல வினையின்மை, செய்பவன் முதலியவற்றின் இன்மைகளைக் காட்டி நிற்றலையாம். (2)

## வினைச்சொற்களின் வகை

322. அவைதாம்,
முற்றும் பெயர்வினை யெச்சமு மாகி
ஒன்றற் குரியவும் பொதுவு மாகும்.

---

1. "ஒப்பிலா மலடி பெற்ற மகனொரு முயற்கொம் பேறித், தப்பிலா காயப் பூவைப் பறித்தமை சாற்றி னரே" சிவஞானசித். பர. உலகாயத. 6.

எ - ன், மேல் தெரிநிலை குறிப்பெனத் தொகுத்து உணர்த்திய வினைச்சொற்களை வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல் இரண்டு சூத்திரத்தானும் கூறிய தெரிநிலையாயும் குறிப்பாயும் வரும் வினைச்சொற்கள் தாம் முற்றுவினைச் சொற்களும் பெயரெச்ச வினைச்சொற்களும் வினையெச்ச வினைச் சொற்களுமாகித் திணைபாலிடங்களில் ஒன்றற்கு உரியனவும் பொதுமையின் நிற்பனவுமாகும் எ - று.

திணைபாலிடங்களிலென்பது இசையெச்சம். முக்காலங்களில் ஒன்றற்கு உரியவும் பொதுவுமாமாறு [1] பதவியலுட் போந்தமையின் அஃதொழித்துத் திணைபாலிடங்களிலென்றும். உதாரணம் தத்தம் [2] சிறப்புச் சூத்திரங்களான் உணர்க. (3)

## முற்றுவினை

323. பொதுவியல் பாறையுந் தோற்றிப் பொருட்பெயர்
முதலறு பெயரல தேற்பில முற்றே.

எ - ன், மேற்கூறிய முற்றுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தெரிநிலைமுற்றும் குறிப்புமுற்றும் பெயரெச்சமும் பெயரெச்சக் குறிப்பும் வினையெச்சமும் வினையெச்சக் குறிப்புமாகிய அறுவகை வினைக்கும் பொதுவிலக்கணமாகிய செய்பவன் முதலிய ஆறினையும் தோற்றுவித்துப் பொருட்பெயர் முதலிய அறுவகைப் பெயரையும் பயனிலையாக ஏற்பனவாகி அல்லதொன்றனையும் ஏலாதன முற்றுவினை வினைக்குறிப்புக்களாம் எ - று.

ஐம்பாலவாகிய வினைமுதலைத் தரும் விகுதியுறுப்புக் குறைந்த குறைச்சொல்லாகிய எச்சங்களைப் போலாது அவ்வுறுப்போடு கூடி நிறைந்து நிற்றலின் முற்றெனப்படுமென்பார் ஆறையுமென்றும், பெயரன்றி வினைச்சொன் முதலியவற்றுள் ஒன்றையும் ஏலாதன முற்றெனவும் [3] பெயரன்றிப் பெயர்ப்பின் வேறொன்றையும் ஏலாதன முற்றெனவும் இருபொருள் தோன்றப் பெயரலதென்றும் கூறினர்.

(வ - று.) செய்தான் அவன், நல்லன் அவன், குளிர்ந்தது நிலம், வந்தது கார், குவிந்தது கை, பரந்தது பசப்பு, ஒழிந்தது பிறப்பு என வரும். ஏனைத் திணை பால் இடம் காலங்கள் தோறும் ஒட்டுக.

---

1. முக்காலங்களில் ஒன்றற்குரியவை 142-ஆம் சூத்திரம் முதலிய மூன்றனுலும், பொது 145-ஆம் சூத்திரத்தாலும் அறியலாகும்.
2. சூ. 323 முதலியன.
3. இப்பொருளைமட்டுங் கூறுவர் மயிலைநாதர்; 'முற்றி நிற்றலான் முற்று' என்பர் அவர்.

இவற்றுள் ஐம்பாலவாகிய வினைமுதலைத் தரும் விகுதியுறுப்புக் குறையாது முற்றிநிற்றலும் பொருளாதி ஆறுபெயரையன்றி வினைமுதலியவற்றைப் பயனிலையாக ஏலாமையும் பெயர்ப்பின் வேறொன்றையும் ஏலாமையும் காண்க.

" மற்றுச்சொன் னோக்கா மரபி னனைத்தும்
முற்றி நிற்பது முற்றியன் மொழியே"

என்றார் ஆசிரியர் அகத்தியனாருமென்க. (4)

## தெரிநிலைவினைமுற்றின் விகற்பம்

321. ஒருவன்முத லைந்தையும் படர்க்கை யிடத்தும்
ஒருமைப் பன்மையைத் தன்மைமுன் னிலையினும்
முக்கா லத்தினு முரண முறையே
மூவைந் திருமூன் றாறாய் முற்று
வினைப்பத மொன்றே மூவொன் பானும்.

எ - ன், மேற்கூறிய தெரிநிலை குறிப்பென்னும் இருவகை முற்றுள் தெரிநிலைமுற்றொன்றுமே இறப்பு எதிர்வு நிகழ்வென்னும் காலவிகற்பங்களைப் பெறுமென்பதூஉம், அவற்றான் இத்துணையாமென்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல என்னும் ஐம்பாலவாகிய வினைமுற்றுக்களைப் படர்க்கைக்கண்ணும், ஒருமை பன்மையென்னும் இருபாலவாகிய வினைமுற்றுக்களைத் தன்மைக் கண்ணும் முன்னிலைக்கண்ணும் வைத்து முக்காலங்களானும் மாற முறையே படர்க்கைவினைமுற்றுப் பதினைந்தும் தன்மைவினை முற்று ஆறும் முன்னிலை வினைமுற்று ஆறுமாகி முற்றுவினைச் சொல்லொன்றுமே இருபத்தேழாம் எ - று.

ஈண்டு ஒருவனென்றது பெயரையன்று; உயர்திணையாண் பால்வினையை உணர்த்திநின்றதொரு குறிப்புச் சொல்.

ஒருமைப்பன்மையென்புழி இடையே தோன்றிய பகரம் சந்தவின்பப்பொருட்டு விரித்தல் விகாரமாய் வந்தது.

ஒன்றேயென்னும் ஏகாரம் முற்றுவினைப்பதம், முற்றுவினைக் குறிப்புப்பதமென்னும் இரண்டனுள் முற்று வினைப்பதமொன்றுமே மூவொன்பானுமென்னும் பொருள் தந்து நிற்றலிற் பிரிநிலை. இங்ஙனங் கூறவே இவற்குச் செல்வம் முன்னுண்டு, இப்பொழுதுண்டு, பின்னுண்டு என வினைக்குறிப்புப்பதம் முக்காலமுமேற்கு மேனும் காலங் காட்டும் இடைநிலை முதலிய வேண்டாது பொதுமை

யின் நிற்றலின், அதனை இவ்வாறு விரிக்கப்படாதென்பது பெற்றும். (5)

## ஆண்பாற்படர்க்கை வினைமுற்று

325. அன்ஆன் இறுமொழி ஆண்பாற் படர்க்கை.

எ - ன், மேற்கூறிப்போந்த இருவகைமுற்றுள் திணை பால் இடங்களில் ஒன்றற்குரியன உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அன் ஆன் என்னும் இருவிகுதியும் இறுதியாகிய மொழிகள் உயர்திணையாண்பாற் படர்க்கைவினைமுற்றும் வினைக் குறிப்புமுற்றுமாம் எ - று.

ஆண் பெண் என்னும் விகற்பம் அஃறிணைப்பெயர்க்கண் அன்றி அவ்வினைக்கண் இன்மையின், ஆணென்றமையான் உயர் திணையென்பதூஉம், பாலென்றமையான் முற்றென்பதூஉம், மேலைச்சூத்திரத்து முற்றுவினைப்பதமொன்றேயென விதந்தாற் போல இதனுள் விதவாமையின் இருவகைமுற்றிற்கும் பொது வாகக் கூறினரென்பதூஉம் பெற்றும். மேல்வருஞ் சூத்திரங் களும் அன்ன.

(வ - று.) நடந்தனன், நடந்தான் ; நடவாநின்றனன், நடவா நின்றான் ; நடப்பன், நடப்பான் ; குழையன், குழையான் : நம்பி என உயர்திணை ஆண்பாற்படர்க்கைவினைமுற்றும் வினைக்குறிப்பு முற்றும் வந்தன. (6)

## பெண்பாற்படர்க்கை வினைமுற்று

326. அள்ஆள் இறுமொழி பெண்பாற் படர்க்கை.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அள் ஆள் என்னும் இருவிகுதியும் இறுதியாகிய மொழிகள் உயர்திணைப் பெண்பாற்படர்க்கை வினைமுற்றும் வினைக் குறிப்புமுற்றுமாம் எ - று.

(வ - று.) நடந்தனள், நடந்தாள் ; நடவாநின்றனள், நடவா நின்றாள் ; நடப்பள், நடப்பாள் ; குழையினள், குழையாள் : நங்கை என வரும். (7)

## பலர்பாற்படர்க்கை வினைமுற்று

327. அர்ஆர் பவ்வூர் அகரமார் ஈற்ற
பல்லோர் படர்க்கைமார் வினையொடு முடிமே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அர் ஆர் ப மார் என்னும் நான்கு விகுதியினையும் இறுதியாகவுடைய மொழிகள் உயர்திணைப்பன்மைப் படர்க்கை வினைமுற்றும் வினைக்குறிப்பு முற்றுமாம். இவற்றுள், மாரீற்று வினைமுற்றுப் பொதுவிதி (323) யாற் பெயருடன் முடிவதன்றி வினையுடனும் முடியும் எ - று.

"மாரெதிர்வும் பாந்தஞ் செலவொடு வரவும்" (145) எனப் பதவியலுட் கூறினமையின் இவ்விருவிகுதியும் குறிப்புமுற்றின் கண் வாராவெனவும், மார் வினையுடனும் முடியுமென்றமையின் இதற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி வகுத்தாரெனவும், வினையொடு முடிமே யென்புழி இறந்ததுதழீஇய எச்சவும்மையின்றெனக்கொள்ளினும் அமையக்கூறினமையின் வினையொடு முடிதல் போற் பெயரொடு முடிதல் பயின்றுவருவதன்றெனவுங்கொள்க.

(வ - று.) நடந்தனர், நடந்தார்; நடக்கின்றனர், நடக்கின்றார்; நடப்பர், நடப்பார்; குழையினர், குழையார்; அவர் எ - ம், நடப்ப, [1]எய்துப, சொல்லுப, புல்லுப : அவர் எ - ம்,

"பெரிய வோதினுஞ் சிறிய வுணராப்
பீடின்று பெருகிய திருவிற்
பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே" (புறநா. 375)

எ - ம் வரும். பாடன்மாரென்பது [2]மாரீற்று எதிர்மறைவினை முற்றுதலின் எதிர்காலவினையொன்றனையும் மறுத்துப் பாடுவாரல்ல ரென்னும் பொருட்டாய் நின்று எமரென்னும் பெயர்கொண்டது. இனி, வினையொடு முடியுமாறு :

"ஆர்த்தார் கொண்மார் வந்தார்",
"விழுக்கோட் பலவின் பழூஉப்பயன் கொண்மார்
குறவ ரூன்றிய குரம்பை புதைஇ" (அகநா. 12)

என வரும். இதனை வினைமுற்று வினையெச்சமாயிற்றென்றால் என்னையெனின், வினைமுற்றின்வழி அதற்கு இயைந்த பெயர்ப் பயனிலை வாராது இயையாத வினை வந்ததேல் அதற்கு இயைய வினைமுற்று வினையெச்சமாயிற்றெனப்படும். இம்மாரீற்று வினை முற்றிற்குப் பெயர்போல வினையும் இயைந்துவருதலின், முற்றெச்சமாயினதன்று; முற்றேயாமென்க. பின்வரும் "செய்கெனொருமையுஞ் செய்குமென் பன்மையும்" (333) என்னும் முற்றுக் களும் அன்ன.

1. "எய்துப வென்பதஞ் செய்வினை முடித்தென" (புறநா. 27 : 9.)
2. இதனை, ஆரீற்று முற்றுச்சொல்லின் எதிர்மறையாய் ஒருமொழிப் புணர்ச்சியான் மகரம்பெற்று நின்றதென்பர் சேனாவரையர்; தொல். வினை. சூ. 10.

"காலமொடு கருத வரினு மாரை
மேலைக் கிளவியொடு வேறுபா டின்றே"

என்றார் ஆசிரியர் அகத்தியனாருமென்க. (8)

## ஒன்றன்பால் வினைமுற்று

328. துறுடுக் குற்றிய லுகர வீற்ற
ஒன்றன் படர்க்கைடுக் குறிப்பி னாகும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இம்மூன்று குற்றியலுகரவீற்று விகுதிகளையும் இறுதியாகவுடைய மொழிகள் அஃறிணை யொருமைப்படர்க்கை வினைமுற்றும் வினைக்குறிப்புமுற்றுமாம். இவற்றுள், டுவ்விகுதி குறிப்பின்கண் அன்றித் தெரிநிலைக்கண் வாராது எ - று.

றுவ்விகுதி முக்கால வினைக்கண்ணும் பயின்று வாராமை யானும், துவ்விகுதி தன்முன்னின்ற எழுத்துநோக்கி றுவ்விகுதி யாய்த் திரிந்ததெனினும் அமையுமாதலானும், டுவ்விகுதி குறிப் பொன்றற்கே வருதலானும், இதுவும் துவ்விகுதி திரிந்ததெனினும் அமையுமாதலானும் துவ்விகுதியின் பிற் கூறப்பட்டன.

(வ - று.) நடந்தது நடக்கிறது நடப்பது வந்தன்று கூயிற்று எ - ம், அணித்து சேய்த்து அற்று இற்று எற்று எ - ம், பொருட்டு ஆதிரைநாட்டு குண்டுகட்டு : அது எ - ம் வரும். வந்தன்றென்புழி அன்னென்பது சாரியை.

சுட்டினும் வினாவினும் வந்த வினைக்குறிப்புக்கள் "பொருண் முத லாறினுந் தோற்றி" (321) என்றவற்றுள் எப்பொருள எனின், பொருளாதியாறனுள் யாதானுமொன்றனைச் சுட்டியும் வினவியும் வருதலின் அவ்வப்பொருளவாமென்க.

குற்றியலுகரவீற்றவென்றமையான், எற்று என்றாற்போல ஏது யாது என்பனவும் காரணப் பெயராமன்றி வினைக்குறிப்புமா மென்பதூஉம், அங்ஙனமாகவே, "ஒருமொழி யொழிதன் னினங் கொளற் குரித்தே" (358) என்பதனான், அது இது என்றற்றொடக் கத்து முற்றுகரவீற்றவும் வினைக்குறிப்பா மென்பதூஉம் பெற்றாம். (9)

## பலவின்பால் வினைமுற்று

329. அஆ ஈற்ற பலவின் படர்க்கை
ஆவே யெதிர்மறைக் கண்ண தாகும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்விருவிகுதியினையும் இறுதியாகவுடைய மொழிகள் அஃறிணைப்பன்மைப் படர்க்கை வினைமுற்றும் வினைக்குறிப்புமுற்றுமாம். இவற்றுள், ஆகாரம் எதிர்மறைவினைக்கண்ணதாமன்றி உடன்பாட்டு வினைக்கண் வாராது எ - று.

'ஆவே எதிர்மறைக் கண்ண தாகும்' என்றமையானே ஏனை விகுதி உடன்பாட்டினும் எதிர்மறையினும் வருமென்பதுபெற்றும்.

(வ - று.) நடந்தன நடந்த நடவாநின்றன நடவாநின்ற நடப்பன நடப்ப கரியன கரிய : அவை எ - ம், நடந்தில நடவாநின்றில நடவா : அவை எ - ம் வரும். இல்லன இல்ல என்னும் எதிர்மறைவினைக் குறிப்பு முற்றின்கட் பகுதியே மறைப்பொருள் தந்து நிற்றலின் இதற்கு எதிர்மறை ஆகாரம் வேண்டாமையின் ஏற்புழிக்கோடலான் [1]இம்மறைவிகுதி தெரிநிலைக்கே கொள்க. இங்ஙனங்காட்டிய அன்பெறு அகரவீற்றுப் பலவறி சொற்களுள் நடப்பவென்பதன் இறுதிநோக்கி உயர்திணைப் பன்மைப்படர்க்கைக்கும், அஃறிணைப்பன்மைப் படர்க்கைக்கும் பொதுவினையென்று கொள்ளற்க, இதன்கட் பகரம் எதிர்கால வினையிடைநிலையாதலின். இத்தொடக்கத்தனவெல்லாம் பலபொரு ளொருசொல்லாமென்க. (10)

## இருதிணைப் பொதுவினை

330. தன்மை முன்னிலை வியங்கோள் வேறிலை
உண்டீ ரெச்ச மிருதிணைப் பொதுவினை.

எ - ன், திணைபாலிடங்கட்குப் பொதுவினை உணர்த்துவான் றொடங்கி அவற்றுள் இருதிணைக்கும் பொதுவினை இவையென உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தன்மை வினை வினைக்குறிப்பு முற்றும், முன்னிலை வினை வினைக்குறிப்பு முற்றும், வியங்கோள் வினைமுற்றும், வேறு இல்லை உண்டு என்னும் மூன்று வினைக்குறிப்பு முற்றும், பெயரெச்சவினை வினைக்குறிப்பும், வினையெச்சவினை வினைக்குறிப்பும் இருதிணைக்கும் பொதுவினையாம் எ - று.

தன்மை முன்னிலை யென்றமையான் அவை முற்றென்பது பெற்றும்.

எச்சமெனப் பொதுப்படக் கூறினுரேனும் முற்றெச்சங்கள் முற்றேடொக்குமாதலின் அவையொழியக் கொள்க.

1. 'ஆகார மறைவிகுதி தெரிநிலைக்கன்றிக் குறிப்பிற்கு வாராமையானும்' (நன். சூ. 233, உரை) என்றுர் முன்னும்.

செய்யுமென்னும் முற்றும் இருதிணைப் பொதுவினையன்றே? அதனைக் கூறுதொழிந்த தென்னையெனின், முற்று எச்சமாயி னாற்போலச் செய்யுமென்னும் பெயரெச்சம் செய்யுமென்னும் முற்றானமையின் ஈரெச்சம் இருதிணைப்பொதுவினை யென்ற துணையானே அம்முற்றும் இருதிணைப்பொதுவினையென்பது தாமே போதருமென்க. செய்யுமெனெச்சம் முற்றுமாறும், அம் முற்றிற்கு ஈண்டுப் போந்த இருதிணைப்பொதுவொழிய அஃது ஐம்பால் மூவிடங்களிற் பொதுமையின் நிற்குமாறும் மேற் (341, 348) கூறுப. (11)

## தன்மையொருமை வினைமுற்று

331. குடுதுறு வென்னுங் குன்றிய லுகரமோ
டல்அன் என்ஏன் ஆகு மீற்ற
இருதிணை முக்கூற் றொருமைத் தன்மை.

எ - ன், நிறுத்தமுறையானே தன்மையொருமைவினைமுற் றும் குறிப்புமுற்றும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ் வெட்டுவிகுதிகளையும் இறுதியாகவுடைய மொழிகள் இருதிணைக்கண்ணவாகிய ஒருவன் ஒருத்தி ஒன்று என்னும் முக்கூற்று ஒருமைத்தன்மைவினைமுற்றும் குறிப்பு முற்றுமாம் எ - று.

குவ்விகுதியை உடன்கூறினமையின், அதன்பின் நின்ற மூன்றும் காலங்காட்டும் விகுதிகளென்பதூஉம், ஒருமை என்ற மையின் இவை திணைப்பொதுவன்றிப் பாற்பொதுவாகா என் பதூஉம் பெற்றாம். ஒருமை பன்மையென மேல் விதப்பனவு மன்ன.

(வ - று.) உண்கு கொண்டு வந்து வருது சென்று சேறு உண்பல் உண்டனன் உண்ணாநின்றனன் உண்பன் உண்டனென் உண்ணாநின்றனென் உண்குவென் உண்டேன் உண்ணாநின்றேன் உண்பேன் எ - ம், தாரினேன் : யான் எ - ம் வரும். காட்டா தொழிந்தன வந்துழிக் காண்க.

தன்மைக்கண்ணும அன்விகுதி கொள்ளாதொழியின்,
"எழுத்தசைசீர், பந்த மடிதொடை பாவினங் கூறுவன்"
(யா. கா. கடவுள்.)
என்றற்றொடக்கத்தன அமையாவென்க. (12)

## உளப்பாட்டுத்தன்மைப்பன்மை வினைமுற்று

332. அம்ஆம் என்பன முன்னிலை யாரையும்
எம்ஏம் ஓம்இவை படர்க்கை யாரையும்
உம்மூர் கடதற விருபா லாரையும்
தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை.

எ - ன், தன்மைப்பன்மைவினைமுற்றும் குறிப்புமுற்றும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தம் நிலையில் நிற்பதன்றி அம் ஆம் என்னும் இரு விகுதியினையும் இறுதியாகவுடைய மொழிகள் முன்னிலையாரையும், எம் ஏம் ஓம் என்னும் இம்மூன்று விகுதியினையும் இறுதியாகவுடைய மொழிகள் படர்க்கையாரையும், கும் டும் தும் றும் என்னும் இந் நான்கு விகுதியினையும் இறுதியாகவுடைய மொழிகள் முன்னிலை படர்க்கையென்னும் ஈரிடத்தாரையும் தன்னுடன் கூட்டும் உளப் பாட்டுத்தன்மைப் பன்மைவினைமுற்றும் குறிப்பு முற்றுமாம் எ - று.

தம் நிலையில் நிற்பதன்றியென்னும் இறந்தது தழீஇய [1]எச்ச வும்மைகள் எண்ணும்மைகளாயும், இருபாலாரையும் என்புழி இவற் றோடு முற்றும்மையாயும் நின்றன.

(வ - று.) உண்டனம் உண்ணாநின்றனம் உண்பம் உண்டாம் உண்ணாநின்றாம் உண்பாம் தாரினம் தாரினம் : யாம் எ - ம், யானும் நீயும் எ - ம், உண்டனெம் உண்ணா நின்றனெம் உண்பெம் உண்டேம் உண்ணா நின்றேம் உண்பேம் உண்டோம் உண்ணா நின்றோம் உண்போம் தாரினெம் தாரேம் தாரினோம் : யாம் எ - ம், யானும் அவனும் எ - ம், உண்கும் உண்டும் வந்தும் வருதும் சென் றும் சேறும் : யாம் எ - ம், யானும் நீயும் அவனும் எ - ம் தனித் தன்மைப்பன்மையும் உளப்பாட்டுத் தன்மைப்பன்மையும் முறையே வந்தன.

இன்னும் இவ்வும்மைகளை ஐயவும்மையாக்கி அம் ஆம் என் பன முன்னிலையாரையேனும் படர்க்கையாரையேனும் தன்னொடு படுக்குமெனவும், ஆக்கவும்மையாக்கி அம் ஆம் என்பன முன்னிலை யாரையும் படர்க்கையாரையும் ஒருங்கு தன்னொடு படுக்குமெனவும் பொருளுரைத்து, உண்டனம் : யானும் அவனும் எ - ம், யானும் நீயும் அவனும் எ - ம் அருகிவருதல் கண்டுகொள்க. ஏனை எட்டு

1. எச்சவும்மைகள் : முன்னிலையாரையும் படர்க்கையாரையும் என்ப வற்றிலுள்ளன.

விகுதியுமன்ன. இவற்றை "ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே" (380) என்னும் இடவழுவமைதியாகக் கோடலுமொன்று.

[1]தன்மையொருமைக்கண் அன்விகுதியும் பன்மைக்கண் ஓம் விகுதியும் புதியனபுகுதல். (13)

333. செய்கெ னொருமையுஞ் செய்குமென் பன்மையும்
வினையொடு முடியினும் விளம்பிய முற்றே.

எ - ன், எய்தியதன்மேற் சிறப்புவிதியும், எய்தியதை இகந்து படாமற் காத்தலும் உணர்த்துதல் நுதலிற்று.

வினையொடு முடியினுமென்றமையான், பெயரொடு முடியு மென்னும் விதி தாமே போதருமாதலின் எய்தியதன்மேற் சிறப்பு விதி யென்றும்.

(இ - ள்.) செய்கென்னும் தன்மையொருமைமுற்றும் செய்கு மென்னும் தன்மைப்பன்மைமுற்றும் பெயருடனேயன்றி வினையுட னேயும் முடியும்; அங்ஙனம் முடியுமாயினும் மேற்கூறிய முற்றே யாம் எ - று.

எச்சங்களைப் போலாது வினைமுதலைத் தரும் விகுதியுறுப் போடு கூடி முற்றிநிற்றலின் முற்றெனப்பட்டவன்றிப் பயனிலை கொண்டுமுற்றலின் முற்றெனப்பட்டவன்றென்பார் பெயரேயன்றி 'வினையொடு முடியினும் விளம்பியமுற்றே' என்றார்.

(வ - று.) உண்கு வந்தேன், உண்கும் வந்தேம் என வரும்.

இங்ஙனமாயின், உண்பேன் வந்தேன், உண்பேம் வந்தேம் என இவ்வொருமைபன்மையும் வினையொடு முடியுமென்றால் என்னையெனின்,

"எப்பொரு ளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர்
செப்பின ரப்படிச் செப்புதன் மரபே" (388)

என்பவாகலிற் செய்கெனொருமையும் செய்குமென்பன்மையும் பெய ரொடும் வினையொடும் முடிதல் மரபாயினாற்போல அவை பெயருட னன்றி வினையொடுமுடிதல் மரபன்மையின், அஃது இயையா தென்க. (14)

## உளப்பாட்டுப்பன்மைமுன்னிலை

334. முன்னிலை கூ டிய படர்க்கையு முன்னிலை.

---

1. 'அன்னென்னுந் தன்மையொருமைவிகுதி தொன்று தொட்ட தன்றி இலக்கியங்கண்டமையின் எதிரதுபோற்றலென்னும் உத்தியால் தழீ இக்கொண்டது' (சூ. 140, உரை) என்றார் முன்னும்.

எ - ன், உளப்பாட்டுப்பன்மை, முன்னிலைக்கண்ணும் உள தென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தன்மையொடு கூடிய முன்னிலைபடர்க்கைகள் தன் மையானுற்போல முன்னிலையொடு கூடிய படர்க்கையும் முன்னிலை யாம் எ - று.

விகுதிகளை விதவாது கூறினமையின் முன்னிலைப்பன்மை விகுதிகளெல்லாம் படர்க்கையை உளப்படுத்துமென்பதூஉம், படர்க்கையென்றமையால் தன்மையை உளப்படுத்தாவென்பதூஉம் பெற்ரும்.

(வ - று.) உண்டனிர் உண்டீர் உண்மின் குழையினிர் குழை யீர் : நீயும் அவனும் எ - ம்,

“ ஒண்டுவி நாராய்நின் சேவலு நீயுமாய்
வண்டூதும் பூங்கானல் வைகலுஞ் சேறீரால் ”

எ - ம் வரும்.

இச்சூத்திரம் முன்னிலைப்பன்மைமுற்றுக் கூறியவழிக் கூருது ‘ ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல் ’ என்னும் உத்தியான் ஈண்டுக் கூறப்பட்டது. (15)

## முன்னிலையொருமை வினைமுற்று

335. ஐஆய் இகர ஈற்ற மூன்றும்
ஏவலின் வருஉ மெல்லா வீற்றவும்
முப்பா லொருமை முன்னிலை மொழியே.

எ - ன், முன்னிலை யொருமைமுற்றும் குறிப்புமுற்றும் உணர்த் துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஐ ஆய் இ என்னும் மூன்றீற்றுமொழிகளும் [1]ஏவற் கண் வரும் [2]இருபத்துமூன்றீற்றுமொழிகளும் ஒருவன், ஒருத்தி ஒன்று என்னும் மூன்றுகூற்றவாகிய முன்னிலையொருமை முற்றும் குறிப்புமுற்றுமாம் எ - று.

இகரவீற்றுமொழிகட்கு இகரம் எதிர்காலங்காட்டுவதன்றி (சூ. 145) இடைநிலைநின்றுங் காலங்காட்டுமென்பது தோன்ற ஐ ஆய் என்னும் விகுதிகளோடு இகரவிகுதியை உடன்கூறினர்.

ஏவன்முற்றுத் தெரிநிலையொன்றற்கேயுரிமையின் உம்மை கொடுத்து விதந்தோதினர்.

---

1. ‘ விகுதி குன்ருதுங் குன்றியும் நிற்பனவாகிய ஏவற்கண் ’ (புத்தம் புத்துரை) 2. சூ. 137.

(வ - று.) உண்டனை உண்ணுநின்றனை உண்பை உண்டாய் உண்ணுநின்றாய் உண்பாய் உண்டி உண்ணுநின்றி சேறி நடவாய் வாராய் கேளாய் அஃகாய் நட வா கேள் அஃகு எ - ம், வில்லினை வில்லாய் வில்லி : நீ எ - ம் வரும். இகரவீற்றுமொழிகள் எதிர்கால இடைநிலை ஏற்குமேற் காண்க.

ஏவலெனப் பொதுப்படக்கூறினமையின் செய்வி செய்விப்பி என்னும் ஏவன்மேலேவல்களும், செய்யல் செய்யேல் என்றற்றொடக்கத்து எதிர்மறையேவல்களும் இருபத்துமூன்று ஈற்றுள் அடங்கிக் கிடந்தமை காண்க. பால்காட்டிநிற்றலின் ஏவலும் முற்றேயா மென்க. (16)

336. முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந்நிலை *மரபின் மெய்யூர்ந்து வருமே.

எ - ன், ஏவன்முற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முன்னிலையேவன்முற்றென மேற்கூறியவற்றிற்கு முன்னே ஈகாரமும் ஏகாரமும் ஆண்டுவந்து நிற்றற்குரிய மரபினை யுடைய மெய் யாதானும் ஒன்றை ஊர்ந்துவரும் எ - று.

ஈகார ஏகாரங்களை "அன் ஆன் அள் ஆள்" (140) என விகுதி கூறியவழி எடுத்தோதாமையானும் மேலைச்சூத்திரத்து ஐ ஆய் இகரங்களோடு ஒருங்கோதாமையானும் இவை விகுதியுரு பல்லவென்பதூஉம், ஏவற்கண்வரும் எழுத்துப்பேறென்பதூஉம், அந்நிலைமரபின் மெய்யென விதந்தமையின் அஃது அம்மொழி யிறுதி மெய்யன்றென்பதூஉம் பெற்றாம்.

(வ - று.) "சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ" (அகநா. 46) எ - ம், "அட்டி லோலை தொட்டனை நின்மே" (நற். 300) எ - ம் வரும்.

இவ்வெழுத்துப்பேறு, "நட வா மடி" (137) என்னுஞ்சூத்திரத்தின்பிற் கூறாது ஈண்டுக் கூறினர், இவ்வாறுவரும் ஏவல்கள் பகுதி மாத்திரையன்றி நிற்றலின் இவை முன்னிலையொருமை விகுதி யுருபீற்று வினைமுற்றோ ஏவன்முற்றோ என்று ஐயுறுவார்க்கு ஐயமறுத்தற்கு. இவற்றிற்கு [1]விகுதியுருபின் பொருள் இன்மையின் முன்னிலையசையாமென்க. (17)

## முன்னிலைப்பன்மை வினைமுற்று

337. இர் ஈர் ஈற்ற விரண்டு மிருதிணைப்
பன்மை முன்னிலை மின்னவற் றேவல்.

(பி - ம்.) * மரபின.

1. விகுதியுருபின் பொருளென்றது ஒருமைப்பன்மைப்பாலை.

எ - ன், முன்னிலைப்பன்மைவினைமுற்றும் குறிப்புமுற்றும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இர் ஈர் என்னும் இருவிகுதியினையும் ஈறுகவுடைய மொழிகள் இருதிணைப்பன்மைமுன்னிலை வினைமுற்றும் குறிப்பு முற்றுமாம் மின் என்னும் விகுதியை இறுதியாகவுடைய மொழிகள் இருதிணைப்பன்மைமுன்னிலையேவன்முற்றும் எ - று.

(வ - று.) உண்டனிர் உண்ணாநின்றனிர் உண்குவீர் உண்டீர் உண்ணாநின்றீர் உண்பீர் உண்மின் எ - ம், குழையினிர் குழையீர் : நீர் எ - ம் வரும்.

மின்னவற்றேவலென்றமையான், உண்ணும், தின்னும் : நீர் என உம்மீற்றவாய்வரும் பன்மையேவல் புதியனவென்பதூஉம், அவை, ' புதியன புகுதலும் வழுவல ' (462) என்பதனான் அமையு மென்பதூஉம் பெற்றும். (18)

### வியங்கோள் வினைமுற்று

338. கயவொடு ரவ்வொற் றீற்ற [1]வியங்கோள்
இயலு மிடம்பா லெங்கு மென்ப.

எ - ன், வியங்கோண்முற்று உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) க ய வென்னும் இரண்டு உயிர்மெய்யினையும் ரகர வொற்றினையும் இறுதியாகவுடையன வியங்கோண்முற்றும் ; அவை மூவிடத்தினும் ஐம்பாலினுஞ் செல்லுமென்று சொல்லுவர் புலவர் எ - று.

ரவ்வொற்றென்றமையான் முன்னையவிரண்டும் உயிர்மெய் என்பதூஉம், ஒடுவென்றமையான் ரகரவொற்றுக் ககர யகர உயிர் மெய்கள்போல் தனித்தியலாது யகரத்தொடு வரப்பெறுமென்பதூ உம், என்ப என்றமையான் இம்மூன்று ஈற்றவும் தொன்றுதொடு நெறியவென்பதூஉம் பெற்றும்.

(வ - று.) வாழ்க வாழிய வாழியர் [2]நிலீயர் : யான் யாம் நீ நீர் அவன் அவள் அவர் அது அவை எ - ம்,

" பெறுகதில் லம்ம யானே " (குறுந். 14)

" வெல்க வாழிநின் வென்றி வார்கழல்
செல்க தீயன சிறக்கநின் புகழே " (சூளா. சீய. 5),

" மன்னிய பெருமநீ நிலமிசை யானே " (புறநா. 6)

எ - ம் வாழ்த்துதற் பொருண்மைக்கண் வந்தன. நடக்க, வருக, உண்க, செல்க என உயர்ந்தோன் இழிந்தோனை இன்னது செய்க வென விதித்தற்பொருண்மைக்கண் வந்தன.

1. வியம் - ஏவல். 2. " நிலீய ரத்தைநீ நிலமிசை யானே " (புறநா. 166.)

"போற்றி யருளுகநின் னாதியாம் பாதமலர்" (திருவா. திருவெம். 20),
"எங்கொங்கை நின்னன்ப ரல்லார்தோள் சேரற்க"(திருவா.திருவெம்.19)
எ - ம்,

"கடாவுக பாகநின் கால்வ னெடுந்தேர்"

எ - ம் வேண்டிக்கோடற்பொருண்மைக்கண் வந்தன.

இங்ஙனங் கூறினர், "வருத்துரை யாதவும் வருத்தனர் கொளலே" (257) என அல்லீற்று வியங்கோளும் *உடம்பட்டு உணர்த்தினமையான் எடுத்து ஓதாத பிறவீற்றவாய் இருதிணையைம்பால் மூவிடங்களினும் வாழ்த்து முதலிய ஏவற்பொருளவாய்ச் சென்றனவுளவேல் அவை, "புதியன புகுதலும் வழுவல" (462) என்னும் வழுவமைதியாய் வந்த வியங்கோளென்பதூஉம் பெற்றாம்.

"பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்" (குறள் 196)

என்புழிப் [1]பதடியெனலென்பது வியங்கோள் ; மகனெனல் என்பது எதிர்மறையொருமையேவல். இவ்வாறு பிறவீற்றவாய் வருமாயின் அவை வியங்கோளாதல் ஆராய்ந்துகொள்க.

ஏவல் வியங்கோளென்பன ஒருபொருட் கிளவியாயினும் இருதிணையைம்பான் மூவிடங்களினுஞ் செல்லும் ஏவலை வியங்கோளென்பது தொன்னெறி மரபாமென்க. (19)

339. வேறில்லை யுண்டைம் பான்மூ விடத்தன.

எ - ன், இவ்வினைக்குறிப்புமுற்று மூன்றும் பாலிடங்கட்குப் பொதுவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வேறு, இல்லை, உண்டு என்னும் மூன்றுவினைக் குறிப்புமுற்றும் ஐம்பாற்கும் மூவிடத்திற்கும் உரியனவாம் எ - று.

உண்டென்பது அஃறிணையொருமைக்கேயன்றிப் பொதுவினையாதல் புதியனபுகுதலாமென்பார் பிற்கூறினர்.

(வ - று.) வேறவன் இல்லையவன் உண்டவன் அவள் அவர் அது அவை யான் யாம் நீ நீர் எ - ம்,

"விளிந்தாரின் வேறல்லர் மன்ற" (குறள் 143),
"யாரு மில்லைத் தானே கள்வன்
தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ
தினைத்தா ளன்ன சிறுபசுங் கால

(பி - ம்.) * 'உடம்பட்டுப் புணர்த்தமையான்'

1. இக்குறளுரையில் 'அல்விகுதி வியங்கோள் முன் எதிர்மறையினும் பின் உடம்பாட்டினும் வந்தது' என்பர் பரிமேலழகர்.

ஒழுகுநீ ராரல் பார்க்கும்
குருகு முண்டுதா மணந்த ஞான்றே" (குறுந். 25),
"பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டுகொல்
கொண்டகொழுந ருறுகுறை தாங்குறூஉம்
பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டுகொல்"
(சிலப். 19 : 51—3),
"நாவுண்டு நீயுண்டு நாமந் தரித்தோதப்
பாவுண்டு நெஞ்சே பயமுண்டோ - பூவுண்டு
வண்டுறங்குஞ் சோலை மதிளரங்கத் தேயுலகை
உண்டுறங்கு வாளொருவ னுண்டு"

எனவும் வரும்.

"பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்" (குறள், 44.)

என்பது செய்யுளாதலின் இல்லை என்பது இல் எனக் கடைக் குறைந்துநின்றது. (20)

## பெயரெச்சம்

340. செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டிற்
காலமுஞ் செயலுந் தோன்றிப் பாலொடு
செய்வ தாதி யறுபொருட் பெயரும்
எஞ்ச நிற்பது பெயரெச் சம்மே

எ - ன், ஈரெச்சமென்றவற்றுட் பெயரெச்சமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செய்த செய்கின்ற செய்யும் என்னும் மூவகைப் பட்ட சொல்லின்கண் முறையே இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் மூன்றுகாலமும் செயலும் தோன்றி வினைமுற்றுதற்கு வேண்டும் பாலொன்றுந்தோன்றுது அப்பாலுடனே செய்பவன் கருவி நிலம் செயல் காலம் செய்பொருள் என்னும் அறுவகைப் பொருட் பெயரும் ஒழியநிற்பன பெயரெச்சவினை வினைக் குறிப்புக் களாம். எ - று.

[1] பாட்டென்னும் பலபொருளொருசொல் ஈண்டுச்சொல்லை உணர்த்திநின்றது.

இவற்றுட் [2] செய்யுமென்னுமொன்றும் இறுதிநிலை காலங் காட்டியது.

1. "பாட்டிற் கூறக் கேட்டன ளாகி" (பெருங். 1. 55 : 23); பாட்டு-வாய்பாடென்பர் மயிலைநாதர்.
2. சூ. 145.

இவை வெளிப்படையின் உணர்த்துவன காலமும் செயலும் என்பார் பாட்டென்றும், பெயரெச்சமென்றது வினைமுற்றாத குறைச்சொல்லாய்த் திணைபாலிடங்கட்குப்பொதுவாகிப் பெய ரெஞ்ச நின்றனவற்றையென்பார் பாலோடென்றும் கூறினார்.

நிற்பதென்பது தொகுதியொருமை.

ஏற்புழிக்கோடலால் தோன்றியென்பதன்காறும் தெரிநிலை உடன்பாட்டிற்கும் ஏனைய தெரிநிலையும் குறிப்புமாகிய உடன் பாடு எதிர்மறையிரண்டிற்குங் கொள்க.

பதப்பொருள் ஒழிந்தவரை வினையெச்சத்திற்குங்கொள்க.

(வ - று.) உண்ட உண்ணாநின்ற உண்ணும்: சாத்தன் [1] கலம் இடம் ஊண் நாள் சோறு எ - ம், "வேலாண்முகத்த களிறு" (குறள், 500), "மூவிலையவேல்" (அகநா. கடவுள்.), உள்ள பொருள் எ - ம், உண்ணாதசோறு எ - ம், இல்லாதபொருள் எ - ம் வரும்.

செய்வதாதி அறுபொருளுங் காரணமாதலின் இவ்வெச் சங்கள் காரியப்பொருட்டாய்நின்றன. வனைந்த குடமென்புழிக் குடம் காரியமாயும் நிமித்தமாயும் நிற்றலின் இவ்வெச்சம் காரணப்பொருட்டாயும் காரியப்பொருட்டாயும் நின்றது. பிறவு மன்ன.

அறுபொருட்பெயருமென்னும் உம்மையை, "ஆறுந்தரு வது வினையே" (320) என்னும் உம்மைபோலவைத்து அறு பொருட் பெயரிற் சில குறைந்தும் [2] இன்னதற்கு, இதுபய னென்னும் இருபொருட்பெயரும் பிறபெயருங் கூடியும் எஞ்ச நிற்ப தெனவும் பொருளுரைத்துக்கொள்க. அவை வருமாறு:— ஆடின கொடி, துஞ்சின கொடி: இவை குறைந்து எஞ்சநின்றன. களைகட்ட பயிர், களைகட்ட கூலி: இவை இன்னதற்கு, இது பயனென்னும் இருபெயரும் எஞ்சவந்தன. [3]உண்டவிளைப்பு எ - ம், [4] "குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி" எ - ம், குடி

1. கலம் - உண்கலம்; "பொங்குகதிர் மின்னுபுகழ்க் கலங்கள்பல பரப்பி" (சீவக. 2025.)

2. "இன்னதற் கிதுபய னாக வென்னும்" (தொல். வேற்றுமை மயங்கு. சூ. 29.)

3. 'உண்ட விளைப்பு முண்டனுக்கு முண்டு' என்பதொரு வழக்கு.

4. முருகு. 199; இவ்வடிக்கு 'ஆழ்ந்த சுனையிற் பூத்த பூவாற் செய்த வண்டு வீழ்கின்ற கண்ணி' என உரை கூறி, 'இஃது ஒற்றுமை நயம் பற்றிச் செயப்படுபொருண்மேல் நின்றது' என்று இலக்கணக் குறிப் பெழுதுவர் நச்சினார்க்கினியர்.

போனவூர் எ - ம், பொன்பெரியநம்பி எ - ம் பிற பெயர்கள் எஞ்ச நின்றன. பிறவுமன்ன. உண்டவிளைப்பென்பது உண்ட காரணத்தான் வருங் காரியமாகிய இளைப்பாதலாற் செயப்படுபொருள் கொண்டதெனின் அமையாதோவெனின், சாத்தனுண்டசோறு என்புழிச் சோற்றையுண்ட சாத்தனெனச் சோறென்பது இரண்டாமுருபேற்றுற்போல் இளைப்பென்பது அவ்வுருபு ஏலாமையின் அது செயப்படுபொருளாகாதென்க. இவ்வெச்சம் காரணப்பொருட்டாயே நின்றது. எனவே இப் பெயரெச்சங்கள் காரணப்பொருட்டாயும், காரியப்பொருட்டாயும், இவ்விருதிறத்தவாயும் வருதல் காண்க.

இனி "காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை" (364) எனக் கூறுதலின், வினைத்தொகையினைப் பெயரெச்ச வினையுள் அடக்கி இதுவே விதியாகக் கொள்க.

(வ - று.) அடுகளிறு, கோடு, களம், போர், நாள், கந்து என வரும்.

"காலமும் வினையுந் தோன்றிப்பா ரேன்றுது
பெயர்கொள் ளும்மது பெயரெச் சம்மே"

என்றார் ஆசிரியர் அகத்தியனாருமென்க. (21)

## சிறப்புவிதி

341. செய்யுமெ னெச்சவீற் றுயிர்மெய் சேறலும்
செய்யுளுள் உம்முந் தாகலு முற்றேல்
உயிரு முயிர்மெய்யு மேகலு முளவே.

எ - ன், செய்யுமெனெச்சத்திற்கு எய்தியதன்மேற் சிறப்பு விதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தின் இறுதிஉயிர்மெய் கெடுதலும், செய்யுளகத்து அதனிறுதி உம்மை உந்தெனத் திரிதலும், அது முற்றாயின் அதனிறுதி உயிரேனும் உயிர்மெய்யேனும் கெடுதலும் உளவாம் எ - று.

செய்யுளுள் உம் உந்தாம் எனவே ஏனைய வழக்குச் செய்யுள் ஈரிடத்துமாமென்பதூஉம், முற்றேலெனவே செய்யுமெனெச்சம் முற்றுமாமென்பதூஉம், இறந்தது தழீஇ எண்ணி நின்ற இழிவுசிறப்பும்மைகளான் இவை ஒருதலை அல்லவென்பதூஉம் பெற்றாம்.

முற்றுவிகுதியின்றி எச்சவிகுதியே முற்றுவிகுதிப் பொருளாகிய பால்காட்டி ஒரோவழி நிற்றலின் எச்சம் முற்றாமெனப் பட்டது.

(வ - று.) ஆம்பொருள் போம்பொருள் எ - ம்,
" ஆம்பொருள்க ளாகுமவை யார்க்குமழிப் புண்ணு " (சீவக. 848, பி-ம்.)
" போம்புழை " " வாம்புரவி வழுதி " (யா. வி. மேற்.)
எ - ம் செய்யுமெனெச்சவீற்றுயிர்மெய் கெட்டன. இவை மகர வொற்று நிற்றலின் வினைத்தொகையாகாவென்க.

" நெல்லரியு மிருந்தொழுவர்
செஞ்ஞாயிற்று வெயின்முனையிற்
றெண்கடற்றிரை மிசைப்பாயுந்து " (புறநா. 24),
" நீர்க்கோழி கூப்பெயர்க்குந்து " (புறநா. 395):

இவை உம் உந்தாயின. அஃதாம், இவைபோம்,

" சார ருடைவென் றேழியுங் கலுழ்மே ",
" அம்ப லூரு மவனொடு மொழிமே " (குறுந். 51) :

இவை முற்றாய் உயிரும் உயிர்மெய்யுங் கெட்டன. செய்யுமென்னும் முற்றென்றேனும் செய்யுமென்னுமேவன்முற்றென்றேனும் விதவாது பொதுமையின் முற்றேலென்றமையின்,

" மாமறை மாக்கள் வருகுலங் கேண்மோ " (மணி. 13 : 93),
" முதுமறை யந்தணிர் முன்னிய துரைமோ " (மணி 13 : 56)

எனக் கேளும் உரையுமென்னும் ஏவன்முற்றும் இவ்வாறு உயிரும் உயிர்மெய்யுங் கெட்டுவருதல் கொள்க.

இவை இங்ஙனமாதலின், " சொற்றொறு மிற்றிதன்பெற்றி " (461) என்னுஞ் சூத்திரத்தானே ஆடுவாமோவென்னுந் தன்மைப் பன்மைமுற்று

" பொன்னூச லாடாமோ " (திருவா. திருப்பொன்னூசல், 1-9)

என எதிர்காலவிடைநிலை கெட்டும்வருதலும் பிறவும் கொள்க. (22)

## வினையெச்சம்

342. தொழிலுங் காலமுந் தோன்றிப் பால்வினை
ஒழிய நிற்பது வினையெச் சம்மே.

எ - ன், வினையெச்சமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பின்னர்ச் செய்து செய்பு முதலியவாய் விதந்து கூறும் வாய்பாடுகளின்கண் தொழிலும் இறப்பு நிகழ்பு எதிர்வு என்னும் முக்காலங்களும் முறையே தோன்றி வினைமுற்றுதற்கு வேண்டும் பாலொன்றும் தோன்றாது அப்பாலுடனே வினையொழிய நிற்பன வினையெச்சவினை வினைக்குறிப்புக்களாம் எ - று.

வினையெனப் பொதுப்படக் கூறினமையின், வினை வினைக் குறிப்பின் விகற்பங்களும் அவ்வினையாலணையும் பெயரும் தொழிற்பெயரும் கொள்க.

(வ - று.) அறமன்றி, அறமல்லால், அருளின்றி : செய்தான், செய்யான், செய்த, செய்து, செய்தவன், செய்தல், இலன், இல் லாத, இல்லாது, இல்லாதவன், இன்மை, இல்லாமை எனவரும். செய்தானென்னுந் தெரிநிலைவினைக்கட் செய்தலென்னுந் தெரி நிலைத்தொழிற்பெயர்போல இலனென்னுங் குறிப்பு வினைக்கண் இன்மை, இல்லாமையென்பன குறிப்புத்தொழிற்பெயராய் நிற்ற லின், அறமன்றியின்மை, அறமன்றியில்லாமை,

" நீயலாற் பிறிதுமற் றின்மை " (திருவா. கோயிற்றிருப்பதிகம், 7) என முடிந்துநின்றன. பிறவுமன்ன. தெரிநிலைவினையெச்சங் கட்கு உதாரணம் வருஞ்சூத்திரங்களான் உணர்க.

" காலமும் வினையுந் தோன்றிப் பாறேன்றுது
வினைகொள் ளும்மது வினையெச் சமே "

என்பது அகத்தியம். (23)

## வினையெச்ச வாய்பாடு

343. செய்து செய்பு செய்யாச் செய்யூச்
செய்தெனச் செயச் செயின் செய்யியர்
வான்பான் பாக்கின வினையெச் சம்பிற
ஐந்தொன் றுறுமுக் காலமு முறைதரும்.

எ - ன், மேல் " தொழிலுங் காலமுந் தோன்றி " (342) என்ற வினையெச்சவாய்பாடுகள் இவையென வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செய்தென்பதுமுதலிய ஒன்பது வாய்பாட்டான் வருவனவும், வான் பான் பாக்கு என்னும் மூன்றுவிகுதியவாய் வருவனவும், இவைபோல்வனபிறவும் வினையெச்சவினைகளாம். இவற்றுள் முன்னைய ஐந்தும் இறந்தகாலமும், செயவென்ப தொன்றும் நிகழ்காலமும், ஒழிந்த ஆறும் எதிர்காலமும் காட்டு வனவாம் எ - று.

இவற்றுட் செய்தென்பது இடைநிலையானும் ஏனைய இறுதி நிலையானும் காலங்காட்டின.

வான் பான் பாக்கு என்பன அஃவெச்சவிகுதியவாகிய மொழி களை உணர்த்திநின்ற குறிப்புச்சொல்.

இனவென்றமையான்,

" அற்று ளளவறிந் துண்க " (குறள், 943),
" ஒலித்தக்கா லென்னு முவரி " (குறள், 763),
" காண்டலு மிதுவே சொல்லும் "

எனச் செயினென்னும் வாய்பாடுபோல் எதிர்காலம் காட்டுவனவும்,

" கூறுமற் குறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி " (கலி. கடவுள்.),
" கூறுமை நோக்கிக் குறிப்பறிவான் " (குறள், 701),
" ஈத லியையாக்கடை " (குறள், 230)

என எதிர்மறைவிகற்பங்களாய் வருவனவும், இத்தொடக்கத்துக் குறைச்சொல்லாய் வினையெஞ்ச நிற்பனவெல்லாமும் கொள்க.

'ஒலித்தக்கால்' என்புழிக் ககரவொற்று இடையேமிக்கமையிற் காலென்பது பெயரெச்சங்கொண்டபெயரன்று; வினையெச்சவிகுதியென்பது பொருந்தும்.

'ஈத லியையாக் கடை' என்புழிக் [1]கடையென்பது எதிர்மறைப் பெயரெச்சங்கொண்ட இடப்பெயரென்றுலென்னையெனின், அதனகத்து இடப்பொருளின்றி ஈதலியையாதாயி னென்னும் பொருள் தந்துநிற்றலின் வினையெச்சவிகுதியேயா மென்க. பிறவுமன்ன.

பிறவென்றமையானே, செய்தென்னும் வாய்பாட்டெச்சங்களும் இடைநிலையின்றி ஆடிக்கொண்டான் தழீஇக்கொண்டான் என இறுதிநிலை தன்னியல்பினின்றும் விகாரமாயும் புக்கு நின்றான் என முதனிலை விகாரமாயும் காலங்காட்டுவனவுள வெனவும், செயவென்னும் வாய்பாட்டெச்சம் எதிர்காலத்திற்கும் உரித்தெனவும் இவ்வெச்சங்கட்கு விதந்து கூறுதன வெல்லாம் அமைத்துக்கொள்க. (24)

## வினையெச்சங்கட்கு முடிபு

344. அவற்றுள்,
முதலி னான்கு மீற்றின் மூன்றும்
வினைமுதல் கொள்ளும் பிறவுமேற் கும்பிற.

எ - ன், இவ்வெச்சங்கட்கு ஆவதொரு விதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேலைச்சூத்திரத்து முதற்கட்கூறிய செய்து, செய்பு, செய்யா, செய்யூ என்னும் நான்கும் இறுதிக்கட்கூறிய வான், பான், பாக்கு என்னும் மூன்றும் வினைமுதலைக்கொண்டு முடியும்; இடைநின்ற செய்தென செய செயின் செய்யிய செய்யியர் என்னும் ஐந்தும், இனவென்றதனால் வருவனவும், வினையெச்சக்குறிப்புக்களும் வினைமுதலையும் அஃதல்லாத பிறவற்றையும் கொண்டு முடியும் எ - று.

---

1. கால், கடை என்பன காலம்பற்றிய இடப்பொருளுருபு என்பர் மயிலைநாதர்.

இடையின் ஐந்துமென்றது பிறவென்றார், இனவென்றதனான் வருவனவும் வினையெச்சக்குறிப்புக்களும் தழீஇக்கோடற்கென்க.

(வ - று.) நடந்துவந்தான்,

" வாளொடு கனையிருள் வந்து தோன்றினான் " (சீவக. 320),

" எண்ணித் துணிக கருமம் " (குறள், 467),

" பரீஇ யுயிர்செகுக்கும் " (நாலடி. 220),

" ஐவரொடு சினைஇ, நிலந்தலைக் கொண்ட " (புறநா. 2) எ - ம்,

" புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த " (புறநா. 33),

" தெரிபு தெரிபு குத்தின வேறு " (கலி. 103) எ - ம்,

" கல்லாக் கழிப்பர் தலையாயார் " (நாலடி. 366),

" நிலங்கிளையா, நாணி நின்றோளிலை " (அகநா. 16) எ - ம்,

" படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே " (புறநா. 278),

" நிலம்புடையூஉ வெழுதரு வலம்படு குஞ்சரம் " (பதிற். இலங்கு தொடி) எ - ம்,

" கொள்வான் கொடித்தானை கொண்டெழுந்தான் " (பு.வெ.99) எ-ம்,

" அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம் " (நான்மணி. 28) எ - ம்,

" புணர்தரு செல்வந் தருபாக்குச் சென்றார் " (கார்நாற்பது, 11) எ - ம் முதலில் நான்கும் ஈற்றின் மூன்றும் வினைமுதல் கொண்டன.

" காந்தளஞ் சிலம்பிற் சிறுகுடி பசித்தெனக்
கடுங்கண் யானைக் கோடுநொடுத் துண்ணும் " (குறுந். 100, பி - ம்.) எ - ம்,

[1]" கோவா வாரம் வீழ்ந்தெனக் குளிர்கொண்டு
பேள நாறுந் தாழ்நீர்ப் பனிச்சுனை " எ - ம்,

உண்ணவந்தான்

" கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர் " (புறநா. 70) எ - ம்,

மழைபெய்ய நெல்விளைந்தது,

" மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து " (குறள், 90) எ - ம்,

" தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டிற்
கௌவை யெடுக்குமிவ் வூர் " (குறள், 1150) எ - ம்,

" காணியவா நீவாழி தோழி " (கலி. 42) எ - ம்,

" மாணிழை யரிவை காணிய வொருநாட்
பூண்க மாளநின் புனைவினை நெடுந்தேர் " (பதிற். 81) எ - ம்,

" பசலை யுண்ணியர் வேண்டும் " (குறுந். 27, பி - ம்) எ - ம்,

" கொற்கைச் செழியர் கொங்கர்ப் பணியியர்...
பழையன் வேல்வாய்த் தன்ன " (நற். 10, பி - ம்) எ - ம்

1. " பையுண்மாலை " என்னுஞ் செய்யுளிலுள்ளது.

இடையின் ஐந்தும் வினைமுதலும் பிறவும் கொண்டன. உண்டா லுவக்கும், உண்டாற்பசிதீரும்,

" விண்ணின்று பொய்ப்பின் " (குறள், 13),
" விருந்தின்றி யுண்டபகல் " (திரி. 44)

என இன்னவென்றதனுன் வருவனவும் வினையெச்சக்குறிப்பும் வினைமுதலும் பிறவும் ஏற்றல் காண்க. நடந்துவந்தவன் வருதல் இடையிடுபுதொடுத்தவன் தொடுத்தல் எ - ம், காந்தளஞ் சிலம்பிற் சிறுகுடிபசித்தெனக் கடுங்கண்யானைக் கோடுநொடுத்துண்டவன் உண்டல் கோவாவாரம் வீழ்ந்தெனக் குளிர்கொண்டு பேஎ நாறுவது நாறல் உண்ணவந்தவன் வருதல் மழைபெய்ய நெல்விளைவது விளை தல் என வினையாலணையும் பெயரும் தொழிற்பெயரும் வருவித்து வினைமுதலும் வினைமுதலொடு பிறவும் ஏற்றல் காண்க. பிறவு மன்ன.

[1]இச்சூத்திரத்துள் வினைமுதல்கொள்ளும் பிறவுமேற்கும் என் பதற்கு வினைமுதல் வினைகொள்ளும் பிறவினை கொள்ளும் எனப் பொருளுரைத்தாலென்னையெனின், அது பொருளாயின் வினை முதல் வினைகொள்ளும் பிறவினைகொள்ளுமெனக் கூறினும் யாப்ப மையுமாதலின் அங்ஙனங் கூறவேண்டும், அவ்வாறு கூருமையா னும்; வினைகொண்டுமுடியுமென இதற்குக் கூறினுரெனின், முன் னர்க் கூறிய பெயரெச்சத்திற்கும் பெயர்கொண்டு முடியுமெனக் கூறவேண்டும், அவ்வாறு கூருமையானும்; பொதுவியலுள், " பெயர்வினை யும்மை " (360) என்னுஞ் சூத்திரத்தானே முற்றுது குறைந்துநின்ற இப்பெயரெச்ச வினையெச்சங்கள் முதலியவாக இவ்வதிகாரத்துள் விதந்தும் விதவாதும் பரந்துகிடந்த எச்சங்களை யெல்லாம் எடுத்து ஒன்பதும் ஒன்றுமெனத் தொகைதந்து, " தத்த மெச்சங் கொள்ளும் " (360) எனக் கூறுதலானும் இங்ஙனம் வினை முதற்பொருண்மையினையும் அஃதொழிந்த பிறபொருண்மையினை யுங்கொள்ளுமெனக் கூறலே நூலாசிரியர் கருத்தென்க. அங்ஙன மாயின் இவ்விருவகை எச்சங்களும் பெயரினையும் வினையினையும் கொண்டு முடிந்துநிற்க உதாரணங்காட்டியது என்னையெனின் பெயரெச்சம் பெயரெஞ்சநிற்றலும், வினையெச்சம் வினையெஞ்சநிற் றலும் வினைமுதல் கோடலும் பிறகோடலும் தோன்றுதற்பொருட் டன்றிப் பெயரினையும் வினையினையும் கொண்டுமுடிதல் தோன்று தற்பொருட்டன்றென்க.

1. இங்கே மறுக்கப்படுபவர்கள் மயிலைநாதரும் இலக்கணவிளக்க உரையாசிரியரும்.

இவ் வினையெச்சங்கள், நடந்துவந்தான் மழைபெய்ய நெல் விளைந்தது எனக் காரணப்பொருட்டாயும், நெல்விளைய மழைபெய் தது எனக் காரியப்பொருட்டாயும், உண்ணவந்தானெனக் காரண காரியமென்னும் இருபொருட்டாயும்,

[1] " கடிக்கமல முகங்காட்ட...கருநெய்தல் கண்காட்டும் "

எனக் காரணகாரியம் இரண்டுமின்றியும், உழுது பயன்கொண் டான் வேந்தனெனத் தலைமைபற்றியும், உழுதுபயன் கொண்டான் வறியனென அஃதின்மைபற்றியும் வருதல் காண்க. (25)

### புறனடை

## 345. சினைவினை சினையொடு முதலொடுஞ் செறியும்.

எ - ன், மேல், ' வினைமுதல் கொள்ளும் ' என்றவற்றிற்கு ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முதலில் நான்கும் ஈற்றில் மூன்றுமென்ற வினை யெச்சங்கள் சினைவினையாயின் அவை வினைமுதல் கொள்ளும் என்ற விதியானே சினையொடு முடிதலேயன்றி முதலுடனும் முடி யும்; அங்ஙனம் முடியுமாயினும் சினையொடு முதற்கு ஒற்றுமை யுண்மையின் வினைமுதல்கொண்டதேயாம். எ - று.

(வ - று.) காலிற்றுவீழ்ந்தான் காலிறுபுவீழ்ந்தான் காலிரு வீழ்ந்தான் காலிறாஉவீழ்ந்தான் எ - ம், கண்வருவான் கதிரவற் றெருழுதார் கண் *தழைப்பான் கதிரவற்றெருழுதார் கண்வருபாக்குக் கதிரவற்றெருழுதார் எ - ம், மாடு காலிற்று வீழ்ந்தது எ - ம் வரும். பிறவுமன்ன.

காலிற்று வீழ்ந்தானென்புழி வீழ்தற்கு வினைமுதல் முதற் பொருளாம்; அஃதன்றிச் சினைப்பொருளாயிற் கண்விழித்துப் பார்த்தான், செல்வமிக்குயர்ந்தான், கண்பெரியன், நாடுபெரியன், செல்வம் பெரியனென்றாற்போல, " உயர்திணை தொடர்ந்த பொருண்முத லாறும் " (377) என்னுஞ்சூத்திரத்தான் அமைவதா மென்க. பிறவுமன்ன. (26)

## 346. சொற்றிரி யினும்பொரு டிரியா வினைக்குறை.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும் வினைமுதல் கொள்ளுமென்ற (344) வினையெச்ச வாய்பாடுகளாகப் பிற வினை யெச்ச வாய்பாடுகள் திரியினும் அவற்றின் பொருள்கள் திரியா எ - று.

---

(பி - ம்.) *' காப்பான் '

1. திருஞா. தே. திருப்பிரமபுரம், மேகராகக்குறிஞ்சி.

(வ - று.) ஞாயிறு பட்டு வந்தான் கோழி கூவிப் பொழுது புலர்ந்தது.

" உரற்கால்யானை யொடித்துண் டெஞ்சிய
யாஅ விரிநிழற் றுஞ்சும் " (குறுந். 232)

" செந்நா யேற்றை கேழ றுக்கி
இரியற் பிணவ றீண்டலிற் பரீஇச்
செங்கா யுதிர்ந்த பைங்குலை யீந்தின் " (அகநா. 21) எ - ம்,

யான்கொள்வான் பொன்கொடுத்தார் எ - ம் வரும். பிறவுமன்ன. இவை செயவெனெச்சம் செய்து செய்வான் எனத் திரிந்து நின்றும் அச்செயவெனெச்சமுடிபேற்று நின்றன. எனவே ஞாயிறுபட்டு வந்தானென்பதற்கு ஞாயிறுபட வந்தான் எனப் பொருளுரைக்க வேண்டுமென்பதாயிற்று. பிறவுமன்ன.

வினைக்குறையெனப் பொதுப்படக்கூறினமையான், வினையெச்சங்களுள் ஒன்று ஒன்றாய்த் திரிந்துவருவன பிறவுமுளவேல் அவையும் கொள்க. (27)

## ஒழிபு

347. ஆக்க வினைக்குறிப் பாக்கமின் றியலா.

எ - ன், வினைக்குறிப்பிற்கு ஆவதொரு விதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஆக்கத்தான் வரும் வினைக்குறிப்புச் சொற்கள் ஆக்கச்சொல்லின்றி வாரா எ - று.

வேற்றுமைப்புணர்ச்சிக்கு வேற்றுமையுருபுகள் விரிந்தும் தொக்கும் அதன் உடைமையாய் நின்றாற்போல ஆக்கவினைக் குறிப்பிற்கு ஆக்கச்சொல் விரிந்தும் தொக்கும் அதன் உடைமையாய் நிற்றலின் ஆக்கமின்றி இயலாவென்றார்.

(வ - று.) சாத்தன் நல்லனாயினான், சாத்தனல்லன், கல்வியாற் பெரியனாயினான், கல்வியாற் பெரியன், கற்றுவல்லராயினார், கற்று வல்லர்,

" குருதி படிந்துண்ட காகம் உருவிழந்து
குக்கிற் புறத்த சிரல்வாய செங்கண்மால் " (களவழி. 5)

என ஆக்கச்சொல் விரிந்தும் தொக்கும் வந்தன.

எனவே நல்லனென்பது இயற்கைவினைக் குறிப்பாயின் விரிதல் தொகல் என்னுமிரண்டனுள் ஒருவாற்றானும் ஆக்கம் வேண்டாது சாத்தன் நல்லனென்றேவருமென்பதாயிற்று. இங்ஙனமாகவே வினைக்குறிப்பு ஆக்கவினைக்குறிப்பென்றும் இயற்கை வினைக்குறிப் பென்றும் இருவகைப்படுமெனவும், அவை இவ்வாறு நடக்குமென

வும் கூறினாராயிற்று. வினையாயினும் ஆக்கத்தை நோக்கி இயற்கை யெனப்பட்டது.

இச்சூத்திரத்திற்கு வினையெச்சங்கொண்டுமுடியும் ஆக்க வினைக்குறிப்பிற்கு ஆக்கச்சொல் விரிந்தே வருமென்றும், தொக்கு வருவன செய்யுள்விகாரமென்றும் பொருள் [1]கூறுவாரு முளர். வினையெச்சங்கொண்டுமுடியும் ஆக்கவினைக்குறிப்பென விதவா மையானும், ஆக்கவினைக்குறிப்பென்ற துணையானே வினையெச் சங்கொண்டுமுடியும் வினைக்குறிப்பென்பது தாமேபோதருமெனிற் கல்வியாற் பெரியனெனப் பிறவழியும் ஆக்கவினைக்குறிப்பு வருத லானும், அஃது யாண்டுவரினும் ஆக்கச்சொல் விரிந்தேனும் தொக் கேனும் வேண்டியேநிற்றலானும், இவர் கற்று வல்லாரென வழக் கின்கண்ணும் ஆக்கச்சொல் தொக்குவருதலானும், "காரண முதலா வாக்கம் பெற்றும்" (405) என்னுஞ் சூத்திரம் மாறுகொளக் கூறலாய் முடியுமாதலானும் அது பொருந்தா தென்க. (28)

## செய்யுமென் முற்று

348. பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற்
செல்லா தாகுஞ் செய்யுமென் முற்றே.

எ - ன், செய்யுமெனெச்சம் திணைபாலிடங்கட்குப் பொதுவா மென விதித்தலின் அவ்வெச்சத்தாகிய செய்யுமென்னும் முற்றும் அவ்வாறு பொதுவாமெனப் போந்தவற்றுட் சில பாலிடங்களிற் செல்லாது இம்முற்றென விலக்குதலின் எய்தியது ஒருமருங்கு மறுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) உயர்திணைப்பன்மைப்படர்க்கையினும் முன்னிலை யினும் தன்மையினுஞ்செல்லாது, செய்யுமென்னும் எச்சத்தாகு கும் செய்யுமென்னும் முற்று எ - று.

"பல்லோ ரொழிந்த படர்க்கைக் குரித்து, செய்யுமென்னத் தெரித்திடு முற்றே" எனச் சூத்திரஞ்செய்யாது எய்தியதொரு மருங்கு மறுத்தல் தோன்றப் பல்லோர்படர்க்கை முன்னிலை தன் மையிற் செல்லாதென்றும், ஏனைமுற்றுக்கள்போல் தன்னியல்பில் நில்லாது எச்சத்தாகியது இம்முற்றென்பது தோன்ற ஆகும் செய்யுமென்முற்றென்றும் கூறினர்.

---

1. கூறுபவர் மயிலைநாதர்; தொல்காப்பிய உரையாசிரியர்கள் பெரும்பாலும் இக்கொள்கையினரே; "வினையெஞ்சு கிளவிக்கு" (தொல். எச்ச. 36) என்னும் சூத்திர உரைகளைப் பார்க்க.

இப்பாலிடங்களை விலக்கவே ஒழிந்த படர்க்கை நாற்பாலினுஞ் செல்லுமென்பது பெற்றாம்.

(வ - று.) அவனுண்ணும், அவளுண்ணும், அதுவுண்ணும், அவையுண்ணும் என வரும். (29)

## பாற்பொதுவினை

349. யாரென் வினாவினைக் குறிப்புயர் முப்பால்.

எ - ன், திணைப்பொதுவன்றிப் பாற்பொதுவினையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வினாப்பொருண்மையைத் தரும் யாரென்னும் வினைக்குறிப்புமுற்று உயர்திணைமுப்பாற்கும் பொதுவினையாம் எ - று.

திணைப்பொதுமைக்கட்கூறிய "பொதுவினை" (330) என்பதனை ஈண்டும் வருஞ்சூத்திரத்தும் தந்துரைத்துக்கொள்க.

(வ - று.) அவன் யார், அவள் யார், அவர் யார் என வரும்.

"ஊதைகூட் டுண்ணு முகுபனி யாமத்தெம்
கோதைகூட் டுண்ணியர் தாம்யார்மன் - போதெல்லாம்
தாதொடு தாழுந்தார்க் கச்சி வளநாடன்
தூதொடு வாராத வண்டு"

என அஃறிணைக்கண் வருதலும்,

"நாரைரென் னுள்ளமார்" (திருவா. கோத்தும்பி. 2)

என [1]யாரென்பது ஆரென மரீஇ வருதலும் புதியன புகுதலாமென்க. (30)

350. எவனென் வினாவினைக் குறிப்பிழி யிருபால்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) வினாப்பொருண்மையைத் தரும் எவனென்னும் வினைக் குறிப்புமுற்று அஃறிணையிருபாற்கும் பொதுவினையாம் எ - று.

(வ - று.) அஃதெவன், அவையெவன் என வரும்.

இஃது என்னெனவும் என்னையெனவும் மரீஇவருதல் புதியன புகுதலாம்.

உயர்முப்பாலென்றும் இழியிருபாலென்றும் விதந்தமையின், யாரென்றும் எவனென்றும் ஈண்டுப்போந்தசொற்கள் பெயர்க்கும் வினைக்குறிப்பிற்கும் பொதுவாகிய யாவரென்னும் சொல் யார்,

1. யாரென்னுங் குறிப்புவினையை ஆரென்று வழங்குதல் மரூஉ என்றார் முன்; சூ. 267, உரை.

ஆரென மரீஇய உயர்திணைப் பன்மைச் சொல்லும் இவ்வாறு பெயர்க்கும் வினைக்குறிப்பிற்கும் பொதுவாகிய எவனென்னும் உயர்திணையாண்பாற்சொல்லும் அல்லவென்பது பெற்றாம். (31)

## வினைமுற்றின் புறனடை

351. வினைமுற் றேவினை யெச்ச மாகலும்
குறிப்புமுற் றீரெச்ச மாகலு முளவே.

எ - ன், இருவகைமுற்றிற்கும் ஆவதொரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வினைமுற்றே வினையெச்சமாகி வருதலும் வினைக் குறிப்புமுற்றே வினையெச்சமாகியும் பெயரெச்சமாகியும் வருதலும் உளவாம் எ - று.

ஏகாரத்தைப் பின்னுங் கூட்டுக.

குறைச்சொல்லாகாது பால்காட்டி நிற்றலின் முற்றே என்றும், வினையெச்சப் பயனிலையினையும் பெயரெச்சப்பயனிலை யினையும் அவாவி நிற்றலின் எச்சமென்றும், இவை சிறுபான்மைய வாகலின் ஆகலுமென்றும் கூறினார்.

(வ - று.)

"காணான் கழிந்த வைகலுமுண் டென்றொருநாள்" (கலி. 37. பி-ம்.), "மோயின ளுயிர்த்த காலை" (அகநா. 5), "முகந்தனர் கொடுப்ப" (புறநா. 33) "விளிப்பது பயிலுங் குறும்பர்துந் துமியொடு" (மலைபடு.7, பி-ம்), "எருவினுண் டாது குடைவன வாடி" (குறுந். 46) எ-ம், "பெயர்த்தனென் முயங்கயான்" (குறுந். 84) "மக்களு ளிரட்டையா மாறினம் பிறந்துயாம்" எ-ம், [1]"சேந்தனை சென்மோ பூந்தார் மார்ப" "கருங்கோட் டின்னிய மியக்கினிர் கழிமின்" (பெரும்பாண். 392) எ-ம் மூவிடத்து ஐம்பாலினும் வினைமுற்று வினையெச்சமாயின.

"வரிபுனை வில்ல னொருகணை தெரிந்துகொண்டு" (அகநா. 48), "அளிநிலை பொறாஅ தமரிய முகத்தள், விளிநிலை கேளாள்" (அகநா. 5), "உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து" (முருகு. 185), "விழுமிது கழிவ தாயினும்" (குறுந். 253), "நிலமிசைப் புரளுங் கைய வெய் துயிர்த்து" (புறநா. 44) எ-ம், "துணையி னெஞ்சினேன் றுயருழந் தினை யேன்" (இ. வி. மேற்.), "நீர்வார் கண்ணேந் தொழுதுநிற் பழிச்சி" (புறநா. 113) எ-ம், "நீர்வார் கண்ணை நீயிவணொழிய" (குறுந். 22), "வெள்வேல் வலத்திர் பொருடரல் வேட்கையி, னுள்ளினிர்" (கலி. 4) எனவும் மூவிடத்து ஐம்பாலினும் வினைக்குறிப்புமுற்று வினையெச்சக் குறிப்பாயின.

1. "எம்மூ ரல்லது" என்னும் பழைய செய்யுளிலுள்ளது.

" வெந்திறலினன் விறல்வழுதியொடு " (இ. வி. மேற்.), "அஞ்சாயல ளாயிழைமுன் " (இ. வி. மேற்.),

" கடற்றுனையர் கழல்வேந்தரை," " பெருவரை மிசையது நெடுவெள் ளருவி " (குறுந். 78), " புன்று ளோமைய சுரனிறந் தோரே " (குறுந். 260) எ - ம், " பெருவேட்கைய னெற்பிரிந்து," " கண்புரை காதல மெம்மு முள்ளான் " எ - ம், " உலங்கொ டோளினை யொருநின்றுல் ", " வினை வேட்கையிர் வீரர்வம்மின் " எ - ம் மூவிடத்து ஐம்பாலினும் வினைக்குறிப்பு முற்று, பெயரெச்சக் குறிப்பாயின. இவற்றுள் வரும் பெயர்கள் முற்றுப் பயனிலை யாகாது பெயரெச்சப்பயனிலையாமாறு காண்க.

இனி வினைமுற்றுக்கள் சொல்திரியினும் பொருள்திரியா வினையெச்சமாய் வருமாறு:

" விண்ணிற் றூவியிட் டான்வந்து வீழ்ந்தன " (சீவக. 894), "பாயு மாரிபோற் பகழி சிந்தினுர் ஆயர் மத்தெறி தயிரி னுயினுர் " (சீவக. 421, பி - ம்), " கானவ ரிரிய வில்வாய்க் கடுங்கணை தொடுத்த லோடும், ஆனிரை பெயர்ந்த தாய ரார்த்தன ரணிந்த திண்டோள், தானென்று முடங்கிற் றென்று நிமிர்ந்தது சரம்பெய் மாரி, போனின்ற தென்ப மற்றப் பொருவரு சிலையி னுற்கே " (சீவக. 452, பி-ம்), " செய்யோன் செழும்பொற் சரஞ் சென்றன சென்றதாவி " (சீவக. 2322) என வரும். பிறவுமன்ன. (32)

2. வினையியல் முற்றிற்று

---

## மூன்றாவது
# பொதுவியல்
### பெயர்வினைகளின் இலக்கணம்

352. இருதிணை யாண்பெண்ணு ளொன்றனை யொழிக்கும்
பெயரும் வினையுங் குறிப்பி னானே.

எ - ன், முன்வந்த பெயர்க்கும் வினைக்கும் பின்வரும் இடைக்கும் உரிக்கும் பொதுவிலக்கணங்களைச் சிங்கநோக்காக இவ்வியலான் உணர்த்துவான் இடைநிறீஇக் கூறலின், இது பெயர்க்கும் வினைக்கும் உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று,

(இ - ள்.) உயர்திணையாண்பால் பெண்பாலென்னும் இருபாற்கும் பொதுவான பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் அஃறிணை ஆண்பால் பெண்பாலென்னும் இருபாற்கும் பொதுவான பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் அவ்விருபாலுள் ஒருபாலை யொழிக்கும், குறிப்பினான் எ - று.

(வ - று.) ஆயிரமக்கள் [1] தாவடிபோயினாரென்புழி மக்களென்னும் உயர்திணையிருபாற்கும் பொதுப்பெயரும், போயினாரென்னும் உயர்திணையிருபாற்கும் பொதுவினையும் தாவடி என்னும் குறிப்பினாற் பெண்பாலையொழித்தன. பெருந்தேவி பொறையுயிர்த்த கட்டிற்கீழ் நால்வர்மக்களுளரென்புழி மக்களென்னும் பொதுப்பெயரும் உளரென்னும் பொதுவினைக் குறிப்பும் பொறையுயிர்த்தலென்னும் குறிப்பினானே ஆண்பாலை ஒழித்தன. இப்பெற்றங்கள் உழவொழிந்தன என்புழிப் பெற்றங்களென்னும் அஃறிணையாண்பெண் இருபாற்கும் பொதுப்பெயரும், ஒழிந்தன வென்னும் அஃறிணையாண்பெண் இருபாற்கும் பொதுவினையும் உழவென்னும் குறிப்பினாற் பெண்பாலை ஒழித்தன. இப்பெற்றங்கள் பால்சொரிந்தன என்புழிப் பெற்றங்களென்னும் பொதுப்பெயரும் சொரிந்தன என்னும் பொதுவினையும் பாலென்னுங் குறிப்பினானே ஆண்பாலை ஒழித்தன. பிறவுமன்ன. (1)

353. பெயர்வினை யிடத்து னளரய வீற்றயல்
ஆஓ வாகலுஞ் செய்யுளு ளுரித்தே.

---

1. தாவடிபோயினர் - தாண்டிப் போயினர்; "சுடர்க்குழைமேல், தாவடி வந்திப் படியென தாவி தளர்வித்ததே" திருப்புகலூரந்தாதி, 4.

எ - ன், பெயர்க்கும் வினைக்கும் செய்யுட்கண் ஆவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பெயர்க்கண்ணும் வினைக்கண்ணும் னகார ளகார ரகார யகார வீற்றயல்நின்ற விகுதி முதல் ஆகாரம் ஓகாரமாதலும் செய்யுளிடத்து உரித்தாம் எ - று.

(வ - று.)

"வில்லோன் காலன கழலே தொடியோள்
மெல்லடி மேலவுஞ் சிலம்பே நல்லோர்
யார்கொ லளியர் தாமே" (குறுந். 7, பி - ம்),

"பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்" (புறநா. 2)

"படைத்தோன் மன்றவப் பண்பி லாளன்" (புறநா. 194), [எ - ம்,

"நல்லோண் *மன்ற நகூஉப்பெயர்ந் தோளே" (அகநா. 248, பி-ம்),

"சென்றோ ரன்பிலர் தோழி" (அகநா. 331),

"வந்தோய் மன்ற தண்கடற் சேர்ப்ப" (அகநா. 80)

எ - ம் பெயர்க்கண்ணும் வினைக்கண்ணும் வந்தது.

வினையாலணையும் பெயர்க்கணன்றி வினைக்கண்ணும் ஒரோவழி ஆ ஓ ஆதலின், அதனையும் உடன்கூறினார். உம்மையை எதிர்மறையும்மையாக்கி வில்லோன் வில்லானென ஒன்றே ஆதலும் ஆகாமையும், இன்னும் அவ்வும்மையானே செக்கான் வண்ணானென மற்றொன்று ஆகாமையும், அதனை ஆக்கவும்மையாக்கி,

"பழமுதிர் சோலை மலைகிழ வோனே" (முருகு. 317)

என ஆகாரமேயன்றி அகரமும் ஓகாரமாதலும் கொள்க. (2)

354. உருபும் வினையு மெதிர்மறுத் துரைப்பினும்
திரியா தத்தமீற் றுருபி னென்ப.

எ - ன், வேற்றுமை உருபுகட்கும் வினைச்சொற்கட்கும் ஆவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எட்டுவேற்றுமை உருபுகளும் மூவகை வினைச்சொற்களும் எதிர்மறுத்துச் சொல்லுமிடத்தும் தத்தம் ஈற்றினின்றும் அவ்வவ்வுருபினின்றும் வேறுபடாவென்று சொல்லுவர் புலவர். எ - று.

இன்னுருபை ஈறென்பதன்கண்ணும் கூட்டி எதிர்நிரனிறையாகப் பொருள்கொள்க.

உருபின்கண் எதிர்மறுத்தல் அவற்றின் பயனிலைகளை என்க.

(வ - று.) சாத்தன்வாரான் குடத்தைவனையான் வாளா

---

(பி - ம்.) *'மன்றநகூஉப்'

லெறியான் புல்லர்க்குநல்கான் நிலையினிழியான் பொருளின தின்மை தீயர்கட்சாரான் சாத்தாசாயல் எ-ம், நடவான் நடவாத நடவாது எ-ம் வரும்.

"சொற்றேறு மிற்றிதன் பெற்றி" (461) என்னுஞ் சூத்திரத் தானே உண்மைக்கு மறையாகிய இன்மையென்னும் பெயர்க் கண்ணும் ஈறு திரியாமை காண்க.

நடத்தல், நடவாமை என்றற்றொடக்கத்தன ஈறுதிரிந்தன வன்றோவெனின், அவை தொழிற்பெயராதலிற் றிரிந்தனவென்க. ஓடாக்குதிரை, [1]ஆறுவறிவு என்றற்றொடக்கத்தன ஓடாத, ஆறுத என்பவற்றைக் குறைத்து வழங்கினவன்றி ஈறு வேறுபட்டன வல்லவென்க.

ஒருவினை நிகழ்வழி அவ்வினைக்குக் கருத்தாவும் செயப்படு பொருளும் முதலியவாகப் பெயர்ப்பொருளை வேற்றுமை செய்து நின்றவுருபுகள் அவ்வினைநிகழாவழியும் அவ்வாறு நிற்றலானும், வினைவிகுதிகளும் அவ்வினைநிகழ்வழி முற்றின்கட்கருத்தாவையும் எச்சங்களிற் பெயரொழிபையும் வினையொழிபையும் தந்து நின்றாற்போல வினைநிகழாவழியும் நிற்றலானும் இங்ஙனங்கூறப் பட்டதென்க. (3)

## உருபும்வினையும் அடுக்கிமுடிதல்

355. உருபுபல வடுக்கினும் வினைவே றடுக்கினும்
ஒருதம் மெச்ச மீறுற முடியும்.

எ-ன், இதுவுமது.

(இ-ள்.) வேற்றுமையுருபுகள் விரிந்தும் தொக்கும் தம்முள் விரவிப் பல அடுக்கிவரினும் வெவ்வேறு பல அடுக்கிவரினும் மூவகைவினைச்சொற்களும் தம்முள் விரவி அடுக்குந்தன்மைய வன்றி வெவ்வேறு பல அடுக்கிவரினும் தத்தம் எச்சம் இறுதியில் ஒன்றுவர அதனோடு அனைத்தும் முடிவனவாம் எ-று.

பலவென்பதனை வேறென்பதனோடும் கூட்டுக.

இவ்விருவகையடுக்கும் 'படைபடை' என்றாற்போல அடுக் கியவல்லவென்பார் பலவடுக்கினுமென்றார்.

வினைவேறுபல அடுக்கினுமென விதந்தாற்போல உருபிற்கு விதவாமையின் அவை விரவியும் வேறுவேறு பல அடுக்கு மென் பதுபெற்றாம்.

1. "ஆறு வறிவி னவர்கட்கென் னுங்கொலென் றுதரவே" யா. கா. அவை.

(வ - று.) சாத்தன் யானையது கோட்டை நுனிக்கட் பொருட்கு வாளாற் குறைத்தானென்பன உருபுகள் விரவிப் பல அடுக்கிக் குறைத்தானென்னும் ஒருவினைகொண்டன. இவற்றுள் ஆறனுருபு அடுக்கன்று; வினை அதற்கு எச்சமன்றுதலானும் கோடென்னும் பெயர்கொண்டமையானுமென்க. சாத்தன் என்னும் பெயர் வேற்றுமை குறைத்தற்கு வினைமுதலைக்காட்ட வந்ததன்றி அடுக்கென்று கோடலுமொன்று. சாத்தனையும் கொற்றனையும் தேவனையும் பூதனையும் வாழ்த்தினுன் எ - ம், சாத்தனுக்கும் கொற்றனுக்கும் தேவனுக்கும் பூதனுக்கும் தந்தை எ - ம் இரண்டாமுருபும் நான்காமுருபும் வேறுபல அடுக்கி வாழ்த்தினுனென்னும் ஒரு வினையும், தந்தையென்னும் ஒரு பெயரும் முறையே கொண்டன. வாள்கைக் கொண்டான் அருளறமுடையான் எ - ம் உருபு தொக்கு அவ்வாறு வந்தன. உண்டான் தின்றான் ஓடினுன் பாடினுன் சாத்தன்

" வருதி பெயர்தி வருந்துதி துஞ்சாய்
பொருதி புலம்புதி நீயும்-கருதுங்கால்
பண்டினை யல்லையாற் பாழித்தோட் கோதையைக்
கண்டனையோ வாழி கடல் " எ - ம்,
[1] " இளையண் மெல்லியண் மடந்தை "
" அரிய சேய பெருங்கான் யாறே "

எ - ம் வினைமுற்றும் குறிப்புமுற்றும் பெயரெச்சங்களோடு விரவாது வேறுபல அடுக்கிச் சாத்தன் நீ மடந்தை யாறு என்னும் ஒரு பெயர் முறையேகொண்டன. [2]கற்றகேட்ட பெரியோர் எ - ம்,

[3]" சிறிய பெரிய நிகர்மலர்க் கோதை "

எ - ம் பெயரெச்சவினையும் குறிப்பும் வினை வினைக்குறிப்பு முற்றொடு விரவாது வேறு பல அடுக்கிப் பெரியோர் மலர்க்கோதை என்னும் ஒருபெயர் முறையேகொண்டன. கற்றுக்கேட்டறிந்தார் எ - ம், விருப்பின்றி வெறுப்பின்றியிருந்தார் எ - ம் வினையெச்சவினையும் குறிப்பும் வினையொடு முடியுமென விதந்தவினைமுற்றுக்களோடு விரவாது வேறுபல அடுக்கி அறிந்தார் இருந்தார் என்னும் ஒருவினை முறையே கொண்டன. பிறவுமன்ன.

" சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்

1. " எம்மூரல்லது " என்ற பழஞ்செய்யுளில் உள்ளது.
2. "கற்றல் கேட்ட லுடையார் பெரியோர் " (தே. திருஞா.) என்னும் திருவாக்கை இத்தொடர்மொழி நினைப்பூட்டுகின்றது.
3. " சீறடிப்பேரகல் " என்னும் பழஞ்செய்யுளில் உள்ளது.

செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே" (சீவக. 53)

என்னும் வினையெச்சங்கள் ஒன்றற்கொன்றுமுடிபதாய்த் தொடர்த லானும்,

" நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்
வறிது பெயர்குந ரல்லர்" (புறநா. 124, பி - ம்)

என்னும் வினையெச்சக்குறிப்புக்கள் ஆங்காங்கு முடிதலானும் இவை[1] அடுக்காகாவென்க. (4)

## இடைப்பிறவரல்

356. உருபு முற்றீ ரெச்சங் கொள்ளும்
பெயர்வினை யிடைப்பிற வரலுமா மேற்பன.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) வேற்றுமையுருபுகளும் முற்றுக்களும் பெயரெச்சங் களும் வினையெச்சங்களும் கொண்டுமுடியும் பெயர்க்கும் வினைக் கும் இடையே பிறசொற்கள் வருதலுமாம், ஆண்டைக்குப் பொருந் துவன எ - று.

பிறவெனப் பன்மைகூறினரேனும், "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" (358) என்பதனான் ஒரு சொல் வருதலும் கொள்க.

உம்மை, உருபுமுற்றீரெச்சங்களும் அவை கொள்ளும் பெயர் வினையுமாத்திரையாய் நிற்றலேயன்றியென இறந்தது தழீஇ நின்றது.

(வ - று.) சாத்தன் வயிறாரவுண்டான், அறத்தை அழகுபெறச் செய்தான், வாளால் மருவாரை மாயவெட்டினான் [இதனுள், மாய வென்பதொன்றுமே இடைவந்தது; [2]மருவாரை என்பது அற்றன்று, இவ்விரண்டனுருபும் வாளாலென்னும் மூன்றனுருபும் அடுக்காய் நிற்றலின்], தேவர்க்குச் செல்வம் வேண்டிச் சிறப்பெடுத்தான், மலையினின்று உருண்டு வீழ்ந்தான், சாத்தனது இத்தடக்கையானை, ஊர்க்கண் உயர்ந்த ஒளிமாடம், சாத்தா விரைந்தோடி வா எ-ம், வந்தான் அவ்வூர்க்குப்போன சாத்தன், வந்த அவ்வூர்ச் சாத்தன்,

1. இவற்றை மயிலைநாதர் அடுக்கென்பர்.

2. இங்ஙனங் கூறியது மயிலைநாதர் உரையை நோக்கி; பிரயோக விவேக நூலுடையாரும் இதனை 'இடைப்பிறவரல்' என்பர்; 19-ஆம் கலித்துறை உரை. இ. வி. உரைகாரரும் இவ்வாறே காட்டியுள்ளார்; சூ. 329, உரை.

வந்துசாத்தன் இற்றைநாள் அவனூர்க்குப்போயினன் எ-ம் வரும். குறிப்புவினை முதலியபிறவுமன்ன.

"கருதலர்ச் சீறிய கடுங்கொல் யானை"

என்புழிச் சீறியவென்னும் பெயரெச்சத்திற்கும் அதுகொண்ட யானையென்னும் பெயர்க்கும் இடையே கொல்லென்னும் வினைத் தொகைச்சொல் இடைப்பிறவரலாய் வந்ததன்று; [1]வினைத்தொகை காலங்கரந்த பெயரெச்சமாதலாற் பெயரெச்சவினை இரண்டடுக்கி யானையென்னும் ஒரு பெயர்கொண்டனவாம் என்க. இவ்வாறே அடுக்காய்வந்தனவும் இடைப்பிறவந்தனவும் உய்த்துணர்ந்து கொள்க.

இனி, ஏற்பனவென்றமையான் வல்லமெறிந்தநல்லிளங் [2]கோசர்தந்தை மல்லல்யானைப்பெருவழுதி என்புழி வல்ல மெறிதல் பெருவழுதி மேற்றேயெனின், நல்லிளங்கோசர் தந்தை என்பதனை இடைநிறுவின் ஏலாதாம்; வல்லமெறிதல் நல்லிளங்கோசர்மேற் றாகப் பொருள்படுமாதலினென்க. (5)

## முடிக்குஞ்சொல் நிற்கும் இடம்

357. எச்சப் பெயர்வினை யெய்து மீற்றிலும்.

எ-ன், இதுவுமது.

(இ-ள்.) உருபுகளும் முற்றுக்களும் பெயரெச்சங்களும் வினையெச்சங்களும் கொண்டு முடியும் எச்சமாகிய பெயரும் வினையும் அவற்றிற்கு ஈற்றினும் வரும் எ-று.

ஈற்றினுமென்னும் உம்மையான் முதலினும் வருதல் கொள்க.

(வ-று.) சாத்தன்வந்தான் மரத்தைக்குறைத்தான் சாத்தனால் வந்தான் சாத்தற்குக்கொடுத்தான் சாத்தனினீங்கினன் சாத்தனது ஆடை சாத்தன்கட் சென்றன் சாத்தா வா எ-ம், வந்தான் சாத்தன் வந்தசாத்தன் வந்துபோயினன் எ-ம் இறுதிக்கண் வந்தன. வந்தான்சாத்தன் குறைத்தான் மரத்தை வந்தான் சாத்தனால் கொடுத்தான் சாத்தற்கு நீங்கினன் சாத்தனின் சென்றன் சாத்தன்கண் வா சாத்தா எ-ம், சாத்தன் வந்தான் போனன் வந்து எ-ம் முதற்கண் வந்தன.

எய்துமீற்றினென்றற்போல முதற்கண்வருதலை எடுத்தோ தாது உம்மையாற் றழீஇக்கொண்டார், ஆறனுருபினெச்சமும்

1. சூ. 364.

2. கோசர் - ஒருவகைவீரர்; "இளம்பல் கோசர் விளங்குபடை கன்மார்" புறநா. 169.

ஏழனுருபினெச்சப்பெயரும் பெயரெச்சத்தினெச்சமும் முதற்கண் வாரா என்பதூஉம். ஏனைய வரினும் இறுதிக்கண் வருதல்போற் சிறப்பினவல்லவென்பதூஉம் தோன்றுதற்கென்க.

எழுவாயுருபு வினைமுற்றுப் பயனிலையை இறுதிக்கட்கொண்ட தூஉம், வினைமுற்றுப் பெயர்ப் பயனிலையை முதற்கட்கொண்ட தூஉம் சாத்தன் வந்தான் என வரும் ; தம்முள் வேற்றுமை யாதோ வெனின், கேட்போர்க்குச் சாத்தன் இது செய்தானென வினையை உணர்த்துவதூஉம், இது செய்தான் சாத்தனென *வினைமுதலை உணர்த்துவதூஉமாமென்க. வந்தான் சாத்தன் என வருவனவும் அன்ன. (6)

358. [1]ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே.

எ - ன், நால்வகைச்சொற்கும் ஆவதோர் இலக்கணம் உணர்த் துதல் நுதலிற்று.

மொழியெனப் பொதுப்படக் கூறினமையின், [2]நால்வகைச் சொற்குமென்பது பெற்றும்.

(இ - ள்.) பெயர் வினை இடை உரி என்னும் நால்வகைச் சொற்களுள் ஒவ்வொன்று எஞ்சிநின்ற தன்தன் இனங்களைக் கொள்ளுதற்கு உரித்தாம் எ - று.

(வ - று.) சோற்றை நனி உண்டானென்றவழிக் கறியை நனி தின்றனென்றற்றொடக்கத்தனவும், பாக்கை நனி தின்றனென்ற வழி வெற்றிலையை நனி தின்றன் சுண்ணும்பை நனி தின்றனென் பனவும், நஞ்சுண்டான் சாவானென்றவழி நஞ்சுண்டாள் சாவாள் நஞ்சுண்டது சாமென்பனவும், பார்ப்பான் கள்ளுண்ணுனென்ற வழிப் பார்ப்பனி கள்ளுண்ணுளென்பதுவும் கூறுதே அமைந்து கிடத்தலின் இனங்களாய் எஞ்சிநின்றன. இவற்றுட் சோற்றை யென்னும் பெயர்ச்சொல்லும் உருபிடைச் சொல்லும் கறியையென் னும் பெயர்ச்சொல்லையும் உருபிடைச்சொல்லையும், நனி உண்டா னென் னும் உரிச்சொல்லும் வினைச்சொல்லும் நனி தின்றனென் னும் உரிச்சொல்லையும் வினைச் சொல்லையும் கொள்ளுதற்குரியவாய் நிற்றல் காண்க. பிறவு மன்ன. (7)

359. பொதுப்பெயர் வினைகளின் பொதுமை நீக்கும்
மேல்வருஞ் சிறப்புப் பெயர்வினை தாமே.

(பி - ம்.) *'வினைமுதலைத் தருமொழியுணர்த்துவதூஉம்'

1. இச்சூத்திரத்தின்படி இனங்களைக் கொள்ளுதலை உபலக்ஷணம் என்பர் வடநூலார்.

2. பெயர்ச்சொல் வினைச்சொற்களை மட்டும் கொள்வர் மயிலைநாதர்.

எ - ன், பெயர்வினைகட்கு ஆவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) திணை பால் இடம் காலங்கட்குப் பொதுவாகிய பெயர்வினைகளினுடைய பொதுத்தன்மையினை நீக்கி ஒன்றற்கு உரிமை செய்யும்,மேல்வரும் சிறப்புப்பெயர் வினைகள் தாமே. எ - று.

ஒன்றற்கு இருமருங்கினையும் மேலென்பவாகலிற் சிறப்புப் பெயர்வினை யாண்டுவரினும் கொள்க.

தாமேயென்னும் பிரிநிலையேகாரம், குறிப்பினன் உற்றுணர்ந்து இடர்ப்படவேண்டாவென்னும் பொருள் தந்து நின்றது.

(வ - று.) சாத்தனிவன் சாத்தனிது எ - ம், சாத்தன் வந்தான் சாத்தன் வந்தது எ - ம் பெயர்த் திணைப்பொதுமையினைச் சிறப்புப் பெயரும் வினையும் வந்து நீக்கின. ஒருவர் என்னையர் ஒருவர் என் தாயர் எ - ம், மரம் வளர்ந்தது மரம் வளர்ந்தன எ - ம் பெயர்ப் பாற்பொதுமையினைச் சிறப்புப் பெயரும் வினையும் வந்து நீக்கின. அவரெல்லாமிருந்தார், யாமெல்லாம்வருவம் நீவிரெல்லாம் போமின் எனப் பெயரிடப்பொதுமையினைச் சிறப்புப் பெயரும் வினையும் வந்து நீக்கின. வாழ்க : அவன் அவள் அவர் அது அவை யான் யாம் நீ நீயிர் எ - ம், உண்டு : வந்தான் வந்தாள் வந்தார் வந்தது வந்தன வந்தேன் வந்தேம் வந்தாய் வந்தீர் வருகின்றான் வருவான் எ - ம் வினைத் திணைபால் இடம் காலப்பொதுமையினைச் சிறப்புப்பெயரும் வினையும் வந்து நீக்கின. பிறவுமன்ன.

உண்டென்பது இறந்தகால வினையெச்சமாயினும் முக்கால வினைகளையும் கொண்டு முடிதற்குரிய பொதுமையினையுடைத் தாதலின் அதனை மேல்வரும் சிறப்புவினை நீக்கின. (8)

## எச்சங்களின் முடிபு

360. பெயர்வினை யும்மைசொற் பிரிப்பென வொழியிசை
எதிர்மறை யிசையெனுஞ் சொல்லொழி பொன்பதும்
குறிப்புந் தத்த மெச்சங் கொள்ளும்.

எ - ன், நால்வகைச் சொற்கும் ஆவதோர் இலக்கணம் உணர்த்தும் வழிச் சிலவற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியும், சிலவற்றிற்கு எய்தாதது எயதுவித்தலும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பெயரெச்சமும் வினையெச்சமும் உம்மையெச்சமும் சொல்லெச்சமும் பிரிநிலையெச்சமும் எனவெச்சமும் ஒழியிசையெச்சமும் எதிர்மறை யெச்சமும் இசையெச்சமுமாகிய சொல்

லெச்சம் ஒன்பதும் குறிப்பெச்சம் ஒன்றும் தத்தம் எச்சங்களைக் கொள்ளும். எ - று.

சொல்லொழிபென்பதனை முற்கூறிய ஒன்பதனோடும், அதனுள் ஒழிபென்பதனைப் பிற்கூறிய குறிப்பினோடும் கூட்டுக. குறிப்புச் சொல்லொழிபெனக் கூட்டி உரைத்தால் என்னையெனின், அது பின்னர்க் கூறுதும்.

எனவே எச்சங்கள் சொல்லெச்சம் குறிப்பெச்சமென இருவகை யென்பதூஉம், சொல்லெச்சம் ஒன்பதெனத் தொகை கூறினர், வகையுள் ஒன்றனையும் சொல்லெச்சமென்றமையான் அவ்வகையுள் ஒன்றாகிய சொல்லெச்சமென்பது சொல்விகற்பங்களின்றிச் சொல் லென்னுஞ் சொல் எஞ்சிநிற்பதென்பதூஉம் பெற்றாம்.

“ சொல்லெ னெச்ச முன்னும் பின்னும்
சொல்லள வல்ல தெஞ்சுத லின்றே ” (எச்ச. சூ. 45)

என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாரென்க. இவ்வாசிரிய வசனத் திற்கு இப்பொருளன்றி வேறுபொருள் [1]கூறுவாருமுளர். அது நிற்க.

(வ - று.) செய்த சாத்தன் செய்கின்ற சாத்தன் செய்யும் சாத்தன் எ - ம், நல்ல சாத்தன் எ - ம் பெயரெச்சங்கள் தம் எச்ச மாகிய செய்பவனது பெயர்கொண்டன. ஏனைக் கருவி முதல் ஐந்தோடும் ஒட்டுக. வினைத்தொகைகளும் பெயரெச்சமாயடங்கு தலின் அவையும் முற்றெச்சங்களும் அன்ன.

செய்து வந்தான் செய்து நல்லனாயினான் செய்து நல்லன் செய்து வருதல் எ - ம்,

“ விருந் தின்றி யுண்ட பகல் ” (திரி. 44) எ - ம்

வினையெச்சங்கள் தம் எச்சமாகியவினையும் குறிப்பும் தொழிற் பெயரும் கொண்டன. காட்டாதொழிந்த வினையெச்சங்களும் முற் றெச்சங்களும் அன்ன. இவ்வெச்சத்திற்கு முடிபாகிய வினைக் குறிப்பு ஆக்கமொடுவருதலும் அதுதொகவருதலும் “ ஆக்கவினைக் குறிப்பு ” (347) என்னுஞ் சூத்திரத்துள் அமைந்து கிடந்தன.

சாத்தனும் வந்தானென்னும் உம்மையெச்சம் முன்னர்க் கொற்றன் வந்தானெனத் தன் எச்சங்கொண்டது.

“ மிடியென்னுங் காரணத்தின் மேன்முறைக் கண்ணே
கடியென்றார் கற்றறிந் தார் ” (நாலடி. 56),
“ இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும்
வசையன்று ” (நாலடி. 111)

1. கூறுவார், சேனாவரையரும் நச்சினார்க்கினியரும்.

என்பன சொல்லெச்சம் ; கடியென்று சொன்னர், இல்லென்று சொல்லுதலெனச் சொல்லென்னும் தம் எச்சங் கொண்டன. இவை பெயரெச்சம் வினையெச்சமென்ருற்போலச் சொல்லென்னும் எச்சத்தையுடைய இடைச்சொல்லைச் சொல்லெச்சமென்றலின் ஆகுபெயர். மேல்வரும் எனவெனெச்சம் ஒழிந்தனவு மன்ன.

சாத்தனே கொண்டான், சாத்தனோ கொண்டானென்பன பிரிநிலையெச்சம். இவை பிறர்கொண்டிலரெனத் தம் எச்சம் கொண்டன. கோடற்ருெழிலாற் சாத்தனினின்றும், பிரிக்கப் பட்டார் பிறராதலிற் பிரிநிலையென்க.

கடல் ஒல்லென ஒலித்தது, நரம்பு விண்ணென விசைத்தது, தலை இடியென விடித்தது என்பன எனவெனெச்சம். இவை தம் எச்சமாகிய வினைகொண்டன ; மிகவும் ஒலித்தது, *மிகவும் விசைத்தது, மிகவும் இடித்தது என்பன இவற்றிற்குப் பொருளாமாதலின், இவ்வெனவெனெச்சம் மிகுதிப்பொருள் தருவதோர் இடைச் சொல்லாமென்க.

" தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை " (குறள், 55)

என்பதனுள் எனவென்பது பெய்யெனச் சொல்லவென வினைப் பொருள் தருதலின், இடைச் சொல்லடியாகப் பிறந்த செயவெனெச்சமாய் முன்னர்ப்போந்த வினையெச்சத்துள் அடங்குமென்க.

கூரியதோர்வாண்மன், " வருகதில்லம்ம " (அகநா. 276), கொளலோகொண்டான் என்பன ஒழியிசையெச்சம். இவை முறையே கோடிற்று, வந்தால் இன்னது செய்வல், கொண்டுய்யப் போயினனல்லனெனத் தம் எச்சங்கொண்டன.

வரலுமுரியன், யானோ செய்தேனென்பன எதிர்மறையெச்சம். இவை முறையானே வாராமைக்குமுரியன், யான் செய்திலனெனத் தம் எச்சங் கொண்டன.

இதுகாறும் வினையியலின் ஒழிபாகிய பெயரெச்ச வினையெச்ச முடிபும் இடையியலின் ஒழிபாகிய ஏனை அறுவகை எச்சமுடிபும் எடுத்து விதந்தார். இவ்வாறு எடுத்து விதத்தற்கு வரையறைப் படாது வரும் சொல்லெச்சங்களையெல்லாம் தொகுத்து இசையெச்சமென இறுதிக்கட் கூறினர். இசை யென்பது சொல். இசையெச்சமெனப் பொதுப்படக்கூறினமையின் இவ்வெச்சமும் இது கொள்வதும் பெயர் வினை இடை உரி என்னும் நால்வகைச் சொல்லுள்

(பி - ம்.) * ' மிகவுமிசைத்தது '

ஒன்றும் பலவும் தனித்தும் தொடர்ந்தும் வருமென்பது பெற்றும். அவற்றுட் சில இசையெச்சங்கள் வருமாறு :

"இணரெரி தோய்வன்ன வின்னு செயினும்
புணரின் வெகுளாமை நன்று" (குறள், 308)

என்புழிப் பிற உயிர்க்கு இன்னுசெயின் அவை பிழையாது தமக்கு வருதல் கருதித் தம்மாட்டு அன்பும் பிறவுயிர்கண்மாட்டு அருளும் இன்னுசெய்தலான் மேன்மேல் வளரும் பிறப்பிறப்பின் அச்சமும் நம்மால் இன்னு செய்யப்பட்டாரை நாமடைந்து இரத்தல் கூடினுங் கூடும், அதனுல் யார்மாட்டும் இன்னுசெய்யக்கடவேமல்லமென்னும் வருங்காலவுணர்ச்சியும் இலராய் ஒருவர், தன்னுல் ஆற்றல்கூடாத இன்னுதனவற்றைத் தன்கட்செய்தாராயினும் அவர் தமக்கு வேண்டுவதொரு குறைமுடித்தல் கருதி நாணுது தன்னை அடைந்தாராயின் அவர் செய்த இன்னுமை கருதி அவரை வெகுளாது * அவற்றைமறந்து அவர்வேண்டும் குறைமுடித்து முன்செய்த இன்னுமையால் அவர் கூசியொழுகுதல் தவிர்தற்குக் காரணமாகிய மெய்ப்பாடு முதலியன தன்கட் குறிப்பின்றி நிகழ அவர்க்கினியனுகியிருத்தல் தன் சால்புக்கு நன்று என நால்வகைச் சொற்களுள் வேண்டுவனவெல்லாம் தந்து அகலங் கூறவேண்டி நிற்பன இசையெச்சமாமென்க. பிறவுமன்ன.

இனிக் குறிப்பெச்சங்களாவன : [1]"ஒன்றெழி பொதுச்சொல்" முதலிய குறிப்புச் சொற்களாம், குறிப்பான் உணரப்படுவன முறையே எஞ்சிநிற்றலின். அவை அவ்வெச்சங்கொள்ளுமாறு : பெருந்தேவி பொறையுயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்களுளர் என்புழி, மக்களென்னும் பொதுப்பெயர் பெண்மக்களெனப் பெண்ணென்னும் சிறப்புப்பெயர்கொண்டது. "குறுத்தாட்பூதம்" என்புழித் தகரவல்லொற்று அதற்கினமாகிய மெல்லொற்றையும், "மரையிதழ் புரையும்" என்புழி மரையென்பது தாவென்னும் முதலெழுத்தையும் கொண்டன. வாய்பூசி வருதுமென்பது எச்சில் கழித்து வருதுமென்பது கொண்டது. புளித்தின்றுனென்பது பழமாகிய புளியெனப் பழமென்பது கொண்டது. பொற்றெடி யென்பது பொற்றெடியையுடையாளென இரண்டா முருபும் அதன் பயனிலையும் கொண்டது. நல்லன் இவனென்பது பெயர்ப்பொருள் கொள்ளாது வினைக்குறிப்புப் பொருளொடு நல்லனுயினுனிவனென ஆக்கங்கொண்டது.

---

(பி - ம்.) *'அவற்றை மறைத்து'

1. சூ. 269 ; இங்கே காட்டிய உதாரணங்களுக்குரிய இடங்கள் அச் சூத்திர உரையின் அடிக்குறிப்புக்களால் உணரலாகும்.

" அறத்தா றிதுவென வெள்ளைக் கிழிபு "

என்பது,

" அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானொ டூர்ந்தா னிடை "

என்பது கொண்டது.

" அலங்குளைப் புரவி யைவரொடு சினைஇ "

என்பது தருமன் வீமன் அருச்சுனன் நகுலன் சகாதேவன் என்பன கொண்டது.

" பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டம்
சால மிகுத்துப் பெயின் " (குறள், 475)

என்பதூஉம், உண்ணுநின்றுன் கற்கறித்துழி அட்டோன்முகம் நோக்கி நன்கட்டாயென்பதூஉம் மெலியராயினும் பலர் தொகின் வலியரையும் வெல்வரென்பதனையும், நன்கட்டாயல்லை யென்பதனையும் முறையே கொண்டன. பிறவுமன்ன. இவை ஒன்றுெழி பொதுச்சொல் முதலிய குறிப்பெச்சங்கள் தம் எச்சம் கொண்டன. இதனைக் குறிப்புச்சொல்லெச்சமென்னுது குறிப்பெச்சமென்றுர், சொல்லேயன்றிப் பொருண்மாத்திரையும் எழுத்தும் எஞ்ச வருவனவும் உளவாதலினென்க.

இப்பத்தெச்சங்கட்கும் [1]வேறுபொருள் கூறுவாருமுளர். அவையெல்லாம் இசையெச்சமாயும் குறிப்பெச்சமாயும் அடங்கு மாதலானும் பெயரெச்சவினையெச்சம் முதலியவற்றிற்கு ஆங்காங்கு முடிபு கூறுராயினுர் ஈண்டு எச்சங்களையெல்லாம் தொகுத்துக் கூறும்வழி முடிபுகூறுராயிற் குன்றக்கூறலென்னும் குற்றமா மாதலானும் அது பொருந்தாதென்க. (9)

## தொகைநிலைத் தொடர்மொழி

361. பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை
முதலிய பொருளி னவற்றி னுருபிடை
ஒழிய விரண்டு முதலாத் தொடர்ந்தொரு
மொழிபோ னடப்பன தொகைநிலைத் தொடர்ச்சொல்.

எ - ன், பெயர்க்கும் வினைக்கும் ஆவதொரு விதி உணர்த்துதல் நுதலிற்று.

1. அவிநய உரையாசிரியராகிய இராசபவித்திரப் பல்லவதரையர் என்பார் இதற்கு வேறுபொருள் கூறுவதை மயிலைநாதர் உரையால் அறியலாகும். தொல்காப்பிய உரையாசிரியர்கள் ஈண்டுள்ளனவற்றுட் சில உதாரணங்களை வேருகக் காட்டியுள்ளார்கள்.

(இ - ள்.) பெயர்ச்சொல்லொடு பெயர்ச்சொல்லும் பெயர்ச்சொல்லொடு வினைச்சொல்லும் வேற்றுமை வினை பண்பெனப் பின்னர்வகுத்துக்கூறும் அறுவகைப் பொருட்புணர்ச்சிக்கண் அவற்றின் உருபுகள் இடையே தொக்குநிற்ப இரண்டு முதலிய பல சொற்கள் தொடர்ந்து ஒருமொழிபோல் நடப்பன யாவை, அவை தொகைநிலைத்தொடர்ச்சொற்களாம். எ - று.

தொகையென்னும் பலபொருளொருசொல் ஈண்டு உருபு மறைதலை உணர்த்திநின்றது ;

" ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகாஅ விறுதி யான "

(தொல். வேற்றுமை மயங். சூ. 22)

என்பவாகலின்.

வினையொடுவினை தொகைநிலைத்தொடராகாமையின் அதனை ஒழித்தும், நிலத்தைக் கடந்தான் நிலங்கடந்தான் என உருபு இடைவிரியின் பிளவுபட்டும் தொக்கதேற் பிளவுபடாதும் தொடருமாதலின் ஒருமொழிபோலெனவும் கூறினர். ஒரு மொழி போல் நடத்தலாவது கொல்யானை வந்தது, நிலங்கடந்தான் சாத்தனென இரண்டு முதலிய பலசொற்றொடர்ந்து ஒரு பெயராயும் ஒரு வினையாயும் நின்று தம்முடிபேற்றலெனப் [1]பொருள்கூறின் அவ்வாறு தொகாநிலைத்தொடரும், கொன்றயானை வந்தது, நிலத்தைக் கடந்தான் சாத்தனென நடக்குமாதலின் அது பொருந்தாதென்க. (10)

## தொகைநிலைத்தொடர்ப் பாகுபாடு

362. வேற்றுமை வினைபண் புவமை யும்மை
அன்மொழி யெனவத் தொகையா றுகும்.

எ - ன், மேல் வேற்றுமை முதலியவென்றார், அவை இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வேற்றுமைத்தொகையும் வினைத்தொகையும் பண்புத்தொகையும் உவமத்தொகையும் உம்மைத்தொகையும் அன்மொழித் தொகையுமென மேற்கூறிய தொகைநிலைத் தொடர்ச்சொல் அறுவகைப்படும் எ - று. (11)

## வேற்றுமைத் தொகை

363. இரண்டு முதலா விடையா றுருபும்
வெளிப்பட லில்லது வேற்றுமைத் தொகையே.

1. இங்ஙனம் பொருள் கூறுபவர் மயிலைநாதர்.

எ - ன், நிறுத்தமுறையானே வேற்றுமைத்தொகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எழுவாய்க்கும் விளிக்கும் இடையே நின்ற இரண்டாவது முதலிய ஆறு வேற்றுமையுருபும் தொக்க தொடர்ச்சொற்கள் வேற்றுமைத்தொகைகளாம் எ - று.

வேற்றுமைப்பொருட்புணர்ச்சிக்கண் பெயரொடு பெயரும் வினையும் கூடிய கூட்டத்தை வேற்றுமைத்தொகை என்றதன்றென்பார், ஆறுருபும் வெளிப்படலில்லதென்றார். ஏனைத்தொகைகளுமன்ன.

(வ - று.) நிலங்கடந்தான், தலைவணங்கினான், சாத்தன் மகன், ஊர்நீங்கினான், சாத்தன்கை, "குன்றக்கூகை" (குறுந். 153), யானைக் கோட்டு நுனிகுறைத்தான் என ஆறுருபும் இடையே தொக்கவாறு காண்க.

[1]இடையேதொக்கதனைத் தொகைநிலைத் தொடரென்றமையானே கடந்தான் நிலம், இருந்தான் குன்றத்து என இறுதிக்கண் தொக்குப் பிளவுபட்டுநின்றன தொகைநிலைத்தொடராகாவோ எனின், நிலங்கடந்தான், குன்றத்திருந்தானென்பனவற்றை ஒரோவழி மாறிக்கூறுதலிற் பிளவுபட்டு நின்றனவன்றி அவையும் இடைக்கண்தொக்க தொகைநிலைத்தொடரேயாமென்க.

இனி ஆறுருபுமென்னும் முற்றும்மையை எச்சவும்மையாக்கிப் பொற்குடமென ஒரோவழி உருபும்பொருளும் உடன்தொக்கதூஉம் வேற்றுமைத்தொகையெனக்கொள்க. அது விரிவுழிப் பொன்னாற் செய்த குடமென விரியும் பிறவுமன்ன. (12)

## வினைத்தொகை

364. காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை.

எ - ன், வினைத்தொகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) காலம்பற்றிப் புடைபெயர்வினையுருபாகிய தம் இறுதிகள் தொக்குநிற்பச் செய்வதாதி அறுபொருட்பெயராகிய தம் எச்சங்கொண்ட பெயரெச்சங்கள் வினைத்தொகைகளாம் எ - று.

காலமென்றது ஆகுபெயர்.

---

1. இடையே தொக்கனவற்றை வேற்றுமைத்தொகையென்றும் ஈற்றில் தொக்கனவற்றைச் செய்யுள் விகாரவகையால் தொகுக்கப்பட்டன வென்றும் கூறுவர் மயிலைநாதர்.

முதனிலைவினையுருபு தொகாது நிற்பப் புடைபெயர்ச்சி வினையுருபு தொக்கன வினைத்தொகையெனப்படுமென்பார், காலங் கரந்தவென ஆகுபெயராற் கூறினர். புடைபெயர்ச்சி வினைகளை முதனிலையொழிந்த இறுதிகள் காட்டிநிற்றலின் அவ்வினைகட்கு அவை உருபாயின.

(வ - று.) நெருநல்அடுகளிறு, இன்றடுகளிறு, நாளையடுகளிறு, வேல், களம், தொழில், பொழுது, கந்து என வரும். இவை விரிவுழி நெருநலட்டகளிறு, இன்றடாநின்றகளிறு, நாளையடுங்களிறு என விரியும். இவை முறையே இறந்தகாலவினைத்தொகை, நிகழ்காலவினைத்தொகை, எதிர்காலவினைத்தொகை எனப்படும். இஃது ஒவ்வொரு காலத்தையே பற்றுது முக்காலமும்பற்றி நெருநலும் அட்டகளிறு, இன்றும் அடாநின்ற களிறு நாளையும் அடுங்களிறு என விரியவரின், முக்காலவினைத் தொகையெனப் படும். இங்ஙனம் காலவிகற்பம்பற்றிப் புடை பெயர்வினைகருதாது அரிவாள், [1]ஆவுரிஞ்சுதறி என்றாற்போல அடுகளிறு என்பது 'இத்தொழிற் குரியது இஃது'என்னும் பொருள்பட வருமாயின், வினைத்தொகைக்குறிப்பெனப்படுமென்க. இவ்வாறே ஏனை வினைத் தொகைகளையெல்லாம் உய்த்துணர்ந்துகொள்க. இதற்கு வருமொழி பெயராதலின், இஃது இத்தொகைநிலையாயே தொடரும்; இரண்டிறந்தமொழிகள் இலவென்க.

அட்டது களிறு, அடாநின்றது களிறு, அடுவது களிறு என முற்றுக்கள் இறுதி தொகுதலின் அடுகளிறென வினைத்தொகையாயிற்றெனின், அடுகளிறு இது அடுகளிறு வந்தது எனப் பின்னும் ஒரு பெயர்வினையையேற்றலின் அவையன்றெனவும், அடுவென்னும் முதனிலைவினையாகிய காரணத்தின்கண் முக்கால வினையாகிய காரியங்கள் தொக்கு நிற்றலின் அடுகளிறென வினைத் தொகையாயிற்றெனிற் காரணத்தின்கட் காரியந் தொக்கு நிற்றற்குக் களிறென்னும் முடிக்குஞ்சொல் வேண்டாமையின் அஃது ஒருமொழியிலக்கணமன்றி இங்ஙனம் அதிகரித்த தொடர் மொழியிலக்கணமன்மையின் அஃதன்றெனவும் விலக்கிப் பெயரெச்சத்திறுதி தொக்கது வினைத்தொகையென்றார். (13)

1. ஆவுரிஞ்சுதறி - தினவுள்ள பசுக்கள் தம் உடலைத் தேய்த்து அத்தினவைத் தீர்த்துக்கொள்ளுதற்குப் பொதுவிடத்தில் நடப்படும் கற்றூண்; இதைநடுதல் முப்பத்திரண்டு தர்மங்களில் ஒன்று; ஆதீண்டு குற்றி எனவும் இது வழங்கப்படும்.

## பண்புத்தொகை

365. பண்பை விளக்கு மொழிதொக் கனவும்
ஒருபொருட் கிருபெயர் வந்தவுங் குணத்தொகை.

எ - ன், பண்புத்தொகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) குணப்பெயரொடு குணிப்பெயர் புணருங்கால் அக்குணியொடு குணத்துக்கு உண்டாகிய ஒற்றுமை நயத்தை விளக்குதற்கு ஆண்டுவரும் ஆகிய என்னும் மொழியாகிய பண்புருபு தொக்குநிற்பனவும் அப்பண்புருபு தொக்குநிற்பப் பொதுப் பெயரும் சிறப்புப் பெயருமாய் ஒருபொருட்கு இருபெயர் வந்தனவுமாகிய இவ்விரண்டும் பண்புத்தொகைகளாம் எ - று.

குணத்தொகையென்றமையான் [1]ஒருபொருட்கு இருபெயர் வந்தனவற்றின்கண்ணும் பண்புருபு தொகுமென்பது பெற்றும்.

(வ - று.) செந்தாமரை கருங்குவளை வட்டக்கடல் சதுரப் பலகை ஒருபொருள் இருபொருள் [2]தீங்கனிதுவர்க்காய் எ - ம், ஆயன்சாத்தன் "வேழக்கரும்பு" (பெரிய. ஏனாதி. 2) "அகர முதல" (குறள், 1) "சகரக்கிளவி" (தொல். மொழி. சூ. 29) எ - ம், செந்நிறக்குவளை "கரும்புருவச்சிலை" (சிற். 352) எ - ம் வரும். இவை விரிவுழி செம்மையாகிய தாமரை, ஆயனாகிய சாத்தன், செம்மையாகிய நிறமாகிய குவளை என விரியும். இவ்வாகிய என்னும் உருபின்கண் ஆக்கவினையின்மையின் இலக்கணையாற் செய்தவென்னும் வாய்பாட்டின்பாற்படுவதொரு வினையிடைச்சொல். ஆயனென்னும் பொதுப்பெயர் சாத்தனென்னும் சிறப்புப் பெயரை விசேடித்தும் வேழமென்னும் சிறப்புப்பெயர் கரும்பென்னும் பொதுப்பெயரை விசேடித்தும் வந்தன. பிறவுமன்ன.

முற்று எச்சமாகிய காலத்து முற்றுப்பொருளையொழித்து எச்சப்பொருளை உணர்த்திநின்றாற்போல ஆயன், வேழன் என்றற் றொடக்கத்து நிலைமொழிகள் பண்புச்சொல்லாயினும் அப்பண்பு களையொழித்துப் பொதுப்பண்பினையும் சிறப்புப்பண்பினையு முணர்த்தி வருமொழிக்கு அடையாய்நிற்றலின் அவையும் பண்புத் தொகையாயின.

பண்பை விளக்கும் மொழியென்பது ஆகியவென்பதன்று,

---

1. இங்ஙனந் தொகுவன இருபெயரொட்டுப் பண்புத்தொகையெனப் படும்.

2. தீங்கனி - இனிமையாகிய கனி; "தீங்கனி நாவ லோங்குமித் தீவிடை" மணி. 9 : 17.

[1] மைவிகுதியென்றுலென்னையெனின், ஒரு மொழிக்கு உறுப்பாகிய விகுதியை மொழியென்றல் கூடாமையானும் வட்டம் சதுரம் முதலிய பண்பிற்கு அவ்விகுதியின்மையாயினும் வட்டக்கட லென்புழி மகரவீறு கெட்டுப்புணர்ந்தாற்போல மையீறுகெட்டுப் புணர்ந்ததென்பது "ஈறுபோதல்" (136) என்னுஞ் சூத்திரத்தாற் பெறுதலானும் அஃதன்றென்க.

செய்யதாமரையென்னும் [2]எச்சவிறுதி தொக்கது இத்தொகை யென்பாரும், [3]செய்யதுதாமரை யென்னும் முற்றிறுதி தொக்கது இத்தொகையென்பாருமுளர். இவையும் மொழியன்மையானும் வட்டக்கடல் முதலிய பண்புத்தொகைக்கு அவ்வெச்சவிறுதி விரித்தல் கூடாமையானும் அவ்வெச்சவிறுதி தொக்கதேல் அதனை வினைத் தொகைக் குறிப்பென்றல் கூடுமன்றிப் பண்புத்தொகையென்றல் கூடாமையானும் அம்முற்றிறுதி தொக்கதேற் பண்புத்தொகையென் றல் கூடாமையேயன்றிச் செந்தாமரை இது, செந்தாமரை விரிந்தது என மேற்பெயர்வினையேற்றல் கூடாமையானும் அது பொருந்தா தென்க.

இனிக் குணியொடு குணத்துக்குண்டாகிய ஒற்றுமைநயம் கருதாது ஒரு பொருளைக் குணகுணியாகப்பிரித்து அவ்வேற்றுமை நயங்கருதிச் [4]செம்மையையுடைய தாமரையென விரிக்கின் இரண்டாம் வேற்றுமையுருபும் பொருளும் உடன்றொக்கதொகை யாமென்க. பிறவுமன்ன. (14)

## உவமத்தொகை

366. உவம வுருபில துவமத் தொகையே.

எ - ன், உவமத்தொகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

1. பண்புக்குத் தொக்குநின்றது கருமையென்ற ஐகாரம் என்பர் மயிலைநாதர்.

2. எச்சவிறுதி தொக்கதென்பவர் மயிலைநாதர்.

3. 'கரியது என்னும் பண்புப்பெயர் ஒருகூறு நிற்ப, ஒருகூறு தொக்கமையிற் பண்புத்தொகையாயிற்று' (தொல். எச்ச. சூ, 20, உரை) என்பர் இளம்பூரணர்; 'கரியன், கரியள், கரியர், கரியது, கரியன என்னும் பண்புணர்த்தும் ஈறுகளே தொக்குநிற்பன என்றுணர்க' என்றார் நச்சினார்க்கினியர்; தெய்வச்சிலையார் கொள்கையும் இஃதெனவே தோற்றுகின்றது.

4. 'இனி, பண்பாவது பொருட்குணமாதலின் அப்பொருட்கு உரிமை தோன்றக் கருமையையுடைய சாத்தனென்பாருமுளர்' என மயிலைநாதரும் இக்கொள்கையையுடைய ஒருசாராரைச் சுட்டுகின்றார்.

(இ - ள்.) [1]வினை பயன் மெய் * உருவென்பனபற்றிவரும் உவமவுருபுகள் தொக்க தொடர்ச்சொற்கள் உவமத்தொகைகளாம். எ - று.

(வ - று.) புலிக்கொற்றன் மழைக்கை துடியிடை [2]பொற்சுணங்கு எ - ம், குருவிகூப்பிட்டான் சக்கரஞ்சுற்றிவந்தான் எ-ம், மரகதக்கிளிமொழி இருண்மழைக்கை எ - ம் வரும். இவை விரியுழி புலியைப்போலுங்கொற்றன், குருவியைப்போலக் கூப்பிட்டான், மரகதத்தைப்போலுங் கிளியைப்போலு மொழி என விரியும். இறுதிக்கட்காட்டிய இரண்டிறந்ததொடர் [3]உவமைக்கு உவமை யன்று, முன்னது உருவுவமையும் பின்னது பயனுவமையுமாதலி னென்க.

இவை இரண்டாம்வேற்றுமையுருபும் பொருளும் உடன்றொக்க தொகையன்றோ உவமைத்தொகை யென்றது என்னையெனின், செயப்படுபொருள்கருதிக் கூறியவழி இரண்டாம் வேற்றுமையுருபும் பொருளும் உடன்றொக்க தொகையாகவும் உவமைப்பொருள் கருதிக் கூறியவழி உவமத்தொகையாகவும் கொள்ளப்படுமென்க. (15)

## உவமவுருபுகள்

367. போலப் புரைய வொப்ப வுறழ
மானக் கடுப்ப வியைய வேய்ப்ப
நேர நிகர வன்ன வின்ன
என்பவும் பிறவு முவமத் துருபே.

எ - ன், உவமவுருபு இயற்சொன்மாத்திரையாய் நில்லாது திரிசொல்லாற் பலவாதலின் அவை இவையென உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) போலவென்பதுமுதலிய செயவெனெச்சம் பத்தும் அன்ன இன்ன என்னும் பெயரெச்சக்குறிப்பிரண்டும் இவை போல்வன பிறவும் உவமவுருபுகளாம். எ - று.

இன்னவென்றது அருகியன்றி வாராமையிற் பிற்கூறினர்.

(பி - ம்.) * 'உருபென்பன'

1. "வினைபயன் மெய்யுரு வென்ற நான்கே, வகைபெற வந்த வுவமத் தோற்றம்" தொல். உவம. சூ. 1.

2. பொற்சுணங்கு - பொன்னினது நிறத்தைப் போன்ற நிறத்தை யுடைய பசலை ; இதனுல் பசலை பொன்னெனவும் வழங்கும்.

3. உவமைக்கு உவமைகூறுதல் குற்றமென்பர்.

பிறவென்றமையானே போல் புரை என்றற்றொடக்கத்து வினை யடியாகப் பிறத்தற்குரிய ஏனை வினையெச்சவிகற்பங்களும் பெய ரெச்சவிகற்பங்களும் பொருவ ஏற்ப அனைய என்றற்றொடக்கத்தன வும் கொள்க.

(வ - று.) குருவிபோலக்கூப்பிட்டான், குருவிபுரையக் கூப் பிட்டான், புலியன்னகொற்றனெனப் பெயரொடு வினை புணருங் கால் வினையெச்சவுருபுகளனைத்தினையும் பெயரொடு பெயர் புணருங் காற் பெயரெச்ச உருபுகளனைத்தினையும் விரித்துக்கொள்க.

பெயரொடு பெயர் புணரினும் புலியைப்போலப் பாயும் சாத்தன், மழையைப்போலக் கொடுக்கும் கை, துடியைப்போலச் சுருங்கிய இடை, பொன்னைப்போல விளங்கிய சுணங்கு என வினையெச்சவுருபு விரிந்தல்லது நால்வகையுவமையும் விளங்காமை யின் அவ்வுருபை முன்னர் எடுத்துவிதந்தாரென்க. (16)

### உம்மைத்தொகை

368. எண்ண லெடுத்தன் முகத்தனீட்டல்
எனுநான் களவையுள் உம்மில தத்தொகை.

எ - ன், உம்மைத்தொகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எண்ணலளவை எடுத்தலளவை முகத்தலளவை நீட்டலளவையென்னும் நால்வகையளவைகளாற் பொருள்களை அளக்குங்கால் தொடரும் அவ்வளவைப்பெயர்களுள் உம்மையாகிய உருபு தொக்குநிற்பன உம்மைத்தொகைகளாம். எ - று.

எண்ணலளவையான் அளத்தலேயன்றி அவ்வளவையை எடுத் தல்முதலிய கருவியின்பாற் படுத்தலின் அளவை நான்கென்றதன்றி எண்ணலளவையே அளவையாதலின் அதனை முற்கூறினர்.

(வ - று.) கபிலபரணர் இராப்பகல் [1] புலிவிற்கெண்டை [2]"அறுபத்துமூவர்" ஆயிரத்தைஞ்ஞூற்றைம்பத் தொன்றேகாலே அரைக்காலரை [3]மாகாணி [4]முந்திரிகை எ - ம், [5]கழஞ்சேகால்

1. புலிவிற்கெண்டை : இது தமிழ்நாட்டு முடிமன்னர்களாகிய சோழ சேர பாண்டியர்களின் கொடிகளைக் குறிக்குந்தொடர்.

2. "அறுபத்துமூவர் பதிதே மரபுசெயல், பன்ன" திருத்தொண்டர் திருவந்தாதி, காப்பு.

3. மாகாணி - பதினாறில் ஒன்று ; வீசமென்பதும் இது.

4. முந்திரிகை - ஒரு சிற்றெண் ; ஒன்றில் முந்நூற்றிருபதாகிய ஒரு பங்கு ; இது முந்திரியெனவும் வழங்கப்படும் ; " முந்திரிமேற் காணி மிகுவ தேல்" நாலடி. 346.

5. கழஞ்சு - 20 மஞ்சாடி கொண்ட நிறுத்தலளவை.

கழஞ்சரையே [1]அரைமா அரைக்காணி முந்திரிகை எ - ம், நாழி யாழாக்கு கலனேமுக்குறுணி நாழியாழாக்கே முச் [2] செவிடு எ - ம், சாணரை சாணரையேயரைக்கால் எ - ம் வரும். இவை விரிவுழிக் கபிலனும் பரணனும், இராவும் பகலும், புலியும் வில்லும் கெண்டை யும், அறுபதின்மரும் மூவரும் என விரியும். பிறவு மன்ன. இவற்றுள் அறுபதென்பது எண்ணலளவையாய்த் தொடராது எண்ணுறழ்ச்சியாய்த்தொடர்ந்தமையின் உம்மைத் தொகையன்று ; பண்புத்தொகையாமென்க. கபிலபரணரென்பது எண்ணுப்பெய ராகியது என்னையெனின், கபில பரணரிருவரும் வந்தாரெனத் தொகைபெறுதலினென்க. இவை போல்வன பிறவு மன்ன. கபில பரணர்ப் பரவினனென வருவழிக் கபிலனையும் பரணனையும் பரவின னென வேற்றுமையுருபும் உடன்விரியுமாலோவெனின், பரவின னென்னும் வருமொழி நோக்கி வேற்றுமைத்தொகையாகவும், கபில பரணரென்னும் நிலைமொழியிரண்டினையும் நோக்கி உம்மைத் தொகையாகவும் கொள்ளப்படுமென்க.

இவ்வும்மை இடையினும் இறுதியினும் ஒருங்குதொகுமென்பார், அதிகரித்தமுறையானே இடைக்கட்டொகும் வேற்றுமைத்தொகை முதலிய நான்கிற்கும் இடையே தொகுமென்ற விதியை மாற்றி இறுதிக்கட்டொகுமெனக்கூறும் அன்மொழித்தொகைக்கும் இடையே இத்தொகையை வைத்தாரென்க. எண்ணிடைச் சொற்கள் உம்மையேயன்றிப் பிறவுமுளவேனும் இஃது இயற் சொல்லாதலின் உம்மைத்தொகையெனப்பட்டது. (17)

## அன்மொழித்தொகை

369. ஐந்தொகை மொழிமேற் பிறதொக லன்மொழி.

எ-ன், அன்மொழித் தொகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வேற்றுமைத்தொகை முதலிய ஐவகைத் தொகை நிலைத் தொடர்மொழிகட்கும், புறத்து அவையல்லாத பிறமொழிக ளாகிய உருபுகள் தொகுதல் அன்மொழித் தொகையாம் எ - று.

மேலென்றமையால் [3]அவற்றின் உருபு இடையொழிய வென்ற பொதுவிதியை விலக்கினரென்பது பெற்றும்.

1. அரைமாவென்றது ஒன்றில் நாற்பதாகிய ஒரு பங்கு. அரைக் காணி - ஒன்றில் நூற்றறுபதாகிய ஒரு பங்கு ; இரண்டு முந்திரி.

2. செவிடு - ஆழாக்கில் ஐந்தில் ஒருபங்கு. 3. சூ. 361.

(வ - று.) பூங்குழல் பொற்றொடி கவியிலக்கணம் பொற்றாலி கிள்ளிகுடி கீழ்வயிற்றுக்[1]கழலை எ - ம், தாழ்குழல் கருங்குழல் துடியிடை தகரஞாழல் எ - ம், தகரஞாழன்முலை எ - ம் வரும். இவை விரிவுழி, பூவையுடைய குழலினையுடையாள் பொன்னாலாகிய தொடியினையுடையாள் கவிக்கு இலக்கணம் சொன்னநூல் பொன்னினாகிய தாலியினையுடையாள் கிள்ளியது குடியிருக்குமூர் கீழ்வயிற்றின்கண் எழுந்த கழலைபோல்வான் எ - ம், தாழ்ந்த குழலினையுடையாள் கருமையாகிய குழலினையுடையாள் துடியன்ன இடையினையுடையாள் தகரமும் ஞாழலும் விராய்ச்சமைந்த சாந்து எ - ம், தகரமும் ஞாழலும் விராய்ச்சமைந்த சாந்தையணிந்த முலையினையுடையாள் எ - ம் விரியும்.

இனி இரண்டிறந்த மொழிகளில் அறுவகைத்தொகையும் விரவித் தொகுமாறு :—

"திகழ்செவ் வான்மதித் திருமுகப் பூங்குழல்"

என வரும். இவை விரிவுழித் திகழ்ந்த செம்மையாகிய வானத்தின்கண் மதிபோலும் திருமுகத்தினையும் பூவையுடைய குழலினையும் உடையாளென விரியும். (18)

370. முன்மொழி பின்மொழி பன்மொழி புறமொழி
எனுநான் கிடத்துஞ் சிறக்குந் தொகைப்பொருள்.

எ - ன், தொகைநிலைத் தொடர்ச்சொற்கள் ஒன்றுபடத் தொடர்ந்தனவேனும் அப்பொருளும் ஒன்றுபடத்தொடராது பிளவுபட்டு ஓரிடத்துச்சிறந்தும் ஓரிடத்துச்சிறவாதும் நிற்குமென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தொகைநிலைத் தொடர்மொழிகளில் முன்மொழிக்கண்ணேனும் பின்மொழிக்கண்ணேனும் அனைத்துமொழிக்கண்ணுமேனும் அனைத்து மொழிக்கும் புறமொழிக்கண்ணேனும் சிறந்து நிற்கும், தொகைநிலைத்தொடர்ப்பொருள். எ - று.

இவ்விடங்களிற் சிறக்குமெனவே ஏனையிடங்களிற் சிறவாது நிற்குமென்பது பெற்றாம். தன்னியல்பு இறவாமையிற் பன்மொழியென்றார்.

(வ - று.) குடம்வனைந்தான், [2]குழிசிவனைந்தான், வேங்கைப்பூ, சண்பகப்பூ, முண்மரம், முள்ளின்மரம், விரிபூ, குவிபூ, செந்தாமரை, வெண்டாமரை, வேற்கண், கயற்கண் என்பனவற்றுட்

1. கழலை - ஒருவகைச் சிரங்கு; "சீவார் கழலை யிரண்டையுஞ் செப்பென்று" (திருவேங்கடத். 65.)
2. குழிசி - பானை.

குடமுதலிய முன்மொழிகள் இனம்விலக்கிநிற்றலின் அம்முன் மொழிக்கட் பொருள் சிறந்தும், வனைந்தான் முதலிய பின்மொழிக் கட் சிறப்பின்றியும் நின்றன. நிலமுழுதான், கண்ணிமை, நீர்க் குவளை, [1]" முட்டாட்டாமரை," சுடுதீ, " செஞ்ஞாயிறு " (புறநா. 30), தாய்த்தலையன்பன் என்பனவற்றுள் நிலமுதலிய முன்மொழி கள் இனமும் இனத்தைவிலக்குதலுமின்றி வாராநின்றமையின் அம்முன்மொழிக்கட் பொருள் சிறப்பின்றியும் உழுதான் முதலிய பின்மொழிக்கட் சிறந்தும் நின்றன. உழுதானென்ற துணையானே நிலத்தையென்பது தானே போதருமாதலிற் பின்மொழிக்கட் பொருள் சிறந்ததாயிற்று ; ஏனையவுமன்ன. கபிலபரணர், புலி விற்கெண்டை என்றற்றொடக்கத்து உம்மைத் தொகைகள் அனைத்து மொழிக்கண்ணும் பொருள்சிறந்தன. பூங்குழல், தாழ்குழல் என்றற்றொடக்கத்து அன்மொழித்தொகைகள் அனைத்துமொழிக் கண்ணும் பொருட்சிறப்பின்றி அனைத்துமொழிக்கும் புறமொழிக் கட் சிறந்துநின்றன.

தொகைநிலைத்தொடர்கள் உருபுதொகுதலிற் சொல்லாற் பிளவு படாதும் பொருளாற்பிளவுபட்டும் இவ்வாறு வருமெனவே, தொகா நிலைத்தொடர்கள் உருபு தொகாமையின் இவ்விருதிறத்தானும் பிளவுபட்டுப் புறமொழியொழிந்த மூன்றிடத்தும் இவ்வாறு பொருள் சிறந்துநிற்குமென்பது தாமே போதருமென்க. அவையும் இவ் வாறே காண்க. அங்ஙனமாயின், தொகைநிலை தொகாநிலை இரண் டற்கும் இறுதிக்கண் இவ்விலக்கணங்கூறுது ஈண்டுக்கூறியது என்னையெனின், புறமொழிக்கட் பொருள் சிறத்தல் தொகாநிலைத் தொடர்க்கு இன்மையினென்க.

இனி, முன்மொழிபின்மொழிகளுட் பொருள்சிறந்தனவற்றிற்கு ஒருவர்க்கொருவர் மலைந்து [2]பொருள்கூறுவாருமுளர். அம்மலைவு அவர்காட்டும் உதாரணங்களுட் காண்க. (19)

## இடத்தொகை பெயர்த்தொகைகட்கு வேறுபாடு

371. வல்லொற்று வரினே யிடத்தொகை யாகும்
மெல்லொற்று வரினே பெயர்த்தொகை யாகும்.

---

1. முருகு. 73 ; முள் + தாள் + தாமரை.

2. பொருள்கூறுபவர் அவிநய உரையாசிரியரும் இளம்பூரணரும் என்பதை மயிலைநாதருரையால் அறியலாகும்.

எ - ன், இடத்தின்கண்தொக்கதொகையோ பெயரின்கண் தொக்கதொகையோவென்று ஐயுறற்பாலனவற்றுட் சிலவற்றைத் துணிதற்கு ஆவதொரு குறி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வல்லொற்று இடையே வந்துழி இடத்தின்கண் தொக்கதொகையாம் ; மெல்லொற்று இடையே வந்துழிப் பெயரின் கண் தொக்கதொகையாம் எ - று.

மெல்லொற்று அருகிவருதலிற் பிற்கூறினர்.

(வ - று.) வடுகக் கண்ணன், வடுகங் கண்ணன் ; கன்னடக் கொற்றன், கன்னடங் கொற்றன் ; துளுவச் சாத்தன், துளுவஞ் சாத்தன் என வரும். பிறவுமன்ன. இவை விரிவுழி வல்லொற்று வரின், வடுக நாட்டிற் பிறந்த கண்ணனெனவும் மெல்லொற்று வரின் வடுகனாகிய கண்ணனெனவும் விரியும். வடுகனென்பது தந்தைபெயராய் மெல்லொற்றுவரின் வடுகனுக்கு மகனாகிய கண்ணனென விரியும். ஏனையவுமன்ன.

வல்லொற்றுவரின் மெல்லொற்று வரின் என்றமையான், இயல்பினும் விதியினும்நின்ற உயிரீற்றுமொழிமுன் வல்லின முதன்மொழிவந்து இடத்தொகையும் பெயர்த்தொகையுமாய் ஐயுற நிற்கின் இக்குறியால் துணியப்படுமென்பதூஉம், வடுகநாகன் வடுகவணிகன் வடுகவரசன் என வரின் சொல்லுவான் குறிப் பானன்றி இவ்வாறு துணியப்படாதென்பதூஉம் தாமே போதரு மென்க. (20)

## உயர்திணை உம்மைத் தொகை

372. உயர்திணை யும்மைத் தொகைபல ரீறே.

எ - ன், உம்மைத்தொகைக்கு ஆவதொருவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உயர்திணை ஒருமைப்பாலின்கண் வரும் உம்மைத் தொகைகள் ரவ்வீறும் கள்ளீறுமாகிய பலரீற்றனவேயாம் எ - று.

பலரீறே என்றமையான் ஒருமைப்பாலாமென்பது பெற்றாம்.

(வ - று.) கபிலபரணர், [1] கல்லாடமாமூலர், சோழபாண்டியர், தேவன்றேவிகள், பார்ப்பான்பார்ப்பனிகள், வில்லிவாளிகள் என வரும்.

இவ்வொருமைகள் இத்துணையரென்னும் பொருள்பட நிற்றலிற் பலரீற்றவாயின. னகரவீறு இடையேகெடுதல், "சில

1. கல்லாட மாமூலர் - கல்லாடரும் மாமூலரும் ; இவ்விருவரும் சங்கப்புலவர்கள்.

விகாரமா முயர்திணை" (159) என்பதனானும், இறுதிக்கட்கெடுதல் இதனுட் பலரீறே என்பதனானும் கொள்க. பலரீறே என்னுந் தேற்றத்தான் அஃறிணையொருமையும்மைத் தொகைகளும் பொது ஒருமையும்மைத் தொகைகளும் தத்தம்பன்மையீற்றனவேயா மென்னும் நியதியவல்லவென்றாராயிற்று. அவை வருமாறு: உண்மையின்மைகள் உண்மையின்மை, நன்மைதீமைகள் நன்மை தீமை, இராப்பகல்கள் இராப்பகல், நிலநீர் தீக்காற்றுகாயங்கள் நிலநீர்தீக்காற்றுகாயம் எ-ம்; தந்தைதாயர் தந்தை தாய்கள் தந்தைதாய், சாத்தன்சாத்தியர் சாத்தன்சாத்திகள் சாத்தன் சாத்தி எ-ம் பன்மையீற்றானும் இயல்பாகிய ஒருமையீற்றானும் வந்தன. இயல்பாகிய ஒருமையீற்றான் வந்தனவேல் உம்மைத் தொகையன்றிக் கபிலன்பரணன் இருவரும் வந்தாரென்றாற்போலச் செவ்வெண்ணும் பிறவெனிற் பல மொழிகளையும் திரட்டி ஒருபிண்ட மாகக் கூறியவழி உம்மைத்தொகையாகவும் பிளவுபடக் கூறிய வழிச் செவ்வெண்ணாகவும் கொள்ளப்படுமென்க. (21)

## தொகைநிலைத் தொடர்மொழிகள் மயங்குமாறு

373. தொக்குழி மயங்குந விரண்டு முதலேழ்
எல்லைப் பொருளின் மயங்கு மென்ப.

எ-ன், தொகைநிலைத்தொடர்ச்சொற்கள் உருபுதொக்கு நின்றமையிற் சிலபொருளான் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) வேற்றுமையுருபுமுதலிய உருபுகள் தொக்கு நின்ற வழிப் பொருள்களான் மயங்கும் இயல்பினவாகிய தொடர்ச் சொற்கள் இரண்டுமுதல் ஏழீறாகிய பொருள்களான் மயங்கு மென்றுசொல்லுவர் புலவர் எ-று.

தொக்குழியெனவே தொகாவிடத்து மயங்காவென்பதூஉம், மயங்குவனமயங்குமெனவே மயங்கும் இயல்பில்லன மயங்கா வென்பதூஉம், பொருளெனப் பொதுப்படக்கூறினமையின் தொகை நிலைப்பொருளானும் தொகா நிலைப்பொருளானும் தொகை நிலைத்தொடர்ச்சொல் மயங்குமென்பதூஉம் பெற்றாம்.

(வ-று.) தெய்வவணக்கம், தாழ்குழல் என்பன தெய்வத்தை வணங்கும் வணக்கம் தெய்வத்துக்கு வணக்கம், தாழ்ந்த குழல் தாழ்ந்தகுழலினை யுடையாளென இருபொருளான் மயங்கிய ஒரு தொடர்த் தொகைச்சொல்.

" தற்சேர்ந்தார் " (நாலடி. 93, 170),
" கடிப்பகை " (மணி. 7 : 58, 73)

என்பன தன்னைச் சேர்ந்தார் தன்னொடுசேர்ந்தார் தன்கட்சேர்ந் தார், [1] கடிக்குப் பகை கடியினதுபகை கடியாகியபகை என மூன்று பொருளான்மயங்கிய ஒருதொடர்த் தொகைச்சொல். சொல்லிலக் கணமென்பது சொல்லினது இலக்கணம், சொற்கு இலக்கணம், சொல்லின்கண் இலக்கணம், சொல்லிலக்கணஞ் சொன்னநூலென நான்குபொருளான்மயங்கிய ஒரு தொடர்த் தொகைச்சொல். பொன்மணி என்பது பொன்னினாகிய மணி, பொன்னாகிய மணி, பொன்னின்கண் மணி, பொன்னொடு சேர்ந்த மணி, பொன்னும் மணியுமென ஐந்துபொருளான் மயங்கிய ஒரு தொடர்த்தொகைச் சொல். மரவேலியென்பது மரத்தைக் காக்கும் வேலி, மரத்துக்கு வேலி, மரத்தினது வேலி, மரத்தின் புறத்து வேலி, மரத்தாலாகிய வேலி, மரமாகிய வேலி யென ஆறுபொருளான் மயங்கிய ஒரு தொடர்த் தொகைச்சொல். சொற்பொருளென்பது சொல்லான் அறியப்படும் பொருள், சொல்லினது பொருள், சொற்குப் பொருள், சொல்லின்கட் பொருள், சொல்லும்பொருளும், சொல்லாகிய பொருள், சொல்லானது பொருளென ஏழுபொருளான் மயங்கிய ஒருதொடர்த் தொகைச்சொல்; சொல்லானது பொருளென்றது தொகாநிலைப் பொருளாகிய எழுவாய்; சொல்லான் அறியப்படும் பொருள், சொல்லின் அறியப்படும் பொருளென மூன்றுவதனோடு ஐந்தாவதும் [2] விரிப்பாருமுளர்; அவை யிரண்டிற்கும் ஏதுப் பொருளொன்றேயாதலின் அது வேற்றுப்பொருளான் மயங்கியதன் றென்க.

" வாளைமீ னுள்ள றலைப்படல் " (திரி. 7)

என்பது வாளைமீனை [3]உள்ளல்தலைப்படல், வாளைமீனை உள்ளலைத் தலைப்படலென இரண்டாவதும் எழுவாயுமாகிய இருபொருளான் மயங்கிய பலதொடர்த் தொகைச்சொல். புலிகொல்யானை, [4]குரங் கெறிவிளங்காய் என்பன புலியைக்கொன்ற யானை புலியானது கொன்ற யானை புலியாற் கொல்லப்பட்டயானை, குரங்கை எறிந்த விளங்காய் குரங்கானது எறிந்த விளங்காய் குரங்கால் எறியப்

1. கடி - பேய்.
2. விரிப்பவர் மயிலைநாதர்.
3. உள்ளல் - உள்ளான்பறவை; இஃது உள்ளெனவும் வழங்கப் படும்; " உள்ளு மூரலும் புள்ளும் புதாவும் " (சிலப். 10 : 117)
4. " கல்லா லெறிந்து கருதுபயன் கொள்வோன், குரங்கெறி விளங்கா யாமெனக் கூறுவர்."

பட்டவிளங்காயென இரண்டாவதும் எழுவாயும் மூன்றாவதுமாகிய மூன்றுபொருளான் மயங்கிய பல தொடர்த் தொகைச் சொல். பிறவுமன்ன.

இவ்வாறு செம்பொருளேகொள்ளாது வலிந்து பொருள் கொளப்புகின் ஏழெல்லையென்னும் வரையறையில் நில்லாது பலவாமாதலின் அது தொன்னெறி அன்றென்பார் என்ப வென்றார்.

இனி, [1] "அலர்முல்லை" என்னும் வினைத்தொகைமுதலியன மயங்காதனவாம்; அலரையுடைய முல்லையென மயங்குமாலோ வெனின், அலரென்பது வினைத்தொகைக்கண் வினையாயும், வேற்றுமைத்தொகைக்கட் பெயராயும் சொல்வேறுபட்டமையின் அது பொருளான் மயங்கியதன்றென்க. (22)

## தொகாநிலைத் தொடர்மொழி

374. முற்றீ ரெச்ச மெழுவாய் விளிப்பொருள்
ஆறுரு பிடையுரி யடுக்கிவை தொகாநிலை.

எ - ன், நால்வகைச்சொற்கும் ஆவதொரு விதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முற்றும் பெயரெச்சமும் வினையெச்சமும் எழுவாயும் விளியுமாகிய ஐவகைப்பொருளின்கட் பெயர்வினைகள் புணரும்புணர்ச்சியும், வேற்றுமைப்பொருளின்கண் அவற்றின் உருபாகிய இரண்டாவது முதலிய ஆறும் இடையே விரிந்து நிற்பப் பெயர்வினைகள் புணரும்புணர்ச்சியும், ஏனை இடைச்சொற் புணர்ச்சியும், உரிச்சொற்புணர்ச்சியும், ஒருசொல் அடுக்கிவரும் புணர்ச்சியுமாகிய ஒன்பதும் தொகாநிலைத் தொடராம் எ - று.

தொகாநிலையென்றமையாற் காலங்கரவாத பெயரெச்சம் ஈண்டுக்கொள்க.

(வ - று.) உண்டான் சாத்தன், குழையன் கொற்றன், உண்ட சாத்தன், நல்ல சாத்தன், உண்டு வந்தான், உழுதன்றியுண்ணான், சாத்தன் வந்தான், கொற்றா கொள், குடத்தை வனைந்தான், வாளா லெறிந்தான், இரப்போர்க்கு *ஈந்தான், மலையினிழிந்தான், சாத் தனது கை, மணியின்கணொளி,

"அதுகொ றோழி காம நோயே" (குறுந். 5),

---

(பி - ம்.) *'ஈய்ந்தான்'.

1. 'அலர் முல்லை' என்பதை மயங்கியதாக மயிலைநாதர் காட்டி யுள்ளார்.

" நனிபே தையே நயனில் கூற்றம் " (புறநா. 227)

பாம்பு பாம்பு என முறையே காண்க.

வேற்றுமைத்தொகையும் [1] வினைத்தொகையும் விரிந்தவழி வேற்றுமைத் தொகாநிலையும் பெயரெச்சத் தொகாநிலையுமா மென்றார், ஏனை நான்குதொகையும் விரிந்தவழித் தொகாநிலை ஒன்பதனுள் எவையாம் பிறவெனின், பண்புத் தொகையும் உவமத்தொகையும் உம்மைத்தொகையும் விரிந்தவழி இடைச் சொற்புணர்ச்சியும், அன்மொழித்தொகை விரிந்தவழி வேற்று மைத்தொகாநிலைமுதல் ஏற்பனவுமாமென்க. (23)

## வழுவிகற்பங்கள்

375. திணையே பாலிடம் பொழுது வினாவிறை
மரபா மேழு மயங்கினும் வழுவே.

எ - ன், வழுவறிந்தல்லது அவற்றைக் களைதல் கூடாமையின், அவை இவையென உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) திணை முதலாக மரபு ஈறாக வரும் ஏழும் தத்தம் நெறிமயங்கின் வழுவாம் எ - று.

திணைமுதலியவனைத்தும் மரபாமாயினும் இங்ஙனம் விதவாது ஒழிந்தனவற்றை மரபெனக்கொள்கவென்பார் அதனை இறுதிக்கட் கூறினார்.

(வ - று.) அவன் வந்தது எ - து திணைவழு; அவன் வந்தாள் எ - து பால்வழு; யான் வந்தான் எ - து இடவழு; நாளை வந்தான் எ - து காலவழு; கறக்கின்ற எருமை பாலோசினையோ? ஒரு விரல்காட்டிச் சிறிதோ பெரிதோ எ - து வினாவழு; கடம்பூர்க்கு வழி யாதெனின் [2]இடம்பூணி என்ஆவின் கன்றன்று, கருவூர்க்கு வழி யாதெனிற் பருநூல் பன்னிரு [3]தொடி எ - து [4]இறைவழு; யானைமேய்ப்பானை இடையன், ஆடுமேய்ப்பானைப்

1. ' வினைத்தொகை முதல் ஐந்தும் விரிந்தவழி வினைத்தொகை பெய ரெச்சமாயும், பண்புத்தொகை யிரண்டும் பெயரெச்சக் குறிப்பாயும், உவ மைத் தொகை இரண்டாம் வேற்றுமையொடு பயனிலையாயும், உம்மைத் தொகை இடைச்சொற் சந்தியாயும், அன்மொழித்தொகை பொற்றொடி யென்பது பொன்னாலாய தொடியினையுடையாளெனச் சொற்களும் சந்தி களும் பலவாயு முடிதலானும் ' (நன். சூ. 152, உரை) என்றார் முன்.

2. இடம்பூணி - இடத்திற் பூட்டப்பட்ட காளை.

3. தொடி - ஒருபலம்; " தொடிவளை யொருப லப்பேர் " (சூடாமணி நிகண்டு, 11); " தொடிப்புழுதி கஃசா வுணக்கின் " குறள், 1037.

4. இறை - விடை.

பாகன், யானைச் சாணி, எருமை [1]யிலத்தி எ - து மரபுவழு.

இவ்வாறே இவ்வெழுவகை வழுவிகற்பங்களெல்லாம் அறிந்து கொள்க. (24)

## வினாவிடைகள் வழுவாமற் காத்தல்

376. ஐயந் திணைபா லவ்வப் பொதுவினும்
மெய்தெரி பொருண்மே லன்மையும் விளம்புப.

எ - ன், திணையொடு வினாவிடையும் பாலொடு வினாவிடையும் வழுவாது காத்தல் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) திணை ஐயத்தினை அவற்றின் பொதுச்சொல்லானும் பால் ஐயத்தினை அவற்றின் பொதுச்சொல்லானும், துணிந்த பொருண்மேல் அல்லாத தன்மையினை வைத்தும் கூறுவர் புலவர் எ - று.

(வ - று.) குற்றியோமகனோவெனத் திணைஐயம் தோன்றிய வழிக் குற்றியோமகனோ அங்ஙனந் தோன்றுநின்றது தோன்று நின்றானெனச் சிறப்புச்சொல்லாற் கூறின் திணைவழுவும் வினா வழுவுமாம்; அவையொழித்துக் [2]குற்றியோ மகனோ அங்ஙனந் தோன்றுநின்ற உருவெனப் பொதுச்சொல்லாற் கூறுக. உரு என்பது பொதுச்சொல்லாய் வழாநிலையாயது என்னையெனிற் குற்றிக்கும் மகனுக்கும் உருப் பொதுப்பட நின்றமையினென்க. ஆண்மகனோ பெண்மகளோவென உயர்திணைப்பால் ஐயந் தோன்றியவழி, ஆண்மகனோ பெண்மகளோ அங்ஙனம் தோன்று நின்றான் தோன்றுநின்றாளெனச் சிறப்புச்சொல்லாற் கூறின் பால் வழுவும் வினாவழுவுமாம். அவையொழித்து [3]ஆண்மகனோ பெண் மகளோ அங்ஙனம் தோன்றுநின்றாரெனப் பொதுச்சொல்லாற் கூறுக. தோன்றுநின்றாரென்பது பொதுச்சொல்லாய் வழாநிலை யாயதென்னையெனின், ஆண்பெண் இரண்டல்லது பலர்பாலென வேறொன்றின்றி அவ்விருபாற்கும் பொதுமையில் நிற்றலினென்க.

1. இலத்தி - யானை குதிரை கழுதை இவற்றின் மலம்; "சோறு மத்தி யிலத்தி சொரிந்ததால்" திருவால. 26 : 18.

2. "உருவென மொழியினு மஃறிணைப் பிரிப்பினும், இருவீற்று முரித்தே சுட்டுங் காலை" (தொல். கிளவி. சூ. 24) என்பதையும் அதன் உரையையும் பார்க்க.

3. "பான்மயக் குற்ற வையக் கிளவி, தானறி பொருள்வயிற் பன்மை கூறல்" (தொல். கிளவி. சூ. 23) என்பதையும் அதன் உரை யையும் பார்க்க.

ஒன்றோ பலவோவென அஃறிணைப் பால் ஐயந்தோன்றியவழி ஒன்றோ பலவோ இச்செய் புக்கது புக்கன எனச் சிறப்புச்சொல் லாற்கூறிற் பால்வழுவும் வினாவழுவுமாம். அவையொழித்து ஒன்றோ பலவோ இச்செய் புக்கபெற்றமெனப் பொதுச்சொல்லாற் கூறுக.

இனி மெய்தெரிந்தபொருள் குற்றியெனின் மகனன்று எ-ம், மகனெனிற் குற்றியல்லன் எ-ம், ஆண்மகனெனிற் பெண்மகளல்லன் எ-ம், பெண்மகளெனின் ஆண்மகனல்லள் எ-ம் கூறுக. [1]மகனன்றுகுற்றி எனக் கூறிற் குற்றியோ மகனோவென வினாவினார்க்கு மகனன்றெனின் அமையும்; குற்றியின்மேல் வைத்துக்கூறல் வேண்டாகூறலாம்; [2]மகனன்றென்பதனை மகனி னன்றென ஐந்தாம் வேற்றுமைப்புணர்ச்சியென்பாருமுளர்; அது போல வரும் நீயல்லனென்பதும் அங்ஙனம் விரித்தல் கூடாமை யின் அல்வழிப்புணர்ச்சியுள் எடுத்துவிதந்த பதினான்கின் புறத்த தாய் அடங்குமென்க. ஏனை மூன்றுகாட்டும் அன்ன.

மெய்தெரியாதபொருண்மேல் அல்லாத தன்மையினை வைத்து [3]மகனல்லன் குற்றியெனிற் குற்றியென்னும் பயனிலைக்கு எழு வாய்தந்து மகனல்லன் அவ்வுருக்குற்றியெனக் கூறல்வேண்டும். அங்ஙனங்கூறவே சொற்பல்குதலென்னும் விடைவழுவாம். அவ் வழு வாராது 'மெய்தெரி பொருண்மே லன்மையும் விளம்புப' என்றார். (25)

## திணைவழுவமைதி

377. உயர்திணை தொடர்ந்த பொருண்முத லாறும்
அதனொடு சார்த்தி னத்திணை முடிபின.

1. 'மகனன்று குற்றி' என உதாரணங் காட்டியவர் மயிலைநாதர்; இ-வி. உரையாசிரியரும் இவ்வாறு காட்டியுள்ளார் (சூ. 296); நச்சினார்க் கினியர், 'இவ்வுரு மகனன்று குற்றி' (தொல். கிளவி. சூ. 25, உரை) என்று காட்டினர்.

2. மகனன்றென்பதை, ஐந்தாம்வேற்றுமை நீக்கப்பொருளாக விரிப்பர் இளம்பூரணரும் (தொல். கிளவி. சூ. 25), மயிலைநாதரும்.

3. இளம்பூரணர் வேறொருவர் கூறுவதாக 'மகனல்லன் குற்றி' என உரைப்பர். சேனாவரையரும் இங்ஙனமே கூறிவிட்டுப் பின்னர், 'இவ்வுருபு குற்றியன்று, மகனென ஐயப்புலமாகிய பொதுப்பொருண் மேலானும், குற்றியல்லன் மகனெனத் துணி பொருண்மேலானும் அன்மைக் கிளவி அன்மை சுட்டிநிற்றல் பெரும்பான்மை யென்பதாம்' என்பர்; 'இவ்வுரு, குற்றியன்று மகன்' என்பதைக் காட்டுவர் இ. வி. உரையாசிரி யர்; சூ. 296.

எ - ன், திணைவழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உயர்திணையைத் தொடர்ந்த அஃறிணைப்பொருளாதியாறும் உயர்திணையோடு சார்த்தி முடிப்பின் உயர்திணை முடிபினவாம் எ - று.

தொடர்தலாவது அஃறிணைப்பொருளாதியாறும் உயர்திணைக்குக் கிழமைப்பொருள்களாய் நிற்றல்.

சார்த்தலாவது உயர்திணை எழுவாயின் பயனிலையொடு அஃறிணை எழுவாயினையும் உடன்முடித்தல்.

'உயர்திணை தொடர்ந்த பொருண்முத லாறு' என்றமையிற் பொருளென்பது உயர்திணைப்பொருளன்றென்பதாம்.

(வ - று.) நம்பி: பொன்பெரியன், நாடுபெரியன், வாணுள் பெரியன், மூக்குக்கூரியன், குடிமைநல்லன், நடைகடியன் என வரும்.

"சொற்றொறு மிற்றிதன் பெற்றி" (461) என்பதனுனே, கிணறு நீரூறிற்று, மாடு கோடு கூரிது என அஃறிணையொடு சார்த்தின் அஃறிணைமுடிபினவாதலும் கொள்க. சார்த்தினெனவே சார்த்தாவிடின் வழாநிலையாய்ப் பொன்பெரிது மூக்குக்கூரிது எனத் தம்முடிபு கொள்ளுமென்க. பொன்னென்னும் அஃறிணை எழுவாய் நம்பியென்னும் உயர்திணை எழுவாயினது பயனிலையாகிய பெரியனென்னும் உயர்திணைவினைக்குறிப்பைக் கொண்டு முடிதலின் வழுவாய், தொடர்புண்மை கருதிச் சார்த்திமுடித்தலின் அமைதியாயிற்றென்க. பொன்னினது பெருமையையுடையன் என ஆருமுருபு விரித்து வழாநிலையென்ரு லென்னையெனின், வேற்றுமைப்புணர்ச்சிக்குரிய [1]எழுத்துச்சந்தியின்மையின் அது பொருந்தாதென்க. பிறவுமன்ன. (26)

## திணைபால்மரபுவழுவமைதி

378\. திணை பால் பொருள்பல விரவின சிறப்பினும்
மிகவினு மிழிபினு மொருமுடி பினவே.

எ - ன், திணைபால் மரபு வழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) திணையும் பாலும் வேறுவினைப்பல்பொருள்களும் விரவி நின்றவழி அவைபலவும் ஒருமுடிபினவாம், சிறப்பினுனும் மிகுதியினுனும் இழிபினுனும் எ - று.

1\. எழுத்துச்சந்தி யென்றது னகரம் றகரமாகத் திரிதலை; சூ. 209.

(வ - று.)

"அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்கும்
திங்களுஞ் சான்றோரு மொப்பர்மன் - திங்கள்
மறுவாற்றுஞ் சான்றோரஃ தாற்றார் தெருமந்து
தேய்வ ரொருமா சுறின்" (நாலடி. 151) எ - ம்,

"பழியஞ்சான் வாழும் பசுவு மழிவிறைற்
கொண்ட வருந்தவம் விட்டானும் - கொண்டிருந்த
இல்லஞ்சி வாழு மெருது மிவர்மூவர்
நெல்லுண்ட நெஞ்சிற்கோர் நோய்" (திரி. 79)

எ - ம் வரும். இவை திணைவிரவிச் சிறப்பினான் உயர்திணை முடிபேற்றன. இழிந்தோரை எண்ணியபின் அதனுட்சிறப்பு என்னையெனின், பசு விட்டான் எருது என்னும் மூன்றனுள் விட்டானென்பது உயர்திணையாண்சிறப்பு; பசு எருது என்பன உயர்திணைப் பொருளவேனும் அஃறிணையாக உருவகப்படுத்தின மையின் இங்ஙனம் அமைக்கப்பட்டன.

"தன்பான் மனையா ளயலான்றலைக் கண்டு பின்னும்
இன்பா லடிசிற் கிவர்கின்றகைப் பேடி போலா
நன்பால் பசுவே துறந்தார்பெண்டிர் பாலர் பார்ப்பார்
என்பாரை யோம்பே னெனின்யானவ னாக வென்றான்" (சீவக. 443)

எ - ம்,

"பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார்
மூத்தா ரிளையார் பசுப்பெண்டி ரென்றிவர்கட்
காற்ற வழிவிலங்கி னாரே பிறப்பிடைப்
போற்றி யெனப்படு வார்" (ஆசாரக். 64) எ - ம்

வரும். இவை திணைவிரவி மிகுதியினான் உயர்திணை முடிபேற்றன.

"நசைதர வந்தோர் நசைபிறக் கொழிய
வசைபட வாழ்ந்தோர் பலர்கொல் புரையில்
நற்பனுவ னால்வேதத்
தருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை
நெய்ம்மலி யாவுதி பொங்கப் பன்மாண்
வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி
யூப நட்ட வியன்களம் பலகொல்
யாபல கொல்லோ பெரும" (புறநா. 15)

என இவை சிறப்பினான் அஃறிணைமுடிபு ஏற்றன.

"எச்சிலார் தீண்டார் பசுப்பார்ப்பார் தீத்தெய்வம்
உச்சந் தலையோ டிவையென்ப யாவரும்
திட்பத்தாற் றீண்டாப் பொருள்" (ஆசாரக். 5)

என இவை மிகுதியினான் அஃறிணைமுடிபு ஏற்றன.

" வடுக ரருவாளர் வான்கரு நாடர்
சுடுகாடு பேயெருமை யென்றிவை யாறும்
குறுகா ரறிவுடை யார்" (நேமி. சொல். 10, உரை. மேற்.) எ - ம்,
" மூர்க்கனு முதலையுங் கொண்டது விடா" எ - ம்

இவை இழிபினுன் அஃறிணைமுடிபு ஏற்றன. பன்மையொரு முடிபினவென்றது ஒருமுடிபினவென வாளா கூறினமையின்,

" தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான் "(யா. வி. மேற்.)

எனத் திணைவிரவிச் சிறப்பினுன் ஆண்பான்முடிபு ஏற்றலும்,

" தொல்லை நால்வகைத் தோழருந் தூமணி நெடுந்தேர்
மல்லற் றம்பியு மாமனு மதுவிரி கமழ்தார்ச்
செல்வன் றுதையுஞ் செழுநக ரொடுவள நாடும்
வல்லைத் தொக்கது வளங்கெழு கோயிலு ளொருங்கே" (சீவக. 2360)

எனத் திணைவிரவிச் சிறப்பினுன் ஒருமைமுடிபு ஏற்றலும் கொள்க.

" நானுமென் சிந்தையு நாயகனுக் கெவ்விடத்தோம்
தானுந்தன் றையலுந் தாழ்சடையோ னுண்டிலனேல்" (திருவா. கோத்தும்பி. 15)

என ஆண்பாலும் பெண்பாலும் விரவிச் சிறப்பினுன் ஒருமுடிபு ஏற்றன.

" சொற்றொறு மிற்றிதன் பெற்றி " (461) என்பதனுனே விரவாது எண்ணித் தோழனும் தானும் வந்தான், தோழியும் தானும் வந்தாளென முடிதலும் கொள்க. கறியுஞ்சோறும் உண்டான், மாலையுமுடியும் கவித்தான், குஞ்சமுங்குடையும் கவித்தான், சாந்தமுமுலையும் தழுவினுனென வேறுவினைப் பலபொருள் விரவிச் சிறப்பினுன் ஒருமுடிபு ஏற்றன. பிறவுமன்ன.

இங்ஙனம் இறுதிக்கட் கூறிய மரபுவழுவமைதி,

" வேறுவினைப் பல்பொரு டழுவிய பொதுச்சொலும் " (389)

என்னுஞ் சூத்திரத்தோடு மாறுகொளக்கூறலாம் பிறவெனின், சிறப்பு முதலிய கருதாது ஒத்தநிலைமையின் எண்ணியவழி முடியு மரபு அங்ஙனங்கூறுதலின் அது மாறுகொளலன்றென்க.

" பாணன் பறையன் கடம்பன் றுடியனென்
றந்நான் கல்லது குடியு மில்லை " (புறநா. 335, பி -,ம்)

என உயர்திணையெண்ணின் அஃறிணைமுடிபினவாம் வழு யாண்டு அமைக்கப்படுமெனிற் குடியென்பதனைப் பாணன் முதல் நான் கோடுங் கூட்டியுரைக்கப்படுதலின் வழாநிலையாமென்க.

இனிப் பால்விரவி ஒருமுடிபு ஏற்பனவற்றிற்கு ஒருவன்

கொல்லோ பலர் கொல்லோ இச்செய்புக்காரென [1]உதாரணங் காட்டின், " ஐயந் திணைபா லவ்வப் பொதுவினும் " (376) என்ப தனுன் வந்தனவன்றி ஈண்டைக்கு ஆகாமையானும் இங்ஙனம் காட்டிய இலக்கியங்கட்கு இலக்கணம் இன்மையானும் அது காட்டன்றென்க. (27)

## திணைபால் வழுவமைதி

379. உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினும் செறலினும்
இழிப்பினும் பாறிணை யிழுக்கினு மியல்பே.

எ - ன், திணைபால் வழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உவப்பு முதலிய ஐந்தினும் பாலும் திணையும் வழுவி வரினும் இயல்பாம் எ - று.

பாலை முற்கூறினுர், அவ்வழுவமைதி பயின்று வருதலின் இழுக்கினுமென்னும் உம்மை உவப்பு முதலியவற்றின் இழுக்கியே வருமென்னும் நியதியவல்லவென்னும் பொருள் தந்து நின்றது.

(வ - று.) தன் புதல்வனை என் அம்மை வந்தாளென்பது உவப்பின் ஆண்பால் பெண்பாலாயிற்று. ஒருவனை அவர் வந்தா ரென்பது உயர்வின் ஒருமைப்பால் பலர்பாலாயிற்று.

" தாதாய் மூவே முலகுக்குந் தாயே " (திருவா. புணர்ச்சிப். 9)
என்பது சிறப்பின் ஆண்பால் பெண்பாலாயிற்று.

" எனைத்துணைய ராயினு மென்னுந் தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல் " (குறள், 144)
என்பது செறலிற் பலர்பால் ஒருமைப்பாலாயிற்று. பெண்வழிச் செல்வானை நோக்கி இவன் பெண்ணென்பது இழிவின் ஆண்பால் பெண்பாலாயிற்று. ஓர் ஆவினை என் அம்மை வந்தாளென்பது உவப்பின் அஃறிணை உயர்திணையாயிற்று.

" செந்தார்ப் பசுங்கிளியார் சென்ருர்க்கோ ரின்னுரைதான்
தந்தாரேற் றந்தா ரென்னின்னுயிர் " (சீவக. 1036)
என்பது உயர்வினுன் அஃறிணை உயர்திணையாயிற்று.

" தம்பொரு ளென்பதம் மக்கள் " (குறள், 63)
என்பது சிறப்பினுன் உயர்திணை அஃறிணையாயிற்று.

[2]" ஏவவுஞ் செய்கலான் ருன்றேரு னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய் " (குறள், 848)
என்பது செறலின் உயர்திணை அஃறிணையாயிற்று. " நாம் அரன்

1. உதாரணங் காட்டியவர் மயிலைநாதர் ; இச் சூத்திரவுரையிற் காட்டப்பட்டுள்ள சிலவற்றை அவர் வேருகக் கொள்வர்.

2. இதனை இழிப்பின்கண் அஃறிணை யாயிற்றென்பர் மயிலைநாதர்,

உடைமை" என்பது இழிப்பின் உயர்திணை அஃறிணையாயிற்று. பிறவுமன்ன.

"சொற்றொறு மிற்றிதன் பெற்றி" (461) என்பதனானே புதல்வனை அப்பன் வந்தானென்றும், புதல்வியை அம்மை வந்தாளென்றும் வரும் மரபுவழுவமைதிகளும் கொள்க. இவ்வழுவமைதி [1]உருவகவுவமைகளின் வழுவி அமைவனவொழியக் கொள்க. (28)

### பாலிட வழுவமைதி

380. ஒருமையிற் பன்மையும் பன்மையி னொருமையும்
ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே.

எ - ன், முற்கூறிய உவப்பு முதலிய காரணத்தானன்றி அமைந்த பால்வழுவமைப்பும் அவ்வாறு அமைந்த இடவழுவமைப்பும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருமைப்பாலின்கண் பன்மைச் சொல்லைத் தழுவிக் கூறுதலும் பன்மைப்பாலின்கண் ஒருமைச்சொல்லைத் தழுவிக் கூறுதலும் ஓரிடத்தின்கட் பிறவிடச்சொல்லைத் தழுவிக் கூறுதலும் உளவாம் எ - று.

(வ - று.) வெயிலெல்லா மறைத்தது மேகம் இக்குளத்து நீரெல்லாம் கொண்டுய்த்தான் இவன் எ - ம், இரண்டுகண்ணும் சிவந்தது.

"இருநோக் கிவளுண்க ணுள்ளது" (குறள், 1091) எ - ம் அஃறிணைக்கண் ஒருமையிற் பன்மையும் பன்மையின் ஒருமையும் வந்தன.

"அகுதை தந்தை, அண்ணல் யானை யடுபோர்ச் சோழர்" (அகநா. 96) எ - ம்,

[2]"புலைய னெறிந்த [3]பூசற் றண்ணுமை
ஏவ லிளையர் தாய்வயிறு கரிப்ப" எ - ம்

உயர்திணையொருமையிற் பன்மையும் பன்மையின் ஒருமையும் வந்தன. சாத்தன்றாய் இவைசெய்வலோ,

---

1. உருவகவுவமைகளுக்கு 410-ஆம் சூத்திரத்தில் வழுவமைதி அமைக்கப்படுதலின் இங்ஙனம் கூறினர்.

2. தமிழ்நெறி விளக்கம் என்னும் பழைய இலக்கண நூலொன்றில் மேற்கோளாகக் காட்டப்பெற்ற பின்வரும் செய்யுளிற் சிறிது பாட பேதமுற்ற இவ்வடி அமைந்துள்ளது : "நிரையிர் செல்லு மோவென நேர்ந்து, புலைய னெறிந்த பூசற் றண்ணுமை, ஏவ லிளையர் தாய்வயிறு கரிக்கும், இன்று வருஞ்சுர மென்ப, என்னே தோழியவர் சென்ற வாறே."

3. பூசற்றண்ணுமை - பகைவருடன் போர்புரிதற்காக வீரரை அழைத்தற்குக் கொட்டும் பறை.

"கல்வி யெனென்னும் வல்லாண் சிறுஅன்
ஒல்வே னல்ல னதுவா யாகுதல்" (புறநா. 346)

எ - து தன்மையின்கட் படர்க்கை வந்தது.

"திண்பொரு ளெய்த லாகுந் தெவ்வரைச் செகுத்த லாகும்
நண்பொடு பெண்டிர் மக்க ளியாவையு நண்ண லாகும்
ஒண்பொரு ளாவ தையா வுடன்பிறப் பாக்க லாகா
எம்பியை யீங்குப் பெற்றே னென்னெனக் கரிய தென்றான்"
(சீவக. 1760)

எ - து முன்னிலைக்கட் படர்க்கை வந்தது. நீயோ அவனோ யாரிது செய்தார், யானோ அவனோ யாரிது செய்தார், நீயோ யானோ யாரிது செய்தார், நீயோ அவனோ யானோ யாரிது செய்தாரென விரவி ஓரிடத்தின்கட் பிறவிடம் வருதலும் கொள்க. பிறவுமன்ன.

ஒருபாற்பொருளை மற்றொருபாற் சொல்லானும், ஓரிடப் பொருளை மற்றோரிடச் சொல்லானும் கூறுதலின் வழுவாய் அவை சான்றோர்க்கு ஒப்பமுடிந்தமையின் அமைதியாயின.

"ஒருவி ரொருவி ரோம்பினிர் கழிமின்" (மலைபடு. 218), யான் எம்மூர் புகுவனென்பன ஒருமையிற் பன்மைவந்த வழு வமைதியெனின், ஒருவி ரொருவி ரோம்பினை கழிவையெனின் வழாநிலையாகவேண்டும். அங்ஙனமாகாமையின் "ஒருவரென்ப துயரிரு பாற்றாய்" (289) என்னும் சூத்திரத்துள், "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" (358) என்பதனான் அமைந்த வழாநிலையாம். யான் எம்மூர் புகுவனென்புழித் தன்கிளையினைத் தன்னொடுபடுத்து எம்மூரென்றானாதலின் வழாநிலையாம். இத் தொடக்கத்து வழாநிலைகளை இவ்வழுவமைதியாக [1]உதாரணங் கூறுவார் கூற்றையெல்லாம் உய்த்துணர்ந்து களைக. (29)

## இடம் வழுவாமற் காத்தல்

381. தரல்வரல் கொடைசெலல் சாரும் படர்க்கை
எழுவா யிரண்டு மெஞ்சிய வேற்கும்.

எ - ன், இடம் வழுவற்கவெனக் காத்தல் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இந்நால்வகைச் சொற்களையும் படர்க்கை சாரும்; இவற்றுள் முதற்கண் நின்ற தரல் வரலென்னும் இருவகைச் சொற்களையும் தன்மைமுன்னிலைகள் ஏற்கும் எ - று.

தரல் வரல் கொடை செலலென்பன அப்பகுதிகளை உணர்த்தி நின்றன.

---

1. உதாரணங் கூறுபவர் மயிலைநாதர்.

(வ - று.) அவனுக்குத்தந்தான் அவன்பால்வந்தான் அவனுக்குக்கொடுத்தான் அவன்பாற்சென்றான் எ - ம், எனக்குத் தந்தான் என்பால் வந்தான் எ - ம், நினக்குத் தந்தான் நின்பால் வந்தான் எ - ம் வரும். இப்பகுதியிற் பிறந்த ஏனை வினைவிகற்பங்களோடும் தொழிற்பெயரோடும் இவ்வாறே ஒட்டுக.

இவை படர்க்கை, இவை தன்மைமுன்னிலையென்றுது சாரும் ஏற்குமென்றமையான் இடவிகுதிகள்போல் [1]இவை இடப்பகுதிகளாகாது அவ்விடங்கட்கியைந்த மரபினவாமென்பதூஉம், தரல் வரலென்னும் இரண்டினையும் தன்மை முன்னிலைக்கும் கூட்டினமையிற் [2]படர்க்கைக்கே சிறந்தன கொடை செலலென்னும் இரண்டுமென்பதூஉம், ஏனைத் தரலும் வரலும் அத்துணைச்சிறப்பினவல்லவென்பதூஉம், இந்நெறிமயங்கி [3]எனக்குக் கொடுத்தான் என்பாற் சென்றான் நினக்குக் கொடுத்தான் நின்பாற் சென்றானென வரின், முன்னர்க்கூறிய இடவழுவமைதியின் பாற்படுமென்பதூஉம் பெற்றும். படர்க்கைக்குப் பின்னைய இரண்டும் சிறந்தும் முன்னைய இரண்டும் அத்துணைச் சிறப்பின்றியும் வருதல் காட்டிய உதாரணங்களுட் காண்க. (30)

## காலம்

382. இறப்பெதிர்வு *நிகழ்வெனக் கால மூன்றே.

எ - ன், முன்னர் வழுவுணர்த்துஞ் (375) சூத்திரத்துள் முதற்கண் நின்ற திணைபாலிடங்களின் பெயரும் முறையும் தொகையும் [4]பெயரியலுட் போந்தமையின் அவற்றையொழித்து இறுதிக்கண் நின்ற காலமுதல் நான்கினையும் உணர்த்தினல்லது அவற்றின் வழுவும் வழாநிலையும் வழுவமைதியும் தோன்றுமையின், அவற்றுட் காலத்தின்பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

[5]பிறிதோர் இலக்கணங்கூறியமுகத்தான் முன்னர் விளங்கிக்

(பி - ம்.) *'நிகழ்பெனக்'

1. சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் இவற்றை முதனிலை தாமே இடஞ்சுட்டி நிற்பனவென்பர்; தொல். கிளவி. சூ. 28, உரை.

2. "ஏனை யிரண்டு மேனை யிடத்த" (தொல். கிளவி. சூ. 30) என்பதையும் அதன் உரையையும் பார்க்க.

3. இவை பராமுகமாகக் கருதியவிடத்து வருமென்பர் மயிலைநாதர்.

4. சூ. 261, 262, 266, பார்க்க.

5. 'வினை யிடைநிலை' (சூ. 142-4), 'காலங் காட்டும் விகுதி' (சூ. 145), 'வினையெச்ச வாய்பாடு' (சூ. 343) என்பவற்றிற்குரிய சூத்திரங்களைப் பார்க்க.

கிடந்த காலவிகற்பங்களை ஈண்டுத்தொகுத்து உணர்த்தினமை யின் இது முடிந்தது முடித்தலென்னும் உத்திக்கு இனம்.

(இ - ள்.) முன்னர்க்கூறிய காலம் இறந்தகாலமும் எதிர் காலமும் நிகழ்காலமுமெென மூன்றும் எ - று.

யாதொருபொருளும் தோன்றுமளவிற்றோன்றி வளருமளவின் வளர்ந்து முதிருமளவின்முதிர்ந்து அழியுமளவின் அழியுமன்றி உயிர்கள் வேண்டியவாறு ஆகாமையின் அவற்றை அவ்வளவின் அவ்வாறு இயற்றுவது காலமெனவும், அதனால் இயலும் பொருள் களின்றொழில் இறந்ததும் எதிர்வதும் நிகழ்வதுமாதலின் அவ்வாறு இயற்றுங்காலமும் மூன்று கூற்றதாமெனவும் உய்த்துணர்தலின், இங்ஙனம் உணராது [1]காலமின்றெனவும் நிகழ்காலமொன்றுமே யெனவும் இறந்தகாலம் எதிர்காலமிரண்டுமே யெனவும் கூறுவார் கூற்றை விலக்கிக் காலமூன்றேயென்றார். இதன்றிறம் இன்னும் விரித்துரைப்பிற் பெருகும். நிகழ்காலம்போல வெள்ளிடைப் பொருளன்றி இறந்தகாலம் எதிர்காலம் இரண்டும் மறைபொரு ளாய் நிற்றலின், இறப்புநிகழ்வென்னாது இறப்பெதிர்வென்றார். (31)

## கால வழுவமைதி

383\. முக்கா லத்தினு மொத்தியல் பொருளைச்
செப்புவர் நிகழுங் காலத் தானே.

எ - ன், காலவழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தம் தொழில் இடையறாது முக்காலத்தினும் ஒரு தன்மையவாய் இயலும்பொருள்களை நிகழ்காலத்தாற் கூறுவர் புலவர் எ - று.

---

1\. 'காலம் இல்லை யென்பார், ஒருபொருள் நிகழுமிடத்துப் பொருண் மைப் பேறல்லது காலமென்று வேற்றுணர்வும் பிறவும் படுவதில்லையென்ப. இனி, காலம் ஒன்றென்பார், யாறொழுகும் மலைநிற்கும் என உள்பொருள் ஒருகாலத்தானே சொல்லப்படும்; பிறிதில்லையென்ப. இறப்பும் எதிர்வு மென இரண்டென்பார், கோலொடுங் காற் சென்றதூஉம் செல்வதூஉ மன்றே? அதனால் நிகழ்வில்லை யென்ப' என்று பலர்கூறுவனவற்றை எடுத்துக்காட்டுவர் **மயிலைநாதர்**. 'தொழிலாவது பொருளினது புடை பெயர்ச்சியாகலின் அஃது ஒரு கணம் நிற்பதல்லாது இரண்டு கணம் நில் லாமையின் நிகழ்ச்சியென்பதொன்று அதற்கு இல்லையாயினும், உண்டல் தின்றலெனப் பஃறொழிற்றொகுதியை ஒரு தொழிலாகக் கோடலின், உண்ணாநின்றான், வாராநின்றானென நிகழ்ச்சியும் உடைத்தாயிற்று' (தொல். வினை. சூ. 3, உரை) என்னும் சேனாவரையர் உரை நிகழ்கால மின்றென்பார் கொள்கைக்குரிய காரணத்தைப் புலப்படுத்துகின்றது.

(வ - று.) அவனியைத் தாங்கி அரசர் இருக்கிறார், நினக்குத் துணை யான் இருக்கிறேன், எனக்குத் துணை நீ இருக்கிறாய், தெய் வம் இருக்கிறது, நிலம் கிடக்கிறது, மலை நிற்கிறது, யாறு ஒழுகு கிறது என வரும்.

இதற்குச் செய்யுமென்னும் முற்றை [1]உதாரணங் காட்டு வாரு முளர்; அது, பல்லோர்படர்க்கை முன்னிலை தன்மையாக வரும் முக்காலத்தினும் ஒத்தியல் பொருட்கு இயையாமை யானும் அவ்வழக்கின்மையானும் அது பொருந்தாதென்க. யாறொழுகும் தீச்சுடுமென வழங்குமாலோவெனின், அஃது ஒழுகுந்தன்மையையுடையது சுடுந்தன்மையையுடையதென்னும் பொருட்டாய் நிற்றலின்,

"இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்" (404)

என்னுஞ் சூத்திரத்தின்பாற் படுவதாமென்க. யாறு ஒழுகுவது, தீச் சுடுவதென்பதுமது. (32)

384. விரைவினு மிகவினுந் தெளிவினு மியல்பினும்
பிறழவும் பெறூஉமுக் காலமு மேற்புழி.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) விரைவு மிகுதி தெளிவென்னும் மூன்று காரணத் தினானும் இக்காரணம் இன்றியும் முக்காலங்களும் ஒன்று ஒன்றாகக் கூறப்படும், ஏற்குமிடத்து எ - று.

காரணமின்றியென்பார் இயல்பினுமென்றும், பிறழ்தல் ஒரு தலை அன்றென்பார் பிறழவுமென்றும், விரைவுமுதலிய நான்கினும் தனித்தனி முக்காலங்களும் முறையே பிறழாதென்பார் ஏற்புழி யென்றும் கூறினார்.

(வ - று.) சோறு வேவாநிற்ப அஃது உண்டுபோதற்பொருட் டாக இருந்தானொருவனைப் புறத்துநின்றானொருவன் இருவரும் போகவேண்டும் [2]குறையுடைமையின் இன்னும் உண்டிலையோ வென்றால், உண்டேனுண்டேனென்னும்; உண்ணா நின்றானும் உண்டேனுண்டேனென்னும்; இவை விரைவின் எதிர்காலமும் நிகழ்காலமும் இறந்தகாலமாயின.

அக்காட்டிற்புகிற் கூறைகோட்பட்டான்; கள்வான் நினையிற் கையறுப்புண்டான்; இது மிகுதியான் எதிர்காலம் இறந்தகால

1. உதாரணங் காட்டுபவர் மயிலைநாதர்; "முந்நிலைக் காலமுந் தோன்றும்" (தொல். வினை. சூ. 43) என்பதன் உரையில் உரையாசிரியர் கள் எல்லோரும் இவ்வாறே காட்டியுள்ளார்கள்; இ - வி. உரையாசிரியர் கொள்கையும் இதுவே; சூ. 303, உரை. 2. குறை - காரியம்.

மாயிற்று; கூறைகோட்படுதலும் கையறுப்புண்ணுதலும் தவ றினுந் தவறுமாதலின் இது மிகுதியாயிற்று.

அறஞ்செயிற் சுவர்க்கம் புக்கான்; [1]எறும்பு முட்டை கொண்டு [2]திட்டையேறின் மழைபெய்தது: இது தெளிவின் எதிர்காலம் இறந்தகாலமாயிற்று; [3]உரையளவையானும் காட்சி அளவையானும் இவற்றிற்கு இவை காரணமாகத் தெளிந்தமை யின் இது தெளிவாயிற்று.

யாம் பண்டுவிளையாடுவது இக்கா, யாம் பண்டுவிளையாடு கிறது இக்கா: இது காரணமின்றி இயல்பினான் இறந்தகாலம் எதிர்காலமும் நிகழ்காலமும் ஆயிற்று. பிறவுமன்ன.

இவ்வுதாரணங்களுட் சிலவற்றை [4]மாறிக்காட்டுவாருமுளர். அவை பொருந்தாமை அப்பொருள்களான் உணர்க. உழுது வருக உண்டு வருக என்புழி, உழுது உண்டு என்பன வற்றையும் இயல்பின் எதிர்காலம் இறந்தகாலமாய் மயங்கின [5]வென்பாரும் உளர். வருதலைநோக்குங்கால் அவை இறந்த காலமே யாதலின் வழாநிலையாமென்க. (33)

## அறுவகை வினா

385. அறிவறி யாமை யையுறல் கொளல்கொடை
ஏவ றரும்வினா வாறு மிழுக்கார்.

எ - ன், வினாவின் பெயரும் முறையும் தொகையும் உணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) அறிவுமுதலியன தருதலான் வரும் வினா ஆறனை யும் களையாது கொள்வர் புலவர் எ - று.

---

1. இக்கருத்து, "பொய்யா வெழிலி பெய்விட நோக்கி, முட்டை கொண்டு வற்புலஞ் சேரும், சிறுநுண் ணெறும்பின் சில்லொழுக்கு" (புறநா. 173) என்பதனாலும் விளங்குகின்றது.

2. திட்டை - மேடு; "பாவா யெனப்போய்ப் படுவெண்மணற் றிட்டை சேர்ந்தான்" சீவக. 514.

3. உரையளவை - ஆகமப்பிரமாணம், காட்சியளவை - பிரத்தியட்சப் பிரமாணம்.

4. மாறிக்காட்டுவார் மயிலைநாதர்; தொல்காப்பிய வினையியலில், "மிக்கதன் மருங்கின்" என்னும் சூத்திரவுரையில் இளம்பூரணர், சேனா வரையர், நச்சினார்க்கினியர் என்னும் மூவரும் இவ்வாறே காட்டி யுள்ளார்கள்; இ-வி. உரையாசிரியர் கொள்கையும் இதுவே; சூ. 304, உரை.

5. என்பவர் மயிலைநாதர்.

(வ - று.) ஆசிரியன் இச்சூத்திரத்திற்குப்பொருள் யாதென்பது [1]அறிவினு; மாணுக்கன் அவ்வாறு கூறுவது அறியாவினு; குற்றியோ மகனோவென்பது [2]ஐயவினு; பொன் உளவோ மணி உளவோவென்பது கொளல்வினு; சாத்தற்கு ஆடையில்லையோ வென்பது கொடைவினு; சாத்தா உண்டாயோவென்பது ஏவல் வினு.

இவற்றுள் அறிவும் அறியாமையும் இவ்விரண்டும் விரவிய ஐயமுமன்றி வினவைத்தருவதொன்று இன்மையின் அவற்றை முற்கூறி ஏனையவும் அவற்றின்கண் அடங்குமேனும் கொளல் கொடை ஏவலென்னும் பொருள்விசேடத்தான் வேறு விதந்து பிற்கூறி மூன்ருகற்பாலனவற்றை ஆருகக்கூறுதல் தொன்று தொடு நெறியென்பார் ஆறுமிழுக்காரென்றும் கூறினர்.

" அறியான் வினுத லறிவொப்புக் காண்டல்
ஐய மறுத்த லவனறிவு தான்கோடல்
மெய்யவற்குக் காட்டலோ டைவகை வினுவே "

(நேமி. சொல். 5, மேற்.)

என்னும் ஒருசாராசிரியர் கூற்றினுள்ளும் பின்னைய இரண்டும் முன்னைய மூன்றனுள் அடங்குமென்பதுதோன்ற அவற்றை முற் கூறுதல் காண்க. (34)

## எண்வகை விடை

386. சுட்டு மறைநே ரேவல் வினுதல்
உற்ற துரைத்த லுறுவது கூறல்
இனமொழி யெனுமெண் ணிறையு ளிறுதி
நிலவிய வைந்துமப் பொருண்மையி னேர்ப.

எ - ன், [3]இறையின் பெயரும் முறையும் தொகையும் வழுவமைதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விறையெட்டனுள் முன்னைய மூன்றும் செவ்வனிறையாம்; பின்னைய ஐந்தும் இறைப்பொருள் பயத்தலின் இறையாகத் தழீஇக் கொள்ளுவர் புலவர் எ - று.

---

1. ' அறிவினுல் வரும்வினு எதிர் வாதியாலும் ஆசிரியனுலும் வரும்; எதிர்வாதி, எதிரியை அளத்தற்கும் அறியாமை காட்டுதற்கும், இச்சூத்திரத்திற்குப் பொருள் யாது ? இப்பதம் முடிந்தவாறென்னை ? என வினுவும். ஆசிரியன் ஒருவனை அளத்தற்கும் கொடுத்தற்கும் அவனை விளக்குதற்கும் அவ்வாறு வினுவும் ' என்பது மயிலைநாதர் உரை.

2. ' ஐயத்தால் வரும்வினு உண்மையுணர்தற்கும் கோடற்கும் வரும்' என்பர் மயிலைநாதர். 3. இறை - விடை.

எனவே இறையாவது செவ்வனிறையும் இறைபயப்பதுமென இருகூற்றதாமென்க.

(வ - று.) வஞ்சிக்கு வழி யாது என்றவழி இதுவென்றும்,

" மாவீழ் நொச்சி "

என்பதற்குப் பொருள் யாது என்றவழி வண்டுவீழ்ந்து தேனுண்ணும் நொச்சிப்பூவென்றும் கருதிக் கூறுந் தொடக்கத்தன எல்லாம் சுட்டு ; சாத்தா இது செய்வாயோ என்றவழிச் செய்யே னென்பது மறை ; செய்வேனென்பது நேர் ; நீ செய்யென்பது ஏவல் ; செய்வேனோவென்பது வினுதல் : இவ்வோகார விடைச்சொற்கு எதிர்மறைமுதலிய பொருள்விலக்கி ஆற்றலான் வினப்பொருளே கொள்க ; உடம்பு நொந்தது, உடம்பு நோவாநின்றதென்பது உற்றதுரைத்தல் : நோவாநின்றதென்பது நிகழ்காலமாயினும் நோவெழுந்தகாலங்கருதி உற்றதுரைத்தலாயிற்று ; உடம்பு நோமென்பது உறுவது கூறல் ; மற்றையது செய்வேனென்பது இனமொழி. இறைபயப்பனவற்றுள் வினவெதிர் வினுதல் ஒன்றும் நேர்தற்பொருளையும் ஏனைய நான்கும் மறைப்பொருளையும் பயத்தல் காண்க.

இறைபயப்பனவற்றை நிலவியவென விசேடித்தமையின், நில வாதனவும் சிலவுளவெனப் பொருளுரைத்துச் செய்வேனோ என எதிர்மறை ஓகாரமாயும் யானோ செய்வேனெனச் சிறப்பு ஓகாரமாயும் நின்று செய்யேனென்னும் இறைப்பொருள்பயந்து வருதலும் பிறவும் 'கங்கையாடிப் போந்தேன் ஒருகூறையீக' என வினு இல்வழி இறைநிகழ்தலும் கொள்க. (35)

## வினவிடைகளில் முதல்சினை வழுவாமை

387. வினவினுஞ் செப்பினும் விரவா சினைமுதல்.

எ - ன், வினவும் செப்பும் முதல்சினை ஒற்றுமைகருதி வழுவக் கூறின் அமையாதெனக் காத்தல் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வினவுதற்கண்ணும் செப்புதற்கண்ணும் சினை முதல்கள் ஒற்றுமைகருதி மயங்கக் கூறலாகா எ - று.

(வ - று.) கண் பிறழ்ந்ததோ கயல் பிறழ்ந்ததோ, சாத்தன் நல்லனோ கொற்றன் நல்லனோ என வினவினர்க்குக் கண் பிறழ்ந்தது கயல் பிறழ்ந்தது, சாத்தன் நல்லன் கொற்றன் நல்லன் என வரும். பிறவுமன்ன.

எனவே கயற்கண் பிறழ்ந்ததோவெனச் சினையை வினவுவான் அதனையொழித்து அதனையுடையாளைக் கருதி இவள் பிறழ்ந்தாளோ கயல்பிறழ்ந்ததோவெனவினவுதலும், இவள் பிறழ்ந்தாளெனச் செப்புதலும், இவ்வாறு முதலை வினவுவானும் செப்புவானும் அதனையொழித்துச் சினையை வினவுதலும் செப்புதலும் வழுவா மென்பதாயிற்று. இங்ஙனமாயிற் குயிலோ கிளவியென வினவுவான் குயிலிசையைக் குயிலோவென்று வினவுதல் வழுவாம் பிறவெனின், அவ்வாறு கூறுவான் குயிலைக் கருதாது அதன் இசையையே கருதிக் கூறுதலானும் குயிலிசையோ கிளவியென இசையென்னுஞ் சொல் எஞ்சிநிற்றலானும் இத்தொடக்கத்தன வழுவாகா வென்க. (36)

## மரபு

388. எப்பொரு ளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர்
செப்பின ரப்படிச் செப்புதன் மரபே.

எ - ன், மரபாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) யாதொருபொருளை யாதொருசொல்லான் யாதொரு நெறியான் அறிவுடையோர் சொன்னார்களோ அப்பொருளை அச்சொல்லான் அந்நெறியாற் சொல்லுதல் மரபாம் எ - று.

'எவ்வாறென்றது, ஒருபொருளைப் பலசொல்லானும் பல பொருளை ஒருசொல்லானும் கூறுதல் முதலியவற்றையென்க. அவற்றுட் சில வருமாறு: — குதிரைக்குட்டி யானைக்குட்டி எ - ம், யானைக்கன்று பசுவின்கன்று மான்கன்று எ - ம் வரும். [1]பிறவு மன்ன.

இவ்வாறன்றிக் குதிரைக்கன்று பசுவின்குட்டி எனக்கூறின் வழுவாமாதலிற் சான்றோர்வழக்கினுள்ளும் செய்யுளுள்ளும் பயின்றுவரும் மரபறிந்துகொள்க. (37)

## மரபு வழாநிலை

389. வேறுவினைப் பல்பொரு டழுவிய பொதுச்சொலும்
வேறவற் றெண்ணுமோர் பொதுவினை வேண்டும்.

எ - ன், மரபுவழுவற்கவென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) 'வெவ்வேறு வினைகட்குரிய பலபொருள்களையும் ஒருங்கு தழுவிநிற்கும் ஒருபொதுச்சொல்லும் அவற்றின் சிறப்புச் சொற்களாய் எண்ணிநிற்கும் பலசொல்லும் ஒன்றற்குரிய சிறப்பு

1. மயிலைநாதர் இச்சூத்திரவுரையில் மிகவிரிவாக உதாரணம் காட்டியுள்ளார்.

வினைவேண்டாது எல்லாவற்றிற்கும் உரியதொரு பொதுவினை வேண்டுவனவாம் எ - று.

(வ - று.) அடிசிலென்பது உண்பன தின்பன நக்குவன பருகுவனவற்றிற்கெல்லாம் பொதுச்சொல்லாகலான் அதனை [1]அயின்ருர் மிசைந்தாரென்க. அணியென்பது கவிப்பன கட்டுவன இடுவன தொடுவனவற்றிற்கெல்லாம் பொதுச்சொல்லாதலின் அதனை [2]அணிந்தார் தாங்கினுரென்க. இயமென்பது கொட்டுவன ஊதுவனவற்றிற்கெல்லாம் பொதுச்சொல்லாதலின் அதனை இயம்பினுர் படுத்தாரென்க. படையென்பது எய்வன எறிவன வெட்டுவன குத்துவனவற்றிற்கெல்லாம் பொதுச்சொல்லாதலின் அதனை வழங்கினுர் தொட்டாரென்க.

இனி எண்ணியவழியும் சிலநாட் சோறும் சிலநாள் [3]இடியும் சிலநாட் பாலும் சிலநாள் நீரும் சிலநாட் சருகும் அயின்ருர் மிசைந்தாரென்க. [4]கறியுஞ்சோறு முண்டானென எண்ணிக் கறியொடுவிராயசோற்றை உண்டானென்னும் பொருட்டாய்ச் சிறப்பினுன் ஒரு முடிபு ஏற்பனவற்றிற்கும் இவற்றிற்கும் வேற்றுமை உணர்க. குழையும் நெடுநாணும் அணிந்தார் ; பறையும் குழலும் இயம்பினுர் ; வாளும் வேலும் வழங்கினுரென்க. பிறவு மன்ன. (38)

390. வினைசார் பினமிட மேவி விளங்காப்
பலபொரு ளொருசொற் பணிப்பர்சிறப் பெடுத்தே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) குறித்தபொருளை விளக்கும் வினையினையும் சார்பும் இனமும் இடமும் முதலிய பெயரினையும் பலபொருளொருசொற் பொருந்தி விளங்கிக்கிடந்ததேல் அதனை வாளா கூறி அவ்வினை பெயர்களைப் பொருந்தாமையால் விளங்காது கிடந்ததனைச் சிறப்பொடு கூட்டிக் கூறுவர் புலவர் எ - று.

பாக்குவெற்றிலைதின்ருனென்ருற் சுண்ணும்பும் [5]கற்பூரமும் உடன்தின்ருனென்பது தழீஇக்கோடல்போற் சார்பு இனம் இடமெனச் சிறந்தன எடுத்து ஓதி ஏனைய பெயர்களையும் தழீஇக்கோடலின் முதலியவென்ரும். அன்றி இனத்தென்றறி பொருளெனக் கூறுதலும் ஒன்று.

1. "யாப்புடைத் தோழரொ டடிசி லயில" பெருங். 1. 57 : 88.
2. "மங்கலப்பேரணி......அணிந்தனர்" பெருங். 3. 22, 237-8.
3. இடி - மா. 4. 378-ஆம் சூத்திரவுரையைப் பார்க்க.
5. கற்பூரம் - பச்சைக் கற்பூரம்.

மேவியென்னும் வினையெச்சம் விளங்காவென்பதன்கண் முதனிலையொடு முடிந்தது.

(வ - று.) மாவென்பது மாமரத்திற்கும் வண்டிற்கும் ஒரு சார் விலங்கிற்கும் திருவிற்கும் பொதுவான பலபொருளொரு சொல். இப்பொருள்களுள், மாப் பூத்தது, மாக் காய்த்தது என்ற துணையானே மரமென்பது வினையால் விளங்கிற்று;

"மாவீழ் நொச்சி மணிக்குர லூழ்த்தது"

என்ற துணையானே வண்டென்பது சார்பால் விளங்கிற்று. சேனை யானை தேர் மாச் சதுரங்கமென்ற துணையானே குதிரையென்பது இனத்தால் விளங்கிற்று; "சொற்றொறு மிற்றிதன் பெற்றி" (461) என்பதனானே இதனுட் சேனையென்பது ஆனை முதலிய மூன்று உறுப்பினையுமொழித்துக் காலாண்மேற்சேறலும் இவ் விதியின்பாற்படுத்துக.

"மாமறுத்த மலர்மார்பு" (புறநா. 7)

என்ற துணையானே திருவென்பது இடத்தால் விளங்கிற்று; இவை வாளா கூறப்பட்டன. இனி மா ஏறினான், மா யாது என்றவழிக் குறித்தபொருள் விளங்காமையின் விளங்குதற் பொருட்டுப் பாய்மா வேறினான், மாமரத்தின்கண் ஏறினான், பாய்மா யாது, மாமரம் யாது எனச் சிறப்பொடு கூட்டிக் கூறுக. பிறவுமன்ன. (39)

391. எழுத்திய றிரியாப் பொருடிரி புணர்மொழி
இசைத்திரி பாற்றெளி வெய்து மென்ப.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) எழுத்தினது இயல்பு வேறுபடாது பொருள் வேறு பட்டுச் சொல்லும் பொருளும் ஐயுறநிற்குந் தொடர்மொழிகள் அங்ஙனம் குறித்துக்கூறும் சொற்களின் இறுதியும் முதலும் தோன்ற இசையறுத்துக் கூறும் வேறுபாட்டால் துணியப்படு மென்று சொல்லுவர் புலவர் எ - று.

எனவே அவ்வாறு இசையறுத்துக் கூறுதல் மரபென்பதா யிற்று.

(வ - று.) [1]செம்பொன்பதின்றொடி, [2]நாகன்றேவன்போத்து,

1. செம்பொன் + பதின்றொடி; செம்பு + ஒன்பதின்றொடி.
2. நாகன் + தேவன் + போத்து; நாகு + அன்றே + வன் போத்து.

[1]தாமரைக்கணியார்*, [2]குன்றேருமா, [3]குறும்பரம்பு, [4]ஆற்றுக் கரை, [5]செம்பருத்தி என்றற்றொடக்கத்தனவற்றை அவ்வாறு இசையறுத்து உச்சரித்துக் காண்க. (40)

## மரபுவழாநிலையும் வழுவமைதியும்

392. ஒருபொருண் மேற்பல பெயர்வரி னிறுதி
ஒருவினை கொடுப்ப தனியு மொரோவழி.

எ - ன், மரபுவழுவற்கவெனக் காத்தலும் அதன் வழு வமைப்பும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருபொருண்மேற் பலபெயர் வருமாயிற் பொரு ளொன்றே என்பது தோன்ற இறுதிக்கண் ஒருவினை கொடுத்துக் கூறுவர் ; ஒருபொருளாதல் தவறுதவழிப் பெயர்தொறும் கொடுத் தும் கூறுவர் புலவர் எ - று.

ஒருபொருட்கு ஒருமுடிபென்பார் ஒருவினைகொடுப்ப என்று ரன்றி ஒருபெயர்கொடுத்தலை ஒழித்தாரல்லரென்க.

(வ - று.) ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தன் வந்தான் எ - ம், [6]பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி இவன் எ - ம்,

" குயிலைச் சிலம்படிக் கொம்பினைத் தில்லையெங் கூத்தப்பிரான்
கயிலைச் சிலம்பிற்பைம் பூம்புனங் காக்குங் கருங்கட்செவ்வாய்
மயிலைச் சிலம்பகண் டியான்போய் வருவன்வண் பூங்கொடிகள்
பயிலச் சிலம்பெதிர் கூய்ப்பண்ணை நண்ணும் பளிக்கறைக்கே "
(சிற். 30, பி-ம்.) எ - ம்,

" பொருப்பர்க் கியாமொன்று மாட்டோம் புகலப் புகலெமக்காம்
விருப்பர்க் கியாவர்க்கு மேலர்க்கு மேவல ரூரெரித்த
நெருப்பர்க்கு நீடம் பலவருக் கன்பர் குலநிலத்துக்
கருப்பற்று விட்டெனக் கொய்தற்ற தின்றிக் கடிப்புனமே "
(சிற். 143, பி-ம்.) எ - ம்

இவை இறுதிக்கண் ஒருவினையும் ஒருபெயரும் கொடுக்கப்பட்டன. இனிப் பெயர்தொறும் கொடுக்குமாறு :—

(பி - ம்.) * ' தாமரக்கணியார், தாமரைக்கண்ணியார் '.

1. தாமரை + கணியார் ; தாம் + அரைக்கு + அணியார்.
2. குன்று + ஏரு + மா ; குன்று + ஏறு + ஆமா.
3. குறுமை + பரம்பு ; குறும்பர் + அம்பு.
4. ஆறு + கரை ; ஆற்றுக்கு + அரை.
5. செம்மை + பருத்தி ; செம்பு + அருத்தி ; செம்பர் + உத்தி.
6. பாண்டியன்......பெருவழுதி : இவன் பல யாகங்களைச் செய்த வன் ; இவனுடைய வரலாற்றைப் புறநானூற்றில் விளங்கக் காணலாம்.

" மின்றோய் வரைகொன்ற வேலோன் புகுதக
இன்றேன் கமழ்தா ரியக்கன் *புகுதக
வென்றேன் புகுதக வீரன் புகுதக
என்றே நகர மெதிர்கொண் டதுவே" (சீவக. 2122)

என வரும். பிறவுமன்ன. (41)

393. திணைநிலஞ் சாதி குடியே யுடைமை
குணந்தொழில் கல்வி [1]சிறப்பாம் பெயரோ
டியற்பெய ரேற்றிடிற் பின்வரல் சிறப்பே.

எ - ன் இதுவுமது.

(இ - ள்.) திணைமுதலாகக் கல்வியீறாக விதந்தனபற்றிவரும் சிறப்புப்பெயருடனே இயற்பெயரை ஒருபொருள் ஒருங்கு ஏற்கு மாயின் அவ்வியற்பெயர் பின்வருதல் சிறந்த மரபாம் எ - று.

ஏற்றற்கு வினைமுதல் ஒருபொருளென்பது மேலைச்சூத்தி ரத்தாற் (392) பெற்றும். சிறப்பேயென்றமையான் முன்வருமென் பதூஉம், அது வழுவமைதியென்பதூஉம் பெற்றும்.

(வ - று.) குன்றவன் கொற்றன், அருவாளன் அழகன், பார்ப்பான் பாராயணன், ஊர்கிழான் ஓணன், பொன்னன் பொறையன், கரியன் கம்பன், நாடகி நம்பி, ஆசிரியன் அமிழ்தன் என வரும். இவை இயற்பெயர் பின் வந்தன. இனிக் கொற்றன் குன்றவன், அழகன் அருவாளன் என முறையே இயற்பெயர் முன்னும் வருதல் காண்க. இன்னும் இயற்பெயர்முன்வருங்கால், வெண்கொற்றப் படைத்தலைவன், [2]வெள்ளேறக்காவிதி என இறுதி விகாரமாய் வருதலும் காண்க. பிறவுமன்ன. (42)

394. படர்க்கைமுப் பெயரோ டணையிற் சுட்டுப்
பெயர்பின் வரும்வினை யெனிற்பெயர்க் கெங்கும்
மருவும் வழக்கிடைச் செய்யுட் கேற்புழி.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) படர்க்கையிடத்தவாகிய உயர்திணைப்பெயர் அஃறிணைப்பெயர் விரவுப்பெயரென்னும் மூவகைப்பெயரொடு சுட்டுப்

(பி - ம்.) *'புகுதுக'

1. சிறப்பென்.'தனைத் தனியே ஒன்றாகக்கொண்டு "ஏனாதி ஏறன்" என உதாரணங் காட்டுவர் மயிலைநாதர்; சிறப்பு - மன்னரர் முதலியவர் களாற் பெறும் வரிசை; தொல். கிளவி. சூ. 41, உரைகளைப் பார்க்க.

2. வெள்ளேறக் காவிதி - காவிதி என்னும் பட்டம்பெற்ற வெள்ளேற னென்பவன்.

பெயர் சாரின் அச்சுட்டுப்பெயர் அம்மூவகைப்பெயர்க்கும் பின் வரும், அவ்வழி வினைநிகழ்வழியெனின்; வினைநிகழ்ச்சி இன்றேல் அப்பெயர்க்குப் பின்னும் முன்னும் வரும். இம்மரபு வழக்கின் கண்ணவாம்; செய்யுட்கண்ணேவெனின் நியதியின்றி வேண்டிய வாறே வரப்பெறும் எ - று.

(வ - று.) நம்பி வந்தான், அவற்குச் சோறிடுக; எருது வந்தது, அதற்குப் புல்லிடுக; [1]சாத்தன் தெய்வம், அவற்குப் பலி யிடுக; சாத்தன் வந்தது, அதற்குப் புல்லிடுக என வினைநிகழ்வழிச் சுட்டுப்பெயர் பின் வந்தன. வந்தான் நம்பி, அவற்குச் சோறிடுக... எனவும் முறையே ஒட்டுக. இவற்றுட் சாத்தன் தெய்வமென்புழி வினையின்றிப் பெயர்வந்ததாலோவெனின், படர்க்கை முப்பெயரும் தனித்து நில்லாது பெயர்வினைகளைக் கொண்டு முடிந்தும் பெயர் வினைகட்குப் பயனிலையாயும் புடை பெயரும் புடைபெயர்ச்சியை வினையென்றும் அப்புடைபெயர்ச்சி உள்வழிச் சுட்டுப்பெயர்வரிற் பின் வருமென்றும் கூறினரன்றி [2]இவ்வினையை வினையென்றாரல்ல ரென்க.

[3]மைந்தன் பிறந்தான் அதனால் தந்தை உவக்குமென்புழி அது வென்னும் சுட்டு மைந்தனை அணைந்ததில்லையாலோவெனின், அவன் தற்கிழமையாகியபிறத்தலை அணைதலின் அவனை அணைந்ததேயாமென்க. அன்றி, "சொற்றொறு மிற்றிதன் பெற்றி" (461) என்னுஞ் சூத்திரத்தான் அமைத்தலும் ஒன்று.

நம்பி அவன், அவன் நம்பி எனப் பெயர்க்குப் பின்னும் முன்னும் சுட்டுப்பெயர் வந்தன. ; ஏனைப்பெயர்களோடு மொட்டுக. பெயர்க்குப் பின்னும் முன்னும் சுட்டுப்பெயர் வருதல் மரபா மன்றே, இதனை வழுவற்கவெனக் காத்தல் எவ்வழு வாராமை கருதியெனின், சுட்டுப்பெயர் பின்வரும் வினையெனினெனக் கூறினமையின் வினையில்வழிச் சுட்டுப்பெயர் படர்க்கை முப் பெயர்க்கும் பின்வருமோ முன்வருமோ இருமருங்கும் வருமோ வாராதொழியுமோ யாங்ஙனமாங்கொலென்னும் ஐயமறுத்தற்குக்

1. சாத்தன் - 'சாஸ்தா' எனவழங்கப்பெறும் தெய்வம்: ஹரிஹர புத்திரர்; "பாசண்டச் சாத்தற்குப் பாடுகிடந்தாளுக்கு" (சிலப்.) என்பதிலுள்ள தெய்வமென்றும் கொள்ளலாம்.

2. "இனைத்தென் றறிபொரு ளுலகி னிலாப்பொருள், வினைப்படுத் துரைப்பின்" (நன். சூ. 399) என்றவிடத்தும் வினையென்பது இப் பொருள் பட்டது; ஷெ சூத்திர உரையைப் பார்க்க.

3. இத்தொடர், "கணவ ருவப்பப் புதல்வர்ப் பயந்து" (மதுரைக். 600) என்பதை நினைப்பிக்கின்றது.

கூறினரன்றி இது வழுவற்கவெனக் காத்தாரல்லர் ; அக்கருத்துச் சுட்டுப்பெயர் பின்வரும் வினையெனின் என்றதற்கே கொள்க. அதனை அவ்வாறு காத்தல் எவ்வழு வாராமை கருதியெனின் நம்பி வந்தான் அவற்குச் சோறிடுக வென்பான் அவற்குச் சோறிடுக நம்பி வந்தானென்றேனும் அவன் வந்தான் நம்பிக்குச் சோறிடுக வென்றேனும் சுட்டுப்பெயரை முன்வைத்துக்கூறின், அஃது ஒரு பொருள்மேல் இருபெயர் வந்ததாகாது நம்பிவேறு அவன்வேறாய் முடியும், அவ்வழுவாராமை கருதியென்க.

இனிச் செய்யுட்கு ஏற்புழி வருமாறு :—

" அவனணங்கு நோய்செய்தா ளாயிழையாய் வேலன்
விறன்மிகுதார்ச் [1]சேந்தன்பேர் வாழ்த்தி முகமனர்ந்
தன்னை யலர்கடப்பந் தாரணியி னென்னைகொல்
பின்னை யதன்கண் விழைவு "

என வரும். செய்யுட்கண் பின்வருதல் வழுவற்கவெனக் காத்தலும் இப்பாட்டின்கண் முன்வருதல் வழுவமைதியுமாமென்க. பிறவு மன்ன. (43)

## அடுக்குத்தொடர்

395. அசைநிலை பொருணிலை யிசைநிறைக் கொருசொல்
இரண்டு மூன்றுநான் கெல்லைமுறை யடுக்கும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அசைநிலைக்கும், விரைவு வெகுளி உவகை அச்சம் அவலம் முதலிய பொருணிலைக்கும், இசைநிறைக்கும் ஒரு சொல் இரண்டு மூன்று நான்களவு முறையே அடுக்கும் எ - று.

எனவே அசைநிலைக்கு இரண்டும், [2]பொருணிலைக்கு இரண்டும் மூன்றும், இசைநிறைக்கு இரண்டும் மூன்றும் நான்கும் அடுக்கு மென்பதாயிற்று.

(வ - று.) ஒக்கும் ஒக்கும், அன்றே அன்றே என்பன அசை நிலை. உண்டேன் உண்டேன், போந்தேன் போந்தேன் போந்தே

1. சேந்தன் - ஓர் உபகாரி ; இவன் திவாகரஞ்செய்வித்தவனே வேறே புலப்படவில்லை.

2. " தாயது வருகை கேட்ட தனியிளங் குழவி போன்று, நேயமிக் குடைய னாகி நெஞ்சினு ளுவகை பூப்பப், போயழைத் திடுமினின்னே போயழைத் திடுமி னின்னே, போயழைத் திடுமி னின்னே யெனவிரை பொருளிற் சொற்றான் ", " இலக்கண மின்மை நோக்கி யிதற்குமேற் சொற்று னல்லன் " (குசேலோபாக்கியானம், 2 ; 193–4) என்பவை இச் சூத்திரப் பொருளை நினைந்து செய்யப்பட்டிருத்தல் காண்க.

னென்பன விரைவு; எய் எய், எறி எறி எறி என்பன வெகுளி; வருக வருக, [1]"பொலிக பொலிக பொலிக" என்பன உவகை; பாம்பு பாம்பு, [2]தீத்தீத்தீ என்பன அச்சம்; உய்யேன் உய்யேன், வாழேன் வாழேன் வாழேனென்பன அவலம்; இவை முதலியன பொருணிலை.

"ஏஎ அம்பன் மொழிந்தனள் யாயே",
"நல்குமே நல்குமே நல்குமே நாமகள்",
"பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ"

(நேமி. சொல். 51. உரை, மேற்.)

என்பன இசைநிறை. பிறவுமன்ன.

ஒருசொல்லைப் பலகாற்கூறுதல் வழுவாயினும் இவ்விடத்து ஆமென்றல் வழுவமைதியும் இதற்கு இவ்வெல்லை இறவாதென்றல் வழுவற்கவெனக் காத்தலுமாமென்க. (44)

## மரபுவழா நிலை

396. [3]இரட்டைக் கிளவி யிரட்டிற் பிரிந்திசையா.

எ - ன், மரபு வழுவற்கவெனக் காத்தல் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இரட்டைச் சொற்கள் அவ்விரட்டிற் பிரிந்து தனித்து ஒலியா எ - று.

எனவே வலிந்து பிரித்துக் கூறிற் பொருள்படாதென்பதூஉம் இரட்டித்துக் கூறுதலே மரபென்பதூஉமாயிற்று.

(வ - று.)

"சலசல மும்மதம் பொழிய" (சீவக. 82. பி - ம்.), "கலகல கூஉந் துணையல்லால்" (நாலடி. 140), "குறுகுறு நடந்துஞ் சிறுகை நீட்டியும்" (புறநா. 188, பி - ம்.), "வற்றிய வோலை கலகலக்கும்" (நாலடி. 256), [4]"துடிதுடித்துத் துள்ளிவரும்";

துடிதுடித்தென்புழிப் பின்னையது பிரிந்திசைக்குமேனும் முன்னையது பிரிந்திசையாமையின் இரட்டைச் சொல்லேயா மென்க. பிறவுமன்ன. (45)

397. ஒருபொருட் பல்பெயர் பிரிவில [5]வரையார்.

1. "பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச் சாபம்" திருவாய். 5. 2 : 1.
2. "வெருவந்து, தீத்தீத்தீ யென்றயர்வர்" தண்டி. சூ. 104, மேற்.
3. தொல். கிளவி. சூ. 48.
4. "கொறுகொறுத்தாரென்றொருவர் கூறுங்கா லுள்ளம், துடி துடித்துத் துள்ளிவரும்" நன். சூ. 395, மயிலை. மேற். பி - ம்.
5. 'வரையா' எனப் பாடங்கொள்வர் மயிலைநாதர்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) ஒருபொருண்மேற் பலபெயர் கூறுங்கால் அப் பொருளினின்றும் பிரிதலில்லாதனவற்றை நீக்காது கூறுவர் புலவர் எ - று.

எனவே பிரிப்புள்ளனவற்றைக் கூறுரென்பதாயிற்று.

(வ - று.) ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தன் வந்தான் பாண் டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வந்தானென்பன பிரிவிலவாய்ப் பலபெயரும் ஒருபொருண்மேற் சென்று கேட்போர்க் குக் கூறுவான் கருதியபொருளை விளக்கி நின்றன.

“ வையைக் கிழவன் வயங்குதார் மாணகலம்
தையலாய் நீயின்று நல்கினை நல்காயேற்
கூடலார் கோவொடு நீயும் படுதியே
நாடறியக் கௌவை யொருங்கு ” எ - ம்.

“ கொய்தளிர்த் தண்டலைக் கூத்தப் பெருஞ்சேந்தன்
வைகலு மேறும் வயக்களிறே - கைதொழுவல்
காலேக வண்ணனைக் கண்ணுரக் காணவெஞ்
சாலேகஞ் சார நட ” எ - ம்.

[1]சுட்டின் பொருளவாய்வரும் பெயரொடு தொக்க ஒருபொருட் பல பெயர்களுமன்ன.

பிரிவிலவென்றதற்கு இவ்வாறு பொருள்கூருது, ‘கொய் தளிர்த் தண்டலை’ என்னும் பாட்டினுட் [2]காலேகவண்ணம் சேந்தனுக்கும் பிறர்க்கும் உண்டாதலைப் பிரிவென்று கருதி இது [3]வழுவென்பாருமுளர். காலேகவண்ணம் பொதுவியல் பன்றிச் சேந்தனிற்பிரிந்ததன்ருதலானும் சேந்தனைக் களிற்றின் மேற் சேய்மைக்கண் வரக்கண்டாள் அவனைக் கண்ணுரக் காணவேண் டும் பெருவேட்கை தந்தது அவனது காலேகவண்ண மென்பாள்

---

1. சுட்டின் பொருளவாய்வரும் பெயரென்றது மேலுள்ள மேற்கோள் களில் கூடலார் கோ, காலேகவண்ணன் என்பவற்றை; “ சீவக சாமியென் பான், வானேற நீண்ட புகழான் சரிதம்மிதன்னை ” (சீவக. 6) என்பதி லுள்ள ‘புகழான்’ என்பதும் அது; ‘புகழானென்னும் பெயர் சொல்லு வான் குறிப்பான் அவனென்னுஞ் சுட்டுப்பெயர் மாத்திரையாயிற்று’ என்று அச்செய்யுளுக்கு நச்சினர்க்கினியர் எழுதிய இலக்கணக் குறிப் பாலும், “ பொருளொடு புணராச் சுட்டுப்பெய ராயினும், பொருள் வேறு படாஅ தொன்ருகும்மே ” (தொல். கிளவி. சூ. 37) என்னுஞ் சூத்திரத் திற்கு அவர் எழுதிய உரையினுலும் இது நன்கு விளங்கும்.

2. காலேகம் - கலவைச்சந்தனம்.

3. வழுவென்பவர் மயிலைநாதர்.

அவ்வாறு கூறவேண்டுமாதலானும், இது சான்றோர் இலக்கியமாதலானும் அது பொருளன்றென்க.

இனிப் பிரிவுளதாய் வழுவியது யாதோவெனின்,

" பகையியல் பாயிலி படைக்கை மறவன் "

என வரிற் பகையியல்பாய் இலியைப் படைக்கைமறவனென்றல் கூடாமையிற் பிரிந்து வழுவாமென்க. பிறவுமன்ன. (46)

## மரபு வழுவமைதி

398. ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழாஅ.

எ - ன், மரபுவழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருபொருளைக் குறித்துவரும் பலசொற்கள் அவ்வாறு வருதற்கு ஒரு காரணம் இன்றேனும் சிறந்துநிற்றலின் அது வழுவென்று நீக்கப்படாது எ - று.

சிறந்துநிற்றல் செவிக்குச் சொல்லின்பந்தோன்ற நிற்றல்.

சிறப்பினினென்றமையாற் காரணமின்றி வந்தனவென்பது பெற்றாம்.

(வ - று.)

" மீமிசை ஞாயிறு கடற்பாய்ந் தாங்கு ", " புனிற்றிளங் கன்று " (பெரிய. திருவாரூர். 22,) " நாகிளங் கமுகு " (கம்ப. முதற்போர். 256), " ஆடு பசி யுழந்தநின் னிரும்பே ரொக்கல் " (பொருந. 61), " உயர்ந் தோங்கு பெருவரை " (மலைபடு. 41), " குழிந்தாழ்ந்த கண்ணவாய்த் தோன்றி " (நாலடி. 49) என வரும். பிறவுமன்ன.

இனிச் சிறப்பினினென்றதற்கு அப்பொருளைச் சிறப்பித்தலினெனப் [1]பொருள் கூறுவாருமுளர். அச்சொற்கு அப்பொருள் இயையாமையானும் அக்காரணத்தான் வந்தனவேல் ஈண்டு ஒரு பொருட்பன்மொழியாய் வரும் பெயர்கள் ஒரு பொருட்பலபெயருள் அடங்குமாதலானும், " மீமிசை " (புறநா. 9) என்றால் மேலென்ற பொருளன்றி விசேடித்து ஒரு சிறப்பின்மையானும், உண்டேல் அஃது இஃதென விதந்து கூறுவராதலானும் அது பொருளன்றென்க. (47)

## மரபு வழுவாமற் காத்தல்

399. இனைத்தென் றறிபொரு ளுலகி னிலாப்பொருள்
விளைப்படுத் துரைப்பி னும்மை வேண்டும்.

எ - ன், மரபுவழுவற்கவெனக் காத்தல் உணர்த்துதல் நுதலிற்று.

---

1. பொருள்கூறுபவர் மயிலைநாதர்.

(இ - ள்.) இத்துணைத்தென்று வரையறை உணரப்படும் பொருளும் எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாதபொருளும் வினைப்படுத்துக் கூறுங்கால் முற்றும்மைவேண்டி நிற்கும் எ - று.

பொருளென வேறு விதந்தமையின் உலகென்றது ஒழிந்த காலம் அனைத்தினையும் இடம் அனைத்தினையுமென்பதூஉம், இனைத்தென்றறி பொருளென்றமையானும் உலகெனக் காலமனைத்தினையும் இடமனைத்தினையும் கூறுதலானும் உம்மை யென்றது முற்றும்மையை என்பதூஉம் பெற்றாம்.

(வ - று.) தமிழ்நாட்டு [1]மூவேந்தரும் வந்தார், உலக மூன்றினையும் ஒருங்குணர்ந்தான், நின்கண் வைத்த பொருள் நூற்றினையும் அவ்விருவருக்கும் கொடு, இறைவற்குக் கண் மூன்றும் முச்சுடர், [2]இறைவற்கு உடை போர்வை இரண்டும் தோலென இனைத்தென்றறி பொருள் வினைப்படுத்துரைப்பின் உம்மை வேண்டிநின்றன ; இவற்றுள் முச்சுடர் தோலென்பன பெயராலோ வெனின், ஈண்டு [3]வினையென்றதூஉம்; [4]" சுட்டுப்பெயர் பின்வரும் வினையெனின் " என்றதுபோலும்.

பவளக்கோட்டு நீலயானை என்றுமில்லை, [5]முயற்கோடு ஆகாயப்பூ என்றுமில்லை, மண்ணிற்படம் என்றுமில்லை, நூலிற் கடம் என்றுமில்லை, ஒளிமுன் இருள் என்றுமில்லை யென உலகின் இலாப்பொருள் வினைப்படுத்துரைப்பின் உம்மைவேண்டி நின்றன; எவ்விடத்தும் இல்லையெனவும் ஒட்டுக.

உம்மைவருமென்னாது உம்மைவேண்டு மென்றமையான் அஃது இசையெச்சமாய் நிற்க அதனை வேண்டுவனவாய்,

" வன்பறழ்க் குமரி, யிருதோ டோழர்பற்ற "
" எருமை நாற்கா னீர்க்கீ ழுவ்வே " எ - ம்,

மண்ணிற் படமில்லை நூலிற் கடமில்லை ஒளிமுன் இருளில்லை எ - ம் வரும். இவ்வில்பொருளின்கட் காலப்பெயர் இடப்பெயர்

1. மூவேந்தர் - சேர சோழ பாண்டியர் ; " மூவேந் தருமற்றுச் சங்கமும் போய் " தனிப்.

2. " தானையுங் கரிய பேருத் தரியமு மாகச் சாத்த
யானையன் றுரித்த நக்கற்கு" (வி. பா. அருச்சுனன்றவநிலை.)

3. வினையென்றதற்கு வினைச்சொல்லென்றே பொருள்கொண்டார் மயிலைநாதர்.

4. சூ. 394 ; இச்சூத்திரத்தில் வினையென்பது புடைபெயர்ச்சியெனப் பொருள் கூறினர் ; " குளகம் பலபாட் டொருவினை கொள்ளும் " (தண்டி. சூ. 3) என்பதில் உள்ள வினையென்பதும் அது.

5. 321-ஆம் சூத்திர உரையையும் அடிக்குறிப்பையும் பார்க்க.

களும் உடன் எஞ்சிநின்றன. இவ்வாறு வருதல் கருதாது செய்யுள் விகாரமாக உம்மை தொக்கதென்பாரும்[1] உளர்,

உலகின் இலாப்பொருள், உள்பொருள்போற் காலத்தொடு பட்டதன்றென்பது தோன்ற என்றுமில்லையென்றது காலத்தொடு பட்டதுபோல் வைத்துப் பவளக்கோட்டு நீலயானை பண்டு மில்லையென எச்சவும்மைதந்து [2] உதாரணங்காட்டுவர்; அது யானை குடத்தினுமில்லை, குழிசியினுமில்லையென்றது போலு மென்க.

[3] இரட்டுறமொழிதலான், உலகின்கண் நிலையில்பொருள் வினைப் படுத்துரைப்பின் எச்சவும்மை வேண்டுமெனவும் பொருள் உரைத்துக்கொள்க. அவை வருமாறு: செல்வமும் நில்லாது, செல்வமும் பொய்யென வரும். செல்வம்நில்லாது, செல்வம் பொய் யென எச்சவும்மை கொடாது வாளாகூறின், இளமை யாக்கை முதலியன நிலைபெறுமெனவும், மெய்ப்பொருளெனவும் பொருள் படுமென்க. உம்மைவேண்டுமென்றதனாற் செல்வம் நில்லாது, செல்வம் பொய்யென உம்மை எஞ்சி நிற்றலும் கொள்க. (48)

## மரபு வழுவமைதி

400. செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கினு ளுரித்தே.

எ - ன், மரபுவழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செயப்படுபொருளைக் கருத்தாவைப்போல வைத்து அதன்மேல் வினைமுதல்வினையேற்றிக் கூறுதலும் வழக்கின்கண் உரித்தாம் எ - று.

(வ - று.) இம்மாடு யான்கொண்டது, இச்சோறு யான் கொடுத்தது, இவ்வெழுத்து யான் எழுதியது என வரும்.

உம்மையாற் கருமத்தைக் கருத்தாவாக இவ்வாறு கூறுதலே யன்றிக் கருவி நிலம் செயல் காலங்களைக் கருத்தாவாகக் கூறு

---

1. என்பார் மயிலைநாதர்; "இனைத்தென வறிந்த சினைமுதற் கிள விக்கு, வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்" (தொல். கிளவி. சூ. 33) என்பதன் உரையில் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க் கினியர் என்னும் மூவரும் செய்யுள் விகாரமென்றே கூறினர்; தெய்வச் சிலையார் எஞ்சிநின்றது என்றார். "ஐந்தவித்தா னாற்றல்" (குறள், 25) என்பதனுரையிற் பரிமேலழகரும் இங்ஙனமே கூறுவர்.

2. உதாரணங்காட்டுபவர் மயிலைநாதர்.

3. இப்பகுதி, "மன்னாப் பொருளு மன்ன வியற்றே" (தொல். கிளவி. சூ. 34) என்பதற்கு நச்சினார்க்கினியர் உரைத்த உரையைப் பின்பற்றியதாகத் தோற்றுகிறது.

தலும் அமையுமென்பது பெற்றும். அவை வருமாறு : இவ்வெழுத் தாணி யான் எழுதியது, இவ்வீடு யான் இருந்தது, இத்தொழில் யான்செய்தது, இந்நாள் யான்பிறந்தது எனவரும்.

இனி இல்லமெழுகிற்று, எழுத்தாணியெழுதிற்று என [1] உதாரணங்காட்டுவாருமுளர். இல்லமெழுகிற்றென்பதொரு வழக் கின்மையானும், நடத்த நடந்த தேரினைப்போல ஒருவன் எழுத வெழுதியது எழுத்தாணியாதலின் அது தன்தொழிலே அன்றி ஒருவன் தொழிலன்றுதலானும் அவை காட்டாகா என்க. (49)

## மரபுவழுவாமற் காத்தலும் மரபு வழுவமைதியும்

401. பொருண்முத லாறு மடைசேர் மொழியினம்
உள்ளவு மில்லவு மாமிரு வழக்கினும்.

எ - ன், மரபுவழுவற்கவெனக் காத்தலும் மரபுவழுவமைப்பும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொருளாதி ஆறுகிய அடைகள் அடுத்துவரும் மொழிகள் இனமுள்ளனவேயாமன்றி இனமில்லனவுமாம். உலக வழக்கினுள்ளும் செய்யுள்வழக்கினுள்ளும் எ - று.

உள்ளவுமென்னும் உயர்வுசிறப்பும்மையும் இல்லவுமென்னும் இழிவு சிறப்பும்மையும் எண்ணிநின்றன.

(வ - று.) நெய்க்குடம் [2] குளநெல் [3] கார்த்திகைவிளக்கு பூமரம் செந்தாமரை [4] குறுங்கூலி எ - ம், உப்பளம் ஊர்மன்று நாளரும்பு இலைமரம் [5] செம்போத்து தோய்தயிர் எ - ம் வழக்கின் கண் இனமுள்ளனவும் இல்லனவும் வந்தன.

"பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம்" (குறள், 913), "கானி யாற் றடைகரை" (இனியது. 5), "முந்நாட் பிறையின் முனியாது வளர்ந்தது," "கலவ மாமயி லெருத்திற் கடிமல ரவிழ்ந்தன காயா" (சீவக. 1558), "சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்" (குறுந். 18), "ஆடுபாம் பெனப்புடை யகன்ற வல்குன்மேல்" (சீவக. 1007) எ - ம், "பொற்கோட் டிமயமும் பொதியிலும் போன்றே" (புறநா. 2),

1. உதாரணங்காட்டுபவர் மயிலைநாதர் ; "செயப்படுபொருளை" (தொல். வினை. சூ. 49) என்னும் சூத்திரவுரையினுல் இளம்பூரணரும், சேனுவரையரும், நச்சினுர்க்கினியரும், தெய்வச்சிலையாரும் இக் கொள்கையினரேயென்று தெரிகின்றது.

2. "மெல்விரன் மெலியக் கொய்த குளநெல்லும்" (சீவக. 355)

3. கார்த்திகை விளக்கிட் டன்ன கடிகமழ் குவளைப் பைந்தார்" (சீவக. 256.)

4. பறிக்கும் கூலி.

5. "திருத்தாய் செம்போத்தே" (பெரியதிரு. 10. 10 : 1)

"வடவேங்கடந் தென்குமரி" (தொல். பாயிரம்), "வேனிற் கோங்கின் பூம்பொகுட் டன்ன" (புறநா. 321), "சிறகர் வண்டு செவ்வழி பாட" (சீவக. 74),

"செஞ்ஞாயிற்று நிலவுவேண்டினும்
வெண்டிங்களுள் வெயில்வேண்டினும்" (புறநா. 38),

"முழங்கு கடலோத மூழ்கிப் போக" (தொல். செய். 64, பேர், மேற்.) எ - ம்
செய்யுட் கண் இனமுள்ளனவும் இல்லனவும் வந்தன.

இனமுள்ளனவற்றை வாளாகூறிற் குறித்தபொருள் தோன்றுமையின் அடைகொடுத்து விதந்து கூறுகவெனவும், இனமில்லனவற்றிற்கு அடைகொடுத்துக் கூறுதல் மிகையாமாயினும் அமையுமெனவும் பொருள் போந்தமையின் முன்னையது வழுவற்க எனக் காத்தலும், பின்னையது வழுவமைப்புமாமென்க.

ஆசிரியர் தொல்காப்பியனார்,

"இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்கா றல்ல செய்யு ளாறே" (கிளவி. சூ. 18)

என்றமையிற் பொருண்முதலாரும் அடையென்றும் இருவழக்கினுமென்றும் இவ்விருமையும் பயின்றுவருமென்பது தோன்ற உள்ளவுமில்லவுமாமென இனமுள்ளனவற்றோடு ஒருங்கெண்ணியும் கூறினாரென்க. (50)

## அடைமொழி மரபு வழுவாமற் காத்தல்

402. அடைமொழி யினமல் லதுந்தரு மாண்டுறின்.

எ - ன், மரபுவழுவற்கவெனக் காத்தல் உணர்த்துதல் நுதலிற்று; பொருந்துவன கொள்கவென்பார் ஆண்டுறினென்றமையான்.

(இ - ள்.) மேற்கூறிய அடைசேர்மொழி இனத்தைத் தருதலேயன்றி அதனோடு இனமல்லதனையும் தரும், அவ்விடத்திற்குப் பொருந்துமாயின் எ - று.

(வ - று.) பாவம் செய்தான் நகரம் புகுமென்றதுணையானே புண்ணியம் செய்தான் சுவர்க்கம் புகுமென இனத்தைத் தருதலேயன்றி அவன் இது செய்யின் இது வருமென்னும் அறிவிலி என்னும் இனமல்லதனையும் தந்தது. மேலைச்சேரிச்சேவல் அலைத்ததென்றதுணையானே கீழைச்சேரிச் சேவல் அலைப்புண்டதென இனத்தைத் தருதலேயன்றி அச்சேவலுடையார்க்கு வெற்றியாயிற்றென்னும் இனமல்லதனையும் தந்தது.

இனி, இரட்டுறமொழிதலான் இனமல்லதும் தருமென்பதற்கு இனத்தைத் தருதலையொழித்து இனமல்லதனையும் தரும்

எனவும் பொருளுரைத்துக்கொள்க. அவை வருமாறு :—சுமந்தான் வீழ்ந்தானென்றுற் சுமவாதான் வீழ்ந்தானல்லன் என்னும் கருத்துச் சொல்லுவார்க்கு இன்றுதலின் அவ்வினத்தை ஒழித்துச் சுமையும் வீழ்ந்ததென்னும் இனமல்லதனைத் தந்தது. காலையெழுந்து கருமத்திற் செல்வான், கோழி கூவிற்றென்றுல் ஏனைப் புட்கள் கூவுகிலவென்னும் கருத்து அவற்கு இன்றுதலின் அவ்வினத்தையொழித்துப் பொழுது புலர்ந்ததென்னும் இனமல்லதனைத் தந்தது. பெய்முகிலனையானென்றுற் கைம்மாறு கருதாத பெருங்கொடையாளனென்னும் இனமல்லதனை இனமிலதாகிய அடைமொழி தந்தது. இவ்வடைகொடாது முகிலனையானென வாளா கூறினும் இக்கொடைப்பொருள் தருமாலோவெனின், அவ்வாறு கூறின் முகில்வண்ணனெனவும் பொருள்படுமாதலின் அதனையொழித்துக் கொடைப்பொருட்கு உரிமை செய்தது அவ்வடையேயாமென்க. பிறவுமன்ன. ஆண்டுறினென்றமையான் இவ்வாறு பொருந்துவன கொள்க. (51)

## அடைமொழி மரபு வழுவாமற் காத்தலும் வழுவமைதியும்

403. அடைசினை முதன்முறை யடைதலு மீரடை
முதலோ டாதலும் வழக்கிய லீரடை
சினையொடு செறிதலு மயங்கலுஞ் செய்யுட்கே.

எ - ன், மரபுவழுவற்கவெனக் காத்தலும் மரபுவழுமைப்பும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற்கூறிய அடை, முதல் சினைகளை அடுத்து வருங்கால் ஓரடையும் ஒரு சினையும் ஒருமுதலும் ஒன்றை ஒன்று விசேடித்து வருதலும், இரண்டடை முதலை விசேடித்து வருதலும் வழக்குநடையாம் ; இரண்டடை சினையை விசேடித்து வருதலும் * இவ்வரம்பு இறந்துவருதலும் செய்யுள் நடையாம் எ - று.

ஈரடைமுதலோடாதலுமென்றமையான், முறையென்றது ஒன்றையொன்று விசேடித்துவருவதென்பதூஉம், அங்ஙனம் வரவே அடைபல சினைபல வாராது ஒவ்வொன்று வருமென்பதூஉம் பெற்றும்.

(வ - று.) வேற்கைமுருகன் நிலப்பூநெருஞ்சி கார்த்திகைப் பூக்கொடி பழக்குலைவாழை [1] செங்காறுரை முழங்குதிரைக் கடல்

(பி - ம்.) *‘ இவ்வாறு பிறழ்ந்துவருதலும் ’

1. “ செங்கா றுரை செல்வன காண்மின் ” பெருங். 1. 40 : 23.

எ - ம், மனைச்சிறுகிணறு சிறுகருங்காக்கை (ஐங். 391) எ - ம் வழக்கின்கண் வந்தன.

"சிறுபைந் தூவியிற் செயிரறச் செய்த" (நேமி. சொல். 14, உரை,
"கருநெடுங் கண்டருங் காம நோயே" எ - ம், [மேற்.)
"பெருந்தோட் சிறுமருங்குற் பேரமர்க்கட் பேதை" (இ. வி. 314, மேற்.) எ - ம்

செய்யுட்கண் வந்தன. பிறவுமன்ன. இவற்றுள், அடைசினை முதன்முறை அடைதலொன்றும் வழுவற்கவெனக் காத்தலும், ஏனைய மூன்றும் அவ்வாறு நில்லாமையின் வழுவமைதியுமாமென்க.

"கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த
செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா
வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடி" (புறநா. 238)

என வருவன கொம்பு கூர்மாடு, மடல்விரிதாழை என்றாற்போல வருதலின், "உயர்திணை தொடர்ந்த பொருண்முத லாறும்" (377) என்னும் சூத்திரத்துள், அஃறிணையொடு சார்த்தின் அஃறிணை முடிபினவாமென அமைத்ததன்பாற்படுமென்க. (52)

## இயற்கைப்பொருள் மரபுவழுவமைதி

404. [1] இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்

எ - ன், மரபு வழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இயற்கைப் பொருள் செயற்கைப் பொருளென இரு வகைப்படும் பொருள்களுள் இயற்கைப் பொருளை இத்தன்மைத் தென்று கூறுக எ - று.

இயற்கை யென்பது அவிகாரம்; செயற்கை யென்பது விகாரம்.

(வ - று.) மெய் உள்ளது, பொய் இல்லது, நிலம் வலிது, நீர் தண்ணிது, தீவெய்து மயிர்கரியது, பயிர்பசியது என வரும்.

நிலம் நீர் முதலிய பூதங்கள் மாயையின் விகாரமென்பதை நோக்கிற் செயற்கைப்பொருளாயினும் [2] அப்பூதத்தின் விகாரங் களை நோக்கின் இயற்கைப் பொருளாமென்க.

இயற்கைப் பொருளை இற்றென்னும் வினைக்குறிப்பாகிய செயற்படுத்துக் கூறுதலின் இது வழுவமைதியாயிற்று. இது கருதாது இவ்வாறு கூறுதல் [3] மரபென்பாருமுளர். அது நிற்க.

1. தொல். கிளவி. சூ. 19.
2. "பூத மைந்தும், விலங்கிய விகாரப் பாட்டின் வேறுபா டுற்ற வீக்கம்" கம்ப. சுந்தர. கடவுள்.
3. மரபென்பவர் மயிலைநாதர்; இச்சூத்திரத்திற்கு அவர் எழுதும் கருத்தைப் பார்க்க.

வளி உளருந்தன்மைத்து, உயிர் உணருந்தன்மைத்து என்ருது வளியுளரும், உயிருணருமெனவும் [1] உதாரணங்காட்டுவர். வளியின்கண்ணும் உயிரின்கண்ணும் உளர்தலும் உணர்தலுமாகிய செயல் நிகழ்ந்ததுணையானே அவற்றிற்கு அவை செயற்கையாமன்றி இயற்கையாகாமையானும், அவ்வாறுகூறுதற்கு ஒருவிதியின்மையானும் அவை பொருந்தாவென்க. (53)

## செயற்கைப்பொருள் மரபுவழுவாமற் காத்தலும் வழுவமைதியும்

405. காரண முதலா வாக்கம் பெற்றும்
காரண மின்றி யாக்கம் பெற்றும்
ஆக்க மின்றிக் காரண மடுத்தும்
இருமையு மின்றியு மியலுஞ் செயும்பொருள்.

எ - ன், மரபுவழுவற்கவெனக் காத்தலும் மரபுவழுமைப்பும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முதல் துணை நிமித்தங்களாற் செய்யும்பொருளாகிய செயற்கைப் பொருளைக் கூறுங்காற் காரணச்சொல் முன்வர ஆக்கச்சொற் பின்வரப்பெற்றும், காரணச்சொல் தொக்கு நிற்ப ஆக்கச்சொல் வரப்பெற்றும், ஆக்கச்சொல் தொக்குநிற்பக் காரணச்சொல் வரப்பெற்றும், இவ்விருவகைச் சொல்லும் தொக்கு நிற்கவும் நடக்கும் எ - று.

காரணச்சொல்லும் ஆக்கச்சொல்லும் யாண்டுவரினும் அந்நிலைக்களத்துத் தந்து பொருளுரைக்கப்படுதலின் ‘ காரண முதலா’ என்ருர்.

(வ - று.) கடுவும் கைபிழி எண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்லவாயின எருப்பெய்து இளங்களைகட்டு நீர்கால்யாத்தமையாற் பயிர்நல்லவாயின எ - ம், மயிர்நல்லவாயின பயிர்நல்லவாயின எ - ம், கடுவும் கைபிழி எண்ணெயும் பெற்றமையான் மயிர்நல்ல எருப்பெய்து இளங்களைகட்டு நீர்கால்யாத்தமையாற் பயிர்நல்ல எ - ம், மயிர்நல்ல பயிர்நல்ல எ - ம் வரும்.

“ பல்லார்தோ டோய்ந்து வருதலாற் பாய்புனல்
நல்வய லூரநின் ருர்புலால் - புல்லெருக்கம்
மாசின் மணிப்பூணெம் மைந்தன் மலைந்தமையாற்
காதற்ருய் நாறு மெமக்கு ” (தொல். கிளவி. 56. ந. மேற்.)

1. உதாரணங்காட்டுபவர் மயிலைநாதர்; சேனுவரையரும் நச்சினர்க்கினியரும் தெய்வச்சிலையாரும் இவ்வாறே காட்டியுள்ளார்கள். (தொல். கிளவி. சூ. 19. உரை) ; இ - வி. உரையாசிரியரும் இக்கொள்கையினரே; சூ. 313.

எனப் பரத்தையிற்பிரிந்த தலைவனைப் புலந்தும் அவன் செய்த தீங்கினைத் தன் இனிய முகத்தால் தணிக்கும் புதல்வனை உவந்தும் ஒன்றொன்றுகாதனவற்றை ஆயினபோற் கூறும்வழி ஆக்கச் சொற்றொக வருதலும் அதன்பாற்படுத்துக. பிறவுமன்ன.

காரணமுதலா ஆக்கம்பெறுதலொன்றும் வழுவற்கவெனக் காத்தலும் ஏனைய மூன்றும் வழுவமைதியுமாமென்க. (54)

## விடைமரபு வழுவாமற் காத்தல்

406. [1] தம்பா லில்ல தில்லெனி னினனாய்
உள்ளது *கூறி மாற்றியு முள்ளது
சுட்டியு முரைப்பர் சொற்சுருங் குதற்கே.

எ - ன், மரபுவழுவற்கவெனக் காத்தல் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருவன் வினவியது தம்[2]பக்கல் இல்லையாயின் அதனை இல்லை என்னலுறின் அவன் வினவியதற்கு இனமாய்த் தம்பக்கல் உள்ளதனைக் கூறி அக்கூற்றானே அதனை இல்லை யென்றும், உள்ளதாயின் இத்துணை உண்டென்றும் கூறுவர் புலவர், வினவுதலும் செப்புதலுமாகிய சொற்கள் சுருங்குதற் பொருட்டு எ - று.

குன்றக்கூறல் முதலிய குற்றங்கள்நீக்கிச் சுருங்கச்சொல்லு தல் முதலிய அழகொடு கூறுதல் வழக்கிற்கும் வேண்டுமென்பார் சொற்சுருங்குதற்கேயென்றார்.

(வ - று.) பயறுண்டோ வணிகீரே என்றார்க்கு அஃதின் றென்பார் உழுந்துண்டு, உழுந்தும் துவரையும் உண்டென்க. இவ்வினமொழிகள் பயறில்லை என்னும் இறைபயந்து நிற்றலின் இனனாயுள்ளது *கூறிமாற்றியுமென்றார். அஃதுண்டென்பார் இத்துணையுண்டென்க. நூறுவிற்கும் பட்டாடை உண்டோ

(பி - ம்.) *' கூறியுமாற்றியும் '

1. '' புல்லியோர் பண்டங் கொள்வார் வினவினப் பொருடம் பக்கல், இல்லெனி னினமா யுள்ள பொருளுரைத் தெதிர்ம றுத்தும், அல்லதப் பொருளுண் டென்னின் விலைசுட்டி யறுத்து நேர்ந்தும், சொல்லினு மிலா பங் கொள்வார் தொன்மர பிருக்கை சொல்வாம் '' (திருவிளை. நகர. 58) என்னும் அருமைச்செய்யுள் இச்சூத்திரப்பொருளை உட்கொண்டு இயற்றப் பெற்றிருத்தல் காண்க.

2. பக்கல் : '' வினைகள் வந்துபற்றியென் பக்கனின்றும் விடகிலா '' தே. திருக்கோவலூர், திருநா. 7.

என்ருர்க்கு அஃதின்றென்பார் ஐம்பது விற்கும் கோசிகமுண் டென்க. அஃதுண்டென்பார் எண்பது விற்பது உண்டென்க. பிறவுமன்ன.

இவ்வாறன்றி [1]உழுந்தல்லதில்லை, பயறுளவென உதாரணம் காட்டுவாருமுளர். அவை சொற்சுருங்குதற்கே யென்பதனோடு மாறுபட்டு மிகைபடக் கூறலென்னுங் குற்றமாமென்க. (55)

## இரக்குஞ் சொல்

407. ஈதா கொடுவெனு மூன்று முறையே
இழிந்தோ னொப்போன் மிக்கோ னிரப்புரை.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) ஈ என்பது இழிந்தோன் உயர்ந்தோன்மாட்டு இரக்கும் சொல்லாம்; தா என்பது ஒப்போன்மாட்டு இரக்கும் சொல்லாம்; கொடு என்பது உயர்ந்தோன் இழிந்தோன்மாட்டு இரக்கும் சொல்லாம் எ - று.

(வ - று.) தந்தை ஈ, தோழ தா, மைந்த கொடு என வரும். பிறவழிவரும் ஒப்பு உயர்வு தாழ்வினும் இவ்வாறே ஒட்டுக.

வழங்கு, வீசு, நல்கு என்றற்றொடக்கத்து இரப்புரைகள் போலாது ஈவோர்க்கும் ஏற்போர்க்கும் ஒப்புயர்வுதாழ்வுகளை ஈ தா கொடு என்ற துணையானே உணர்த்திநிற்றலின் இவற்றை இனைத் தென்றறிபொருளவாகக் கூறினர். அருள், அளி என்னும் இரப் புரைகள் ஈவோர்க்கு உயர்வும் ஏற்போர்க்கு இழிவும் உணர்த்தின வாலோவெனின், அவை கருணைக்குரிய சொற்கள், குறிப்பினன் இரத்தற்பொருளை உணர்த்தி நின்றனவன்றி இரப்புரையல்ல வென்க.

இம்மரபு மயங்கிவருவனவுளவேல் "புதியன புகுதலும் வழுவல" (462) என்றதன்பாற்படுத்துக. (56)

## மரபு வழுவமைதி

408 [2]முன்னத்தி னுணருங் கிளவியு முளவே.

எ - ன், மரபுவழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வெளிப்படையானன்றிக் குறிப்பாற் பொருள் உணரப்படும் சொற்களும் சிலவுள எ - று.

1. 'உழுந்தல்லதில்லை; இத்துணைபயறுள; என உதாரணங்காட்டு வர் மயிலைநாதர்.

2. "முன்னத்தி னுணருங் கிளவியு முளவே, இன்ன வென்னுஞ் சொன்முறை யான" (எச்ச. சூ. 63) என்பது தொல்காப்பியச் சூத்திரம்.

அவையாவன, [1]ஒன்றெழிபொதுச் சொன்முதற் சொல்லுவான் குறிப்பீருக விதந்தன முதலியவாம்.

செவியெல்லாம் சாலச் செம்பொன் அணியும் செல்வத்தினர் என்பார் செஞ்செவியரென்றும், குற்றமற்ற மரபினரென்பார் [2]வெள்ளொக்கலரென்றும். பெருவாழ்க்கையினரென்பார் [3]குழை கொண்டு கோழியெறியும் வாழ்க்கையரென்றும் கூறும் சொல்லு வான் குறிப்பொன்றுமே [4]உதாரணங்காட்டுவாருமுளர். அங்ஙன மாயின் ஏனைய குறிப்பிற் பொருள்தரும்மொழி அல்லவா மென்க.

கேட்போர் இடர்ப்படாது வெளிப்படையிற்கூறுதல் மரபாத லின் இது வழுவமைதியாயிற்று. (57)

409 [5]கேட்குந போலவுங் கிளக்குந போலவும்
இயங்குந போலவு மியற்றுந போலவும்
அஃறிணை மருங்கினு மறையப் படுமே.

1. சூ. 269.

2. வெள்ளொக்கலரென்பதற்கு, வெளியதுடுத்த சுற்றமென்பது குறிப்பானுணரப்பட்ட பொருளென்பர் சேனுவரையர்; தொல். எச்ச சூ. 63, உரை.

3. "நேரிழை மகளி ருணங்குணைக் கவரும், கோழி யெறிந்த கொடுங் காற் கனங்குழை" (பட்டினப். 22-3); "நங்கை மார்விரீஇ, உற்றவர் கோழிமே லெறிந்த வெண்குழை" (சீவக. 89)

4. உதாரணங்காட்டுபவர் மயிலைநாதர்; இளம்பூரணர், சேனு வரையர் என்னுமிருவரும் இங்ஙனமே காட்டுவர் (தொல். எச்ச. சூ. 63. உரை); இ - வி. உரையாசிரியர் கொள்கையும் இதுவே; சூ. 354, உரை.

5. "வாரா மரபின வரக்கூ றுதலும், என்ன மரபினவெ வனக்கூறு தலும், அன்னவை யெல்லா மவற்றவற் றியலான், இன்ன வென்னுங் குறிப்புரை யாகும்" (தொல். எச்ச. சூ. 26) என்பது தொல்காப்பியச் சூத்திரம். அதன் உரையில் இளம்பூரணர், 'விளங்கும் மரனும் புள்ளும் உள்ளநோய் உற்றார்க்கு மனக்குறைக்கு மறுதலைமாற்றம் கூறுவன போலுங் குறிப்பினவாகப் புலப்படுதலால் இது சொல்லப்பட்டது' என இத்தகைய விதிக்குக் காரணம் கூறுவர்; "உறுப்புடை யதுபோ லுணர் வுடை யதுபோல், மறுத்துரைப்பதுபோ னெஞ்சொடு புணர்த்தும், சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச், செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியும், அவரவ ருறுபிணி தமபோலச் சேர்த்தியும்", "வண்ணம் பசந்து புலம்புறு காலை, உணர்ந்த போல வுறுப்பினைக் கிழவி, புணர்ந்த வகையிற் புணர்க் கவும் பெறுமே", "உண்டற்குரிய வல்லாப் பொருளை, உண்டனபோலக் கூறலு மரபே" (தொல். பொருள். சூ. 2, 8, 19) என்னும் பொருளதிகாரச் சூத்திரங்களும், "நெஞ்சு நாணு நிறைசோ ரறிவும், செஞ்சுடர்ப் பருதியுந்

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) கேளாதனவற்றைக் கேட்குநபோலவும், சொல்லாதனவற்றைச் சொல்லுவனபோலவும், நடவாதனவற்றை நடப்பனபோலவும், இத்தொழில்களல்லன பிற செய்யாதனவற்றைச் செய்வனபோலவும் அஃறிணையிடத்தும் சொல்லப்படும் எ - று.

முன்னையபோல விதவாது இறுதிக்கண், *இயற்றுநவெனப் பொதுப்படக் கூறினமையின் இத்தொழில்களல்லன பிறவென்னுஞ்சொல் எஞ்சிநின்றன.

(வ - று.)

" நன்னீரை வாழி யனிச்சமே " (குறள், 1111),
" இரவெலா நின்றுயா லீர்ங்கதிர்த் திங்காள் "
(தொல். களவு. 42. ந. மேற்.) எ - ம்,
" பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்கும் " (குறள், 709),
" மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங்கலும்
தேய்தலு முடைமையைத் திங்கள் செப்புமால் "
(சீவக. 2932) எ - ம்,

இவ்வழி அவ்வூர்க்குப் போம், இவ்வரசனுணை எங்குஞ் செல்லும் எ - ம்,

" தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும் " (குறள். 293),
" வண்சிறைப் பவளச் செவ்வாய்ப் பெடையன்ன மடமைகூரத்
தண்கய நீருட் கண்ட தன்னிழல் பிறிதென் றெண்ணிக்
கண்டனங் கள்வ மற்றுன் காதலி தன்னை நீர்க்கீழ்ப்
பண்டைய மல்லம் வேண்டா படுக்கவென் றூடிற் றன்றே "
(சீவக. 1623),
" கருவிரற் செம்முக வெண்பற்சூன் மந்தி
பருவிரலாற் பைஞ்சுனைநீர் தூவிப் - பெருவரைமேல்
தேன்றேவர்க் கீயு மலைநாட வாரலோ
வான்றேவர் கொட்கும் வழி " (திணைமா. 10) எ - ம்

முறையே காண்க. அஃறிணை மருங்கினுமென்ற உம்மையான் உயர்திணைமருங்கினும் இவ்வாறு சொல்லப்படுதல் புலம்பல் முதலியவற்றுட் காண்க. (58)

(பி - ம்) * ' இயற்றுவன '

திங்களு மாலையும், புள்ளு மாவும் புணரியுங் கானலும், உள்ளுறுத் தியன்றவு மொழிந்தவை பிறவும், தன்சொற் கேட்குந போலவுந் தனக்கவை, இன்சொற் சொல்லுந போலவு மேவல், செய்குந போலவுந் தேற்றுன போலவும், மொய்குழற் கிழத்தி வொழிந்தாங் கமையும் " (நம்பி. சூ. 223) என்பதும் இவ்விதி எழுந்ததன் காரணத்தைப் புலப்படுத்தும்.

410. *உருவக வுவமையிற் றிணைசினை முதல்கள்
பிறழ்தலும் பிறவும் பேணினர் கொளலே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) உருவகத்தின்கண்ணும் [1]உவமைக்கண்ணும் இரு திணை தம்முள் மயங்குதலும் முதல் சினை தம்முள் மயங்குதலும் இவ்வியலுட் சொல்லாது ஒழிந்தனவும் போற்றிக் கொள்க எ - று.

[2] (வ - று.)

" மன்னர் மடங்கன் மறையவர் சொன்மாலை
அன்ன நடையினர்க் காரமுதம் - துன்னும்
பரிசிலர்க்கு வானம் பனிமலர்ப்பூம் பைந்தார்
எரிசினவேற் றானையெங் கோ " (பு. வெ. 189)

என்பன உயர்திணை அஃறிணையோடு மயங்கின.

" தாழிருந் தடக்கையு மருப்புந் தம்பியர்
தோழர்தன் றாள்களாச் சொரியு மும்மதம்
ஆழ்கடற் சுற்றமா வழன்று சீவக
ஏழுயர் போதக மினத்தொ டேற்றதே " (சீவக. 775)

என்பன உயர்திணை அஃறிணையோடும் முதல் சினையோடும் மயங்கின. முகமதியென்பது சினை முதலொடு மயங்கிற்று.

" அகழ்கிடங் கந்துகி லார்ந்த பாம்புரி
புகழ்தகு மேகலை ஞாயில் பூண்முலை
திகழ்மணிக் கோபுரந் திங்கள் வாண்முகம்
சிகழிகை நெடுங்கொடி செல்விக் கென்பவே " (சீவக. 1444);

இஃது அஃறிணை உயர்திணையோடு மயங்கிற்று. இவை உருவகம்.

" கொங்கலர் கோதைக் குமரி மடநல்லாள்
மங்கலங் கூற மலிபெய்திக் - கங்கையாள்
பூம்புன லாகந் தழீஇயினன் போரடுதோள்
வேம்பார் தெரியலெம் வேந்து " (பு. வெ. 224),

" இலமென் றசைஇ யிருப்பாரைக் காணின்
நிலமென்னு நல்லா ணகும் " (குறள், 1040)

" வருந்தி யீன்றாண் மறந்தொழிந்தாள்
வளர்த்தாள் சொற்கேட் டில்கடிந்தாள்

(பி - ம்.) * ' உருவகமுவமையிற் '

1. " முதலுஞ்சினையுமென் றாயிரு பொருட்கும், நுதலிய மரபி னுரியவை யுரிய " (தொல். உவம. சூ. 6) என்பதையும் அதன் உரையையும் பார்க்க.

2. இதன்பின் காட்டப்பட்டுள்ள உதாரணங்கள் சிலவற்றில் மயிலைநாதர் கொள்கை வேறுபடுகின்றது.

முருந்தின் காறுங் கூழையை
முனிவார் நின்னை யென்முனிவார்
பொருந்திற் றன்று லிதுவென்றாய்
பொன்று மளித்திவ் வுயிரென்றாய்
திருந்து சோலைக் கருங்குயிலே
சிலம்ப விருந்து கூவுதியால்" (சீவக. 1661)

என்றற்றொடக்கத்தனவும் அன்ன.

"மல்லன் மலையனைய மாதவரை வைதுரைக்கும்" (சீவக. 2789)
என்பது உயர்திணையோடு அஃறிணை மயங்கிற்று.

"கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே" (சீவக. 53)
என்பது அஃறிணையோடு உயர்திணை மயங்கிற்று. கயற்கண் என்பது சினை முதலொடு மயங்கிற்று. தளிர்மேனி என்பது முதல் சினையொடு மயங்கிற்று. பிறவுமன்ன.

"தருமன் றண்ணளி யாற்றன தீகையால்
வருணன் கூற்றுயிர் மாற்றலின் வாமனே
அருமை யாலழ கிற்கணை யைந்துடைத்
திரும கன்றிரு மாநில மன்னனே" (சீவக. 160),

"இந்திர குமரன் போல விறைமக னிருந்து காண" (சீவக. 1253)
என்றற் றொடக்கத்தனவாய் மயங்காது வருதல் மரபாதலின் இது வழுவமைதியாயிற்று.

இனிப் பிறவுமென்றதனால், உருவகவுவமைக்கண் இவன் பாரதி, இவன் பாரதியனையானெனப் [1]பால்மயங்கக் கூறுதலும், கயலினது பிறழ்ச்சிபோலும் கண்ணினது பிறழ்ச்சியென்பார் கயற்கணென்று சொல்லின்முடிவின் அப்பொருள் முடியாது எஞ்சக் கூறுதலும், பிறவற்றுள்ளும் இவ்வாறு எஞ்சக் கூறுதலும், செங்கோல் கொடுங்கோல் வீரக்கழல் சினவேலென [2]ஒரு பொருட்டன்மையை மற்றொரு பொருண்மேல் வைத்துக் கூறுதலும், ஈந்தானென்பார் அருளினானென ஒருவினையை மற்றொரு வினையாற் கூறுதலும்,

"அடிவண்ண மல்லா லலங்குதார்க் கோதை
முடிவண்ணங் கண்டறியா வேந்து",

"துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே" (புறநா. 31)

1. 'உரியவென்றது உரியவை என்றதனால் திணையும் பாலும் மயங்கி வரும் உவமையும் கொள்ளப்படும்' (தொல். உவம. சூ. 6 பேர்.) என்பதும், "மிகுதலுங் குறைதலுந் தாழ்தலுங் முயர்தலும், பான்மாறு படுதலும் பாகுபாடுடைய" (தண்டி. சூ. 32) என்னும் உவமவழுவமைதிக்குரிய விதியும் இங்கே அறிதற்குரியன.

2. இங்ஙனங் கூறுதல் இலக்கணையின் பாற்படும்.

என உயர்திணையை அஃறிணையாகக் கூறுதலும் இவை போல்வன பிறவும் வழுவமைதியாகக் கொள்க. (59)

### பொருள்கோள்

411. யாற்றுநீர் மொழிமாற்று நிரனிறை விற்பூண்
தாப்பிசை யளைமறி பாப்புக் கொண்டுகூட்
டடிமறி மாற்றெனப் [1]பொருள்கோ ளெட்டே.

எ - ன், [2]நால்வகைச் சொற்களானும் செய்யுஞ் செய்யுள் கொள்ளும் பொருள்கோளின் பெயரும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) யாற்றுநீர்ப் பொருள்கோளும், மொழிமாற்றுப் பொருள்கோளும், நிரனிறைப்பொருள்கோளும், விற்பூட்டுப் பொருள்கோளும், தாப்பிசைப் பொருள்கோளும், அளைமறி பாப்புப்பொருள்கோளும், கொண்டு கூட்டுப் பொருள்கோளும், அடிமறி மாற்றுப்பொருள்கோளும் எனப்பொருள்கோள் எட்டாம் எ - று.

இவற்றுள் தாப்பிசையென்பதற்கு ஊசல்போல் இடை நின்று இருமருங்கும் செல்லும் சொல்லென்பது பொருள். தாம்பென்பது ஊசல்; அஃது அளைமறிபாப்பென்பதிற் பாம்பென்பது பாப்பென நின்றாற்போல *வலித்து நின்றது. ஏனையவும் காரணக்குறியாதல் காண்க. (60)

### யாற்றுநீர்ப் பொருள்கோள்

412. †மற்றைய நோக்கா தடிதொறும் வான்பொருள்
அற்றற் றொழுகுமஃ தியாற்றுப் புனலே.

எ - ன், நிறுத்தமுறையானே [3]யாற்றுநீர்ப் பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

(பி - ம்) * 'வலிந்து' † 'மற்றய'

1. பொருள்கோள் நான்கு, ஐந்து, ஒன்பது என்னுங் கொள்கையுடையாரும் உளர்; நன். சூ 410, மயிலை. பார்க்க.

2. "இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென், றனைத்தே செய்யு ளீட்டச் சொல்லே (தொல். எச்ச. சூ. 1); "செய்யுட் சொன்ளுன்கும்" (தமிழ்விடுதூது, 28); "பழுதகன்ற நால்வகைச் சொன் மலரெடுத்து" (திருவிளை. கடவுள். கலைமகள் வணக்கம்.)

3. புனல்யாற்றுப் பொருள்கோள், யாற்றுவரவுப் பொருள்கோள், ஆற்றொழுக்குப்பொருள்கோள் எனவும் இது கூறப்படும்; இறையனாரகப்

(இ - ள்.) மொழிமாற்று முதலியபோற் பிறழ்ந்துசெல வேண்டாது யாற்றுப்புனலொழுக்குப்போல் நெறிப்பட்டு அடிதொறும் பொருள் ·அற்றற்றொழுகும் அப்பொருள்கோள் யாற்றுநீர்ப் பொருள்கோளாம் எ - று.

இடையறுதொழுகும் யாற்றுநீரொழுக்கு உவமையாதலின் அடிதொறும் வான்பொருள் அற்றற்றொழுகுதலாவது மொழிமாற்று முதலியபோற் பிறழ்ந்துசெல்லும் செலவற்று ஆங்காங்கு அமைந்து ஒழுகுதலாமன்றி அடிதொறும் பொருண் முடிதலன்றுமென்க. அங்ஙனமாயின் ஆங்காங்கெனப் பொதுப்படக்கூறுது அடிதொறு மென்றது என்னையெனின், அவ்வாறே கூறுவார் *ஓரிலக்கணை மேல்வைத்துக் கூறினுரென்க.

(வ - று.)

" சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் ரேற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே " (சீவக. 53)

என வரும். இப்பாட்டினுட் சொல்லென்னும் எழுவாயினை முதலெடுத்து அதன் தொழிலாகிய வினையெச்சங்கள் ஒன்றனை ஒன்று கொள்ள இடையே முறைநிறீஇக் காய்த்தவென்னும் பயனிலையை இறுதிக்கண் தந்து முடித்தமையின் இப்பொருளொழுகுதல் யாற்றுநீரொழுக்குப்போறல் காண்க.

இதற்கு இவ்வாறன்றி ஏனையடிகளை நோக்காது அடிதொறும் பொருண்முடிந்து வருவது யாற்றுநீர்ப்பொருள்கோளெனப் பொருளுரைத்து,

" அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றம்
சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றம்
கொலைப்பாலுங் குற்றமே யாம் " (நான்மணி. 26)

என [1]உதாரணங் காட்டுவாருமுளர். யாற்றுநீரொழுக்குக்கு இடையறுதல் இன்மையானும், அற்றதேல் அதனை ஒழுக்கென்றல் கூடாமையானும் அஃது உவமையன்றும். ஒவ்வோரடி யொழுகு

---

*ஓரிலச்சினை.

பொருள் உரையாசிரியர் எடுத்துக்காட்டும் பாசிநீக்கென்பதும் இது வெனவே தோற்றுகின்றது. இப்பொருள்கோள் யாப்பென்னும் உறுப்பின் கண் அடங்குமென்பர் நச்சினுர்க்கினியர் ; தொல். எச்ச. சூ. 13. உரை.

1. உதாரணங்காட்டுபவர் மயிலைநாதர்; யாப்பருங்கலவிருத்தி உரையாசிரியரும் (சூ. 95, உரை), நேமிநாத உரையாசிரியரும் (சொல். 68, உரை) இக்கொள்கையினரே.

தற்கு உவமையாயிற்றெனிற் பாட்டுமுழுவதும் இடையருதொழுகிப் பயின்றுவரும் பொருள்கோள் மொழிமாற்று முதலியவற்றுள் அடங்காமையிற் குன்றக்கூறுதலாம்; இங்ஙனமாதலின் அது பொருளன்ருய் அவர் காட்டிய உதாரணம் அடிமறிமாற்றின் பாற்படுமென்க. அப்பொருள்கோளின் விகற்பம் அச்சூத்திரத்துள் தோன்றக் கூறுதும். இதனை வான்பொருளென்றூர். இது நெறிப்பட்டு வருதலானும், பயின்றுவருதலானும், மொழிமாற்று முதலிய வந்த செய்யுட் கண்ணும் விராய்வருதலானுமென்க. (61)

## மொழிமாற்றுப் பொருள்கோள்

413. ஏற்ற பொருளுக் கியையு மொழிகளை
மாற்றியோ ரடியுள் வழங்கன்மொழி மாற்றே.

எ-ன், மொழிமாற்றுப் பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) இரண்டுமொழியும் அவைகொள்ளும் இரண்டு பயனிலையுமாய் வரக்கூறுவோர் நான்கனுள் ஏற்ற பயனிலைகட்கு இயையும் மொழிகளைத் தனித்தனி கூட்டிக்கூருது ஏலாத பயனிலைகட்கு இயையாத மொழிகளைத் தனித்தனி கூட்டி ஓரடியுள்ளே கூறும் பொருள்கோள் மொழிமாற்றுப் பொருள்கோளாம் எ-று.

ஒன்றற்கொன்று பொருந்தியதென்பார் ஏற்றபொருளுக்கு இயையும் மொழியென்றூர். மொழிமாற்றென்பது தனக்குள்ளதைக் கொடுத்துப் பிறர்க்குள்ளதை வாங்கும் பண்டமாற்றுப் போறலின் இரண்டுமொழியும் அவை கொள்ளும் இரண்டு பயனிலையும் வந்தல்லது மொழிமாற்றுதல் கூடாமையின் அத்தொகை தந்து கூறினும்.

(வ-று.)

[1]" சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை "

எனவரும். ஆழவென்னும் பயனிலைக்கு இயைந்த அம்மி என்னும் மொழியினை மிதப்பவென்னும் பயனிலைக்கும் மிதப்பவென்னும் பயனிலைக்கு இயைந்த சுரையென்னும் மொழியினை ஆழவென்னும்

1. இதனைச் சுண்ணமொழிமாற்றுக்கு உதாரணமாகத் தொல்காப்பிய உரையாசிரியர்களும், யாப்பருங்கலவிருத்தி உரையாசிரியரும், நேமிநாத உரையாசிரியரும் காட்டினர்.

பயனிலைக்குமாக மாற்றிக்கூறியவாறும், நீத்தென்னும் பயனிலைக் கியைந்த முயலென்னும் மொழியினை நிலையென்னும் பயனிலைக்கும் நிலையென்னும் பயனிலைக்கு இயைந்த யானையென்னும் மொழி யினை நீத்தென்னும் பயனிலைக்குமாக மாற்றிக் கூறியவாறும் காண்க.

[1]" ஆலத்து மேல குவளை குளத்துள
வாலி னெடிய குரங்கு"

என ஈரடி முதலியவற்றுட்கூறிற் சேய்மைக்கண்ணவாய் மொழிமாற்றென்பது தோன்றாமையின் அஃதன்றென விலக்கி அண்மைக்கட் கூறுவதே மொழிமாற்றென்பார் ஓரடியுளென்றார். ஆலத்துமேலவென்பது ஓரடியுள் வாராமையிற் [2] கொண்டுகூட் டென்பாருமுளர். அது மொழிமாற்றிற்கும் கொண்டுகூட்டிற்கும் வேற்றுமையுணரார் கூற்றமென்க. அவர் இச்சூத்திரத்திற்கு மொழிமாற்றோடு பொருந்தாது கொண்டுகூட்டொடு பொருந்தப் பொருள்கூறிச் சுரையாழவென்னும் உதாரணங் காட்டுவர். (62)

## நிரனிறைப் பொருள்கோள்

414. பெயரும் வினையுமாஞ் சொல்லையும் பொருளையும்
வேறு நிரனிறீஇ முறையினு மெதிரினும்
நேரும் பொருள்கோ ணிரனிறை நெறியே.

எ - ன், [3]நிரனிறைப் பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுத லிற்று.

(இ - ள்.) பெயரும் வினையுமாகிய சொற்களையும் அவை கொள்ளும் பெயரும் வினையுமாகிய பயனிலைகளையும் வேறு வேறு நிரையாக நிறுத்தி முறையாயேனும் எதிராயேனும் இதற்கு இது பயனிலை யென்பதுபடக் கூறும் பொருள்கோள் நெறிப்பட்ட நிரனிறைப் பொருள்கோளாம் எ - று.

(வ - று.)

[4]" கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதிபவள முத்த முகம்வாய் முறுவல்

1. இதனை அடிமொழிமாற்றிற்கு உதாரணங்காட்டினர் யா. வி. உரை யாசிரியர்; ஒழிபு. சூ. 2, உரை.

2. கொண்டுகூட்டென்பவர் மயிலைநாதர்.

3. நிரனிறைப்பொருள்கோளை ஓரணியாகவும் கொண்டார் தண்டி யலங்கார ஆசிரியரும் மாறனலங்கார ஆசிரியரும்.

4. தொல். எச்ச. சூ. 9, இளம். மேற். கொடி நுசுப்பு, குவளை உண் கண், கொட்டை மேனி, மதி முகம், பவளம் வாய், முத்தம் முறுவல், பிடி நடை, பிணை நோக்கு, மஞ்ஞை சாயல் என இயைத்துப் பொருள்கொள்க.

" பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல்
வடிவினளே வஞ்சி மகள் "

இது பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற முறை நிரனிறை.

[1]" காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப
போதுசேர் தார்மார்ப போர்ச்செழிய - நீதியால்
மண்ணமிர்த மங்கையர்தோண் மாற்றுரை யேற்றார்க்கு
நுண்ணிய வாய பொருள் "

இது வினைப்பயனிலைகளும் பெயர்ச்சொற்களுமாய் நின்ற முறைநிரனிறை.

[2]" களிறுங் கந்தும் போல நளிகடற்
கூம்புங் கலனுந் தோன்றும்
தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே "

இது பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற எதிர் நிரனிறை.

* [3]" ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்
பாடகமு மூரகமும் பஞ்சரமா - நீடியமால்
நின்று னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ
மன்றார் மதிட்கச்சி மாண்பு "

இது பெயர்ச்சொற்களும் வினைப்பயனிலைகளுமாய் நின்ற எதிர் நிரனிறை. பிறவுமன்ன.

மேலைச்சூத்திரத்துள் மொழியென்றும் இச்சூத்திரத்துட் சொல்லென்றும் கூறிய [4]நிறுத்தசொல்லும், அதுகொள்ளும் பயனிலையெனினும் பொருளெனினுமொக்கும் [5]குறித்து வருகிளவியுமன்றி

* (பி - ம்.) " ஆடவர்க ளெங்வ னகல்வாரருள் சுரந்து
பாடகமு மூரகமும் பாம்பணையும் "

1. யா. வி. ஒழிபு. சூ. 2, மேற். மண்ணைக் கா, அமிர்தத்தைத் து (உண்), மங்கையர்தோளைச் சேர், மாற்றாரைத் தாழ்(தாழ்த்து), ஏற்றார்க்குக் குழை (இரங்கு), நுண்ணியவாய பொருளை ஆய் (ஆராய்வாய்) என இயைத்துப் பொருள்கொள்க.

2. யா. வி. ஒழிபு சூ. 2, மேற். " குன்ற வெண்மண லேறி நின்று நின், றின்னங் காண்குவம் வம்மோ தோழி " என்பது இச்செய்யுளின் முற்பகுதி. களிறுபோலக் கலனும் கந்துபோலக் கூம்பும் தோன்றுமெனக் கூட்டிப் பொருள்கொள்க.

3. யா. வி. ஒழிபு. சூ. 2, மேற். இந்த வெண்பா கணிகண்ணர் பாடியதாக வைஷ்ணவ குருபரம்பரையால் தெரியவருகின்றது. வெஃகாவிற் கிடந்தான், பாடகத்தில் இருந்தான், ஊரகத்தில் நின்றான் என இயைத்துப் பொருள்கொள்க. இம்மூன்று திருப்பதிகளும் காஞ்சீபுரத்திலுள்ளன.

4, 5. "நிறுத்த சொல்லே குறித்துவரு கிளவியென், றாயீ ரியலபுணர் நிலைச் சுட்டே " தொல். புணரியல், சூ. 5.

அல்வழிவேற்றுமையுருபுகளும் பிறசொற்களும் உடன்வருமாலோ வெனின், சாத்தன் வந்தானென்றால் அவனுடை அணி முதலியனவும் உடன்வருதல் கூறுதேயமைதல் போலுமென்க.

"சொற்றொறு மிற்றிதன் பெற்றி" (461) என்பதனானே,

[1]"காமவிதி கண்முக மென்மருங்குற் செய்யவாய்
தோமி றுகடினி சொல்லமிழ்தம் - தேமலர்க்
காந்தள் குரும்பை கனக மடவாள்கை
ஏந்திளங் கொங்கை யெழில்"

என வரும் எழுத்துநிரனிறையும்.

[2]"வெண்பா முதலாக வேதிய ராதியா
மண்பால் வகுத்த வருணமாம் - ஒண்பா
இனங்கட்கு மவ்வாறே யென்றுரைப்பர் தொன்னூல்
மனந்திட்பக் கற்றோர் மகிழ்ந்து"

எனத் தொகுத்துக்கூறும் நிரனிறை முதலியனவும் கொள்க.

[3]"அம்ம் பவள்ள் வரி நெடுங்க ணுய்வஞ்சிக்
கொம்ம் பவள்ள் கொடிமருங்குல் கோங்கின்
அரும்ம் பவண்முலை யொக்குமே யொக்கும்
கரும்ம் பவள்வாயிற் சொல்"

என்னும் யாற்றுநீர்ப்பொருள்கோளை மயக்கநிரனிறை என்பாரு முளர். இது சொல்லையும் பொருளையும் தனித்தனி நிறீஇக் கூறியதன்றி நிரனிறையாக நிறீஇக் கூறாமையின் நிரனிறையன் றென்பார் நெறியென்றார். (63)

## பூட்டுவிற் பொருள் கோள்

415. எழுவா யிறுதி நிலைமொழி தம்முட்
பொருளோக் குடையது பூட்டுவில் லாகும்.

---

1. யா. வி. ஒழிபு. சூ. 2, மேற். முன் இரண்டடிகளிலுள்ளவற்றை, காவி கண், மதி முகம், மென்மருங்குல், தோமில் துடி, செய்யவாய் கனி என இயைத்துப் பொருள்கொள்க.

2. இதனை இருமுதனிரனிறை என்பதற்கு உதாரணங்காட்டினர், யா. வி. உரையாசிரியர்; ஒழிபு. சூ. 2. உரை. வெண்பா முதலிய நான்கு பாக்களையும் வேதியர் முதலிய நான்கு வருணங்களையும், தாழிசை முதலிய மூன்று இனங்களையும் அநுலோமர் முதலிய மூன்று சங்கீர்ணவருணங் களையும் தனித்தனியே எடுத்துக் கூறாமல் தொகுத்துச் சுட்டினமையின் இது தொகுத்துக்கூறும் நிரனிறையாயிற்று.

3. "மயக்கநிரனிறையென்று காட்டினர் யாப்பருங்கலம் உடையார்" என இச்செய்யுளையும் வேறு சிலவற்றையும் எடுத்துக்காட்டிக் கூறுவர் மயிலைநாதர்.

எ - ன், [1] பூட்டுவிற் பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செய்யுட்கண் முதலினும் ஈற்றினும் நிற்கும் மொழிகள் தம்முட் பொருளுணைக்கமுடைய பொருள்கோள் பூட்டுவிற் பொருள்கோளாம் எ - று.

(வ - று.)

[2] "திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாதர்
இறந்து படிற்பெரிதா மேதம் - உறந்தையர்கோன்
தண்ணார மார்பிற் றமிழ்நர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு"

என வரும். பிறவுமன்ன. (64)

## தாப்பிசைப் பொருள்கோள்

416. இடைநிலை மொழியே யேனையீ ரிடத்தும்
நடந்து பொருளை நண்ணுத ருப்பிசை.

எ - ன், [3] தாப்பிசைப் பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இடைநிற்குமொழி ஒழிந்த முதலினும் ஈற்றினும் சென்று பொருளைக்கூடும் பொருள்கோள் தாப்பிசைப் பொருள்கோளாம் எ - று.

(வ - று.)

[4] "உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு"

என வரும். (65)

## அளைமறிபாப்புப் பொருள்கோள்

417. செய்யு ளிறுதி மொழியிடை முதலினும்
எய்திய பொருள்கோ ளளைமறி பாப்பே.

எ - ன், அளைமறிபாப்புப் பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) [5] செய்யுட்கண் ஈற்றில் நின்றசொல் இடையினும் முதலினும் சென்ற பொருள்கோள் அளைமறிபாப்புப் பொருள்கோளாம் எ - று.

---

1. இதனை ஒரணியாகவும் கொண்டார் மாறனலங்கார ஆசிரியர்.
2. முத்தொள்ளாயிரம், புறத்திரட்டு. கதவு திறந்திடுமின் எனக் கூட்டிப் பொருள்கொள்க.
3. இப்பொருள்கோள் அணியிலக்கணவகையில் இடைநிலைத் தீவகத் தின்பாற்படும்.
4. குறள். 255; ஊன் என்பதை உண்ணாமையென்பதனோடும் இயைத்து ஊனுண்ணாமை எனக் கூட்டிப் பொருள்கொள்க.
5. முதலிலுள்ள சொல்லை இடையிலும் இறுதியிலும் கூட்டிப்

(வ - று.)

" தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார் தாமும்
சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து [1] நாற்கதியிற் சுழல்வார் தாமும்
[2] மூழ்ந்த பிணிநலிய முன்செய்த வினையென்றே முனிவார் தாமும்
வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலா தாரே " (யா. வி. ஒழிபு. சூ. 2, மேற்.)

என வரும். (66)

## கொண்டுகூட்டுப் பொருள்கோள்

**418.** யாப்படி பலவினுங் கோப்புடை மொழிகளை
ஏற்புழி யிசைப்பது கொண்டு கூட்டே.

எ - ன், கொண்டுகூட்டுப் பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செய்யுளடி பலவினும் இயல்பாகிய யாற்றுநீர்ப் பொருளுக்கேலாது கோத்துக்கிடந்த மொழிகளையெடுத்து அப் பொருளுக்கு ஏற்றவிடத்துக் கூட்டும் பொருள்கோள் கொண்டு கூட்டுப் பொருள்கோளாம் எ - று.

இயல்பாகிய யாற்றுநீர்ப்பொருள்கோளிற் பிறழ்ந்து வருவன வற்றை மொழிமாற்றுமுதலியவாகப் பகுத்தமையின் அப் பொருளுக்கு ஏற்றவிடத்தென்றும்.

(வ - று.)

[3] " தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்
வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி
அஞ்சனத் தன்ன பசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின் "

என வரும். இதனுள், வங்கத்துச் சென்றார் வரின் அஞ்சனத் தன்ன பைங்கூந்தலையுடையாள் மாமேனிமேல் தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட கோழிவெண்முட்டை உடைத்தன்ன பசலை தணிவாமெனக் கொண்டுகூட்டுக. " உருவக வுவமையிற் றிணைசினை முதல்கள் " (410) என்பதனை முதல்சினையென முறை நிறீஇப் பொருள்கொள்வதும் அது. (67)

---

பொருள் முடித்தலை அளைமறிபாப்புப்பொருள்கோளெனக் கொள்வர் நேமிநாத உரையாசிரியர்; சொல். 68, உரை.

1. நாற்கதி - தேவகதி, மக்கட்கதி, விலங்குகதி, நரககதி.
2. மூழ்ந்த - வளைந்த; " மூழ்த்தனர் மூசி " பெருங். 1. 56 : 49.
3. யா. வி. ஒழிபு. சூ. 2, மேற். இதனை மொழிமாற்றிற்கு உதாரணங்காட்டுவர் நேமிநாத உரையாசிரியர்.

## அடிமறிமாற்றுப் பொருள்கோள்

419. ஏற்புழி யெடுத்துடன் கூட்டுறு மடியவும்
யாப்பீ றிடைமுத லாக்கினும் பொருளிசை
மாட்சியு மாறு வடியவு மடிமறி.

எ - ன், அடிமறிமாற்றுப் பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொருளுக்கேற்குமிடத்துஎடுத்து நீங்காது கூட்டும் அடியினையுடையவும் யாதானும் ஓரடியையெடுத்து அச்செய்யுட்கண் முதலிடையீறுகளில் யாதானும் ஓரிடத்துக் கூட்டினும் பொருளோடு ஓசைமாட்சியும் ஓசையொழியப் பொருள்மாட்சியும் வேறுபடாத அடியினையுடையவுமாகிய பொருள்கோள் அடிமறி மாற்றுப் பொருள்கோளாம் எ - று.

மாட்சி - நெறிப்பட்டொழுகல்.

ஏற்புழியெடுத்துக்கூட்டுதல் [1] இருவகையடிமறிமாற்றிற்கும் பொருந்துமாயினும் அவ்வடிகள் மாற்றுதற்கு அமைந்து நீங்கும், இவ்வடிகள் நீங்காவென்பார் உடனென்றும், ஓசையொழியப் பொருண்மாட்சிமாத்திரையும் மாறு அடியவு மென்பார் பொருளிசைமாட்சியுமென உம்மைதந்தும் கூறினர்.

(வ - று.)

" நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்
கொடுத்துத்தான் றுய்ப்பினு மீண்டுங்கா லீண்டும்
மிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம்
விடுக்கும் வினையுலந்தக் கால் " (நாலடி. 93)

என்பதனுள், கொடுத்துத் தான்துய்ப்பினும் ஈண்டுங்காலீண்டும், விடுக்கும்வினையுலந்தக்கால் மிடுக்குற்றுப்பற்றினும் நில்லாது செல்வம், இஃதறியார் நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பம் துடையாரென அடிகளை ஏற்புழி எடுத்துக்கூட்டுக.

" மாறுக் காதலர் மலைமறந் தனரே
ஆறுக் கட்பனி வரலா னவே
ஏறு மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே " (தொல். எச்ச. 11, ந. மேற்.)

என்பதனுள் யாதானும் ஓரடியையெடுத்து யாதானும் ஓரிடத்துக் கூட்டி உச்சரித்துப் பொருளும் ஓசையும் வேறுபடாமை காண்க.

1. இவ்விரண்டும் தொல்காப்பியத்தில் எச்சவியல் 11, 12-ம் சூத்திரங்களிற் கூறப்பட்டன.

" அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றம்
சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றம்
கொலைப்பாலுங் குற்றமே யாம் " (நான்மணி. 26)

இதனுள் ஈற்றடியொழிந்த மூன்றடியுள் யாதானுமொன்றை எடுத்து யாதானுமோரிடத்துக் கூட்டிப் பொருளும் ஓசையும் வேறுபடாமையும் ஈற்றடியை எடுத்து யாதானுமோரிடத்துக் கூட்டி உச்சரித்து ஓசைவேறுபட்டுப் பொருள்வேறுபடாமையும் காண்க.

செய்யுளடி பலவினையும் தொகுத்துக்கூருது மூன்றும் ஒன்று மாகப் பிரித்ததென்னையெனின் எண்வகைப்பட்ட பொருள் கோளும் அவற்றின் விகற்பங்களுமாய பொருள்கோள்களும் ஒன்று ஒருசெய்யுள் முழுவதூஉம் அமைந்துகிடக்க வேண்டு மென்னும் யாப்புறவின்றி ஒன்றும்பலவும் அமைந்து கிடத்தலி னென்க். அவ்வாறமைந்து கிடத்தல் அவ்வப்பொருள்கோட்குக் காட்டிய செய்யுட்கண்ணும் பிறசெய்யுட்கண்ணும் கண்டு கொள்க. அடிமறித்தலன்றி மாற்றுதல் ஏற்புழியெடுத்துடன் கூட்டுறுமடியவுமென்றதற்கு இன்ரும். அங்ஙனமாக அதனையும் அடிமறிமாற்றென்றது என்னையெனின், மறித்தற்குரிய கொண்டு கூட்டொடும் மறித்தற்கும் மாற்றுதற்குமுரிய அடிமறிமாற்ருெடும் சார அதனை முதற்கட் கூறி அடியாக மறித்தலுடைமையின் அடிமறிமாற்றின்பாற்படுத்துச் [1] சில உறுப்புக்குறைந்தாரையும் மக்களென்ருற்போல அதற்கும் அடிமறிமாற்றெனப் பெயர்தந்து கூறிஞரென்க.

செய்யுட்குரிய [2] பொருள்கோளை ஈண்டுக்கூறியதென்னை எனின், செய்யுட்குத் [3] தொடரென்னும் காரணக்குறிபோந்தது மொழிதொடர்ந்ததாலன்றே ; அங்ஙனமாதலின் இதுவும் தொடர் மொழியிலக்கணமேயாமென்க. (68)

3. பொதுவியல் முற்றிற்று.

---

1. 'முப்பத்திரண்டு உறுப்பொடும் புணர்ந்தது மக்கட்சட்டகம்' (யா. வி. சூ. 1, உரை) என்பதனல் மக்களென்றல் முப்பத்திரண்டுறுப்பும் உடையாரை என்பது போதரும்.

2. இங்கே கூறிய பொருள்கோளுள், பூட்டுவிற்பொருள்கோளும் அளைமறிபாப்புப் பொருள்கோளும் தாப்பிசைப்பொருள்கோளும் கொண்டு கூட்டுப்பொருள்கோளும் மாட்டென்னும் செய்யுளுறுப்பின்கண் அடங்கு மென்பர் நச்சிஞர்க்கினியர் ; தொல். எச்ச. சூ. 13, உரை.

3. தொடர், தொடர்பென்பன செய்யுளின் பரியாயப்பெயர்.

நான்காவது

# இடையியல்

---

## இடைச்சொல்லின் பொதுவிலக்கணம்

420. வேற்றுமை வினைசா ரியையொப் புருபுகள்
தத்தம் பொருள விசைநிறை யசைநிலை
குறிப்பெனெண் பகுதியிற் றனித்திய லின்றிப்
பெயரினும் வினையினும் பின்முன் னோரிடத்
தொன்றும் பலவும்வந் தொன்றுவ திடைச்சொல்.

எ - ன், "இடையுரி யடுத்து நான்குமாம்" (270) என நிறுத்த முறையானே இடைச்சொல் இலக்கணம் இவ்வியலான் உணர்த்துவான்றொடங்கி அவை இத்துணைய இவ்வியல்பின என அவற்றின் பொதுவிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) [1] எழுவாயுருபு முதலிய எட்டுவேற்றுமையுருபு களும், பகுதி விகுதி இடைநிலை என்னும் தெரிநிலையும் குறிப்பு மாகிய வினையுருபுகளும், [2] அன் ஆன் முதலிய சாரியையுருபு களும், [3] போலப் புரைய முதலிய உவமவுருபுகளும், பிறவாறு தத்தமக்குரிய பொருளை உணர்த்திவருவனவும், வேறு பொருளின் றிச் செய்யுளிசை நிறைத்தலே பொருளாக வருவனவும், அசைத் தலே பொருளாக நிற்பனவும், வெளிப்படையின்வரும் இவை போலாது குறிப்பின்வருவனவுமென்னும் எட்டுவகையினை உடைய வாய்த் தனித்துநடத்தலின்றிப் பெயரினகத்தும் வினையினகத்தும் அவற்றின்புறமாகிய பின்னும் முன்னும் இவ்விடங்கள் ஆறனுள் ஓரிடத்து ஒன்றேனும் பலவேனும் வந்து அப்பெயர்வினைகட்கு அகத்துறுப்பாயும் புறத்துறுப்பாயும் ஒன்றுபட்டு நடக்கும் தன் மையது இடைச்சொல்லாம் எ - று.

தெரிநிலைவினையிடைநிலைபோல் ஏனையிடைநிலை சாரியை கட்கு வேறுபொருள் இன்றேனும் பெயர்வினைகட்கு இன்றியமை

1. 'எழுவாயுருபு முதலிய எட்டு வேற்றுமையுருபுகளுட் பெயரும் பெயரது விகாரமுமாகிய எழுவாயும் விளியுமொழித்து ஒழிந்த ஐம்முதலிய ஆறுருபுகளும் பகுதி விகுதி இடைநிலை என்னும் தெரிநிலையும் குறிப்பு மாகிய வினையுருபுகளுள் முதனிலைத் தனிவினைப்பெயரும் பொருளாதி யறுவகைப் பெயருமாகிய பகுதியொழித்து ஒழிந்த விகுதி முதலிய வினை யுருபுகளும்' என்று எழுதுவர் சிவஞானமுனிவர்.

2. சூ. 244. 3. சூ. 367.

யாது வருதலே பெரும்பாலவாதலின் அவற்றின் பொருளே பொருளென்பது கருதி இசைநிறை அசைநிலைகளைச் சாரவையாது முதற்கண் வைத்தாரென்க.

'பெயரினும் வினையினும்' என்ற உம்மையைப் பின்முன் என்பனவற்றோடும் கூட்டுக.

தனித்துநடத்தலின்றிப் [1] பெயர்வினைகளிடமாக நடத்தலின் இடைச்சொல்லெனக் காரணக்குறிபோந்ததென்று அதன் தன்மை கூறியமுகத்தாற் கூறியவாறு காண்க.

முதனூலின்வழியாக நடக்கும்நூலை அங்ஙனங் கூறுது வழிநூலென்றாற்போலப் பெயர்வினைகளின் இடமாக நடக்கும் சொல்லை அங்ஙனங் கூறுது இடைச்சொல்லெனக் கூறினர். அங்ஙனமாயின் இடமென இயற்சொல்லாற்கூறுது இடையெனத் திரிசொல்லாற் கூறியதென்னையெனின், இயற்சொல்லாற் கூறின் இடப்பொருளை உணர்த்துஞ் சொல்லெனப்படுமாதலின் அதனோடு இதற்கு வேற்றுமை தோன்றற்கென்க.

எழுவாயுருபும் விளியுருபும் பெயரும் பெயரதுவிகாரமன்றோ அவற்றையும் இடைச்சொல்லெனக் கூறியதென்னை எனின், வேற்றுமையெனப் பொதுப்படக் கூறினமையானும், [2] எழுவாயுருபு [3] எட்டனுருபென்றமையானும், ஆவென்பது [4] தன்னையுணர்த்தின் எழுத்தாயும் பிறபொருளைச் சுட்டுதற்கண்ணே சொல்லாயும் நின்றாற்போலப் பெயர் தன் இயல்பின்நில்லாது எழுவாயுருபும் விளியுருபுமாய் அவ்வேற்றுமைப் பொருள் உணர்த்தியகாலத்து இவ்வுருபாகிய காரியங்கள் பெயராகிய காரணங்களிடமாக

1. 'பிறிதினிடத்தைச் சார்ந்து நடத்தலான் இடைச்சொல்' என்பர் மயிலைநாதர்; சிவஞானமுனிவர், 'முற்கூறிய பெயர்ச்சொல் வினைச்சொற்களுமாகாது அவற்றின் வேறுமாகாது இடைநிகரனவாய் நிற்றலின் இடைச்சொல்லெனக் காரணக்குறி பெற்றன; இது பாலைத்திணை நடுவுநிலத்திணையெனப் பெயர்பெற்றது போலுமென்க' என்று கூறி இங்கே கூறப்படும் காரணத்தையும் பின்பு கூறுவர். தொல்காப்பிய உரையாசிரியர்களுள் சேனவரையரும் நச்சினார்க்கினியரும், 'முன்னும் பின்னும் நிற்குமேனும் பெரும்பாலும் இடையே நிற்றலின் இடைச்சொல்லென்றார்' என்பர்; தெய்வச்சிலையார் சங்கரநமச்சிவாயரது கொள்கையையுடையவர்; தொல். இடை. சூ. 1, உரை.

2. சூ. 295. 3. சூ. 303.

4. "தன்னை யுணர்த்தி னெழுத்தாம் பிறபொருளைச் சுட்டுதற் கண்ணேயாஞ் சொல்" அவிநயப் புறனடை.

நடத்தலன்றித் தனித்து நடவாமையானும் அவையும் இடைச் சொல்லேயாமென்க. வினையின்கட்பகுதி பெயரன்றோ, அதனை இடைச்சொல்லென்றதென்னையெனின் வினையுருபெனப் பொதுப் படக் கூறினமையானும் பொருளாதி ஆறுபெயரும் விகுதிக்குப் பகுதியாகிய காலத்துத் தனித்து நடக்கும் தன்மையின்றி அவ் வினைக் குறிப்பிற்கு அகத்துறுப்பாய் அதனிடமாக நடத்தலானும் தனித்து நடக்கும் தன்மையுளதேற் பகுபதங்களை ஒருமொழி யென்னுது தொடர்மொழியெனல் வேண்டுமாதலானும் அதுவும் இடைச் சொல்லேயாமென்க. இவ்வினைக் குறிப்புருபுகளை இடைச் சொல்லெனவே இவை பெயர்ப்பகுபதமாயகாலத்து அதன் பகுதி விகுதி இடைநிலை உறுப்புக்களும் இடைச் சொல்லேயென்பது தாமே போதருமென்க. தெரிநிலைவினைப்பகுதிக்கண் காலமின்மை யின் வினையன்றாய்த் தனித்துநடத்தலின்றி அவ்வினைக்கு அகத் துறுப்பாம் அதனிடமாக நடத்தலின் இடைச்சொல்லேயாமென்க. இது கருதாது வேற்றுமையுருபென்பதற்கு எழுவாய்விளிகளை ஒழித்து இரண்டாவது முதலிய ஆறுருபுமேயென்றும் வினையுருபே யென்பதற்குப் பகுதியிடைநிலைகளை யொழித்து விகுதியொன்றுமே யென்றும் [1] பொருள்கூறுவாருமுளர். அது நிற்க ; எண்வகையுள் தோன்றுதொழிந்தன வருஞ்சூத்திரங்களான் உணர்க.

நம்பி வந்தான், நம்பி வா என்புழிப் பெயரின் அகத்துறுப் பாய் எழுவாயுருபிடைச் சொல்லொன்றும் விளியுருபிடைச் சொல்லொன்றும் வந்தன. தச்சன், தச்சத்தி, முடியினனென் புழிப் பெயரின் அகத்துறுப்பாய்ப் பகுதி விகுதி இடைநிலை சாரியை இடைச்சொற்கள் வந்தன. வினைக்குறிப்பின் அகத் துறுப்பாய்ப் பல வருவனவுமன்ன. நட, வேறு என்புழித்தெரி நிலைவினையினும் குறிப்புவினையினும் அகத்துறுப்பாய்ப் பகுதி யிடைச்சொல் ஒன்று வந்தது. இவற்றின் விகுதிக்கு வேறுருபின் மையின் ஒருறுப்பினவாயின. நடந்தான், நடந்தனனென்புழி தெரிநிலைவினையின் அகத்துறுப்பாகிப் பகுதி விகுதி இடைநிலை சாரியை இடைச்சொற்கள் பல வந்தன. அவன் எவன் என்றேன் எனையோன் எ - ம், போல புரைய எ - ம், சாத்தனென்பான் சாத்தனுயினுன் எ - ம் இடைச்சொல்லடியாகப் பிறந்த பெயராயும் வினையாயும் வினையிலக்கணையாயும் நிற்றலின் இவற்றின் பகுதி விகுதி முதலியவுமன்ன.

1. பொருள்கூறுபவர் மயிலைநாதர் ; தொல்காப்பிய உரையாசிரியர் களும் இக்கொள்கையினரே.

" அதுமன் " (புறநா. 147), " அதுமற்றம்ம " எ - ம்,
" கொன்னூர் " (குறுந். 138), " ஓஒ வுவம னுறழ்வின்றி "
(களவழி. 36) எ - ம்

பெயரின் அகத்துறுப்பாய்ப் பின்னும் முன்னும் ஒன்றும் பலவும் வந்தன. பிறவுமன்ன.

இவற்றுட் சில ஒரோவழி [1] விகாரப்பட்டு, மன், கொன், என்றற்பாலன [2] மன்னே, [3] கொன்னேயென வருவனவுமுள. அவை யெல்லாம் " புதியன புகுதலும் வழுவல " (462) என்பதன்பாற் படுத்துக. (1)

## இடைச்சொற் பொருள்

421. தெரிநிலை தேற்ற மையமுற் றெண்சிறப்
பெதிர்மறை யெச்சம் வினாவிழை வொழியிசை
பிரிப்புக் கழிவாக்க மின்னன விடைப்பொருள்.

எ - ன், மேல் ' தத்தம் பொருள ' என்றார், அப்பொருளாவன இவையென உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தெரிநிலை முதலாக விதந்த பதினான்கும் இவை போல்வன பிறவும் மேல் ' தத்தம் பொருள ' என்ற இடைச்சொற் பொருள்களாம் எ - று.

இன்னனவென்றதனாற் சில வருமாறு: அக்கொற்றன், எக் கொற்றனென்பன சுட்டுப்பொருளும் வினாப்பொருளும் தந்தன. [4] நக்கீரர், நப்பாலத்தனாரென்புழி நகரவிடைச்சொல் சிறப்புப் பொருள் தந்தது.

" அஆ விழந்தானென் றெண்ணப் படும் " (நாலடி. 9),
" ஆஅ வளிய வலவன்றன் பார்ப்பினோடு " (யா. வி. மேற்.),
" அந்தோ விசையை பட்டனள் " (சீவக. 312),
" அரக்காம்ப னாறும்வா யம்மருங்கிற் கன்னோ
பரற்கான மாற்றின கொல்லோ " (நாலடி. 396)

என்புழி அஆ, ஆஅ, அந்தோ, அன்னோ என்னும் இடைச்சொற் கள் இரங்குதற்பொருள் தந்தன. இவற்றிற்கு [5] அதிசயப் பொருளும் உள.

1. " தம்மீறு திரிதலும்......உரிய வென்ப " தொல். இடை. சூ. 3.
2. " மன்னைச் சொல்லே " தொல். இடை. சூ. 4.
3. " கொன்னைச் சொல்லே " தொல். இடை. சூ. 6.
4. நக்கீரர், நப்பாலத்தனார் என்னும் இருவரும் கடைச்சங்கப் புலவர்கள். ' ந, சிறப்புப்பொருளுணர்த்துவதோரிடைச்சொல்; நச்செள்ளை, நப்பாலத்தன், நக்கீரன் என்றாற்போல ' சீவக. 482. ந.
5. ' ஆ என்பது வியப்புள்வழியும் ... பொருளுணர்த்துதலும் ... கொள்க ' தொல். இடை. சூ. 48, ந.

" அறிதொ றறியாமை கண்டற்றால் " (குறள், 1110),
" சேரி தோறிது செல்வத் தியற்கையே " (சீவக. 129)

என்புழித் [1]தொறு, தோறு என்னும் இடைச்சொற்கள் இடப் பன்மைப்பொருள் தந்தன. இனிச்செல்வான், இனியெம் எல்லே என்புழி [2]இனியென்னும் இடைச்சொல் காலப்பொருளும் இடப் பொருளும் முறையே தந்தது. பிறவும் இவ்வாறு தனித்து நடக்கும் பெயர்வினையாகாது வருவனவெல்லாம் கொள்க. (2)

## ஏகார இடைச்சொல்

422. பிரிநிலே வினவெண் ணீற்றசை தேற்றம்
இசைநிறை யெனவா றேகா ரம்மே.

எ - ன், வேற்றுமையுருபு முதலிய நான்கும் [3]மேலே சொல் லப்பட்டமையின் அவற்றையொழித்து ஏனையவற்றை உணர்த்து வான்றொடங்கி அவற்றுள் ஏகாரவிடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தெரிநிலே முதலிய பதின்மூன்றும் அவைபோல்வன பிறவுமாகிய பொருள்களுள்ளும் இசைநிறைத்தல் அசைத்தல் குறிப்பு என்னும் மூன்று பொருள்களுள்ளும் பிரிநிலே முதலிய ஆறு பொருளேயும் தரும், ஏகாரவிடைச்சொல் எ - று.

(வ - று.) அவனே கொண்டானென்பது ஒரு குழுவினின்றும் ஒருவனேப் பிரித்துநிற்றலிற் பிரிநிலேயேகாரம்; அவனே கொண் டானென்னும் பொருள்பட வினவிநிற்பின் வினு. நிலனே நீரே தீயே வளியே என்பது நிலனும் நீரும் தீயும் வளியும் என்னும் பொருள்பட எண்ணிநிற்றலின் எண்.

" கடல்போற் றோன்றல காடிறந் தோரே " (அகநா. 1)

என்பது சொல்லிறுதிக்கண் அசைத்தற் பொருள் தருதலின் ஈற்றசை. ஏகாரவசைநிலே முதற்கண் வாராதென்பார் ஈற்றசை என்றார். அவனே கொண்டானென்பது துணிதற் பொருள்

---

1. 'தொறு, தோறு என்பன தாம் புணர்ந்த மொழிப்பொருண்மை யினேப் பலவாக்கி ஆங்காங்கென்பதுபட நிற்கும்' என்பர் மயிலேநாதர்.

2. 'இனி என்றது காலத்தின் மேலும் இடத்தின் மேலும் முன் என்பதுபட வரும்' என்பர் மயிலேநாதர்; இனி என்பது இப்பொழுது என்னும் காலப்பொருளிலும் வரும்; " பண்டறியேன் கூற்றென் பதனே யினி யறிந்தேன் " (குறள், 1083.)

3. வேற்றுமையுருபு பெயரியலிலும், வினேயுருபு பதவியலிலும் வினேயியலிலும், சாரியையுருபு உருபு புணரியலிலும், உவமவுருபு பொது வியலிலும் கூறப்பட்டன.

தரின் தேற்றம். இத்தேற்றப் பொருள் பிரிநிலைக் கண்ணேயுள தாதலின் இப்பொருளை வேறெடுத்துக் கூறுதல் ஏனையபோற் சிறப்புடைத்தன்றென்பார் இதனைப் பொருட்சிறப்பில்லா ஈற்ற சைக்கும் இசைநிறைக்கும் இடையே கூறினர். "ஏஏ இவ ளொருத்தி பேடியோ வென்றார்" (சீவக. 652) என்பது இசை நிறைத்தற் பொருள்தருதலின் இசைநிறை. அவனே கொண்டா னென்பது ஒரோவழி அவன் கொள்கிலனென [1]எதிர்மறைப் பொருள் தந்து செம்பொருள்தோன்றி வலிந்து கொள்ளப்பட்ட தாதலின் "புதியன புகுதலும் வழுவல" (462) என்பதன்பாற் படுத்துக. (3)

## ஓகார இடைச்சொல்

423. ஒழியிசை வினச்சிறப் பெதிர்மறை தெரிநிலை
கழிவசை நிலைபிரிப் பெனவெட் டோவே.

எ - ன், ஓகார இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒழியிசைமுதலிய எட்டுப்பொருளையும் தரும் ஓகார இடைச்சொல் எ - று.

(வ - று.) கொளலோகொண்டானென்பது கொண்டுய்யப் போயினன் அல்லனென்றற்றொடக்கத்து ஒழிந்த சொற்களைத் தருதலின் ஒழியிசை. குற்றியோ மகனோவென்பது வினா. சிறப்பு உயர்வுசிறப்பு, இழிவுசிறப்பென இருவகைத்து. ஓஒ பெரியனென்பது உயர்வுசிறப்பு. ஓஒ கொடியனென்பது இழிவு சிறப்பு. அவனோ கொண்டானென்பது கொண்டிலனென்னும் பொருள்தந்தவழி எதிர்மறை. அலியை நோக்கி, ஆணோ, அதுவு மன்று; பெண்ணோ, அதுவுமன்று என்பது அத்தன்மையின்மை தெரிந்தவழி நிற்றலிற் றெரிநிலை. உறுதியுணராது கெட்டாரை,

"ஓஒ தமக்கோ ருறுதி யுணராரோ"

என்பது கழிவிரக்கப்பொருள் தருதலிற் கழிவு.

"காணிய வம்மினோ கங்குலது நிலையே"

என்பது அசைநிலை; அவனோ கொண்டானென்பது பலருள் நின்றும் ஒருவனைப் பிரித்தமை கருதியவழிப் பிரிநிலை. இப் பொருள் எதிர்மறைக்கண்ணே உளதாதலின், அசைநிலையின் பின் வைத்தார். (4)

---

1. ஏகாரம் எதிர்மறைப்பொருள்தருதல், "மாறுகோ ளெச்சமும்" (தொல். உயிர்மயங்கு. சூ. 73) என்பதனாற் பெறப்படும்.

## என என்று என்னும் இடைச் சொற்கள்

424. வினைபெயர் குறிப்பிசை யெண்பண் பாறினும்
எனவெனு மொழிவரு மென்று மற்றே.

எ - ன், என எனவும் என்று எனவும் வரும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வினைப்பொருள்முதலிய ஆறுபொருளினும் என வென்னும் இடைச்சொல்லும் வரும்; என்றென்னும் இடைச் சொல்லும் அவ்வாறு வரும் எ - று.

(வ - று.) கொள்ளெனக் கொண்டான், மைந்தன் பிறந்தா னெனத் தந்தை உவந்தானென்பது வினை. ஊரெனப்படுவது உறையூர்,

"அழுக்கா றெனவொரு பாவி" (குறள், 168)

என்பது பெயர். விண்ணென விசைத்தது,

"பொள்ளென வாங்கே புறம்வேரார்" (குறள், 487)

என்பது குறிப்பு. [1]ஒல்லென ஒலித்தது,

"நிலையருங் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து"

(புறநா. 243, பி - ம்)

என்பது இசை. நிலனென நீரெனத் தீயென வளியென வரும் பூதநான்கும் உருவம் என்பது எண். வெள்ளென விளர்த்தது, மெல்லென நடந்தது என்பது பண்பு. இங்ஙனம் எண்ணுப் பொருட்குக் காட்டிய பெயர்கள் தனித்துநில்லாது எண்ணி அளவைப் பண்புப்பொருள் உணர்த்தலின் அப்பொருள் முதற் கண் நிறீஇய பெயர்ப்பொருளன்றென்க. என்றென்பதனையும் கொள்ளென்று கொண்டானென முறையே இயையுமாறு ஒட்டுக.

[2]சுட்டுப்பெயர் வினாப்பெயர்கட்குத் தமக்கென ஒரு பொரு ளின்றிச் சுட்டவும் வினவவும் படும் பொருளாதி ஆறு பெயர்ப் பொருளே பொருளாக வருதல்போல இவ்விரண்டிடைச் சொற்கும் தமக்கென ஒரு பொருள் இன்றி வினை முதலியவாய் இங்ஙனம் விதந்தவற்றின் பொருளே பொருளாக வருமென்பார், ஆறு பொருளையும் தருமென்னாது ஆறினும் வருமென்றார். (5)

---

1. "ஒல்லென வொலிப்ப வோடி" (சீவக. 438)

2. 'சுட்டுமுதலிய நான்கிடைச்சொற்கும் தமக்கென ஒருபொரு ளின்றிப் பொருளாதி யாறனுள் யாதானு மொன்றைக் கூறுவான் குறிப் பின்வழியடைந்து உணர்த்தலின்' (சூ. 276, உரை) என்றார் முன்னும்.

## உம்மை இடைச்சொல்

425. எதிர்மறை சிறப்பைய மெச்சமுற் றளவை
தெரிநிலை யாக்கமோ டும்மை யெட்டே.

எ - ன், உம்மையிடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எதிர்மறை முதலிய எட்டுப்பொருளையும் தரும், உம்மையிடைச்சொல் எ - று.

(வ - று.) கொற்றன் வருதற்கும் உரியனென்பது எதிர்மறை.
" குறவரு மருளுங் குன்று " (மலைபடு. 275),
இவ்வூர்ப் பூசையும் புலால் தின்னுது என்பது உயர்வு சிறப்பு. பார்ப்பானும் கள்ளுண்டான்,
" புலையனும் விரும்பாப் புன்புலால் யாக்கை " (அரிச்சந்திர. மயான. 128, பி - ம்.)
என்பது இழிவுசிறப்பு. பூசையும் புலால் தின்னுதென்பதனை [1]இழிவுசிறப்பென்பாருமுளர். அங்ஙனமாயின் ஒரு பொருளினது உயர்வைச் சிறப்பித்தல் இழிவைச் சிறப்பித்தலெனப் பொருள் படாது உயர்ந்தபொருளான் மற்றென்றைச் சிறப்பித்தல் இழிந்த பொருளான் மற்றென்றைச் சிறப்பித்தல் எனப் பொருள்படும். அவ்வாறு பொருள்படின், ஓகாரப் பொருளாய் வரும் உயர்வு சிறப்பிற்கும் இழிவுசிறப்பிற்கும் ஆகாமையின் அது பொருந்தா தென்க. இனி இவ்வும்மைப் பொருளைக் குன்றம் முதலியவற்றிற் கொள்ளாது குறவர் முதலியவற்றிற்கொண்டு பூசையுமென்பதனை இழிவுசிறப்பும்மையெனக் கோடலுமொன்று. இங்ஙனம் இழிவு சிறப்பென்பதற்கு இழிவினுட் சிறந்த இழிபெனப் பொருள் கூறுக. உயர்வுசிறப்பும் அது. பூசைக்குப் புலால் தின்னுதல் இழிபும் தின்றுமை சிறப்புமாகப் பொருள்கொளின், குறவர்க்கு மருளுதல் சிறப்பாக வேண்டுமாதலின் அது பொருந்ாதென்க. பத்தானும் எட்டானும் கொடு என்பது ஐயம். சாத்தனும் வந்தா னென்பது கொற்றன் வந்ததன்றியெனப் பொருள்படின் இறந்தது தழீஇய எச்சவும்மை; கொற்றனும் வருவானெனப் பொருள் படின் எதிரதுதழீஇய எச்சவும்மை. தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார், எல்லாரும் வந்தாரென்பது முற்றும்மை. சாத்தனும் கொற்றனும் தேவனும் பூதனும் வந்தாரென்பது எண்ணும்மை. ஆணுமன்று பெண்ணுமன்று என்பது தெரிநிலையும்மை; தெரி

1. இழிவுசிறப்பென்பவர் நச்சினார்க்கினியரும் (தொல். இடை. சூ. 7, உரை), இ - வி. உரையாசிரியரும் ; சூ. 256.

நிலை ஓகாரம்போற் பொருளுரைத்துக்கொள்க. நெடியனுமாயி ஞன், பாலுமாயிற்று என்புழி அவனே வலியனுமாயினன், அதுவே மருந்துமாயிற்றெனப் பொருள்படின் ஆக்கம். (6)

## முற்றும்மைக்குச் சிறப்புவிதி

426. முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்.

எ - ன், முற்றும்மைக்கு எய்தியதன் சிறப்புவிதி உணர்த் துதல் நுதலிற்று.

(இ - ள்.) முற்றும்மை ஒரோவிடங்களில் எச்சவும்மையுமாம் எ - று.

(வ - று.) "ஆறுந் தருவது வினையே" (320) என்புழி ஐந்தும் தருவது வினையேயென்றும், எல்லாரும் இது செய்யா ரென்புழிச் சிலர் இது செய்வாரென்றும் முற்றுமைப்பொருளும் எச்ச வும்மைப்பொருளும் ஒருங்குதருதல் காண்க. இங்ஙனம் தருதலின் எச்சமுமென இறந்ததுதழீஇய எச்சவும்மையாற் கூறினர். (7)

## எச்சவும்மைக்கு ஆவதொரு விதி

427. செவ்வெண் ணீற்றதா மெச்ச வும்மை.

எ - ன், எச்சவும்மைக்கு ஆவதொருவிதி உணர்த்துதல் நுத லிற்று.

(இ - ள்.) எச்சவும்மை செவ்வெண்ணின்கண் வருமாயின் ஈற்றின்கண்வரும் எ - று.

(வ - று.) [1]"செய்பவன் கருவி நிலம் செயல் காலம், செய் பொரு ளும்தரும் திறத்தது வினையே" என்புழி இவற்றுட் சிலவும் தரும் திறத்ததுவினையே எனவும், கல்வி செல்வம் ஒழுக்கம் குடிப் பிறப்பும் பெறுவாருமுளரென்புழி இவற்றுட் சில பெறுவாருமுள ரெனவும் பொருள்படுதல் காண்க. (8)

## சில எண்ணிடைச் சொற்களுக்கு இலக்கணம்

428. பெயர்ச்செவ் வெண்ணே யென்று வெனுவெண்
நான்குந் தொகைபெறு மும்மையென் றெனவோ
டிந்நான் கெண்ணுமஃ தின்றியு மியலும்.

எ - ன், முன்னர் எடுத்து விதந்தும் விதவாதும் வரும் சில எண்ணிடைச்சொற்கட்கு ஆவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

---

1. இது 320-ஆம் சூத்திரத்தின் பாடபேதமென்று தோன்றுகின்றது.

(இ - ள்.) பெயர்களினிடையே எண்ணிடைச்சொல் தொக்கு நிற்ப வரும் செவ்வெண்ணும், பெயரொடு தொகாது வரும் ஏகார வெண்ணும், என்றுவெண்ணும், எனுவெண்ணுமாகிய நான்கும் தொகைபெற்று நடக்கும் ; உம்மையெண்ணும், என்றெண்ணும், எனவெண்ணும், ஒடெண்ணும் ஆகிய இந்நான்கெண்ணும் தொகைபெற்றும் பெறுதும் நடக்கும் எ - று.

பெயரெண் என்னுது செவ்வெண் என்றதனுல் அஃது எண்ணிடைச்சொல் தொக்க தொகைநிலை யென்பதூஉம், அங்ஙன மாதலின் அதனையும் ஏகாரம் முதலிய எண்ணிடைச் சொற்க ளோடு உடன்கூறினுரென்பதூஉம் பெற்றும்.

(வ - று.) சாத்தன் கொற்றன் தேவன் பூதன் நால்வரும் வந்தார், சாத்தனே கொற்றனே தேவனே பூதனே நால்வரும் வந்தார், சாத்தனென்று கொற்றனென்று தேவனென்று பூதனென்று நால்வரும் வந்தார், சாத்தனெனுக் கொற்றனெனுத் தேவனெனுப் பூதனெனு நால்வரும் வந்தார் : இவை தொகை பெற்றே வந்தன. பெயர்ச்செவ்வெண் தொகைபெறுதற்கு இச்சூத்திரத் தைக்காட்டினும் அமையும். இவை வழக்கிடத்து ஒரோவழித் தொகைபெறுது வரின் இசை யெச்சமாகவும் செய்யுட் கண் தொகை பெறுதுவரின் [1]தொகுக்கும்வழித் தொகுத்தலாயமையின் அவ்விகாரமாகவும், அன்றேல் இசையெச்சமாகவும் கொள்க. சாத்தனும் கொற்றனும் தேவனும் பூதனும் நால்வரும் வந்தார், சாத்தனென்று கொற்றனென்று தேவனென்று பூதனென்று நால்வரும் வந்தார், சாத்தனெனக் கொற்றனெனத் தேவனெனப் பூதனென நால்வர் உளர், சாத்தனெடு கொற்றனெடு தேவனெடு பூதனெடு நால்வர் அவன் மைந்தர் எ - ம் ; சாத்தனும் கொற்றனும் தேவனும் பூதனும் வந்தார், நிலனென்று நீரென்று தீயென்று காற்றென்று அளவறு [2]காயமென்றுகியவுலகம், நிலனென நீரெனத் தீயெனக் காற்றென அளவறுகாயமென ஆகிய உலகம், நிலனேடு நீரோடு தீயோடு காற்ருேடு அளவறு காயமோடாகிய பூதம் எ - ம் இவை தொகைபெற்றும் பெறுதும் வந்தன. (9)

### சில எண்ணிடைச் சொற்களுக்குச் சிறப்பு விதி

429. என்று மெனவு மொடுவு மொரோவழி
நின்றும் பிரிந்தெண் பொருடொறு நேரும்.

1. தொகுக்கும் வழித் தொகுத்தல் – தொகுத்தல் விகாரம் : தொல். எச்ச. சூ. 7. 2. காயம் – ஆகாயம்.

எ - ன், எண்ணிடைச்சொல்லுட் சிலவற்றிற்கு எய்தியதன் மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்றெண்ணும் எண்ணும் பொருடொறும் நிற்றலேயன்றி ஓரிடத்துநின்றும் பிரிந்து எண்ணும் பொருடொறும் பொருந்தும் எ - று.

(வ - று.)

" வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்கால்
தீயெச்சம் போலத் தெறும் " (குறள், 674),

" பகைபாவ மச்சம் பழியென நான்கும்
இகவாவா மில்லிறப்பான் கண் " (குறள், 146),

" பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்தும்
இருடீர வெண்ணிச் செயல் " (குறள், 675)

என வரும்.

எண்ணும்பொருடொறும் தனித்தனி நிற்றலினும் ஒரோவழி நின்று பிரிதல் இம்மூன்றெண்ணிற்கும் அமைந்துகிடந்தன வாதலின் ஈண்டுக்கூறப்பட்டவெனவே ஏனையெண்கட்கு எண்ணும்பொருடொறும் நிற்கும்நிலையே சிறந்தனவென்பதூஉம், ஒரோவழி நின்று பிரிதல் வலிந்துகொளற்பாலனவென்பதூஉம், அவை ஈண்டமையாது [1] தீபகமென்னும் அணியிலக்கணத்தின் பாற்படுமென்பதூஉம் பெற்றும். (10)

## பெயரொடுவரும் எண்ணிடைச்சொல் வினையொடு வருதல்

430. வினையொடு வரினுமெண் ணினைய வேற்பன.

எ - ன், மேற் பெயரொடு வந்த எண்ணிடைச்சொற்கள் வினையொடு வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஏற்பனவாகிய எண்ணிடைச்சொற்கள் வினையொடு வரினும் மேற் பெயரொடு வந்தாற்போலும் எ - று.

ஏற்பனவெனவே வினையொடு ஏலா எண் வருதலும் தொகை பெறுதலும் இல்லையென்க.

(வ - று.)

" மண்டில மழுங்க மலைநிறங் கிளர
வண்டின மலர்பரந் தூத மிசையே
கண்டற் கானங் குருகின மொலிப்ப " (அகநா. 260)

என்பது செவ்வெண். கற்றும் கேட்டும் கற்பனை கடந்தான் என்

1. தீபகம் - செய்யுளில் ஒருசொல் ஓரிடத்தில் நின்று பலவிடத்து நின்ற சொற்களோடும் சென்றியைவது ; தண்டி. சூ. 38.

பது உம்மையெண். உண்ணவென்று உடுக்கவென்று பூசவென்று முடிக்கவென்று வந்தானென்பது என்றெண். உண்ணவென உடுக்கவெனப் பூசவென முடிக்கவென வந்தான் என்பது எனவெண். உண்ண உடுக்கப் பூச முடிக்கவென்று வந்தான், உண்ண உடுக்கப் பூச முடிக்கவென வந்தான்,

" நன்னிதி பெருக நாடொறும் வாழ்கவென்
றுன்னுமிவ் வேட்கை யொழிந்தன ரிலரே "

என்பன என்றும் எனவும் ஒரோவழி நின்றும் பிரிந்தன. பிறவற்றுள்ளும் ஏற்பன வந்தவழிக் காண்க.

சாத்தன் வந்தான் கொற்றன் வந்தான், இருவரும் வந்தமையாற் கலியாணம் பொலிந்ததென வினைச்செவ்வெண் தொகை பெற்றது [1]என்பாருமுளர். தொகைச்சொற்பெயராதலின் அறுவகைப்பெயர்களொடு பொருந்தி இருபெயரொட்டாமன்றி வினையொடு பொருந்தாமையானும் இங்ஙனம் இருவரென்னுந்தொகை சாத்தன் கொற்றனாகிய இருவரெனப் பெயர்த்தொகையாதலானும் அது பொருந்தாதென்க. (11)

## தில்லென்னும் இடைச்சொல்

431. விழைவே கால மொழியிசை தில்லே.

எ - ன், தில்லென்னும் இடைச்சொல்லின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்று பொருளையும் தரும், தில்லென்னும் இடைச்சொல் எ - று.

(வ - று.)

" வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையைப்
பெறுகதில் லம்ம யானே " (குறுந். 14)

என்பது பெறுதல்வேட்கைய உணர்த்தலின் விழைவு.

" பெற்றாங் கறிகதில் லம்மவிவ் வூரே " (குறுந். 14)

என்பது பெற்றகாலத்து அறிகவெனக் காலத்தை உணர்த்தலிற் காலம்.

" வருகதில் லம்மவெஞ் சேரி சேர " (அகநா. 276)

என்பது வந்தால் ஒன்று செய்வலென்னுஞ்சொல் ஒழிந்து நிற்றலின் ஒழியிசை. (12)

---

1. என்பவர் மயிலைநாதர்; இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும், தெய்வச் சிலையாரும் இக்கொள்கையினரே; சேனாவரையர் இதனை மறுப்பர்; தொல். இடை. சூ. 45, உரை.

## மன்னென்னும் இடைச்சொல்

432. மன்னே யசைநிலை யொழியிசை யாக்கம்
கழிவு மிகுதி நிலைபே றாகும்.

எ - ன், மன்னென்னும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ் வாறு பொருளையுந் தரும் மன்னென்னும் இடைச்சொல் எ - று.

(வ - று.)

" அதுமற் கொண்கன் றேரே "

என்பது அசைநிலை.

[1]" கூரியதோர் வாண்மன் "

என்புழி, அதனாற் [2]கருந்தாது அறத் துணித்ததென்னும் சொல் ஒழியநின்றமையின் ஒழியிசை. " நெடியன்மன் " என்புழி அவனே வலியனுமாயினானெனப் பொருள்தரின் ஆக்கம்.

" சிறியகட் பெறினு மெமக்கீயு மன்னே " (புறநா. 235, பி - ம்)

என்புழி, இப்பொழுது அவன் இறத்தலின் எமக்கீதல் கழிந்ததெனப் பொருள் தருதலிற் கழிவு.

" எந்தை யெமக்கருளுமன் "

என்புழி மிகுதியும் அருளுமெனப் பொருள்தருதலின் மிகுதி.

" மன்னா வுலகத்து மன்னியது புரைமே " (கலி. 54)

என்புழி, இவ்விடைச் சொல்லடியாகப் பிறந்த வினையுள் மன்னென்பது நிலையினை உணர்த்தினமையின் நிலைபேறு. (13)

## மற்றென்னும் இடைச்சொல்

433. வினைமாற் றசைநிலை பிறிதெனு மற்றே.

எ - ன், மற்றென்னும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்று பொருளையும் தரும் மற்றென்னும் இடைச்சொல் எ - று.

(வ - று.)

" மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது " (நாலடி. 19)

---

1. தொல். இடை. சூ. 4, இளம். மேற். " பண்டு கூரியதோர் வாண்மன் " என்பதை உதாரணங்காட்டி, ' இப்போது கோடிற்றென்றானும் வாய்போயிற்றென்றானும் இந்நீர்த்தாயிற்றென்றானும் ஒரு சொல்லொழிய வந்தமையின் இஃது ஒழியிசை ' என்பர் மயிலைநாதர்.

2. கருந்தாது - இரும்பு.

என்பது விரைந்தறிவாமென்னும் வினையையொழித்து விரையாது அறிவாமென்னும் வினையைத் தந்துநின்றமையின் வினைமாற்று.

" மற்றடிகள் கண்டருளிச் செய்ய மலரடிக்கீழ் " (சீவக. 1873)
என்பது அசைநிலை.

" ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும் " (குறள், 380)

என்பது ஊழல்லதொன்றென்னும் பொருள் தந்தமையிற் பிறிது. (14)

434. மற்றைய தென்பது சுட்டிய தற்கினம்.

எ - ன், மேலதற்கு ஒருபுறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மற்றென்னும் இடைச்சொற்பொருள் மூன்றனுள் மற்றையதென்னும் பொருளவாகிய வினைமாற்றும் பிறிதும் அங்ஙனம் கருதியதற்கு இனமாகிய வினைமாற்றும் இனமாகிய பிறிதுமாமன்றி வேறு வினைமாற்றும் வேறு பிறிதும் அல்லவாம் எ - று.

மேற்காட்டிய உதாரணத்துள் நல்வினையை விரைந்தறிவாம் எனக் கருதியதற்கு விரையாதறிவாமெனவும், ஊழொன்றெனக் கருதியதற்கு ஊழல்லதொன்றெனவும் இனம் வந்தவாறு காண்க.

வேறு பிறிதாவதென்னையெனின், இரண்டுமணியுளவழி ஒன்றுகண்டான் மற்றொன்று காணவேண்டுமென்றானாயின் மற்றொன்றென்பதற்கு அதற்கு இனமாகியதொரு மணியெனப் பொருள்கொள்ளாது ஆடை அணி என்ற பொருள்கோடலென்க. வினைமாற்றும் இவ்வாறே காண்க. மேலைச்சூத்திரத்துள் வினைமாற்றெனவும் பிறிதெனவும் பொதுப்படக் கூறினமையின் இச்சூத்திரத்தாற்புறனடை கொடுத்துக்காத்தாரென்க.

இச்சூத்திரத்திற்கு இவ்வாறன்றி மற்றையதென்பதனை ஓர் இடைச்சொல்லாக வைத்து அச்சொல் அங்ஙனம் கருதிய பொருட்கு இனமாகிய பொருளைத் தருமெனப் [1]பொருள்கூறுவாருமுளர். மற்றைய்தென்பது இடைச்சொல்லடியாகப் பிறந்த பெயரும் வினைக்குறிப்புமாமாதலானும், விகுதியொடு கூறினு

---

1. பொருள் கூறுபவர் மயிலைநாதர்; " மற்றைய தென்னுங் கிளவி தானே, சுட்டுநிலை யொழிய வினங்குறித் தன்றே " (இடை. 16) என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தின் உரையினுள் உரையாசிரியர்கள் எல்லாரும் இக்கொள்கையையே யுடையரென்று தெரிகின்றது.

ரேனும் பகுதிப்பட்ட [1]மற்றையென்னும் ஐகாரவீற்றிடைச் சொற்பொருள் கூறினுரெனின் [2]மன் மன்னே, கொன் கொன்னே என நின்ருற்போல மற்று மற்றை என இறுதி விகாரமாய் நின்றதன்றி இதற்கென வேறுபொருளின்மையானும், அதனேடு இதற்கு வேற்றுமை இனத்தையே தருதலெனப் பொருள் கொள்ளின் மற்றென்பது இனத்தையும் இனவகையையும் தரு மெனப் பொருள்படுமாதலானும், எல்லாவற்ருனும் இனமாயுள் ளதே வினைமாற்றும் பிறிதுமாய் வருமன்றி இனமல்லது ஒருவாற் ருனும் வாராமையானும் அது பொருந்தாதென்க. (15)

## கொல்லென்னும் இடைச்சொல்

435. கொல்லே யைய மசைநிலைக் கூற்றே.

எ - ன், கொல்லென்னும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) கொல்லென்பது இவ்விரண்டு பொருளையும் தரும் சொல்லாம்.

(வ - று.) இவ்வுருக் குற்றிகொல் மகன்கொல் என்பது குற்றியோ மகனேவென்னும் பொருள்பட வருதலின் ஐயம்.

“ பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்
வருவர்கொல் வயங்கிழாஅய் ” (கலி. 11)

என்பது அசைநிலை. (16)

## ஒடு தெய்ய என்னும் இடைச் சொற்கள்

436. ஒடுவுந் தெய்யவு மிசைநிறை மொழியே.

எ - ன், ஒடு எனவும் தெய்ய எனவும் வரும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விரண்டும் இசைநிறைத்தற் பொருளைத் தரும் சொற்களாம் எ - று.

• (வ - று.)

“ முதைப்புனங் கொன்ற வார்கலி யுழவர்
விதைக்குறு வட்டி போதொடு பொதுள ” (குறுந். 155) எ - ம்,
“ சொல்லேன் றெய்ய நின்னெடு பெயர்த்தே ”
(தொல். இடை. சூ. 48, சே. ந. மேற்.)

எ - ம் வரும். (17)

---

1. மற்றையென்னும் ஐகாரவீற்றிடைச்சொல்லென்று சேனுவரைய ரும் நச்சினுர்க்கினியரும் கூறினர் ; தொல். இடை. சூ. 16, உரை.

2. ‘ விகாரப்பட்டு மன் கொன் எனற்பாலன மன்னே கொன்னே என வருவனவுமுள ’ (சூ. 420, உரை) என்ருர் முன்னும்.

## அந்தில் ஆங்கு என்னும் இடைச்சொற்கள்

437. அந்திலாங் கசைநிலை யிடப்பொரு ளவ்வே.

எ - ன், அந்தில் எனவும் ஆங்கு எனவும் வரும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விரண்டிடைச் சொல்லும் அசைநிலைப் பொருளவாயும் இடப்பொருளவாயும் வரும். எ - று.

(வ - று.)

" அந்திற், கழலினன் கச்சினன் " (அகநா. 76 பி - ம்)
என்பது அசைநிலை.

" வருமே சேயிழை யந்திற், கொழுநற் காணிய ' (குறுந். 293)
என்பது அவ்விடத்தென்னும் பொருள்தருதலின் இடம்.

" ஆங்கத், திறனல்ல யாங்கழற " (கலி. 86)
என்பது அசைநிலை. இதனுள் ஆங்கென்னும் அசைநிலை [1]ஆங்க வென இறுதிவிகாரமாய் நின்றது.

" ஆங்காங் காயினு மாக " (முருகு. 250. பி - ம்)
என்பது இடம். (18)

## அம்ம என்னும் இடைச்சொல்

438. அம்ம வுரையசை கேண்மினென் ருகும்.

எ - ன், அம்ம என்னும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அம்ம என்பது உரையசைப்பொருளதாயும், ஒன்று சொல்வன் கேண்மினென்னும் ஏவற்பொருளதாயும் வரும் எ - று.

(வ - று.)

" அதுமற் றம்ம "
என்பது [2]உரையசை. இது செய்யுட்கண் வரினும் அச்செய்யுளின் பொருட்டன்றித் தானடைந்த சொல்லின்பொருட்டு வருதலின் உரையசையாயிற்று.

" அம்ம வாழி தோழி " (நற். 158)
என்பது ஒன்று சொல்லுவன் கேளென்னும் ஏவற்பொருள் தந்தது. (19)

---

1. ஆங்கவென்பதையே ஓர் அசையாகக்கொண்டார் தொல்காப்பியர் ; தொல். இடை. சூ. 29.

2. சிறிதுபொருள் உணர்த்துவனவற்றை உரையசையென்றும், பொருளுணர்த்தாது சொற்களை அசைத்துநிற்பனவற்றை அசைநிலையென்றும் கூறுதல் தொல்காப்பியருடைய கருத்தென்பர் நச்சினர்க்கினியர் ; தொல். இடை. சூ. 29, உரை.

## மா என்னும் இடைச்சொல்

**439. மாவென் கிளவி வியங்கோ ளசைச்சொல்.**

எ - ன், மா என்னும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மா என்னும் சொல் வியங்கோளின்கண் வரும் அசைச்சொல்லாம் எ - று.

(வ - று.)

" மாயக்கடவுட் குயர்கமா வலனே "
(தொல். இடை. சூ. 25, இளம். மேற்.),
" உப்பின்று புற்கை யுண்கமா கொற்கை யோனே " (தொல். இடை. சூ. 25, சே. ந. மேற்.)
என வரும். (20)

## முன்னிலை அசைச்சொற்கள்

**440. மியாஇக மோமதி அத்தை இத்தை
வாழிய மாளஈ யாழமுன் னிலையசை.**

எ - ன், மியாமுதலிய இடைச்சொற்களின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனம் கூறிய பத்து இடைச்சொற்களும் முன்னிலைக்கண் வரும் அசைநிலைகளாம் எ - று.

(வ - று.)

" சிலையன் செழுந்தழையன் சென்மியா வென்றும்
மலையகலான் வாடி வரும் " எ - ம்,
" தண்டுறை யூரயாங் காணிக வெனவே " எ - ம்,
" காமஞ் செப்பாது கண்டது மொழிமோ " (குறுந். 2) எ - ம்,
" சென்மதி பெரும " (தொல். இடை. சூ. 26. இளம். மேற்.) எ - ம்,
" மெல்லியற் குறுமக ளுள்ளிச்செல் வலத்தை " (புறநா. 196) எ - ம்,
" வேய்நரல் விடரக நீயொன்று பாடித்தை " (கலி. 40) எ - ம்,
" காணியவா வாழிய மலைச்சாரல் " எ - ம்,
" சிறிதுதவிர்ந் தீக மாளநின், பரிசில ரும்மார் " (தொல். இடை. சூ. 48, சே. ந. மேற்.) எ - ம்,
" சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே " (அகநா. 46) எ - ம்,
" நீயே, செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழ " (கலி. 7) எ - ம்,
முறையே காண்க. (21)

## எல்லாவிடத்தும் வரும் அசைச்சொற்கள்

**441. யாகா பிறபிறக் கரோபோ மாதிகும்
சின்குரை ஒரும் போலும் இருந்திட்
டன்றுந் தாந்தான் கின்றுநின் றசைமொழி.**

எ - ன், யா முதலிய இடைச்சொற்களின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விருபது இடைச்சொல்லும் முன்னையபோலாது எல்லாவிடத்தினும் [1]எல்லாச்சொற்களினும் வரும் அசைச்சொல்லாம் எ - று.

விதவாமையின் எல்லாவிடத்தினும் எல்லாச்சொல்லினும் வருமென்பது பெற்றும்.

" வாழ்கநின் கழலடி மைந்த வென்னவே தோழியா சுவாகதம் போத வீங்கிதென " (சீவக. 1021, பி - ம்) எ - ம், " அறநிழ லெனக்கொண்டாய் நின்குடை யக்குடைப் புடைநிழற் பட்டாளோ விவளிவட் காண்டிகா " (கலி. 99, பி - ம்) எ - ம், " மேயு நிரைமுன்னர்க் கோலூன்றி நின்றுயோர் ஆயனை யல்லை பிற " (கலி. 108) எ - ம், 2 " பிறக்கதனுட் செல்லான் பெருந்தவப் பட்டான் " எ - ம், " நோதக விருங்குயி லாலுமரோ " (கலி. 33) எ - ம், " எரியி னன்ன செந்தலை யன்றில் பிரியின் வாழாதென்போ " (தொல். இடை. 31, சே. ந. மேற்.) எ - ம், " விளிந்தன்று மாதவர்த் தெளிந்த வெங்கண்ணே " (நற். 178 பி - ம்) எ - ம், " கண்டிகு மல்லமோ கொண்க " (ஐங். 121-8) எ - ம், " ஈங்கா கியவாலென்றுசின் " (நற். 55) எ - ம், " அதுபெறலருங் குரைத்தே " (புறநா. 5) எ - ம், " அஞ்சுவ தோரு மறனே " (குறள், 366) எ - ம், " வடுவென்ற கண்ணாய் வருந்தினை போலும் " எ - ம், " ஓராற்று னென்கண் ணிமைபொருந்த வந்நிலையே கூரார்வேன் மாறனென் கைப்பற்ற - ஓரா, நனவென் றெழுந்திருந்தே னல்வினையொன்றில்லேன் கனவு மிழந்தொழிந்த வாறு " (முத்தொள்ளாயிரம்) எ - ம், " நெஞ்சம் பிளந்திட்டு " (கலி. 101) எ - ம், " தேவாதி தேவ னவன்சேவடி சேர்துமன்றே " (சீவக. 1) எ - ம், " பணி யுமா மென்றும் பெருமை சிறுமை அணியுமாந் தன்னை வியந்து " (குறள், 978) எ - ம், " நீர்தாம் " எ - ம், " நீதான் " எ - ம், " யான்பிறனளியன் வாழ்வா னுசைப்பட்டிருக்கின்றேன் " (ஆசைப்பட்டேனென்பது பொருளாதலிற் கின்றென்பது நிகழ்காலவிடைநிலையன்று) எ - ம்,

" அழலடைந்த மன்றத் தலந்தயரா நின்றுர்
நிழலடைந்தே நின்னையென் றேத்தி " (பு. வெ, 42) எ - ம்,

முறையே காண்க. பிறவுமன்ன. (22)

4. இடையியல் முற்றிற்று.

---

1. இகுமும் சின்னும் பெரும்பான்மை முன்னிலையசைச் சொல்லாகவும் சிறுபான்மை ஏனையிடத்தும் வினைக்கண் வருமென்று தொல். இடை. 26-7-ஆம் சூத்திரங்களால் தெரியவருகின்றது. 'இசின்' என ஓரசைச்சொல் உண்டென்பர் நச்சினார்க்கினியர்; தொல். இடை. சூ. 48, உரை.

2. இப்பகுதியுள்ள செய்யுளின் முழுவடிவம் : " பிறத்தல் பிணிப் படன் மூத்த லிறத்தல், திறப்பட நான்கினுந் தீர்விதற் கென்னென, இறத் தலு மாங்கொ லெனக்குமென் றெண்ணிப், பிறக்கதனுட் செல்லான் பெருந்தவப்பட்டான் " என்பது ; நன். சூ. 440, மயிலை. மேற்.

ஐந்தாவது

# உரியியல்

---

## உரிச்சொல்லின் பொதுவிலக்கணம்

442. *பல்வகைப் பண்பும் பகர்பெய ராகி
ஒருகுணம் பலகுணந் தழுவிப் பெயர்வினை
ஒருவா செய்யுட் குரியன வுரிச்சொல்.

எ - ன், [1]நிறுத்தமுறையானே உரிச்சொல் இலக்கணம் இவ் வியலானுணர்த்துவான் தொடங்கி அவற்றின் பொதுவிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) [2]குணப்பண்பும் தொழிற்பண்புமாகிய இரண்டனுள் அடங்கும் பலவேறுவகைப்பட்ட பண்புகளையும் உணர்த்தும் பெயராகி அங்ஙனம் உணர்த்துழி ஒருசொல் ஒருகுணத்தை உணர்த்துவனவும் பலகுணத்தை உணர்த்துவனவுமாய் ஏனைப் பெயர்வினைகளைவிட்டு நீங்காவாய்ச் செய்யுட்குரியனவாய்ப் பொருட்கு உரிமை பூண்டுவருவன உரிச்சொல்லாம் எ - று.

இவ்வாறு வருதல் மேற்காட்டும் உதாரணங்களுட் காண்க.

இவையும் பண்புப்பெயராயினும் ஏனைப்பெயர்வினைகளை விட்டு நீங்காமையின் வேறோதப்பட்டனவென்பதூஉம், [3]செய் யுட்கு உரியனவாதலின் இவற்றிற்கு உரிச்சொல்லெனக் காரணக்

---

*பலவகைப்பண்பும் என்று படித்தற்கும் இடமுண்டு.

1. நிறுத்தமுறையென்றது, "இடையுரி யடுத்து நான்குமாம்" (சூ. 270) என நிறுத்தமுறையை.

2. 'பண்புகள் குணப்பண்பும் தொழிற்பண்புமாகிய இரண்டனுள் அடங்குமாயினும் இசை குறிப்புப் பண்பெனப் பலவேறுவகைப்படுதலின் பலவேறுவகைப்பட்ட பண்புகளையும் உணர்த்தும்பெயராகி' எனச் சற்று விரித்தெழுதுவர் **சிவஞானமுனிவர்.**

3. 'செய்யுட்கு உரியனவாய்ப் பொருட்கு உரிமை பூண்டனவாத லின் இவற்றிற்கு `உரிச்சொல்லெனக் காரணக்குறிபோந்தது' என்பது **புத்தம் புத்துரை.** **'இசைகுறிப்புப் பண்பென்னும் பொருட்குத் தாமே உரியவாதலின் உரிச்சொல்லாயின' என்பர் சேனாவரையரும் நச்சினார்க் கினியரும்; 'உரிச்சொல் என்பது யாதோவெனின், ஒருவாய்பாட்டாற் சொல்லப்படும் பொருட்குத் தானும் உரித்தாகிவருவது......எழுத்ததிகாரத் துள் இதனைக் குறைச்சொற்கிளவியென்று ஓதினமையால் வடநூலாசிரியர் தாது என்று குறியிட்ட சொற்களே இவை என்று கொள்ளப்படும்' என்பர் தெய்வச்சிலையார்; தொல். உரி. சூ. 1, உரைகள்.**

குறி போந்ததென்பதூஉம் இவற்றின் இலக்கணம் கூறிய முகத்தால் உணர்த்தியவாறு காண்க. (1)

## பண்பு இஃதென்பது

443. உயிருயி ரில்லதாம் பொருட்குணம் பண்பே.

எ - ன், மேற்பண்பென்றார் அஃது இஃதென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உயிராகிய பொருளும் உயிரில்லாத பொருளுமென இருவகையுள் அடங்கும் உலகத்துப்பொருள்களின் குணங்கள் பண்பாம் எ - று.

கடவுட்பொருளை ஒழித்தார், அதற்கு ஒரு குணமும் இன்மையானும் உண்டேற் சுட்டப்பட்டு உலகப்பொருளாமாதாலானு மென்க. (2)

## உயிர்ப்பொருள்

444. [1]மெய்ந்நா மூக்கு நாட்டஞ் செவிகளின்
ஒன்றுமுத லாக்கீழ்க் கொண்டுமே லுணர்தலின்
ஓரறி வாதியா வுயிரைந் தாகும்.

எ - ன், மேல் உயிராகியபொருளென்றார், அவை இவை எனத் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனம் மெய்ம்முதலாகக் கூறிய ஐம்பொறிகளானும் பரிசம் இரதம் கந்தம் உருவம் சத்தமென்னும் ஐம்புலனையும் உணருங்கால் மெய்யாற் பரிசத்தை உணரும் உணர்ச்சி யொன்று முதலாகக் கீழ்ப்போன உணர்ச்சியும் கொண்டு மேல்வரும் புலன்களை ஒவ்வொன்றாக உணர்தலின் [2] ஓரறிவுயிர்முதலாக ஐந்தாம், அவ்வுயிர் எ - று. (3)

---

1. மெய்முதலியவை உயிர்களின் அறிவுமுறைப்படியே அமைக்கப்பட்டுப்பெற்றன.

2. "ஆறறி வதுவே அவற்றொடு மனனே", "மக்கடாமே யாறறிவுயிரே, பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே" (மரபு. சூ. 27, 33) எனத் தொல்காப்பியம் ஆறாவது அறிவும் அதனையுடைய உயிரும் உண்டென்று கூறும்; 'அஃது, மனத்தையும் ஒரு பொறியாக்கி அதனான் உணரும் மக்களையும் விலங்கினுள் ஒருசாரனவற்றையும் ஆறறிவுயிரென்றார்; இவர், அம்மனக் காரியமிகுதிகுறைவாலுள்ள வாசியல்லது அஃது எல்லாவுயிர்க்கும் உண்டென்பார்மதம்பற்றி இவ்வாறு சொன்னாரென்க' என்பர் மயிலைநாதர்; நன். சூ. 448, உரை.

## ஓரறிவுயிர்

**445.** புன்மர முதலவுற் றறியுமோ ரறிவுயிர்.

எ - ன், மேற்கூறிய உயிர் ஐந்தனுள் ஓரறிவுயிர் இவை என உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) [1] புல்லும் மரமும் [2] முதலியன மெய்யாற் பரிசத்தை அறியும் [3] ஓரறிவுயிர்களாம் எ - று. (4)

## ஈரறிவுயிர்

**446.** முரணந் தாதிநா வறிவொடீ ரறிவுயிர்.

எ - ன், ஈரறிவுயிர் இவை என உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இப்பியும் சங்கும் [4] முதலியன கீழ்ப்போன மெய் யறிவேயன்றி நாவால் இரதத்தையும் அறியும் அறிவோடு [5] ஈரறிவுயிர்களாம் எ - று. (5)

## மூவறிவுயிர்

**447.** சிதலெறும் பாதிமூக் கறிவின்மூ வறிவுயிர்.

எ - ன், மூவறிவுயிர் இவை என உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) கறையானும் எறும்பும் [6] முதலியன கீழ்ப்போன இரண்டறிவுகளே யன்றி மூக்காற் கந்தத்தையும் அறியும் அறிவி னொடு [7] மூவறிவுயிர்களாம் எ - று.

---

1. புல் - புறக்காழுடையன; மரம் - அகக்காழுடையன; தொல். மரபு. சூ. 85.

2. முதலியன : என்பில்புழு முதலியன; தொல். மரபு. சூ. 28, பேர்.

3. 'பயிலத் தொடுங்காற் புலருமாகலின் ஓரறிவுடையவென வழக்கு நோக்கிக் கூறினான்' (தொல். மரபு. சூ. 28, பேர்.)

4. முதலியன : கிளிஞ்சிலும் முற்றிலும் பிறவும்.

5. 'இரைசுவைக்கோடலும் பிறிதொன்று தாக்கியவழி அறிதலு முடைமையின் மெய்யுணர்வோடு நாவுணர்வு முடையன' (தொல். மரபு. சூ. 29 பேர்.)

6. முதலியன : ஈசல், மூதாய், அட்டை என்பனபோல்வன.

7. 'இவை உற்றுணர்ந்து மீள்தலும் நாச்சுவைகோடலும் நெய்யுள் வழி மோந்தறிதலுமென மூன்றறிவினையுடையவாறு கண்டுகொள்க. இவற்றுக்குக் கண்ணுஞ் செவியுமின்மை எற்றான் அறிதுமெனின், ஒன்று தாக்கியவழியன்றி அறியாமையிற் கண்ணில வென்பதறிதும் உரப்பியவழி ஓடாமையிற் செவியிலவென்பதறிதும்' என்பர் பேராசிரியர்; தொல். மரபு. சூ. 30, உரை.

[1]மேல் ஒடுவை ஈண்டும் வருவித்துக் கொள்க. (6)

## நாலறிவுயிர்

448. [2]தும்பிவண் டாதிகண் ணறிவினு லறிவுயிர்.

எ - ன், நாலறிவுயிர் இவை என உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தும்பியும் வண்டும் [3]முதலியன கீழ்ப்போன மூன்றறிவே யன்றிக் கண்ணால் உருவத்தையும் அறியும் அறிவினொடு நாலறிவுயிர்களாம் எ - று. (7)

## ஐயறிவுயிர்

449. வானவர் மக்க ணரகர் விலங்குபுள்
ஆதி செவியறிவொ டையறி வுயிரே.

எ - ன், ஐயறிவுயிர் இவை என உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வானவரும் மக்களும் நரகரும் விலங்கும் புள்ளும் முதலியன கீழ்ப்போன நாலறிவேயன்றிச் செவியாற் சத்தத்தையும் அறியும் அறிவினோடு [4]ஐயறிவுயிர்களாம் எ - று.

சித்துப் பொருள் சடப்பொருளென்பார் உயிர் உயிரில்ல தாம்பொருளெனக் கூறியவாறும், சித்தாகிய உயிரறிவு சடமாகிய உடலொடு கூடியவழியன்றி நிகழாமையானும் அந்நிகழ்ச்சி கண் டல்லது உயிருண்டென்பதூஉம் அதற்கோர் அறிவுண்டென்ப தூஉம் தோன்றுமையானும் உயிரைப் பிரித்தோதாது உடலொடு கூட்டி, "புன்மரமுதல" (445) என முறையே கூறியவாறும், அவ்வுயிரறிவு உடலொடு கூடியவழி ஐம்பொறியானும் ஐம்புல நிகழ்தலின் ஐயறிவெனக் கூறியவாறும், பொறியும் எல்லாவுடற் கண்ணும் ஒருங்கு நில்லாது இங்ஙனம் கூறிய முறையே நின்று அறிவை நிகழ்த்தலின் உயிர்கள் பலவாயினும் அறியும் வகையான் உயிர் ஐந்தெனக் கூறியவாறும் காண்க.[5] (8)

---

1. மேல் ஒடு : முந்திய சூத்திரத்தில் நாவறிவொடு என்பதிலுள்ள ஒடு.

2. "நண்டுந் தும்பியும் நான்கறி வினவே" (மரபு. சூ. 31) என்பது தொல்காப்பியச் சூத்திரம்; தும்பி - வண்டுகளில் முதன்மை யானதொரு சாதி ; தும்பியும் வண்டும் செவியறிவும் உடையெனவென்பர் நச்சினார்க்கினியர் ; சீவக. 892-3, உரை.

3. முதலியன : தேனீ, குளவி முதலியன.

4. ஒன்றுமுதல் ஐந்தறிவுவரை முறையே கூறப்பட்ட உயிர்களுக்குப் பிறஅறிவுகளிற் சிலவும் பலவும் உண்டென்பது நவீனவிஞ்ஞான சாஸ்திர ஆராய்ச்சியாளர் கொள்கை.

5. இதன்பின், 'ஆசிரியர் தொல்காப்பியர், மக்க டாமே யாறறி வுயிரே எனக் கூறியிருக்க மக்கள் முதலியோரை ஐயறிவுயிரெனக் கூறன்

## உயிரில்லாத பொருள்

450. உணர்விய லாமுயி ரொன்று மொழித்த
உடன்முத லனைத்து *முயிரில் பொருளே.

எ - ன், உயிரில் பொருளாவன இவை என உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அறிவுமயமாம் உயிரொன்றுமேயன்றி அவ்வுடம்பு முதலிய உலகத்துப் பொருள்களெல்லாம் உயிரில்லாத பொருள்களாம் எ - று.

முன்னர் உயிர்மாத்திரையே கூறுவார் உடம்பொடுகூட்டிக் கூறினரன்றி உடம்பையும் உளப்படுத்தி [1]உயிர்ப்பொருளென்றாரல்லரென்பது இதனால் உணர்க. (9)

## புறனடை

451. ஒற்றுமை நயத்தி னொன்றெனத் தோன்றினும்
வேற்றுமை நயத்தின் வேறே யுடலுயிர்.

எ - ன், மேலதற்கு ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பசுவுடம்பெடுத்துழித் தன் கன்றினுக்கிரங்கி நன்கிழைத்த உயிர், அவ்வுடம்புநீங்கிப் புலியுடம்பெடுத்துழி இரங்காது அக்கன்றினுக்கே தீங்கிழைக்குமாதலின் எவ்வுயிர் எவ்வுடம் பெடுத்ததோ அவ்வுடம்பின் மயமாய்நிற்கும் ஒற்றுமை நயம் கருதியவழி ஒன்றுபோற்றோன்றுமாயினும் உயிர் சித்தாயும் உடம்பு சடமாயும் நிற்கும் வேற்றுமை நயமாகிய உண்மை கருதிய வழி அவ்விரண்டும் தம்முள் வேறுமாதலின் உயிரொடு நின்ற காலத்தும் அவ்வுடம்பு உயிரில்பொருளென்று ஆம் எ - று. (10)

## உயிர்ப்பொருள்களின் குணப்பண்பு

452. அறிவரு ளாசை யச்ச மானம்
நிறைபொறை யோர்ப்புக் கடைப்பிடி மையல்

(பி - ம்) *‘ முயிரல் ’

மாறுகொளக் கூறலாம் பிறவெனின் : மக்கள் முதலியோர் மனவறிவோடு ஆறறிவுயிரென்பது நோக்கியன்றே, முன்னர், மக்கள் தேவர் நரகருயர் திணையெனக் கூறிப்போந்ததூஉம், ஆதலின் இங்ஙனம் ஐம்புலன் மாத்திரையே நுகருமறிவுடைய மக்கண் முதலியோரை விலங்கு முதலிய வற்றோடெண்ணி ஐயறிவுயிரெனக் கூறினரென உய்த்துணர்ந்து கொள்க ’ என்று எழுதுவர் சிவஞானமுனிவர்.

1. சூ. 443.

நினைவு வெறுப்புவப் பிரக்கநாண் வெகுளி
துணிவழுக் காறன் பெளிமை யெய்த்தல்
துன்ப மின்ப மிளமை மூப்பிகல்
வென்றி பொச்சாப் பூக்க மறமதம்
மறவி யினைய வுடல்கொ ளுயிர்க்குணம்.

எ - ன், [1]உயிரின் குணமென்றார், அவை இவை என உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அறிவுமுதலிய [2]முப்பத்திரண்டும் இவைபோல்வன பிறவும் உடலொடு கூடிய உயிர்க்குணங்களாம் எ - று.

உடலொடு கூடாவழி உயிர்க்குணங்கள் தோன்றாவென்பார் உடல்கொள் உயிர்க்குணமென்றார். பின்வருவதுமது. (11)

## உயிர்ப்பொருள்களின் தொழிற்பண்பு

453. துய்த்த றுஞ்ச றொழுத லணிதல்
[3]உய்த்த லாதி யுடலுயிர்த் தொழிற்குணம்.

எ - ன், உயிரின்தொழிற்குணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஐம்புலனையும் நுகர்தல் முதலிய இவ்வைந்தும் இவைபோல்வன பிறவும் உடலொடு கூடிய உயிரின்தொழிற் குணங்களாம் எ - று. (12)

## உயிரில்பொருளின் குணப்பண்பு

454. பல்வகை வடிவிரு நாற்றமை வண்ணம்
அறுசுவை யூறெட் *டுயிரில் பொருட்குணம்.

எ - ன், உயிரில்லாத பொருளின்குணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வட்டம் இருகோணம் முக்கோணம் சதுரம் முதலிய பலவகை [4]வடிவும், நற்கந்தம் துர்க்கந்தமென்னும் இரு நாற்றமும், வெண்மை செம்மை கருமை பொன்மை பசுமை

---

(பி - ம்.) * 'டுயிரல்' 1. சூ. 443.

2. இம்முப்பத்திரண்டினுக்கும் உதாரணங்காட்டுவர் மயிலைநாதர்.

3. உய்த்தலென்பதற்கு மடைத்தொழில் உழவு வாணிகம் கல்வி எழுத்துச் சிற்பமென்னும் ஆறுதொழில்களையும் முயறலெனப் பொருள் கூறுவர் மயிலைநாதர்.

4. வடிவு முப்பத்திரண்டு வகையென்பர்; தொல். சிறப்புப். நூன் மரபு. சூ. 1, ந.

யென்னும் [1]ஐந்துவண்ணமும், கைப்புப் புளிப்புத் துவர்ப்பு உவர்ப்புக் காழ்ப்பு இனிப்பென்னும் ஆறு இரதமும், வெம்மை தண்மை மென்மை வன்மை [2]நொய்ம்மை [3]சீர்மை [4]இழுமெனல் [5]சருச்சரையென்னும் எட்டு ஊறும் உயிரில்லாத பொருள்களின் குணங்களாம் எ - று. (13)

## இருபொருளுக்கும் பொதுவான தொழிற் பண்பு

455. தோன்றன் மறைதல் வளர்தல் சுருங்கல்
நீங்க லடைத னடுங்க லிசைத்தல்
ஈத லின்னன விருபொருட் டொழிற்குணம்.

எ - ன், உயிரில்பொருட்கேயுரிய தொழிற்குணம் அருகிக் கிடத்தலின் அதனை ஒழித்து அவ்விருபொருட்கும் பொதுவான தொழிற்குணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தோன்றல் முதலிய ஒன்பதும் இவைபோல்வன பிறவும் உயிர்ப்பொருள் உயிரில் பொருளென்னும் இரண்டற்கும் பொதுவான தொழிற்குணங்களாம் எ - று.

(வ - று.) உயிர் தோன்றி மறைந்தது, உடல் தோன்றி மறைந்தது, நெருப்புத் தோன்றி மறைந்ததென இத்தொடக்கத் தனவெல்லாம் இருபொருட்கும் பொதுவாகிய தொழிற்குணமாதல் காண்க. (14)

## ஒருகுணந் தழுவிய உரிச்சொல்

456. சால வுறுதவ நனிகூர் கழிமிகல்.

எ - ன், [6]பல்வகைப் பண்பென்றூர், அவை இவை என இது காறும் உணர்த்தி அப்பண்புகளுள் ஒருகுணம் பலகுணந்தழுவி வருமென்னும் உரிச்சொற்கள் இவை எனவும் உணர்த்துவான் தொடங்கி அவற்றுள் ஒருகுணந் தழுவிய உரிச்சொல்லுட் சில உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) சால என்பது முதலாகக் கழி என்பது ஈருகக் கூறிய உரிச்சொல் மிகுதியாகிய ஒரு குணத்தை உணர்த்தும் சொற்களாம் எ - று.

---

1. ஏழுவண்ணமென்பது நவீன ஆராய்ச்சியாளர் துணிபு.
2. நொய்ம்மை - கனமின்மை.
3. சீர்மை - கனம்; " சீர்தூக்குங்கோல் " (குறள், 118.)
4. இழுமெனல் - வழுவழுப்பாயிருத்தல்.
5. சருச்சரை - ஜர்ஜ்ஜராவென்பதன்திரிபு; சுரசுரப்பாயிருத்தல்.
6. சூ. 442.

(வ - று.)

"பருவந்து சாலப் பலர்கொலென் றெண்ணி" (வளையாபதி),

"உறுவளி தூக்கு முயற்சினை மாவின்" (கலி. 84),

"தவச்சேய் நாட்டா 'ராயினும்" (நற். 115), "நனிபே தையே நயனில் கூற்றம்" (புறநா. 227), "பொறைநில்லா நோய்கூரப் புல்லென்ற நுதலிவள்" (கலி. 3, பி - ம்), "சினனே காமங் கழிகண் ணோட்டம்" (பதிற். 22)

என முறையே காண்க. இவற்றுட் சாலவென்பது சாலென்னும் உரிப்பெயரடியாகப் பிறந்த வினையெச்சக்குறிப்பு. சாலப்பலவா மென ஆமென்னும் வினைப்பயனிலை தொக்குநின்றது.

இப்பண்படிகளை நோக்கிப் பல்வகைப்பண்பும் பகர்பெய ராகி (442) யென்றார்.

சாலெனப் பண்படியாகச் சூத்திரஞ்செய்யாது சாலவென வினையெச்சக்குறிப்பாகச்செய்தல் அவ்வுரிப்பெயரடியாக வினை விகற்பங்களெல்லாம் பிறக்குமென்பதுதோன்ற உடம்படு புணர்த் தலாமென்க. அவையெல்லாம் வந்தவழிக் காண்க. (15)

### பலகுணந் தழுவிய உரிச்சொல்

457. கடியென் கிளவி காப்பே கூர்மை
விரையே விளக்க மச்சம் சிறப்பே
விரைவே மிகுதி புதுமை யார்த்தல்
வரைவே மன்றல் கரிப்பி னுகும்.

எ - ன், பலகுணம் தழுவிய உரிச்சொல்லுள் ஒன்று உணர்த் துதல் நுதலிற்று.

(இ - ள்.) கடியென்னும் உரிச்சொல் காப்பு முதலிய பதின் மூன்று குணத்தையும் உணர்த்தும் எ - று.

(வ - று.)

"ஒண்சுடர் நல்லி லருங்கடி நீவி" (அகநா. 7) என்பது காப்பு.

"கடிநுனைப் பகழி" (தொல். உரி. 87, சே. ந. மேற்) என்பது கூர்மை.

"கடிமாலை சூடி" (சீவக. 1574) என்பது நாற்றம்.

"கண்ணாடி யன்ன கடிமார்பன்" (சீவக. 2327)

என்பது விளக்கம்.

"கடியர மகளிர்க்கே கைவிளக் காகி" என்பது அச்சம்.

"கடிமலர் மிசைபூத்துக் கம்புளோ டன்ன மார்க்கும்"

என்பது சிறப்பு.

"எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் காமின்" (புறநா. 9, பி - ம்) என்பது விரைவு.

" கடியுண் கடவுட் கிட்ட செழுங்குரல் " (குறுந். 105) என்பது மிகுதி; இது புதிதுண் கடவுளென்றுமாம்.

" கடிமுரசு " என்பது ஆர்த்தல்.

" கடித்துக் கரும்பினைக் கண்டகர " (நாலடி. 156) என்பது வரைவு.

" கடிவினை முடிகென " என்பது மன்றல்.

" கடிமிளகு தின்ற கல்லாமந்தி " (தொல். உரி. 87, இளம். மேற்.) என்பது [1]கரிப்பு. (16)

## ஒருகுணந் தழுவிய உரிச்சொல்

458. மாற்ற நுவற்சிசெப் புரைகரை நொடியிசை
கூற்றுப் புகறன்மொழி கிளவி விளம்பறை
பாட்டுப் பகர்ச்சி யியம்பல் சொல்லே.

எ - ன், இதுவும் ஒருகுணம் தழுவிய உரிச்சொல்லுட் சில உணர்த்துதல் நுதலிற்று.

'சால வுறுதவ' (456) என்பதனைச் சாரவையாது ஈண்டுக் கூறியது இவை ஒலிப்பண்பை உணர்த்தி ஏனைப்பெயர் வினைகளை ஒருவாது நடத்தலின் அத்துணைச் சிறப்பினவன்றி ஒரோவழி ஒருவி நடக்குமென்பது தோன்றற்கென்க.

(இ - ள்.) மாற்றமுதல் இயம்பலீருகக் கூறிய பதினாறும் சொல்லென்னும் ஒருகுணத்தை உணர்த்தும் உரிச்சொற்களாம் எ - று.

(வ - று.)

" கோவலர்வாய் மாற்றம் முணர்ந்து " (சீவக. 432),
" இருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல " (முருகு. 182),
" தெருண்டாரவை செப்பலுற்றேன் " (சீவக. 6),
" உரைப்பா ருரைப்பவையெல்லாம் " (குறள், 232),
" அறங்கரை நாவி னுன்மறை முற்றிய " (தொல். பாயிரம்),
" அஞ்சொற் பெரும்பணைத்தோ ளாயிழையா டானொடியும் "
(பு. வெ. 335, பி - ம்),
" நசையுநர்க் கடையா நன்பெரு வாயில், இசையேன் புக்கு "
(பொருந. 66-7, பி-ம்),
" உற்றது நாங்கள் கூற வுணர்ந்தனை ",
" புகன்ற வன்றியும் புறமிக வருமே ",
" காமஞ் செப்பாது கண்டது மொழிமோ " (குறுந். 2),
" கிளக்குங் கிளவி பாண கேளினி ",
" மெய்ம்மூ வாறென விளம்பினர் புலவர் " (சூ. 63),

---

1. கரிப்பு - கரித்தல்; மிளகின் உறைப்பு.

" அறிவன தடிதொழு தறைகுவ னெண்ணே ",
" ஒருவன், செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம்பா டின்றே " (புறநா. 34, பி-ம்),
" வார்த்தை பகர்குற்றேன் ", " இடிபோல வியம்பி னுனே "
(சீவக. 432)

என முறையே காண்க. (17)

459. முழக்கிரட் டொலிகலி யிசைதுவை பிளிறிரை
இரக்கழுங் கியம்ப லிமிழ்குளி றதிர்குறை
கனைசிலை சும்மை கவ்வை கம்பலை
அரவ மார்ப்போ டின்னன வோசை.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) முழக்கு முதலியன இருபத்திரண்டும் இவைபோல்வன பிறவும் ஓசையென்னும் ஒரு குணத்தை உணர்த்தும் உரிச்சொற்களாம் எ - று.

(வ - று.)

" முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇ " (புறநா. 18),
" குடிஞை யிரட்டுங் கோடுயர் நெடுவரை ",
" ஒல்லென் றொலிக்கு மொலிபுன லூரற்கு " (ஐந். ஐம். 28),
" கலிகெழு மூதூர் " (புறநா. 52),
" பறையிசை யருவி " (புறநா. 126),
" தோல்துவைத்து " (புறநா. 4),
" பிளிறுவாரிடி முரசம் " (சீவக. 1617),
" இரைக்கு மஞ்சிறைப் பறவைகள் " (சூளா. கல்யாண. 51),
" இரங்கு முரசின் " (புறநா. 137),
" இரும்பிழி மாரி யழுங்கன் மூதூர் " (அகநா. 122, பி - ம்),
" காலை முரசங் கனைகுர லியம்பும் " (சிலப். ஆய்ச்சியர்),
" இமிழ்கடல் வளைஇய வீண்டகன் கிடக்கை " (புறநா. 19),
" குளிறு முரசங் குணில்பாய " (பு. வெ. 48),
" களிறுங் களித்ததிருங் கார் " (பு. வெ. 37),
" குரைபுனற் கன்னி " (சீவக. 39),
" கனைகடற் றண்சேர்ப்ப " (நாலடி. 138),
" சிலைத்தார் முரசங் கறங்க " (புறநா. 36),
" தள்ளாத சும்மை மிகுதக்கண நாடுநண்ணி " (சீவக. 20),
" கவ்வைநீர் வேலி " (பு. வெ. 83),
" வினைக்கம்பலை மனைச்சிலம்பவும் " (யா. வி. மேற்.),
" அறைகழ லரவத் தானை " (சூளா. சீயவதை. 108),
" ஆர்த்தபல் லியக்குழாம் " (சூளா. தூது. 45)

என முறையே காண்க. (18)

## உரியியலுக்குப் புறனடை

460. இன்ன தின்னுழி யின்னண மியலும்
என்றிசை நூலுட் குணகுணிப் பெயர்கள்
சொல்லாம் பரத்தலிற் பிங்கல முதலா
நல்லோ ருரிச்சொலி னயந்தனர் கொளலே.

எ - ன், இவ்வியலுக்கு ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பெயர் வினை இடை உரி என்னும் நால்வகைச் சொல்லுள் இன்னசொல் தன்மை முன்னிலை படர்க்கை என்னும் மூன்றிடத்துள்ளும் வழக்குச் செய்யுளென்னும் இரண்டிடத்துள்ளும் இவ்விடத்து இவ்விலக்கணத்ததாய் நடக்குமென்று சொல்லக் கடவதாகிய இந்நூலுள் அவ்விலக்கணம் காட்டுதற்கு வேண்டிய மாத்திரையே கூறுவதன்றி உரிச்சொல்லாகிய குணப்பெயரையும் ஏனைக்குணிப்பெயரையும் நிகண்டினிற் கூறினாற்போல விரித்துக் கூறக்கடவ மல்லம், விரிக்கின், மற்றென்று விரித்தலென்னும் குற்றம் வருமாதலின் ; அவற்றினைக் கண்டறிய வேண்டினோர் இவ் விலக்கணம் அறிதற்கு முன்னர் ஏனைப்புலவராற் கூறப்பட்ட [1]பிங்கலம், திவாகரம், சூடாமணி முதலிய நூல்களுள் வகுக்கும் உரிச்சொற்றொகுதியுள் விரும்பிக் காண்க எ - று.

இவ்விலக்கணம் அறிதற்கு முன்னரே நிகண்டறிகவென்றும், அறியும்முறை அதுவாதலான்.

இவ்வியலிலுள்ள சால என்பதுமுதல் ஆர்ப்பு என்பதீறாக [2] நாற்பத்தைந்து உரிச்சொல் எடுத்துச் சுருங்கச் சொல்லுதல், சொல்லியலுணர்த்தும் நூலுட் சொற்றொகுதிகளை விரிக்கின் மற்றென்று விரித்தலாமெனவுணரார் குன்றக்கூறலாமென்பராதலின் அது [3]பரிகரித்தற்கு இச்சூத்திரத்தாற் புறனடை கூறினார். இங்ஙனங் கூறவே பெயரியலுட் பெயர்த்தொகுதியினையும், வினையியலுள் வினைத்தொகுதியினையும், இடையியலுள் இடைத்தொகுதியினையும் விரியாது அவ்விலக்கணம் காட்டுதற்கு வேண்டிய மாத்திரையே கூறுதற்கும் இதுவே புறநடையாமென்க.

---

1. பிங்கலத்தை மட்டும் மயிலைநாதர் கூறினார் : சூடாமணியை இங்கே கூறியது உரையாசிரியர் கருத்தாகக் கொள்க, நூலாசிரியர் காலத்திற்கு அந்நூல் பிற்பட்டதாலின்.

2. 456-ஆம் சூத்திரத்தில் சால முதலிய ஆறு உரிச்சொற்களும், 457-ஆம் சூத்திரத்தில் கடியென்னும் ஓர் உரிச்சொல்லும், 458-ஆம் சூத்திரத்தில் மாற்றம் முதலிய பதினாறும், 459-ஆம் சூத்திரத்தில் முழக்கு முதலிய இருபத்திரண்டும் ஆக நாற்பத்தைந்து உரிச்சொற்களாதல் காண்க. 3. பரிகரித்தற்கு - நீக்குதற்கு.

பெயரியலென்பது பெயரிலக்கணம்; பெயர்த் தொகுதி என்பது பெயர்க்கூட்டம். ஏனையவுமன்ன. கூட்டமெனினும் நிகண்டெனினும் ஒக்கும். இலக்கணங்கூறும் நூலுள் நிகண்டினையும் உடன்கூறுது அதனை வேருெரு நூலாகக் கூறுதல் தமிழுள்ளேயன்றி ஆரியமுதலியவற்றுள்ளும் காண்க. (19)

## சொல்லதிகாரத்துக்குப் புறனடை

461. சொற்ருெறு மிற்றிதன் பெற்றியென் றனைத்தும்
முற்ற மொழிகுறின் முடிவில வாதலிற்
சொற்றவற் றியலான் மற்றைய பிறவும்
தெற்றென வுணர்த *றெளிவோர் திறனே.

எ - ன், இவ்வதிகாரத்திற்கு ஒரு புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) சொற்ருெறும் இத்தன்மைத்து இதன் இலக்கணமென்று முற்ற மொழியப்புகின் வரம்பிலவாமாதலின் எடுத்துக் கூறிய சொற்களின் இலக்கணங்களைக்கொண்டு சொல்லாதனவற்றின் இலக்கணங்களையும் ஒப்புமை கருதி இதுவும் அதுவென முற்றவிளங்க உணர்தல் நூலோதித் தெளிதற்குரிய மாணுக்கர் திறனும் எ - று.

இவற்றிற்கு உதாரணம் [1] முன்னரே வந்துழிவந்துழிக்காட்டினும்; ஆங்காங்கு உணர்க. (20)

## நூலிற்குப் புறனடை

462. பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே.

எ - ன், இந்நூலிற்கு ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முற்காலத்துள்ள இலக்கணங்களுட் சில பிற்காலத்து இறத்தலும் முற்காலத்து இல்லன சில பிற்காலத்து இலக்கணமாய் வருதலும் குற்றமல்லவாம், காலவேற்றுமை அதுவாகலான் எ - று.

இவற்றிற்கும் உதாரணம் [2]முன்னர் வந்துழிவந்துழிக் காட்டினும்; ஆங்காங்கு உணர்க. (21)

5 உரியியல் முற்றிற்று.

இரண்டாவது சொல்லதிகாரம் முற்றிற்று.

நன்னூற் சங்கர நமச்சிவாயருரை முற்றுப்பெற்றது

(பி - ம்.) * 'றெள்ளியோர்' 1. முன்னர்க்காட்டிய இடங்கள்; சூ. 341, 354, 377 - 80, 394, 414, உரைகள். 2. முன்னர்க்காட்டிய இடங்கள்: சூ. 7,332, 338, 407, 420, 422, உரைகள்.

## எழுத்ததிகாரப் பொருளடைவு

(கட்டளைக்கலித்துறை)

அடையெண் பெயர்முறை தோற்றம் வடிவள வாதியந்தம்
இடைநிலை போலியென் றீரைந் தெழுத்து [1]மிருபதமும்
படு[2]புணர் மூன்றி னியல்பும் விகாரமுஞ் சாரியையும்
உடனுணர் வாறை யெழுத்தறிவா ரென்ப ருத்தமரே.

## சொல்லதிகாரப் பொருளடைவு

[3]இருதிணை மூவிட நான்மொழி யைம்பா லறுதொகையேழ்
அருவழு வெட்டுரு பொன்பான் றொகாநிலை யாய்ந்தவெச்சம்
ஒருபது கோளெட்டு முப்பொழு தீரிட மோரியல்பாய்
வருமொழி மூன்று முணரச்சொல் *வண்மை வருந்திருவே.

---

(பி - ம்.) *' வன்மை '

1. இருபதம் : பகுபதம், பகாப்பதம்.

2. புணர்மூன்று ; உயிரீற்றுப்புணர்ச்சி, மெய்யீற்றுப்புணர்ச்சி, உருபுபுணர்ச்சி.

3. இருதிணை : உயர்திணை, அஃறிணை ; மூவிடம் : தன்மை, முன்னிலை, படர்க்கை ; நான்மொழி : பெயர், வினை, இடை, உரி ; ஐம்பால் : ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் ; அறுதொகை : வேற்றுமைத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உவமைத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை ; ஏழுவழு : திணைவழு, பால்வழு, இடவழு, காலவழு, வினாவழு, விடைவழு, மரபுவழு ; எட்டுஉருபு : ஒன்றுமுதல் எட்டு வேற்றுமை உருபுகள் ; ஒன்பது தொகாநிலை : வினைமுற்றுத் தொகாநிலைத்தொடர், பெயரெச்சத்தொடர், வினையெச்சத்தொடர், எழுவாய்த்தொடர், விளித்தொடர், வேற்றுமைத் தொகாநிலை, இடைத்தொடர், உரிச்சொற்றொடர், அடுக்குத்தொடர் ; பத்து எச்சம்: பெயரெச்சம், வினையெச்சம், உம்மையெச்சம், சொல்லெச்சம், பிரிநிலையெச்சம், எனவெச்சம், ஒழியிசையெச்சம், எதிர்மறையெச்சம், இசையெச்சம், குறிப்பெச்சம் ; எட்டுப்பொருள்கோள் : யாற்றுநீர், மொழிமாற்று, நிரனிறை, விற்பூட்டு, தாப்பிசை, அளைமறிபாப்பு, கொண்டுகூட்டு, அடிமறிமாற்று ; மூன்றுபொழுது : இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் ; ஈரிடம் : செய்யுள்வழக்கு, உலகவழக்கு ; மூன்றுமொழி ; ஒருமொழி, தொடர்மொழி, பொதுமொழி.

## எழுத்ததிகார இயல்களின் சூத்திரத்தொகை

(வெண்பா)

[1]எழுபா னிரெண்டெழுத்தி னேற்றபதத் தைஞ்ஞான்
கொடுமூன் றுயிரீறைம் பான்மூன் றருமெய்யீ
ருரு றுருபியன்மூ வாறு [2]மெழுத்துரை நூற்
பாவிருநூற் றேரிரண்டாப் பார்.

## சொல்லதிகார இயல்களின் சூத்திரத்தொகை

[3]பேரறு பத்திரண்டு பின்வினையெண் ணொன்குபொது
ஓரறுபத் தெட்டிடை மூவேழின் - மேலொன்
றுரியிருபத் தொன்றாகச் சொற்சூத் திரத்தின்
விரியிருநூற் றேரைந்தா வேண்டு.

---

1. இத்தொகையில் பொதுப்பாயிரச் சூத்திரங்கள் சேர்க்கப்படவில்லை. இங்கே கூறப்படும் வகையாவது :—(1) எழுத்தியல் : 72, (2) பதவியல் : 23; (3) உயிரீற்றுப் புணரியல் : 53; (4) மெய்யீற்றுப்புணரியல் : 36; உருபு புணரியல் : 18; ஆகமொத்தம் 202.

2. எழுத்துரை நூற்பா - எழுத்திலக்கணத்தைச் சொல்லும் சூத்திரங்கள்.

3. இங்கே கூறப்படும் வகை வருமாறு :—(1) பெயரியல் : 62; (2) வினையியல் : 32; (3) பொதுவியல் : 68; (4) இடையியல் : 22; (5) உரியியல் : 21 : ஆகமொத்தம் 205.

# நன்னூற் சூத்திர முதற்குறிப்பகராதி

[எண்—சூத்திர எண்]

## விளங்கா மேற்கோள் அகராதி

[எண்—சூத்திர எண்]

---

# அரும்பதமுதலியவற்றின் அகராதி

[எண் - சூத்திர எண்]

# பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 38 | 32 | திருமந்திரப்கரணம் | திருமந்திரப்ரகரணம் |
| 63 | 34 | ளகராவொற் | ளகரவொற் |
| 181 | 11 | இறுதியிணை | இருதிணை |
| 202 | 30 | கேட்டலுமுள்ள | கேட்டலமுள |
| 221 | 1 | உறுபு | உருபு |
| 222 | 5 | புறல் இல் | புறம் இல் |
| 224 | 14 | விளிக்கட்படுவன | விளிக்கப்படுவன |
| ,, | 18 | இண்ரடுங் | இரண்டுங் |
| 225 | 25 | னெழுந்திாாய் | னெழுந்திராய் |
| 228 | 10 | எய்தியன் | எய்தியதன் |
| 230 | 7 | தூங்காய் | தூங்கால் |
| 230 | 10 | அளவும் | அளபும் |
| 232 | 21 | ஏதுக் | ஏது |
| 236 | 8 | கூறுவாறுமுளர் | கூறுவாருமுளர் |
| 274 | 17 | மீற்றிலும் | மீற்றினும் |
| 337 | 25 | ளொங்வ | ளொஙங |
| 370 | 7 | றதிர்குறை | றதிர்குரை |
| 373 | 5 | வாறை | வாரை |